# பஞ்சும் பசியும்

ரகுநாதன்





# பஞ்சும் பசியும்

ரகுநாதன்




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41 - பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை - 600 098.

PANJUM PASIUM
By
RAGUNATHAN

ஆறாம் பதிப்பு : டிசம்பர், 1990
ஏழாம் பதிப்பு : ஜனவரி, 1994
எட்டாம் பதிப்பு : ஜூலை, 1995
ஒன்பதாம் பதிப்பு : ஜூன், 1996
பத்தாம் பதிப்பு : ஜூன், 1997



Code No. : A.514

விலை : ரூ.40.00

ISBN : 81 - 234-021

அச்சிட்டோர் :
காரிஸ் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 600 029.

# பதிப்புரை

கதை, கவிதை, நாவல், இலக்கிய விமர்சனம் முதலிய பல்துறைகளிலும் தமக்கென ஒரு நிலையான இடத்தைப் பெற்று வாசகர்கள்மனத்தைக் கவர்ந்தவர் ஆசிரியர் திருரகுநாதன்.

அவர் எழுதிய 'பஞ்சும் பசியும்' என்ற இந்நாவல் இலக்கியச்சாதனைவரலாற்றில்ஒருமைல்கல்;தமிழ் நாவல் இலக்கியப் பாதையில் ஒரு திருப்புமுனை; தமிழில் முற்போக்குஎதார்த்தவாதநாவல்இலக்கியத்துக்கு இதுவே முன்னோடி.

இந்நூலைப் பற்றி ஸ்ரீலங்கா யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் பேராசிரியரும் இலக்கியவிமர்சகரும் ஆராய்ச்சியாளருமான டாக்டர் க.கைலாசபதிதமது 'தமிழ் நாவல் இலக்கியம்' என்ற நூலில் இவ்வாறு மதிப்பீடு செய்கிறார்.

"சமுதாய இயக்க விதிகளையும் எதிர்காலச் சமுதாய வளர்ச்சியையும்நன்குவிளங்கிக்கொண்டுஅவ்வுணர்வுடன் குறிப்பிடத்தக்க பாத்திரங்களை மெய்ம்மையுடன் சித்தரிப்பவனே யதார்த்தவாதி- இத்தகைய சிறப்புமிக்க யதார்த்த இலக்கிய நெறி தமிழ் நாவலுலகிற் பெருவழக்குப் பெற்றுள்ளதெனக் கூற முடியாது- இந்த வகையில் தென்னகத்தில்ரகுநாதனுடையபஞ்சும் பசியும் ஒன்றுதான் விதந்துகூறத்தக்கது".

மேலும், அயல்நாட்டு மொழியொன்றில் முதன் முதலில் மொழிபெயர்க்கப்பட்டு, வெளியிடப்பட்ட முதல் தற்காலத் தமிழ் நாவல் என்ற சிறப்பையும் பெற்றது. செக்கோஸ்லாவக்கியா அகடமியில் திராவிடவியல் பிரிவின் தலைவராக இருந்த டாக்டர் கமில் ஸ்வலெபில்

இந்நூலை செக் மொழியில் மொழிபெயர்த்துள்ளார். அந்நாட்டின் தலைநகரான பிராகில் உள்ள பிராஸ் பதிப்பகம் இம் மொழி பெயர்ப்பின் முதற் பதிப்பை 1957ல் வெளியிட்டது; இம் முதற் பதிப்பின் அரைலட்சம் பிரதிகளும் அந்நாட்டில் சில நாட்களிலேயே விற்றுத் தீர்ந்தனஎன்பதும்குறிப்பிடத்தக்கதாகும்.

நம் நாட்டுக் கைத்தறி நெசவாளர்களை உலுக்கிக் குலுக்கி வந்த ஒரு பிரச்சினையைக் கருவாகக்கொண்டு, ஆசிரியர் ரகுநாதன் எழுதி வெளியிட்ட இந் நாவல், பல பதிப்புகளைக்கண்டு இன்றும் ஜீவசக்திமிகுந்தபடைப்பாக விளங்கிவருகிறது. இந் நாவலில் வரும் பாத்திரங்கள் யாவும் நம் மத்தியில் நடமாடிய, நடமாடும் பாத்திரங்கள். ஆசிரியர் ரகுநாதனின் உயிர்த்துடிப்பு மிக்க பாத்திரப் படைப் பாலும், வைரம் பாய்ந்த சொல்லாட்சியாலும், வாழ்க்கை யின் எதார்த்தமான பிரதிபலிப்பாலும் தத்துவ தரிசனத் தாலும் இந்நாவல் இலக்கிய ரசிகர்களை ஈர்ப்பதாகவும், விமர்சகர்களும் ஆராய்ச்சியாளர்களும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டிய கருவூலமாகவும் விளங்கி வருகிறது என்றால் மிகையாகாது. எனவே இந்நாவலைப் பல்கலைக் கழகங்களிலும் தன்னாட்சிக் கல்லூரிகளிலும் நாவல் இலக்கியத்திற்குப்பாடமாகவைக்கப்பட்டுள்ளது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இந்நாவலை எமது பதிப்பகம் ஏழாம் பதிப்பாக வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறது.

பதிப்பகத்தார்.

# பஞ்சும் பசியும்

## 1

அம்மன் கோயில் சந்தியாகால மணியோசை கணகணத்து ஓய்ந்தது. மணியோசை கேட்டதும் வடிவேலு முதலியார் சந்நிதானத்துக்குச் சென்று அம்மனைச் சேவித்துவிட்டு, ஓதுவார் மூர்த்தியிடம் விபூதிப் பிரசாதம் பெற்று நெற்றியில் பூசியவாறே வெளியே வந்தார்.

அம்மன்கோயில் மூன்று தெருக்கள் சங்கமமாகும் முச்சந்தியில் இருந்தது. சுற்று வட்டாரத் தெருக்களில் குடியிருக்கும் கைத்தறி நெசவாளர் சமூகத்தின் காவல் தெய்வமாக லோகநாயகி அம்மன் பல தலைமுறைகளாக அங்கு குடிகொண்டு நிலவி நின்றாள். கோயிலுக்கு எதிரே சந்நிதித் தெருவும், பக்கங்களில் கீழமேலத் தெருக்களும் இருந்தன. அம்மன் கோயிலின் முன் மண்டபம் நல்ல விசாலமான கல் கட்டிடம். அந்தக் கட்டிடம் பகல் வேளைகளில் வேலையற்றவர்களும், பிச்சைக்காரர்களும் ஒதுங்கிச் சடைவாறிச் சக நித்திரை செய்வதற்கும், மாலையில் பத்திரிகைகள் படிப்பதற்கும், அந்தி சாய்ந்தால் ஊர்வம்புபேசுவதற்கும், அர்த்தராத்திரியில் 'ரெங்காட்டம்' ஆடுவதற்கும் பயன்பட்டு வந்தது. மண்டப முகப்பில் 'வள்ளுவர் வாசக மன்றம்' என்று எழுதப்பட்ட, மங்கிப் பொரிந்து மக்கிப்போன போர்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. ஆகஸ்டு சுதந்திரம் வந்த புதிதில் அந்த வட்டாரத்து மக்களிடையே திடீரென்று ஏற்பட்ட புதிய உற்சாகத்தாலும், பிரஜா உணர்ச்சியாலும் அந்த போர்டு அங்கு இடம் பெற்றுத் தொங்க ஏதுவாயிற்று. ஆனால், இப்போதோ, ஏதோ ஒன்றிரண்டு போஷகர்களின்

தயவினாலும், அந்த வட்டாரத்திலுள்ள ஒரு சில அரசியல் கட்சி அனுதாபிகளான இளைஞர்களின் உற்சாகத்தினாலும் அந்தப் போர்டு தன் மரியாதையை ஓரளவு காப்பாற்றி வந்தது. மாலை வேளைகளில் ஓரிரு தினசரிகளும், ஒரு சில வார சஞ்சிகைகளும் அங்கு வாசகர்களின் வரவு நோக்கி வழிமேல் விழி வைத்துக் கர்மயோகம் செய்யும். இட வாடகை என்ற மாதாந்திர பயங்கரம் இல்லாததாலும், இன்னும் நாலுபேர் அங்கு வந்துபோய்த் தலைகாட்டிக் கொண்டிருந்ததாலும் வாசகசாலை மாலை நேரங்களில் பொதுஜன உபயோகத்துக்காகத் திறந்து வைக்கப்பட்டிருக்கும். அதாவது 'அடையாநெடுங்கதவு'மான அந்தமண்டபத்தின் ஒரு பகுதியில் வெற்றிலை பாக்குப் பலசரக்குக்கடை வைத்திருக்கும் மூப்பனாரின் புண்ணியத்தினால், மாலை ஐந்து மணி சுமாருக்கு அவரது கடைக்குள்ளிருந்து கருப்பட்டிச்சிப்பம்கட்டும்ஓலைப்பாய்கள் இரண்டும், சில பத்திரிகைகளும் மண்டபத்துக்கு இடம் பெயரும். மறுபடியும் இரவு ஏழு மணி சுமாருக்கு, மூப்பனார், கடைசாத்தும் வேளையில் மீண்டும் அவரது கடைக்குள் அடைக்கலம் புகுந்துவிடும். வாசகசாலை என்று ஒன்றிருப்பதால், நாலுபேர் தமது கடைப்பக்கம் வந்து போய்க் கொண்டு இருப்பதற்கும், அதன் காரணமாகச் சில்லறை வியாபாரம் ஆவதற்கும், மாதக் கடைசியில் செல்லாகிப்போன பழைய பத்திரிகைகளைச் சாமான் மடிக்கும் காரியத்துக்காக, சரச விலைக்கு வாங்கிக் கொள்வதற்கும்வசதியும்வாய்ப்பும்இருந்ததேமூப்பனாரின் இந்தச் சேவா பூர்வமான ஒத்துழைப்புக்கு முக்கிய காரணமாகும்.

வடிவேலுமுதலியார்சாதாரணக்கைத்தறிநெசவாளி. மாதா மாதம் ஜவுளிக் கடைக்காரர்களிடம் நூல் வாங்கி, நெய்து கொடுத்தால், நெய்த கூலி வீட்டில் தினம் உலைப்பானை ஏற்றுவதற்குக் கட்டிவரும். சுருங்கச் சொன்னால், அவரது வாழ்க்கை பெரு வாழ்வுக்கு

ஆசைப்படாத, ஆசைப்பட முடியாத அன்றாடங் காய்ச்சி வாழ்க்கை. வடிவேலு முதலியார் 1930 ஆம் வருஷத்தில் தெரிந்தோ தெரியாமலோ அன்னியத் துணி ஜவுளிக்கடை மறியல் கேஸில் அகப்பட்டு, ஆறுமாதத் தண்டனைக்கு ஆளானார். அதற்கு முன்பு எந்தவித அரசியல் எண்ணமும் இல்லாது இருந்த அவர், சிறையிலிருந்து வெளிவந்ததும், பேச்சளவில் காங்கிரஸ் பக்தனாக இருந்து வந்தார். எனினும் ஆகஸ்டுச் சுதந்திரம் வந்த பிறகு அவரும் அரசியல் தியாகி என்ற பெயரால், ஐந்து ஏக்கர் நிலத்துக்கு ஒரு மனுப் போட்டு வைத்தார். வடிவேலு முதலியாருக்குக் காங்கிரஸ் கமிட்டியினரிடத்தில் செல்வாக்குக்கோ சிபார்சுக்கோ வழியில்லாது போன காரணத்தாலும், ஆகஸ்டுத் தியாகம் என்ற தனிப் பெருந் தியாகத்தை அவர் செய்யாததாலும் அவருக்கு ஐந்து ஏக்கர் நிலமான்யம் பிஞ்சிலேயே வெம்பி விழுந்த ஆசைக் கனவாகிவிட்டது. அதிலிருந்து அவருக்கு காங்கிரசின் மீதிருந்த பக்தி விசுவாசமும் பிடிதரம் அற்றுக் கழன்று விழ ஆரம்பித்தது. மேலும் சுதந்திரம் வந்துவிட்டது, சுபிட்சம் மலர்ந்துவிட்டது என்று எண்ணி ஏமாந்த அப்பாவிகளில் அவரும் ஒருவர். எனவே "பாவிப் பயலுஹ! அந்தக் காந்தி மகானையுமில்லா சுட்டுக் கொன்னுட்டான்! அவர் இருந்தா இந்த நாடு இப்படிக் குட்டிச் சுவராப் போகுமா?" என்று மட்டும் எப்போதாவது வாய்விட்டுக் கூறித் தமக்குத் தாமே ஆத்ம சாந்தி தேடிக் கொள்வார். எனினும்கூட, காங்கிரஸின் அரசியல் போராட்டகாலத்தில் அதன் பரமவைரிகளாகவும் ஆகஸ்டு சுதந்திர காலத்தில் அதன் விசுவாசிகளாகவும், மாறியுள்ள உள்ளூர்ப் பணக்காரர்களைப் பார்க்கும் போதும், அந்தப் பணக்காரர்கள் யுத்த காலத்திலும் அதற்குப் பின்னும் கொள்ளை கொள்ளையாகப் பணம் திரட்டியிருப்பதை எண்ணும் போதும் அவருக்குத் தமது அப்பாவித்தனமான காங்கிரஸ் பக்தியைப் பற்றி மன உளைச்சலும் உறுத்தலும் ஏற்படும். தம்மையறியாமலே தாம் காங்கிரஸை வெறுத்து வருவதை அவர் உணரத்தான் செய்தார்.

வடிவேலு முதலியார் தினசரி வாசகசாலைக்கு வந்து விடுவார். அந்திமயங்கும் நேரத்தில் அந்தப் பக்கமா வந்தால் அம்மனைத் தரிசிப்பதற்கும், நாலுபேரைச் சந்திப்பதற்கும், தறிக் குழியில் உட்கார்ந்திருந்த ஆசனக் கடுப்புத் தீர்வதற்கும், மூப்பனாரிடம் சில்லறைப் பற்றுவழி செய்வதற்கும் அவருக்கு வாய்ப்பிருந்தது.

அம்மன் கோயில் நடை விட்டிறங்கிய முதலியார் பட்டறையில் அமர்ந்திருந்த மூப்பனாரைப் பார்த்து "மூப்பனார்வாள், இன்னிக்குப் பேப்பரே வரலியா? ஒண்ணையும் .காணமே" என்று விசாரித்தார்.

"ஆமா மதியம் வரலே. ஒருவேளை அஞ்சரை வண்டியிலே வரலாம்" என்று நிர்விசாரமாகப் பதில் சொன்னார் மூப்பனார்.

"சரி, வெத்திலைபாக்குகுடுங்க, போட்டுக்கிட்டாவது இருக்கலாம்" என்று கூறிக்கொண்டே, சாத்தி வைத்திருந்த சரப்பலகை யொன்றை எடுத்துக் கடைப்படிக்கும், தெருவிலுள்ள குத்-துக் கல்லுக்குமாகப் போட்டு அதில் துண்டை மடித்துப் போட்டு உட்கார்ந்தார் முதலியார்.

வெற்றிலையையும்பாக்கையும்எடுத்துக்கொடுத்தார் மூப்பனார்.

"என்ன முதலியார்வாள், பொகையிலை வேண்டாமா?""

ஒரு காம்பு இருக்கு, அது போதும்" என்று சொல்லிவிட்டு, களிப்பாக்கைக் கடுக் என்று கடித்தார் முதலியார்.

"முதலியார்வாள், மாசமும் புறக்கப்போவுது. உங்க நிலுவையைக் கொஞ்சம் அடைச்சிட்டா நல்லது. என் பாடும் ஓடியடையணும் பாருங்க" என்று தொண்டையைச் செருமிக் கொண்டே கேட்டார் கடைக்காரர்.

"அதுக்கென்ன? நம்ம துட்டு என்ன ஓடியா போவுது? கைலாச முதலியார்வாள்கிட்டே பாக்கி வாங்கணும்.

வாங்கினதும் உடனே தந்திருதேன். உங்க கஷ்டம் எனக்குத் தெரியாதா? இல்லே, நம்மகஷ்டம் உங்களுக்குத் தெரியாதா?" என்றுகூறிக்கொண்டே, பத்திரிகைகொண்டுவரும்பையன் வருகிறானா என்று மேற்கே எட்டிப் பார்த்தார்.

மேற்கே, கையெழுத்து மறையும் மாலை மயக்கம். இருள் இறங்கித் தெரியும் பாபநாச மலையில், அந்தி ஒளி கன்றிக் கட்டிப் போன ரத்தம் மாதிரி, நீலம் பாரித்துக் கறுத்துப் போயிருந்தது. மாலைக்கருக்கலின் பின்னணியில் தூரத்து ரயில்வே லைன் செம்மண் மோட்டின் மீது புல்லுக்கட்டுச் சுமந்து செல்லும் விவசாயப் பெண்களின் எடுப்பான தோற்றம் நிழலாட்டம் போன்ற காட்சிப் பிரமையை உண்டாக்கியது.

அந்தி மயக்கின் சோபையின் மீது முதலியாரின் கவனம் செல்லவில்லை. பத்திரிகைப் பையன் வருகிறானா என்றுதான் அவர் பார்த்தார். அவன் கண்ணில் தட்டுப் படாததைக்கண்டுசோர்வுற்றமுதலியார்வாயில்கூடிநின்ற தாம்பூல ரசத்தைத் துப்புவதற்காகப் பின்புறம் குனிந்தார்.

"வே, பாத்துத் துப்பும் வே" என்று திடீர்க் குரல் முதலியாரின் தலையை மேல் வாங்கியது. எதிரே சுப்பையா முதலியாரும் வேறு இரு நெசவாளிகளும் வந்து நின்றார்கள்.

வடிவேலு முதலியார் எச்சிலை லாவகமாக எட்டித் துப்பி விட்டு, "வாங்கய்யா, இப்படி உட்காருங்க" என்று நகர்ந்து உட்கார்ந்தவாறே கூறினார். வந்தவர்கள் மூவரும் சரப் பலகை என்ற அந்தச் சங்கப் பலகையில் இடம் பெற்று அமர்ந்தனர்.

"வடிவேலு முதலியார்வாள், நீங்க என்ன நம்ம கைலாச முதலியார்வாளைக் கண்டு, அந்த விசயமாகக் கேட்டியளா?" என்று ஒரு நெசவாளி எதையோ ஞாபகப்படுத்தினார்.

"கூலி விசயம்தானே? அவுஹ ஊட்டுக்குப் போனேன்; அவுஹ ஊருக்கில்லியாம். கடேசிச் சுக்கிரவாரத்துக்காக,

திருச்செந்தூர் போயிருக்காகளாம். அவுஹளைப் பத்திக் கவலை இல்லை. கூடக் குறையன்னாலும் மாட்டேன்னு சொல்லமாட்டாஹ"என்றார்வடிவேலு.

"என்னவேமாப்ளேய்,உசத்துஉசத்துன்னுநம்மபாட்டுக்குக் கேட்டுக்கிட்டேயிருந்தா, முதலாளிமாருங்கதான் என்ன செய்வாஹ? நூல் விலையோ நாளுக்கு நாள் ஏறிக்கிட்டிருக்கு.நாமும்கொஞ்சம்நிதானமாய்நடந்துக்கிட வேண்டாமா?"என்றுகுறுக்கிட்டார்சுப்பையாமுதலியார்.

"வேய்! உமக்கு என்ன, வயத்திலே பசியா, முட்டிலே பசியா?" என்று வெடுக்கென்று கேட்டுவிட்டு, வடிவேலு முதலியார் காரசாரமாகப் பேசத் தொடங்கினார்: "வே, உமக்கு இந்தப் பெரிய மனுசன் புத்தி போகாது போலிருக்கே! மொதலாளிக்காகத் தாக்குப் பிடிச்சி உமக்கு என்ன லாபம்? நீரும் தொள்ளாளி; நாங்களும் தொள்ளாளி. கூலியை உசத்திக் கேட்க வாயா வலிக்குது? நூல் விலை ஏறிக்கிட்டே போவுதுங்கிறீரே, அரிசி விலை மட்டும் இறங்கிக் கிட்டே போவுதோ? மொதலாளிக்கு ஏண்டுக் கிட்டுப் பேசவாரீரே, உமக்கென்ன கிடைக்குது? ஏதாச்சும் அஞ்சுபத்துக்கிடைக்குதா?அதையாவதுசொல்லும்!"

தொண்டையில் கூடிய எச்சிலைக் கடுக்கென்று விழுங்கி விட்டு, "அதுக்குச்சொல்லலே, பெரிய முதலாளி கூட அன்னைக்கிச் சொன்னாக வரவர யாபாரமே இல்லியாம். ஏத்துமதியே அத்துப் போச்சாம். இந்தச் சமயத்திலே போயி, கூலி உசத்துறதுன்னா.." என்று தமது வாக்கைக் கொண்டு செலுத்த முனைந்தார் சுப்பையா முதலியார்.

"பெரியமுதலாளிக்குஏத்தமும்இறக்கமும்வயித்தைப் பிடிக்கிற விவகாரமில்லையே. அவுஹ தடுக்கி விழுந்தா, தாங்குறதுக்கு பங்களா இருக்கு; கார் இருக்கு; லட்ச லட்சமாப்பணம்இருக்கு;வீடுவாசல்சொத்துசுகம்இருக்கு. நமக்கு என்னவே இருக்கு?" என்று கூடவந்த நெசவாளி ஒருவர் கூறினார்.

"அது சரிதான். எல்லாம் கைலாச முதலியார்வாள் வரட்டும்னு இருக்கேன். அவுஹ வந்ததும், மொத லாளிமாரையெல்லாம் ஒண்ணுகூட்டி, ஊர்க்கூட்டம் போட்டு ஒரு வழி செய்ய வேண்டியதுதான்" என்று தம் யோசனையைவெளிப்படுத்தினார்வடிவேலு.

இந்தச் சமயத்தில் திடீரென்று நாய் குலைக்கும் சத்தமும், சைக்கிள் மணிச் சத்தமும் ஏககாலத்தில் ஒலித்தன. வடிவேலு முதலியார் தலையைத் திருப்பிப் பார்த்தார். எதிரே பத்திரிகைப் பையன் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால், நெருங்கவும் பயந்து கொண்டு, பின் வாங்கவும் கூசிக் கொண்டு, ஒரு கறுப்பு நாய் குலைத்துக் கொண்டே ஓடி வந்தது; சிறிது தூரம் ஓடி வந்து விட்டு, அது பின் தங்கிவிட்டது.

வாயில் புகையிலையோடு பொதுமி நின்ற வெற்றிலைக் கூழைப் புளிச்சென்று துப்பிவிட்டு, "அந்த நாயைக் கூடப் பாருங்க. அதுக்குக்கூட, அவர் புத்திதான் இருக்கு!" என்று எரிச்சலோடு சொன்னார் வடிவேலு முதலியார்.

"அவரைப்பத்தி நாம் எதுக்கு வாயைக் குடுக்கணும்? வீண் பொல்லாப்புக்கா?" என்று பட்டும் படாமலும் வெட்டிப்பேசினார்சுப்பையா முதலியார்.

"அதுயார் நாய்?"என்றுதெரியாததுபோல்கேட்டார் இன்னொருவர்.

"எல்லாம் மைனர் முதலியார்வாளின் நாய்தான்! அதனால்தான் அதுக்குக்கூடக் கார்வார் ஜாஸ்தியாப் போச்சு!"என்றார்வடிவேலு.

'மைனர் முதலியார்' என்ற அருணாசல முதலியார், சுப்பையா முதலியாருக்குத் தூரத்து உறவு. சுப்பையா முதலியாரின் தந்தை கைத்தறி ஜவுளிக்கடைதான் வைத்திருந்தார். எனினும், சுப்பையா முதலியாருக்கு வயது

வருமுன்பே, அந்தக் கடை நொடித்துப் போய்விட்டது. அதன் பின்னர் அவரது தந்தை 'ஜவுளிக்கடை முதலாளி' என்ற அந்தஸ்திலிருந்து வழுக்கி விழுந்து, மீண்டும் தமது சமூகத் தொழிலான கைத்தறி நெசவில் அடைக்கலம் புகுந்தார். சுப்பையா முதலியாரும் தற்போது ஒரு நெசவுத் தொழிலாளிதான். என்றாலும், ஜவுளிக்கடை வைத்து நடத்தியபழைய பெருமையுணர்ச்சியும், மைனர் முதலியார் வாள்போன்ற பெரியதனக்காரரின் தூரத்துச் சொந்தக் காரர் என்ற ஒட்டுறவுணர்ச்சியும் அவர் மனத்தைவிட்டு அகலவில்லை. எனவே மைனர் முதலியாரைப்பற்றிச் சொன்னதும் அவருக்கு நெஞ்சில் சுருக்கென்றது.

"என்னவே மாப்பிளே. அவுஹ கோயில் தர்மகர்த்தா வாச்சி. அந்த மரியாதைக்குக்கூட, நீர் மதிப்புக் குடுக்கக் காணமே!"என்று அங்கலாய்த்தார் சுப்பையா முதலியார்.

வடிவேலு முதலியார் விடுவதாக இல்லை.

"கோயில் தர்மகர்த்தாவா? கோயில் பெருச்சாளின்னு சொல்லும்வே. அவரு நினைச்சா அம்மன் கழுத்திலே கிடக்கிறபொட்டிலேகூடக்கைவைக்கிறவராச்சே அப்புறம் நம்ம சொத்தைக் கேட்பானேன்" என்றார் வடிவேலு முதலியார்.

"அட சரித்தாம்வே. பேச்சை நிறுத்தும்; பேப்பர் வந்திட்டுது" என்று வெட்டி முறித்துப் பேசிவிட்டு, பத்திரிகைக்காரப் பையனிடம் தினசரிப் பத்திரிகையை எட்டி வாங்கினார் சுப்பையா முதலியார். பத்திரிகையைப் பிரித்துப் பார்த்தவாறே "பார்த்தீரா வே! நாக்பூரிலே ஒருத்திக்குக் குரங்குப் புள்ளே புறந்திருக்காம்!" என்று சுவாரசியத்தோடு சொன்னார்.

"சரிசரி. பேப்பர் படிச்ச லெச்சணம் போதும்; இப்படிக் குடும்" என்று அதிகாரத் தோரணையோடு கூறிக்கொண்டே பத்திரிகையைக் கையில் வாங்கினார் வடிவேலு.

"பாத்தியளா, இதை. சட்டசபை அங்கத்தினர்மீது லஞ்சம் வாங்கியதாகப் புகாராம். வேலியே பயிரை மேய்ந்தா, விளைச்சல் கண்டு முதல் ஆனாப்பிலேதான்! இந்தக் காங்கிரசுக்கு என்ன கேடுகாலம் வரப்போவுதோ? ஹூம்! எல்லாம் அந்தக் காந்தி மகானோடேயே போச்சி!" என்று ஏதோ ஒரு தலைப்பைப் பார்த்து விட்டு அங்கலாய்த்துக் கொண்டார், வடிவேலு.

"ஆமண்ணாச்சி, அந்த வெள்ளைக்காரன் ராச்சியமே தேவலைன்னு போச்சி. காந்தி பேரைச் சொல்லிக்கிட்டே, நம்மைத் தேரோடும் வீதியிலே திருவோடும் கையுமா விரட்டிடுவாங்க போலிருக்கே!" என்று விசனித்தார் இன்னொருவர்.

"வெள்ளைக்காரன் ராச்சியம் போயிட்டுதா? கல்லுக் குத்தி போல, நம்ம கண்ணெதிரிலேயே அங்கே மலையடியிலே ஹார்வி உக்காந்துக்கிட்டிருக்கான். என்னமோ அண்ணாச்சி, நாம மட்டும் ஏமாறலெ, நம்ம தலைவர்களுங் கூடத்தான் ஏமாந்திட்டாஹ போலிருக்கு!" என்று தமது கருத்தை வெளியிட்டார் இன்னொரு நெசவாளி.

வடிவேலு முதலியார் எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல், பத்திரிகையில் எதையோ கூர்ந்து கவனித்தவாறே, "தம்பி, நூல்விலைகூட, இன்னம் ஏறும் போலத்தான் இருக்கு" என்றார்.

"அதுதான் நான் அப்பவே சொன்னேனே" என்று குறுக்கிட்டார் சுப்பையா.

"வே! அதுக்காக நாங்க கூலி உசத்திக் கேக்கிறதை ஒண்ணும் நிறுத்தப்போறதில்லை. வயித்துக்குத் தின்னாத் தானே வே, வேலை வெட்டி பார்க்கச் சக்தி உண்டு" என்று உடனே எதிரொலி கிளப்பினார் வடிவேலு.

பிறகு அவர் சாவதானமாகப் பத்திரிகையைப் பார்த்து விட்டு, கடைக்கார மூப்பனாரிடம் கொடுத்தார்.

மூப்பனாரும்வாங்கியமரியாதைக்காக, நாலுபக்கத்தையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு, கல்லாப் பெட்டியின் மீது பத்திரிகையை வைத்தார். இதற்குள் வடிவேலு முதலியாரைப் பார்த்து, "அண்ணாச்சி! அப்படின்னா, நீங்க கைலாச முதலியார்வாள் வந்ததும் ஒரு வார்த்தை கலந்துக்கிட்டு, ஊர்க்கூட்டத்துக்கு ஏற்பாடு பண்ணுங்க" என்று ஒரு நெசவாளி கேட்டுக் கொண்டார்.

"செய்தாப்போச்சி, அத்தோடே இன்னொருசங்கதி'

"அதென்ன அது?"

"கோயில் தர்மகர்த்தா விஷயம்தான். கோயில் தர்மகர்த்தா பதவியை நாம்ஏதோ மைனர்வாளுக்கேகிரயம் பண்ணிக் குடுத்த மாதிரி, அவாள் நடத்துக்கிடுதாக. அதுக்கும்ஒருவழிபண்ணியாகணும்"என்றார்வடிவேலு.

"அப்படின்னா?"

"தர்மகர்த்தாவைப் பத்தித்தான் ஊரிலே நாலுபேரு நாலு விதமாகச் சொல்லுதாகளே. வருஷமும் நாலு ஆச்சி. அம்மனுக்கு ஒரு கொடையைக் காணம்; ஊரிலே பலபேர் குடுமி அவர் கைக்குள்ளே இருக்கதாலே, யாரும் அவரைத் தட்டிக்கேக்கவும்காணம்; ஊர்ப்பணத்துக்கும் இன்னிக்கித் தேதிவரையிலே ஒரு கணக்கு வழக்குக் கிடையாது அதனாலே, வேறே யாரையாவது......"

வடிவேலு முதலியார் பட்டவர்த்தனமாக விட்டுச் சொல்வதைக்கண்டதும், பக்கத்தில் மைனர் முதலியாருக்கு மிகவும் வேண்டியவரான சுப்பையா முதலியார் இருப்பதைச் சாடைகாட்டி, வடிவேலு முதலியாரின் தொடையில் லேசாகக் கிள்ளினார். ஒரு நெசவாளி. வடிவேலுமுதலியாரோ அதற்கெல்லாம்மசிபவராயில்லை.

"எல்லாம் தெரிஞ்சிதான்'வே சொல்லுதேன்" என்று அடித்துப் பேசியவாறே இடத்தைவிட்டு எழுந்திருந்தார் வடிவேலு. பிறகு கடைக்கார மூப்பனாரைப் பார்த்து,

"ரெண்டு சுருட்டு குடுங்க. வாய்க்காங்கரைப் பக்கம் போகணும்"என்றார்.

வாங்கியசுருட்டில்ஒன்றைப்பற்றவைத்துக்கொண்டு, "வாய்க்காங் கரைக்கு யாராவது வர்ரியளா?" என்று கேட்டார்.

சுப்பையா முதலியார் தமக்கு வேறு வேலையிருப்பதாகக் கூறிக்கொண்டு விடைபெற்று, எதிர்த் திசையில் திரும்பினார். சுப்பையா முதலியார் சென்றதும், தொடையைக்கிள்ளிச்சாடைகாட்டியநெசவாளிவாயைத் திறந்தார்.

"என்ன அண்ணாச்சி, பக்கத்திலே நாரதாமுனி சுப்பையா நிக்கயிலேயே நீங்க மைனர்வாளைப் பத்திவிளாசித் தள்ளுதியளே" என்று பாதி அங்கலாய்ப் புடனும்பாதிப்பாராட்டுடனும்கூறினார்.

"வேணுமின்னுதான் தம்பி சொன்னேன். இப்போ அவர் நேரா மைனர் முதலியாரிடம்போய், அத்தனை விசயத்தையும் ஒண்ணுவிடாமே, இறக்கி வச்சிட்டுத்தானே மறுவேலை பார்ப்பார்! அதுக்குத்தானே சொன்னேன்" என்றுபெருமிதத்தோடுசொன்னார்வடிவேலு.

"நீங்கஎதுக்கும் துணிஞ்சவங்கதான்,அண்ணாச்சி!"

"துணிஞ்சவனுக்குத்தான், தம்பி, துக்கமில்லை!" என்று அனுபவ வாயிலாகப் பிறந்த நீதிவாக்கியத்தை உதிர்ந்து விட்டு, வாய்க்காலை நோக்கி நடக்க முனைந்தார் வடிவேலுமுதலியார்.

## 2

அம்பாசமுத்திரம் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபருணி நதியின் தலைப் பகுதியிலுள்ள ஊர். ஊருக்குத் தெற்கே, அம்பாசமுத்திரத்துக்கும் கல்லிடைக்

குறிச்சிக்கும் எல்லை கிழித்தமாதிரி, ஸ்படிகத் தெளிவு கொண்ட தாமிரபருணி நதி ஓடிக்கொண்டிருக்கிறது. ஊருக்கு மேற்கே ஐந்தாறு மைல் தொலைவில், மேற்குத் தொடர்ச்சிமலை மஞ்சு தவழும் முகடுகளோடு அரண் வகுத்துக் கோட்டைச் சுவர் மாதிரி வானளாவி நிற்கிறது. மலைத்தொடரின் அடிவாரத்தில், தமிழ் பிறந்த தென்னன் பொதிகைச் சாரலில், வெள்ளைக்காரப் பெரு முதலாளியான ஹார்வியின் பஞ்சாலைகொடிகட்டி ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறது. ஆகஸ்டுச் சுதந்திரத்தின் அபிநவபாண்டிய குமாரனாக, ஹார்விதென் பாண்டி நாடு முழுவதிலும் கால் பரப்பி, அந்தப் பகுதியின் பொருளாதாரத்தின்மீதுபேராதிக்கம்செலுத்திவருகிறான். ஹார்வி மில்லுக்கு மேலே மலைமீது முண்டந்துறை என்ற கீழணைப் பிராந்தியத்தில் பாபநாச ஜல மின்சார உற்பத்தி நிலையம் கொலுவீற்றிருக்கிறது. தாமிரபருணித்தாய் வாரி வழங்கும்மகாசக்தியானமின்சாரத்தைக்கூட, அவளுடைய மக்களானநெல்லை ஜில்லாவாசிகளுக்குஒருவெள்ளையன் தான் தரகுக்காரனாக இருந்து விநியோகித்து வருகிறான். மின்சார நிலையத்துக்குமேலாக, பழைய நீலகண்டன் கசம் இருந்த இடத்தில், 'அப்பர் டாம்' என்ற காரையார் அணைக்கட்டும், அணைக்கட்டினால் ஏற்பட்ட 'ஆர்தர் ஹோப் ஏரி'யும் இருக்கின்றன மலையடிவாரத்தில் குடியேறிவிட்ட யந்திர வளர்ச்சியின் காரணமாக, அம்பாசமுத்திரத்திலிருந்து காரையாருக்குச் செல்லும் ரோட்டிலும், மலைப் பாதையிலும் சதா சர்வகாலமும் லாரிகளும், பிளஷர் கார்களும், பஸ்களும் பறந்தோடிய வண்ணமாய் இருக்கும் அம்பாசமுத்திரத்துக்குக் கிழக்கே ஐந்தாறு மைல் தூரத்தில் வீரவநல்லூர் என்ற இடைகழி ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில், அந்த வட்டாரத்துக்குப் பெருமுதலாளிகளான, இந்தியாவின் சிறு முதலாளிகளின் பகீரத முயற்சியினால் தொடங்கப் பெற்ற புதிய டெக்ஸ்டைல் மில் ஒன்றும் இருக்கிறது. மலைவிழுங்கி மகா தேவனாக விளங்கும் விக்கிரமசிங்கபுரத்து ஹார்வி

மில்லுக்கு எதிராக, அந்த மில் அமைந்திருப்பது விஸ்வரூப ராட்சதனுக்கு எதிரே, நாபிக் கொடி காய்ந்து விழாத பச்சிளங் குழந்தை தவழ்ந்து விளையாடத் துணிவது மாதிரித்தோற்றம் அளித்துக்கொண்டிருந்தது.

தாமிரபருணித் தாயிடமிருந்து முதல் பாசன ஊட்டத்தைப்பெறும்பாக்கியம்பெற்றது அம்பாசமுத்திரம் எனவே, எந்தக் காலத்திலும் அந்த வட்டாரத்தில் தீய்வோ, தண்ணீர்த்தட்டோ இருந்ததில்லை. ஊரைச் சுற்றிலும் பல மைல் விஸ்தீரணத்துக்கு பச்சைப் பசிய நெல்வயல்கள் மரகத மைதானமாக விரிந்து கிடக்கும். திருநெல்வேலி ஜில்லா ஒரு பற்றாக்குறைப் பிரதேசம்தான்; என்றாலும் அம்பாசமுத்திரத்தைப் பொறுத்த வரை அது ஒரு பற்றாக்குறைப்பிரதேசம் அல்ல.எனினும் இந்தியாவெங்கும் உள்ளது போலவே, அங்கிருந்த நிலங்களில் பெரும்பகுதி நேரடியாகவிவசாயம்செய்யும்விவசாயப்பெருமக்களுக்குச் சொந்தமானதல்ல. பெருவாரி நிலங்கள் கல்லிடைக் குறிச்சி பெரிய ஐயன்மார்கள் என்ற பார்ப்பன நிலப்பிரபுக் களுக்கும், சைவ ஆதீன மடங்களுக்கும், ஒருசில பண்ணையார்களுக்கும், பற்பல சிறு நிலச் சொந்தக்காரர் களுக்கும் உடைமையாயிருந்தன. விவசாயிகள் பெரும் பாலும் நிலச்சுவான்தார்களிடம் நேரடிப் பாட்டத்துக்கு எடுத்தோ, அல்லது ஆதீன மடங்களைச் சேர்ந்த தரகுப் பிள்ளைமார்களிடம் குத்தகைக்கு எழுதி வாங்கியோ பயிர் செய்வதுதான் நடைமுறை வழக்கமாய் இருந்து வருகிறது. 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குக் கூட மிஞ்சாது' என்றபழமொழிக்கு இலக்கணமாக,நாளுக்குநாள் உயர்ந்து வரும் வாழ்க்கைச் செலவின் சூழ்நிலையில் எங்குமுள்ளது போலவே அங்குமுள்ள விவசாயிகளின் வாழ்க்கை சீரழிந்து வருகிறது.

அம்பாசமுத்திரம் ஊரைப் பொறுத்தவரையிலும் அது தாலுகாக் கச்சேரியும் பஞ்சாயத்து போர்டு ஆபீசும் அடுத்தடுத்துள்ள இரண்டுங் கெட்டான் நகரம்; அதாவது

வளர்ச்சியுற்ற கிராமம், சர்க்கார் கச்சேரிகள், பஸ், ரயில் போக்குவரத்து முதலிய நிலைமைகளால், அந்த ஊர் வளர்ந்து வரும் சிறுநகரப்புறம்போல் காட்சியளித்துக் கொண்டிருக்கும். ஊரில் பெரும்பான்மையான மக்கள் விவசாயப் பெருங்குடி மக்கள், அன்றாடக் கூலிகள், சிறு தொழிற்காரர்கள் முதலியோர் தாம்.சர்க்கார் உத்தியோகம், சிறு வியாபாரம், கமிஷன் ஏஜண்ட், பள்ளி ஆசிரியர் முதலியவர் போன்ற மத்தியதர வர்க்கத் தொழில் புரியும் மக்களும்,ஏதோ வசதியாய் உட்கார்ந்து சாப்பிட வழியுள்ள நிலச்சுவான்தார்களும் ஊரின் பிரதான குடிமக்கள். இவர்களைத் தவிர, ஊரின் ஒரு பகுதி முழுவதும் பரம்பரை பரம்பரையாகத் தறி நெய்து ஜீவனோபாயம் தேடி அதில் வாழ்ந்தவர்களும் தாழ்ந்தவர்களுமான கைத்தறிநெசவாளர் சமூகமும் அங்குண்டு. கைத்தறி நெசவாளர்களில் பெரும்பாலோர் வெள்ளை வேட்டிப் பண்டாரங்களான கடைத்தட்டு மத்தியதர வர்க்கத்தார் தாம்.ஒருசிலர் மட்டும் ஜவுளிக்கடை நடத்தும் முதலாளிமார்களாகவும், மாஸ்டர் வீவர்களாகவும் நூல் வியாபாரிகளாகவும் இருந்து வந்தனர்.

சுருங்கச்சொன்னால், அம்பாசமுத்திரம் விட்ட குறை தொட்ட குறையாகவுள்ள அரைகுறை அடிமை நாட்டின் அனுபவ சித்திரமாக விளங்கி வருகிறது. ஒரு புறம் வர்க்க போதம் பெற்று, பற்பல போராட்டங்கள் நிகழ்த்தி வெற்றி கண்ட ஹார்வி மில் தொழிலாளி வர்க்கம்; இன்னொரு புறம், அகழியில் விழுந்த முதலையைப்போல் தன்னுள்தானே வாழ்ந்து கொண்டு, என்றோ ஒருநாள் எதிர்பாராத அதிர்ஷ்டம் பொத்துக்கொண்டு வரத்தான் போகிறது என்ற அசட்டு நம்பிக்கையின் அஸ்திவாரத்திலேயே நாட்களைக் கடத்தும் நெல்லிக்காய் மூட்டை போன்ற, ஊசலாட்ட மனப்பான்மை கொண்ட சிறு முதலாளிகள், கைத்தறி நெசவாளிகள், சிப்பந்திகள் முதலியோர் கூட்டம்.ஒரு புறம் பகாசுரப் பசியோடு இரவும் பகலும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைக் கொண்டு இயங்கும் ஹார்வியின் பஞ்சாலை; மறு புறத்தில் முக்கித்

தக்கி வளர முயலும் உள்நாட்டுச் சிறு முதலாளிகளின் யந்திரத்தொழில்முயற்சி, ஒருபுறம் அசுரவேகத்தில் பறந்து செல்லும் லாரிகள், பஸ்கள்; இன்னொரு புறத்திலோ, தெற்கு மலையிலுள்ள சொரிமுத்தையன் கோயிலில் பொங்கலிட்டுப் பூசை போடுவதற்காக, மலைக்காட்டுப் பாதையில் ஆமை வேகத்தில் செல்லும் கூண்டு வண்டிகள். ஒருபுறம் யந்திர சாதனமும் மின்சார உற்பத்தியும் நிறைந்த தொழிற்சாலைகள்; மறுபுறத்தில் ஆதீன அடியார்க்கு நல்லார்களின், தரகுப் பிள்ளைமார் என்ற தடியடித் தம்பிரான்களின் நிலப்பிரபுத்துவச் சுரண்டலுக்கு இரையாகிக் கொண்டிருக்கும் பிற்போக்கான விவசாயச் சமூகம். ஒருபுறம் அன்னிய முதலாளித்துவம்; மறுபுறம் உள்நாட்டு நிலப்பிரபுத்துவம்-

நிலப்பிரபுத்துவச் சீரழிவுக்கும், முதலாளித்துவ வளர்ச்சிக்குமான சரித்திர கதியின் பிரசவ காலத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் இன்றைய இந்தியாவின் ஒரு பகுதியான அம்பாசமுத்திரம் தென்பிராந்திய ரயில்வேயில் ஒரு முக்கிய ஸ்டேஷன். ரயில்வே ஸ்டேஷன், ஊர் ஜனங்களின் வசதியை உத்தேசித்துக் கட்டப்பட்டதா, அல்லது ஹார்வி மில்லின் சௌகரியத்தைக் கருதிக் கட்டப்பட்டதா என்ற சந்தேகம் ஸ்டேஷனில் வந்திறங்கும் எவருக்கும் ஏற்படலாம். ஏனெனில் ஸ்டேஷனுக்கும் ஊரின் கேந்திர பாகத்துக்கும் ஒன்றரை மைல் தூரமிருக்கும்; அதே சமயத்தில் ரயில்வே ஸ்டேஷனை அடுத்து, அம்பா சமுத்திரம்-விக்கிரமசிங்கபுரம் ரோட்டோரத்தில் ஹார்வி மில்லுக்குச் சொந்தமான கிட்டங்கி இருக்கிறது. ஸ்டேஷனிலிருந்துகாலாறக்கிட்டத்தட்ட ஒருமைல் தூரம் நடந்து வந்தால், ஊரும் கடை கண்ணிகளும் கண்ணில் தட்டுப்படும். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊரை நோக்கி வரும் பீடர் ரஸ்தாவில் சிறிது தூரம் வந்தபிறகு, இடது புறமாகவும், வலதுபுறமாகவும் செல்லும் தெருக்கள் முதலிமார் என்றழைக்கப் பெறும் கைநெசவுத் தொழிலாளர்கள் வாழும் பிரதேசத்தைப் புலப்படுத்தும்.

ரோட்டின் இடது புறமாகச் செல்லும் தெருவின் மத்தியில் தான் லோகநாயகி அம்மன் கோயில் இருக்கிறது.

அம்மன் கோயிலுக்கு எதிரிலும், பக்கத்திலுமுள்ள தெருக்களில் அருணோதய காலங்களில் சூ ரிய தேவனுக்கு வானவில்லை நெளிசல் எடுத்து நடை பாவாடையாக விரித்துப் போட்டதுபோல், பாவு தோய்க்கும் கோலாகலக் காட்சி தெரு நிறைந்து ஒளி செய்யும். அம்மன் கோயிலுக்கு எதிராகச் செல்லும் சந்நிதித் தெருவின் கடை கோடியிலுள்ள காரை வீடுதான் மைனர் முதலியார்வாளின் வீடு. மேலத் தெருவின் மத்தியில் எடுத்துக் கட்டிய புதிய மாடியோடுஉள்ளதுகைலாசம்முதலியாரின்வீடு.அதற்கும் அப்பால், தன்னந் தனியாக, தெரு ரோட்டோடு கலக்கும் சங்கம முகத்தில், காம்பவுண்டு சுவர் வளைந்து, காடியானாவும், கார்ஷெட்டும் பூஞ்செடிகளும் உள்ள பங்களா வீடுதான் பெரிய முதலாளி என்று மதிக்கப்படும் தாதுலிங்க முதலியாரின் 'மங்கள பவனம்'.

சந்நிதித் தெருவின் கடைகோடி வீட்டு முன்வாசலில் ஒரு கறுப்பு நாய் தூங்காமல் தூங்கிச் சுகம் கண்டு கொண்டிருந்தது.

சுப்பையா முதலியார் அந்த வீட்டு வாசலில் நின்று கொண்டு, "அண்ணாச்சி, அண்ணாச்சி" என்று பவ்வியத்தோடு குரல் கொடுத்தார். குரலைக் கேட்டதும், வாசலில் படுத்திருந்த நாய் எழுந்து நின்று வறட்டுக் குரலில் குலைக்கத்தொடங்கியது.

நாயின் சத்தத்தைக் கேட்டு வெளிவந்த மைனர் முதலியார் "அடடே! சுப்பையாவா? வாப்பா உள்ளே" என்று அருமையோடு அழைத்தார். நாயின் உறுமலைக் கண்டு ஒதுங்கி நின்ற சுப்பையாவைக் கண்டு, மைனர் லேசாகச் சிரித்து விட்டு, நாயைச் சொடுக்கு விட்டு அருகே அழைத்து, "என்ன வெள்ளை! உனக்கு ஆள்கூட இனம் தெரியிலியா? இவனும் நம்மளவந்தான்!" என்று

கூறிக்கொண்டே நாயைத் தட்டிக் கொடுத்தார். நாயும் எதையோ புரிந்து கொண்டது போல், தலையை ஆட்டிவிட்டு மீண்டும் தன்னிடத்தில் போய்ப் படுத்துக் கொண்டது.

மைனர் முதலியாரைத் தொடர்ந்து சுப்பையா முதலியாரும் உள்கட்டுக்குச் சென்று கூடத்திலிருந்த கருங்கல் திண்ணை மீது உட்கார்ந்தார்.

மைனர் முதலியார்வாளின் மிடுக்கு பெயருக்குத் தக்கவாறு படாடோபமாகத்தான் இருந்தது. எனினும் இளமையில் இரவு பகல் என்று பாராமல் வண்டி போட்டுக் கொண்டு வைப்பாட்டிமார்களின் வீடுகளுக்குச் சென்று விளையாடி விட்டு வந்ததால், உடம்பில் தாது விழுந்து போய், கனமாய் தோன்றிய போதிலும் எடுப்பும் மினுமினுப்பும் இல்லாதிருந்தது. எனினும் கையிலே டாலடிக்கும் வெள்ளைக்கல் மோதிரங்கள், நெற்றியிலே அளவெடுத்து வட்டமிட்டது போல் விளங்கும் அழகிய சந்தனப் பொட்டு, வழுக்கை விழுந்த தலையேயாயினும் மிஞ்சி நின்ற ஓரிரு ரோமங்களையும் வாளிப்பாக வாரி விடப்பட்ட கிராப், கழுத்திலே கிடந்து ஒளி சிதறும் நவரத்னக் கற்கள் கோத்த மெல்லிய சங்கிலி, வெற்றிலையும் புகையிலையும் கலந்து லக்ஷ்மிகரமாய் விளங்கும் திருவாய் முதலிய சம்பிரமங்கள் மைனர்வாளின் தளர்ந்து போன உடற்கோலத்துக்குக்காயகல்பம்செய்து ஈடுகட்ட முயன்று கொண்டிருந்தன. மைனர் முதலியார் வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே எதிரே கிடந்த ஆசனத்தில் அமர்ந்தார்.

மைனர் முதலியார்வாளின் குடும்பம் பல தலைமுறைகளாக வியாபாரத்திலும், லேவாதேவியிலும் ஈடுபட்டு ஏராளமான நிலபுலன்களையும் சொத்துச் சுகங்களையும் தேடி வைத்திருந்தது. மைனரின் தந்தை தமது ஆயுட்காலம் முழுவதையும் அநேகமாகக் கோர்ட்டு வாசலிலேயே கழித்து விட்டார். 'கோடேறியவன் வீடு ஈடேறாது' என்ற நாட்டுப் பழமொழிக்கு எதிர்மறை

இலக்கணமாகத்தான் அவரது கோர்ட்டு வாழ்க்கை கழிந்தது. அதாவது அவர் கோர்ட்டுக்குச் சென்று கைமுதல் எதையும் இழக்கவில்லை. அதற்குப் பதிலாகக் குடியானவர்களிடமும் ஏழை எளியவர்களிடமும் கண்ட கண்ட வட்டிக்கும் பணத்துக்கும் நோட்டும் அடமானமும் எழுதி வாங்கி, வாங்கி அவர்களிடமுள்ள சொத்துக்களைச் சட்டத்தின்பேரால் அபகரிக்கும் திருப்பணிக்காகவே அவர் கோர்ட் வாசலுக்கு மாதாமாதம் சென்று வந்தார். மைனர் முதலியார் சுயாதீனத்துக்கு அந்தச் சொத்துக்கள் வந்தபோது கண்மூக்குத் தெரியாமல் டம்பாச்சாரி வாழ்க்கைவாழ்வதற்கும் விளையாடுவதற்கும் நிறைந்தவசதி இருந்தது. எனினும் மைனர் முதலியார் அந்த வாழ்க்கையிலேயே ஓரேயடியாய் முங்கி முழுகி நொடித்துப் போய்விடவில்லை. முப்பத்தைந்து வயதுக்குள்ளாகவே அந்தவாழ்க்கை இரும்புப் பெட்டியை மட்டும் பிடிக்காமல், உடம்பையும் பிடிக்கத் தொடங்கிவிட்டதால், மைனர் முதலியார் உயிராசையின் காரணமாக, சீக்கிரமே ஏலாப் பதிவிரதா இச்சா பத்திய நிர்ப்பந்தத்துக்கு ஆளானார். அதன் பின்னர் அவரும் மற்றவர்களைப் போலவே வியாபாரத்தைக் கவனிக்கவும், நூல் ஜவுளிக் கொள்முதல் செய்யவும், வீடு தேடி வந்து விடாப்பிடியாகக் கடன் கேட்கும் சுயஜாதிக்காரரிடத்திலும் பிறரிடமும் ஒன்றரை வட்டி இரண்டு வட்டிக்குச் சொத்தின் பேரிலும் நகை நட்டுக்களின் பேரிலும் கடன் கொடுக்கவும் தொடங்கி, தம் தந்தையின் பிதுர்க்கைங்கரியத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தார். அவரது சமூகத்தினரிடையே பலரும் அவரிடம் கடன் பட்டவர்களாதலால், அவர் தமது பொருளாதாரப் பிடிப்பின் மூலம் அந்த மக்களின் தெய்வ பக்தியிலிருந்து சகல சுப அசுப காரியங்களிலும் ஏகபோக ஆட்சி செலுத்தி வந்தார். எனவே அவர் அம்மன் கோயில் தர்மகர்த்தாவாக இருந்து, ஏதேதோ காரியங்கள் செய்தும் ஊர்க்காரர்கள் அவரைத் தட்டிக் கேட்கப் பயந்து விட்டு விதி என்றிருந்தார்கள்.

ஈஸிச்சேரில் சாய்ந்தவாறே பக்கத்திலிருந்த எச்சில் படிகத்தில் காறித் துப்பிவிட்டு, நிமிர்ந்த மைனர் முதலியார், "என்ன சுப்பையா, எங்கே? காலம் காத்தாலே" என்று கேட்டார்.

சுப்பையா தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசினார்.

"நேத்து ராத்திரியே வந்தேன் அண்ணாச்சி, உங்களைக் காணம். அதுதான் காலையிலேயே வந்துட்டுப் போயிறலாம்னு வந்தேன்."

"சரி, என்ன விசயம்?"

"எல்லாம் நம்மவங்க விசயம்தான். நம்ம வடிவேலு முதலியாரும்ரெண்டொருத்தரும்சேந்துக்கிட்டுஎன்னமோ தறிக்கூலியை உசத்திக் கேக்கணும்னு பேசிக்கிடுதாக.நேத்து நானே கேட்டேன்" என்று தொடங்கினார் சுப்பையா.

"இவனுகளுக்கு என்ன பைத்தியம் கியித்தியம் புடிக்கிருக்கா? காலம் கிடக்கிற கிடையிலே கூலியை உசத்துறதாவது? கட்டுபடியாக வேண்டாமா?" என்று செல்லச் சிரிப்புடன் பதிலளித்தார் மைனர்.

"சொன்னாக் கேக்காங்களா, அண்ணாச்சி, பாருங்க, அந்தவடிவேலுஇத்தனையையும்அந்தக்கைலாசமுதலியார் தைரியத்திலேதான் பேசுறாரு. கைலாச முதலியார்கிட்டே கலந்துக்கிட்டு ஊர்க்கூட்டம் போடப் போறதாகச் சொன்னாரு."

"என்னது? கைலாச முதலியாரா? அவர் மின்னேயும் ஒருதரம் இப்படித்தான் பெரிய தாராளப் பிரபு மாதிரிக் கூலியை உசத்திக் குடுக்கணும்னு, இவனுகளோட சேர்ந்துக் கிட்டுத் தாளம் போட்டாரு இதிலே அவருக்கென்ன லாபமோ தெரியலே?" என்று சலித்தாற்போல் சொன்னார் மைனர்.

"லாபம் இல்லாமலா, அண்ணாச்சி" என்று பொடி வைத்துச் சிரித்தார் சுப்பையா.

"என்ன, என்ன சொன்னே?" மைனர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"அண்ணாச்சி, அவர் இப்படித் தறிகாரர்களுக் கெல்லாம் சாதகமா நடந்து அவங்களையெல்லாம் கைக்குள்ளே போடப் பார்க்கிறாரு. எல்லாம் உங்களுக்கு எதிரிடையாத்தான்!"

"எனக்கு எதிராகவா? அப்படின்னா?" என்று வியந்தார் மைனர்.

"ஒண்ணுமில்லே. நீங்க அம்மன் கோயில் தர்மகர்த் தாவா இருக்கது அவரு கண்ணை உறுத்துது போலிருக்கு. அவரே இந்த வருசம் தர்மகர்த்தா ஆகணும்னு கொடி கட்டிக்கிட்டுத் திரியிறாரு. அதுதான் அவர் இப்படிப் படை திரட்ட ஆரம்பிச்சிருக்காரு."

"ஊஹூம்" என்று இளங்கோபத்தோடு உறுமிக் கொண்டார் மைனர்.

"அண்ணாச்சி, பரம்பரையா வியாபாரம் பண்ணிப் பணக்காரனாயிருந்தா இந்த அற்ப ஆசையெல்லாம் தோணுமா? சண்டைக்கிமின்னாலே அவரும் தறிக்குழியிலே கிடந்து லொக்கடி லொக்கடின்னு நெஞ்சவர்தானே அண்ணாச்சி!"

"சரிதான்" என்று ஒரு வார்த்தையைப் போட்டுவிட்டு ஏதோ யோசித்தார் மைனர்.

"அண்ணாச்சி, நீங்க எவ்வளவு காலமாகத் தர்மகர்த்தாவா இருக்கீஹ. இப்ப உங்களைத் தள்ளிட்டு அவர் வாரதுன்னா, அது நல்லாருக்கா? நம்ம குடும்ப கௌரவம் என்னாகிறது?"

"சுப்பையா!" என்று அடக்கமாகக் கூப்பிட்டார்

மைனர்; சுப்பையா ஆர்வத்தோடு கழுத்தை நீட்டினார்.

"இந்தா பாரு ஒண்ணும் நம்ம கையைவிட்டு மிஞ்சிப் போயிராது. இப்பவும் கைலாசத்துக்கு நம்ம தாதுலிங்க முதலியார்வாள் கிட்டேதான் லேவாதேவி. ஆசாமியை அந்தப் பக்கமா ஒரு இறுக்கு இறுக்கினாப் போச்சி!" என்றார் மைனர்.

"அதென்னமோ அண்ணாச்சி லேசிலே இதை விட்டுறக்கூடாது."

"உன்னைமாதிரி நாலுபேர் சொல்றாகளேன்னுதான் பார்க்க வேண்டியிருக்கு. இல்லேன்னா, இதிலே என்ன காசா பணமா? என்னமோ தெய்வகாரியமேன்னு பார்த்தா, ஊர்க்காரன் சும்மா இருக்கானா? எடுத்ததுக்கெல்லாம் பொல்லாப்பு இருந்தாலும் இந்த அருணாசல முதலியாரை அப்படி ஒண்ணும் மடக்கிற முடியாது. ஆமா" என்று ஆணித்தரமாக அறைந்தார், மைனர் முதலியார்.

"நல்லாச் சொன்னிய, அண்ணாச்சி. பூடம் தெரியாம, சாமி ஆடுதானுக" என்று மைனரின் வஞ்சின மொழியைப் பாராட்டினார் சுப்பையா. பிறகு அவர் தமது இடத்தை விட்டு எழுந்திருந்தவாறே, "அப்ப நான் வரட்டுமா, அண்ணாச்சி?" என்று கேட்டார்.

"சரி" என்று நிர்விசாரமாகப் பதில் வந்தது எனினும் சுப்பையா அந்த இடத்தை விட்டு நகரவில்லை. கையைப் பிசைந்து கொண்டு நின்றார்.

"என்ன சுப்பையா?" என்று அர்த்த பாவத்தோடு கேட்டார்மைனர்.

"ஒண்ணுமில்லே அண்ணாச்சி. நம்ம சின்னப் பயலுக்கு உடம்புக்கு முடியலெ. டாக்டர்கிட்டெ காட்டணும். கையிலெ ஒத்தச் சல்லி இல்லெ. அஞ்சு ரூவா இருந்தாக்கிடைக்குமா?" என்றுமென்றுவிழுங்கிக்கூறினார் சுப்பையா.

மைனர் முதலியார் மோவாயைத் தடவியவாறே முகட்டைப் பார்த்தார். பிறகு இரண்டு ரூபாய் நோட்டைப் பையிலிருந்து எடுத்து நீட்டியவாறே, "இந்தா, இதை வச்சிக்க" என்று கூறினார்.

சுப்பையாவின் வாயெல்லாம் பல்லாய்த் தெரிந்தது. கிடைத்தவரையில் லாபம் என்ற ஆத்ம திருப்தியோடு அந்த நோட்டை வாங்கி இடுப்பில் சொருகிக்கொண்டு வாசலுக்கு வந்தார். வாசலில் கிடக்கும் நாய்க்குப் பயந்து அரவமில்லாமல் நடை இறங்கினார்.

நல்ல வேளையாக வெள்ளை நிச்சிந்தையாகத் தூங்கிக் கொண்டிருந்து.

## 3

மாலை மணி ஐந்து இருக்கும்.

திருநெல்வேலி ஜங்ஷன் பிளாட்பாரத்தில் ஜனக் கூட்டம் நிறைந்து கலகலப்போடிருந்தது. சென்னைக்குச் செல்லும் பாஸ்ட் பாஸஞ்சர், செங்கோட்டை செல்லும் லோக்கல் பாஸஞ்சர், திருச்செந்தூர் செல்லும் ஷட்டில் மூன்றும் தத்தம் பிளாட்பாரங்களிலே நின்று கொண்டிருந்தன. வயிறாரத் தண்ணீர் குடித்துவிட்டு வந்திருந்த ரயில் இஞ்சின்கள் புஸ்ஸென்று இரைந்து கொண்டு பச்சைக் கொடியின் அசைவை எதிர்நோக்கி நின்றன. டவுனுக்கு வந்த சரக்கு வாங்கிச் செல்லும் அயலூர்ச் சிறு வியாபாரிகள், கூடைகளைக் காலி பண்ணிவிட்டு வீடு திரும்பும் தூக்கு வியாபாரிகள், ஸீஸன் டிக்கட்டில் கல்லூரிகளுக்கு வந்து செல்லும் மாணவர்கள் மற்றும் பற்பல பிரயாணிகள் முதலியோர் சுறுசுறுப்போடு, அங்குமிங்கும் திரிந்து கொண்டிருந்தார்கள்.

முதல் பிளாட்பாரத்திலுள்ள இரண்டாம் வகுப்பு வெயிட்டிங் ரூமில் கமலா தன்னந்தனியாக அமர்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு அருகில் அடுக்காக இருந்த புத்தகங்கள் அவள் ஒரு மாணவி என்பதைப் பிறருக்குப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. பிளாட்பாரத்தில் திரிந்து கொண்டிருந்த மாணவர் திருக்கூட்டத்தில் சிலர் தங்கள் சட்டைக் காலர்களை முயல் காதுகளைப் போல் தூக்கி விட்டுக் கொண்டும், சிகரெட்டுக்களைப் புகைத்துக் கொண்டும், கலகலவென்று வெட்டிச் சிரிப்புச் சிரித்துக் கொண்டும் அவளது கவனத்தைக் கவர முயன்று கொண்டிருந்தனர். வேறு சிலர் அருகிலுள்ள ரயில்வே நிலையப் புத்தகக் கடையில் போய் நின்று கொண்டு, புத்தகங்களைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர் அவள் ஒருத்தி இருக்கிறாள் என்ற பிரக்ஞையே அற்று தத்தம் போக்கில் சென்று கொண்டிருந்தனர்.

மாணவர்களின் வாலிபக் கண்களை அவள் கவர்ந்ததில் வியப்பொன்றும் இல்லை. உண்மையில், அவள் கண் நிறைந்த அழகியாகத்தான் இருந்தாள். கமலாவுக்கு மிஞ்சிப்போனால் இருபது வயதிருக்கலாம். மாணவிதான் என்றாலும், சோகை பற்றி வெளிறிப் பசந்து போய், கீரைத் தண்டு போல் மெலிந்து தோன்றும் இன்றையக் கல்லூரி மாணவியர் சிலரைப்போல் அவள் காட்சியளிக்கவில்லை. மேலும் நவநாகரிகம் என்ற பெயரால் முகத்தைச் சர்வ விகாரமாக்கிக் கொள்ளும் அன்னிய நாட்டு அலங்கார ஆடம்பரங்களும் அவளிடத்தில் காணப்படவில்லை. பொன்னிறமான மேனி, எடுப்பும் நிமிர்வும் கொண்ட வாளிப்பான உடற்கட்டு, கடைசல் பிடித்து மெருகு கூட்டியது போன்ற 'மூக்கு முழி' கச்சிதமான, கண்ணை உறுத்தாத ஆடையலங்காரம் முதலியவற்றோடு அவள் ஒரு செளந்தர்ய விக்ரகம் போல் இருந்தாள். திறந்திருந்த கண்ணாடி ஜன்னல் வழியாக வந்து சாயும் அந்திநேரக்

கதிரவனின் மஞ்சள் வெயில் அவளது மாம்பழக் கன்னக்கதுப்பில் விழுந்து பளபளத்தது; அவளது காதில் தரித்திருந்த வைரக்கம்மல் மஞ்சள் வெயிலை சப்தவர்ண ஒளிரேகைகளாக மாற்றி அவளது கன்னக் கதுப்பில் தூவிச் சிதறி விளையாடியது. லயமுறிவின்றித் தாளமிடும் அவளது மெலிய சீரடிகள் அவள் ஏதோ ஒரு இசையை மனத்துக்குள் முணுமுணுத்துக் கொண்டிருக்கிறாள் என்பதைப் புலப்படுத்தின.

கமலா அம்பாசமுத்திரம் பெரிய முதலாளி என்ற தாதுலிங்க முதலியாரின் புதல்வி. தாதுலிங்க முதலியாருக்குத் தம் மகளைப் பத்தாவதுக்குமேல் படிக்க வைக்க விருப்பமில்லை. "இவள் என்ன படிச்சி உத்தியோகமா பார்க்கப் போகிறாள்? சொத்துச் சுகமோ இருக்கு. எங்கேயாவது ஒரு நல்ல இடமாப் பார்த்துக் கையைப் பிடிச்சிக் குடுத்திட வேண்டியதுதான்" என்றுதான் அவர் கருதி வந்தார். எனினும் கமலாவின் பிடிவாதமும், அவள் அண்ணன் சங்கரின் வற்புறுத்தலும்தான் தாதுலிங்க முதலியாரின் எண்ணத்தை முறியடித்தன. அதன் விளைவாக, கமலா கடந்த ஒரு வருஷ காலமாக, பாளையங்கோட்டையிலுள்ள மகளிர் கல்லூரியில் இண்டர் படித்து வந்தாள்.

கமலா இடையிடையே தன் கைக்கெடியாரத்தைப் பார்ப்பதும், தலை நிமிர்ந்து யாரையோ எதிர்பார்க்கும் பாவனையில் வாசலை நோக்குவதுமாக இருந்தாள். அவளது விழிக் கருமணிகளில் தோன்றிய ஆழமும் ஆர்வமும் அவளது ஆவலுணர்ச்சியைப் புலப்படுத்துவதாயிருந்தன.

அவள் எதிர்பார்த்திருந்தது போலவே சிறிது நேரத்தில் ஒரு வாலிபன் கையில் சில புத்தகங்களைச் சுமந்து கொண்டு, அங்கு வந்தான். காலடியோசை கேட்டதும், அவள் தலை நிமிர்ந்தாள். அவளது சிவந்த இதழ்களில் அழகிய புன்னகை மலர்ந்து ஒளி வீசியது.

"வாங்க அத்தான்" என்று அன்புடன் வரவேற்றாள் கமலா.

"ஏது, ரயில்வே ஸ்டேஷனில்கூடப் படிப்புத்தானா?" என்று புன்னகையோடு கேட்டுக்கொண்டே எதிரே கிடந்த நாற்காலியில் அமர்ந்தான் அந்தவாலிபன்.

"இது பாடப் புத்தகமில்லை அத்தான். இது 'சோஷியலிஸமும் பெண்களும்' என்ற புத்தகம். அண்ணா வாங்கிக் கொடுத்தான்" என்று மணிக்குரலில் பதிலளித்தாள் கமலா.

"யார்? சங்கரா வாங்கிக்கொடுத்தான்? ஏதேது? அவன் உன்னையும் தன் கட்சிக்கு இழுக்கத்தொடங்கிவிட்டானா?" என்று மெல்லிய சிரிப்போடு கேட்டான் அவன்.

கமலா பதிலுக்கு லேசாகச் சிரித்துவிட்டு, புத்தகத்தில் கண்ணைத் திருப்பினாள். அந்த வாலிபனும் தானும் ஏதோ படிக்கப் போவதுபோல் கையில் ஒரு புத்தகத்தை எடுத்துப் புரட்டினான்.

மணி என்ற அந்த வாலிபனுக்குச் சுமார் இருபத்தி மூன்று வயதிருக்கும். அவன் அம்பாசமுத்திரத்திலுள்ள ஜவுளி நூல் வியாபாரியான கைலாச முதலியாரின் தலைப் புதல்வன். சுருள் சுருளாகத் திரண்டிருக்கும் அவனது கரிய தலைமயிரும் வாய் நிறைந்த சிரிப்புக் களையும் அவனுக்கு ஒரு தனி வசீகரத்தைத் தந்து கொண்டிருந்தன. மணி திருநெல்வேலியில் ஜூனியர் பி.ஏ. படித்துக் கொண்டிருந்தான். கமலாவுக்கு எதிரே அமர்ந்திருந்த மணி தானும் ஏதோ வாசிக்கப்போவதாகப் பாசாங்கு செய்தானே ஒழிய, உண்மையில் அவனது பார்வையெல்லாம் அந்தி ஒளியின் மஞ்சள் பிரவாகத்தில் சொர்ணச்சிலாவடிவம்போல் அழகு கொழித்து விளங்கும் கமலாவின் மீதே பதிந்திருந்தது. அந்த அழகின் சோபையை வார்த்தைகளில் வடித்திறக்கி உருக் கொடுக்கத் தான் ஒரு கவியாக இல்லையே என்று அவனது ஊமை மனம் ஏங்கிக் கொண்டிருந்தது. மணி வந்த பிறகு கமலாவுக்குப் புத்தகத்தில் நாட்டம் நிலைக்கவில்லை.

எனவே சீக்கிரமே புத்தகத்தை மூடி வைத்து விட்டு அவள் தலை நிமிர்ந்தாள்.

தலை நிமிர்ந்தவுடன் அவளது ஆழக் கருவிழிகள் இமை தட்டாது நிலைத்து நின்ற மணியின் கூரிய கண்களையே சந்தித்தன. உடனே இருவர் கண்களும் நிலை புரண்டு அசட்டுத்தனமாய்த் தத்தளித்துப் புரண்டன. இருவர் உதட்டிலும் அர்த்தபாவம் நிறைந்த அசட்டுப் புன்னகை கோடுகாட்டி மறைந்தது.

நிலைமையைச் சமாளிப்பதற்காக, "என்ன கமலா, சங்கரை என்ன இன்னும் காணோம்?" என்று ஒரு கேள்வியை எழுப்பினான் மணி.

"அவன் அப்போதே வந்து விட்டான். ஏதோ பத்திரிகை வாங்கணும்னு பஜார்ப் பக்கம் போனான்" என்றாள் கமலா.

இதற்குள் சங்கரே உள்ளே நுழைந்து விட்டான். அவனைக் கண்டதும் மணி, "வாப்பா வா, உனக்கு நூறு வயசு. இப்போதான் உன்னை எங்கே என்று கேட்டேன்" என்று விசாரித்தான்.

சங்கரோ மணி கூறியதையே காதில் வாங்கிக் கொள்ளாமல், "சரிசரி, கிளம்புங்க சீக்கிரம் ரயிலுக்கு நேரமாச்சு" என்று அவசரப்படுத்தினான். உடனே அவர்கள் மூவரும் பாலமேறி இறங்கி இரண்டாவது பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த செங்கோட்டை வண்டியில் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் ஏறி அமர்ந்தார்கள்.

அவர்கள் உட்கார்ந்த இரண்டு நிமிஷங்களுக்குள் ரயில் வீறிட்டு அலறியது; இரைக்க இரைக்க மூச்சு வாங்கிக் கொண்டு புறப்பட்டுச் சென்றது.

"பாத்தியாப்பா, மணி. நான் வந்து உங்கள் இரண்டு பேரையும் கிளப்பியிராவிட்டால், ரயிலைக் கோட்டை விட்டிருக்க வேண்டியதுதான்" என்றான் சங்கர்.

"எல்லாம் உன்னால்தான்" என்றான் மணி.

"என்னாலேயா? நான் அப்பவே வந்து நீங்க ரெண்டு பேரும் ரயிலில் இருக்கிறீங்களான்னு பார்த்தேன். பிறகு தான் வெயிட்டிங் ரூமுக்கு வந்தேன். மணி என்ன என்று கூடப் பார்க்காமல் ரெண்டு பேரும் என்ன கோட்டையைக் கட்டி முடித்தீர்களோ, தெரியலை.கையிலேகடியாரம்கட்டி யிருக்கிறது அலங்காரத்துக்கா?" என்று பதிலளித்தான் சங்கர்.

மணி பதில் சொல்வதற்கு முந்திக் கொண்டான்: "நாங்க ஒண்ணும் கோட்டையைக் கட்டவும் இல்லை; இடிக்கவும் இல்லை. உன்னைத்தான் எதிர்பார்த்துக் கிட்டிருந்தோம். நீ என்னவோ ரயில்வே ஸ்டாலில் கிடைக்காத பத்திரிகை மாதிரி, பத்திரிகை வாங்க பஜாருக்குப் புறப்பட்டுப் போயிட்டே!"

"என்ன சொன்னே? ரயில்வே ஸ்டாலிலா?" என்று லேசாகச் சிரித்தான் சங்கர். "ரயில்வேப் புத்தகக் கடையிலே எனக்கு வேண்டிய பத்திரிகைகள் எதுவும் கிடைக்காதப்பா. அங்கே ஒரே அமெரிக்கக் குப்பை இலக்கியம்தானே குவிஞ்சி கிடக்கு. ரசாபாசமான படங்கள்; ரசாபாசமான தலைப்புக்கள். பார்க்கச் சகிக்கலை. அமெரிக்கா நமது நாட்டை மட்டும் விலைக்கு வாங்க விரும்பவில்லை நமது ஆத்மா வையே விலைக்கு வாங்கப் பார்க்கிறது. தெரிந்ததா?" என்று ஆத்திரத்தோடு சொன்னான் சங்கர்.

"போதும், பிரசங்கத்தை ஆரம்பித்துவிடாதே" என்று கிண்டலாகச் சொல்லிவிட்டு ரயில் ஜன்னலின்மீது சாய்ந்தான் மணி.சங்கரும்மேற்கொண்டுஎதுவும்பேசாமல், வாங்கிவந்த பத்திரிகையைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினான். கமலாவும் ஜன்னல் விளிம்பின் மீது தலை சாய்த்துக் கொண்டும், எதிர்காற்றில் வரிசை குலைந்து நெற்றியில் விழுந்து உறவாடும் கேசச் சுருள்களை ஒதுக்கி விட்டுக் கொண்டே வெளியே தட்டாமாலை சுற்றிச் சுற்றி மறையும் மரங்களையும் வயல் வெளிகளையும் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் கழித்து, கமலா திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவளாய் தன் சகோதரனை நோக்கித் திரும்பினாள்.

"அண்ணா!"

சங்கர் தலை நிமிர்ந்து "என்ன?" என்று அமைதியுடன் கேட்டான்.

"உன்னிடம் எங்கள் கல்லூரி 'டிபேட்' டைப் பற்றிச் சொல்லமறந்தேபோயிட்டேன். நீ சொல்லிக்கொடுத்ததை யெல்லாம் நான் ஒன்று பாக்கியில்லாமல் சொல்லித் தீர்த்துட்டேன். பொருள் உற்பத்தியில் பெண்களும் நேரடியாகப்பங்குபெறாதவரை, தனிச்சொத்துரிமைஎன்ற இன்றைய சமுதாய அமைப்பு மாறாதவரை, பெண்களுக்கு உண்மையான விடுதலை கிட்டப்போவதில்லை என்ற கருத்தைத் தெளிவாக எடுத்துக் கூறிவிட்டேன், அண்ணா" என்று உற்சாகத்தோடு பேசத் தொடங்கினாள் கமலா.

"ம், அப்புறம்?" என்று ஆர்வத்தோடு கேட்டான் சங்கர்.

"அப்புறமென்ன? என் பேச்சு என் வகுப்பு மாணவிகள் பலருக்கும் ரொம்பவும் பிடித்துப்போச்சி, அண்ணா. ஆனால்..." என்று சோர்ந்தாற்போல் நீட்டினாள் கமலா.

"ஆனால்என்ன?"

"கூட்டம் முடிந்த பிறகு பிரின்ஸிபால் என்னைத் தனியே கூப்பிட்டு இந்தமார்திரிக் கருத்தையெல்லாம் நீ மேடையில் பேசக் கூடாது. வெளிநாட்டுப் பெண்களை யெல்லாம் உதாரணம் காட்டக் கூடாது. நமது நாட்டுப் பண்பாடு என்ன, பெண்மைக் குணம் என்ன? அப்படி யிப்படின்னு கண்டிக்காத குறையாய்ப் புத்திமதி சொல்லத் தொடங்கி விட்டாள் அண்ணா" என்று செல்லக் குரலில் புகார் பண்ணினாள் தங்கை. அவளது உற்சாகம் திடீரென்று வாடி வதங்கி விட்டது.

சங்கர் மெல்லச் சிரித்தான்; பிறகு ஆறுதலாகப் பேசத் தொடங்கினான்.

"இந்தா பாரு, கமலா எத்தனை எத்தனையோ தலைமுறைகளாக வேரோடி நிலைத்து வந்திருக்கும் மனப்பான்மையை ஒரு நாள் பேச்சில் பிடுங்கி எறிந்துவிட முடியுமா? உங்கள் பிரின்ஸிபால் கண்டித்ததில் ஆச்சரியப் படுவதற்கே ஒன்றுமில்லை. அவளும் அந்தப் பரம்பரையின் பிரதிநிதிதானே? ஆனால் ஒன்று மட்டும் நினைவில் வைத்துக்கொள். உன் மனத்துக்குச் சரியென்று படுவதை மட்டும் என்றும் துணிந்து சொல்வதற்குப் பயப்படாதே!"

"அடேடே? உங்க காலேஜிலே 'டிபேட்' இருந்ததா? என்னிடம்கூட நீ அதைச் சொல்லவில்லையே!" என்று குறுக்கிட்டுக் கேட்டான் மணி.

கமலா பதில் பேசாமல் மெல்லச் சிரித்தவாறே தலைகுனிந்தாள்.

இதற்குள் ரயில் சேர்மாதேவி ஸ்டேஷனில் வந்து நின்றது.

ரயில் நின்றதும் சங்கர் தலையை நீட்டி வெளியே பார்த்தான். ரயிலிலிருந்து ஆட்கள் இறங்கவும் ஏறவுமாக இருந்தார்கள். திடீரென்று சங்கர் யாரையோ இனம் கண்டு கொண்டு, "டாக்டர் ஸார்" என்று கூப்பிட்டான்.

சங்கரின் குரல் கேட்டுத் திரும்பிய மனிதர் புன்னகை ததும்பும் முகத்தோடு சங்கர் இருந்த வண்டிக்குள் ஏறினார். சங்கர் அவருக்கு இடம் கொடுத்துச் சிறிது விலகி அமர்ந்து கொண்டான். கோட்டும் ஷூட்டும் அணிந்திருந்த அந்த வாலிப வயதுள்ள மனிதர் "என்ன மிஸ்டர் சங்கர். எங்கே? காலேஜிலிருந்தா?" என்று கேட்டுக்கொண்டே இடத்தில் அமர்ந்தார்.

"ஆமாம் டாக்டர், நீங்கள் எங்கே இப்படி?" என்று விசாரித்தான் சங்கர்.

"ஒன்றுமில்லை, அங்கு என் சிநேகிதர் ஒருத்தருக்கு உடம்புக்குக் குணமில்லை, வரச் சொல்லியிருந்தார். வந்தேன்" என்றார் டாக்டர்.

"மணி, உனக்கு இவாளைத் தெரியுமா? இவாள்தான் நம்ம ஊர் டாக்டர்; டாக்டர் நடராஜன்" என்று அறிமுகப்படுத்தினான், சங்கர்.

"கேள்விப்பட்டிருக்கிறேன். சந்தித்ததில்லை" என்று கூறியவாறே வணக்கம் செலுத்தினான், மணி.

பிறகு சங்கர் டாக்டரிடம் திரும்பி, 'இவன்தான் மணி; என் கிளாஸ்மேட், பந்துமுறையில் எனக்கு மைத்துனன், படிப்பில் மகாக் கெட்டி என்றாலும், என்னை மாதிரி இவனுக்கு இன்னும் அரசியல் பைத்தியம் எதுவும் பிடிக்கவில்லை"என்றுசிரித்துக்கொண்டேசொன்னான்.

டாக்டரும் பதிலுக்குச் சிரித்துக்கொண்டே பேசினார்.

"இந்த அரசியல் உணர்ச்சியே ஒட்டுவாரொட்டி வியாதிமாதிரிதான்.உங்களோடுசேர்ந்துவிட்டாரல்லவா? இனிமேல் மிஸ்டர் மணியும் தப்பிக்க முடியாது."

"ஏது, உங்கள் பாஷையிலேயே வியாக்கியானம் செய்றீங்களே!" என்றான் சங்கர்.

பிறகுபோய்டாக்டர் ஏதோயோசித்தவாறே,"மிஸ்டர் சங்கர், நீங்கள் கொடுத்த அந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்த்தேன். உங்கள் கொள்கையை நான் ஒப்புக்கொள்ளா விட்டாலும்கூட, அதிலுள்ள உண்மைகளை நான் புறக்கணிக்க முடியாது!" என்று சொன்னார்.

"உண்மைகளிலிருந்துதானே ஸார், கொள்கையே உருவாகிறது! இல்லையா? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நீங்கள் டாக்டரானது எப்படி? பௌதிக உண்மைகளை வைத்துத்தானே உங்கள் வைத்திய முறையே கொள்கையாக உருவெடுத்தது!" என்று அவருக்குச் சட்டென்று பதில் கொடுத்தான் சங்கர்!

அந்தக் கேள்விக்கு உடனடியாகப் பதில் சொல்ல டாக்டருக்கு வாய் வரவில்லை. 'ம்' என்று வாய்க்குள் முனகியவராய்சிறிதுநேரம்சும்மாயிருந்தார்.பிறகுசங்கரும் அவரும் பேச்சை அப்படியே விட்டுவிட்டு, வேறு விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தார்கள்; கமலாவும் மணியும் அவர்கள் பேசுவதையே கேட்டுக் கொண்டிருந் தார்கள்.

இதற்குள் ரயில் ஆற்றுப்பாலத்தைத் தாண்டி அம்பாசமுத்திர எல்லைக்குள் பிரவேசித்து விட்டது. அம்பாசமுத்திரம் ஸ்டேஷனில் ரயில் நின்றதும் அவர்கள் நால்வரும் கீழிறங்கி வெளியே வந்தார்கள். ஸ்டேஷனுக்கு வெளியே சங்கரையும் கமலாவையும் அழைத்துச் செல்வதற்காக அழகிய பியூக் கார் காத்துக்கொண்டு நின்றது. அவர்கள் ஸ்டேஷனை விட்டு வெளியே வந்ததும், தலையில் முண்டாசு கட்டிய ஒரு நபர் மணியை நோக்கி ஓடிவந்தார். அவருக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கும். வாழ்க்கையில்மிகவும்அடிபட்டுநொந்தவர்என்பதைஅந்த மனிதரின் கறுத்துப்போன உடலும் சுருக்கம் விழுந்து தொய்ந்துபோன சதையும், பாளம் விழுந்து வரிக்கோடுகள் நிறைந்த நெற்றிச் சுருக்கமும் புலப்படுத்தின.

அவரைக்கண்டதும்மணிஅவரருகேசென்று, "என்ன இருளப்பக்கோனாரே, எங்கேவந்தீங்க?"என்று அன்புடன் கேட்டான்.

"என்ன தம்பி; அப்பா இந்த வண்டியிலியும் வரலியா? அம்மா பாத்துட்டு வரச் சொன்னாங்க. இன்னிக்கிச் சாயரட்சைக்குள்ளே வாரதாகத்தான் தாக்கல் சொல் லிட்டுப்போனாகளாம்"என்றார் இருளப்பக்கோனார்.

"ஒரு வேளை பஸ்ஸில் வந்தாலும் வரலாம்" என்று கூறி விட்டு மேலே நடந்தான் மணி.

இதற்குள் சங்கர் மணியைக் கூப்பிட்டவாறே, "வாப்பா மணி டாக்டரும் நீயும் வீட்டுக்கு வந்து காப்பி

சாப்பிட்டுட்டுப் போகலாம்" என்றான். சங்கரின் உத்தரவைத் தட்டிக்கழிக்க முடியாது என்று மணிக்குத் தெரியும். எனவே கையிலிருந்த புத்தகங்களை இருளப்பக் கோனாரிடம் கொடுத்து, வீட்டுக்குக் கொண்டு போகச் சொல்லிவிட்டு, காரை நோக்கி நடந்தான் மணி.

சிறிது நேரத்தில் அந்த பியூக் கார் மெல்லிய உறுமலோடு மங்களபவனத்தை நோக்கிப் பறந்துசென்றது.

புழுதி மண்டலத்தைப் பின் தங்க விட்டுவிட்டுச் செல்லும் அந்தக் காரையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தார் இருளப்பக் கோனார். சிறிது நேரத்தில் உணர்ச்சிவசப்பட்டு, துடிதுடிக்கும் உதடுகள் படபடக்க, அவரது வாய், "என்னவோ இந்தப் புள்ளைக சிநேகம் இன்னிக்கிப்போலே என்னைக்கும் நிலைச்சி நிக்கணும்" என்று தனக்குத்தானே சொல்லி ஆசீர்வதித்தது. அதே கணத்தில் அவரது கண்ணிலிருந்து ஒரு சொட்டு சூடு நிறைந்த கண்ணீர்த் துளியும் அவரது கையிலிருந்த புத்தகங்களின் மீது விழுந்து தெறித்தது.

## 4

சுமார் பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு, அதாவது இத்தாலிய 'பாஸிஸ்ட் ஜடாமுனி' அபிஸீனியா மீது போர் தொடுப்பதற்கு முன்பு, கைலாச முதலியார் சாதாரணத் தறிகாரராய்த்தான் இருந்தார். ஏதோ முன்னோர்கள் தேடி வைத்துவிட்டுப் போன நாழி ஓடுபோட்ட சிறு காரை வீடும், இரண்டு மரக்கால் விரைப்பாடும்கொண்ட சாதாரண மத்திய தர வர்க்கத் தொழிலாளியாகத்தான் இருந்தார். அந்தக்காலத்தில் அவர் உள்ளூர் பெரிய முதலாளியான தாதுலிங்க முதலியாரிடம் நூல் வாங்கி நெய்து கொடுத்து அதற்குரிய கூலியைப் பெற்று வாழ்க்கை நடத்தி வந்தார். நாளாரம்பத்தில் அவர்

தமது சுய சம்பாத்தியத்தில் வாயை வயிற்றைக்கட்டி மிச்சம் பிடித்ததைக் கொண்டும், வயலை அடமானம் வைத்தும், நாலைந்து தறிகளை வாங்கிப்போட்டுத் தமது இனத்தாரில் சிலரை அதில் வேலைக்கு வைத்துக்கொண்டு, நூல் வாங்கிக் கொடுத்து நெய்து சேலை துணிமணியாக்கித் தமது தொழிலை ஓரளவு விருத்தி பண்ணிக்கொண்டார்.

அதற்குப் பின்னால், ஹிட்லரின் பேராசையால் எழுந்த உலக யுத்தம் தொடங்கியபிறகு, கவனிப்பற்றுக் கிடந்த கைத்தறித்தொழிலுக்குத் திடீரென்ற ஒரு மவுசு ஏற்பட்டுவிட்டது. யுத்தத் தேவையினாலும், ராணுவ விஸ்தரிப்பினாலும், மில் துணிக்கு ஏகப்பட்ட கிராக்கியும், பொதுமக்களிடையே துணிப் பஞ்சமும் ஏற்பட்டது. பகாசுரப் பசிகொண்ட யுத்த தேவதைக்கு மில் துணி மட்டும் போதவில்லை. வெளிநாடுகளில் கைத்தறித் துணிக்கும் கிராக்கி அதிகமாயிற்று. இதன் காரணமாகவும், யுத்த காலத்தில் ஏற்பட்டிருந்த பணவீக்கத்தின் காரணமாகவும் கைத்தறி நெசவாளருக்குரிய கூலியும் உயர்ந்தது; கைத்தறித் துணி உற்பத்தியும் அதற்குரிய கிராக்கியும் உயர்ந்தது. பெருநாசச் சீரழிவை உலகத்துச் செல்வங்களுக்கும் மக்களுக்கும் கொண்டு வந்த யுத்தம், லாப வேட்டைக் காரர்களுக்கும் பெருமுதலாளிகளுக்கும் கொள்ளை கொள்ளையாகப் பணம் திரட்டிக் கொடுத்தது. பெரு மழையில் அடித்த தூவானம்போல், அந்தச் சூழ்நிலை கைலாச முதலியார் போன்ற சிறு வியாபாரிகளையும் கைதூக்கி வளர்த்து விட்டது. யுத்த காலத்தில் கிடைத்த அபரிமிதமான வருவாயின் காரணமாக, கைலாச முதலியார் தாமும் மற்ற வியாபாரிகளைப் போல் நூல் வாங்கி விற்பதற்கு லைசென்ஸ் வாங்கினார். அத்துடன் தமது மகன் மணியின் பெயரால் ஒரு மாஸ்டர் வீவர் லைசென்சும் பெற்றார். அதன் மூலமாக, அவர் தாமும் நாலு வியாபாரி களைப்போல் ஐம்பது அறுபது தறிகளுக்கு நூல் கொடுத்து நெய்து வாங்கி, ஜவுளிக் கொள்முதலும் வியாபாரமும் பண்ணத்தொடங்கினார். அத்துடன் தாதுலிங்க முதலியார்

போன்ற பெரும் புள்ளிகளிடமும் கள்ள மார்க்கெட்டில் நூல் வாங்கி நெய்யக் கொடுத்து வியாபாரம் நடத்தினார்.

இத்தியாதி காரணங்களால், யுத்த காலத்தில் சாதாரணத் தறிகாரர் என்ற நிலைமையிலிருந்து 'முதலாளி' என்ற அந்தஸ்துக்கு கைலாச முதலியார் உயர்ந்துவிட்டார். கையில் கிடைத்த புதுப் பணத்தின் மூலமாக, அவர் தமது பூர்விக வீட்டை எடுத்துக்கட்டி விஸ்தரித்தார். நாழி ஓட்டைப் பிரித்து, மச்சு எடுத்து வீட்டைப் புதுப்பித்தார்; வீட்டுக்கு மின்சார விளக்கும் போட்டார். முன்வீட்டில் நூல்கட்டுக்களை ஸ்டாக் செய்யவும், ஜவுளிக் கொள்முதல் வியாபாரம் செய்யவும் ஒரு கடையையும் திறந்துவைத்தார். கடையில் ஐம்பது ரூபாய் சம்பளத்தில் ஒரு கணக்கப் பிள்ளையையும், பதினைந்து ரூபாய்ச் சம்பளத்தில் ஒரு எடுபிடி வேலைக்காரப் பையனையும் வேலைக்கு அமர்த்தினார். காலையில் அவர் ஸ்நானபானாதிகளை முடித்துக் கொண்டு கையில் இரும்புப் பெட்டிச்சாவி கலகலக்க, ஈரத்தலையைச் சிக்கெடுத்து உதறியவாறே பட்டறைப் பலகையில் வந்து அமரும்போது, சிப்பந்திகள் இருவரும் எழுந்து நின்று மரியாதை செய்யும் போதும், 'மொதலாளி' என்று பவ்வியத்தோடு அழைக்கும் போதும், அவருக்குத் தம்மையறியாமலேயே சிறு அகந்தை உணர்ச்சி மேலோங்கும்.

வீட்டை எடுத்துக் கட்டியதோடு அவர் தாமிர பருணிப் பாசனத்தில் ஒன்றரைக் கோட்டை விரைப்பாடு கொண்ட வயலையும் கிரயத்துக்கு முடித்திருந்தார். அத்துடன் வாழ்நாளில் செம்பாதியை உழைத்துழைத்துச் சலித்து வாடிப் போன தம் மனைவி தங்கம்மாளுக்கு ஐயாயிரம் ரூபாய் பெறுமானத்துக்கு நகை நட்டுக்களும் பண்ணிப் போட்டிருந்தார். தங்கம்மாளும் புதுப் பண மோகத்தில் ஊரிலுள்ள நாலு பெரிய வீட்டுப் பெண்ணரசிகளோடு சம அந்தஸ்தில் பழகவேண்டும் என்ற காரணத்தால், வளர்த்துத் தொங்க விட்டுப் பாம்படம்

போட்டிருந்தகாதை அறுத்து ஒட்டி, கால் துட்டு அகலத்தில் கம்மலும் போட்டுக் கொண்டாள். ஏதோ தன் மகன் மணிக்குக் காலாகாலத்தில் ஒரு கலியாணத்தைப் பண்ணி வைத்து விட்டால், மருமகளை ஆட்சிசெலுத்திக் கொண்டு தான் நிம்மதியாக இருக்கலாம் என்ற நிரந்தர நப்பாசையும் அவள் மனத்தில் குடிகொண்டிருந்தது. வியாபாரி என்ற அந்தஸ்துக்குவந்துவிட்டதால், கைலாசமுதலியாரும் தமது மூத்த மகன் சுப்பிரமணியன் என்ற மணியை இங்கிலீஷ் படிப்புப் படிக்க வைத்து, பி.ஏ. கிளாஸ் வரையிலும் தள்ளி விட்டுவிட்டார். கைலாச முதலியார் தம் சம்பாத்தியத்தில் பெருமளவை வீட்டிலும் வயலிலும் வியாபாரத்திலும் போட்டு விட்டதால், அவரிடம் ரொக்கமாக அப்படி ஒன்றும் அதிகம் மிஞ்சிவிடவில்லை. எனவே வியாபாரத்தில் அடிக்கடி ஏற்படும் தேவைகளுக்கு தாதுலிங்க முதலி யாரிடமும், மைனர் முதலியாரிடமும், வேறு சிலரிடமும் அவ்வப்போது ரொக்க லேவாதேவி செய்து, வாங்குவதும் அடைப்பதுமாக வியாபாரத்தை ஓட்டி வந்தார்.

கைலாச முதலியார் எந்தக் காலத்திலும் பாவ புண்ணியத்துக்கும் தெய்வத்துக்கும் அஞ்சி நடந்து வந்தார். திருச்செந்தூர் முருகப் பெருமான்மீது அவருக்குக் கரைகடந்த பக்தி. அவரது முருகப் பக்தியின் சாட்சியமாக அவர் தமது மூத்தமகனுக்கு சுப்பிரமணியம் என்று பெயரிட்டதுபோலவே தமது இரண்டாவது புத்திரனுக்கும் ஆறுமுகம் என்று பெயர் வைத்திருந்தார். ஆறுமுகத்துக்குப் பத்து வயதிருக்கும். கைலாச முதலியார் முருகனை நினைக்காத நேரமே கிடையாது. பட்டறைப் பலகையில் அமரும்போதும், சாப்பாட்டுக்கு இலைமுன் உட்காரும் போதும், அலுத்துப் போய்க் கொட்டாவி விடும்போதும், தூங்கி எழுந்திருக்கும் போதும் அவர் முருகன் பெயரை வாய்விட்டுச் சொல்லி வணங்க மறப்பதில்லை. அவரது வீட்டில் எங்கு பார்த்தாலும் தொங்கிக் கொண்டிருக்கும் முருகக் கடவுளின் ஆறுபடை வீட்டுப் படங்களும், பிற திருவுருவப் படங்களும் அவரது தெய்வ பக்தியைப் பறை

சாற்றிக் கொண்டிருக்கும். மேலும் அவர் தமது வீட்டு மாடியில் ஒரு சிறு பூஜை அறையும் வைத்திருந்தார். காலையில் பூஜையெல்லாம் முடிந்த பிறகு தான் அவர் தொண்டையை நனைப்பார். அவர் சாதாரணத் தறிகாரராயிருந்தகாலத்திலேயும்,வைகாசிவிசாகத்துக்கோ, மாசித் திருவிழாவுக்கோ கூண்டு வண்டி கட்டிக் கொண்டு குடும்பத்தோடு திருச்செந்தூர் சென்று, நீராடி நேர்த்திக் கடன்முடித்துவருவதுவழக்கம்.இப்போது அவர் முதலாளி என்ற அந்தஸ்துக்கு ஆளான பின்பும், சஷ்டியன்றும் கிருத்திகையன்றும் ஒரு போதும் விரதம் அனுஷ்டிக்கத் தவறுவதில்லை. அத்துடன் கடைசி வெள்ளிதோறும் தவறாது திருச்செந்தூருக்கு மாதாந்தமும் சென்று வந்து விடுவார்.

மாற்றுக்குறையாததெய்வபக்தியின் காரணமாகவும், தமது பூர்வ நிலையை மறந்தறியாத காரணமாகவும், அவர் தம்மிடம் தொழில் நடத்திய தறிகாரர்களிடத்தில் கூடிய பட்ச நாணயத்தோடும், மரியாதையோடும் நடந்து கொண்டார்.பெரியமுதலாளிமார்களைப்போல்,தறிகாரர் களின் வாயில் வயிற்றிலடித்துப் பணம் திரட்டவும், தறிகாரர்களிடத்தில் கண்ணியக்குறைவாகவோ, அதிகார முறுக்காகவோ நடந்துகொள்ளவும் அவர் முனையவில்லை. இதனால், தறிகாரர்கள் அனைவரிடத்திலும் பொதுவாக அவரைப்பற்றி நல்லெண்ணம் தான் நிலவி வந்தது.

வடிவேலு முதலியாருக்குக் கைலாச முதலியாரின் நாணயப் பொறுப்பிலும் நல்லெண்ணத்திலும் மிகுந்த நம்பிக்கை. எனவேதான் அவர் எப்படியும் நடப்பு வருஷத்தில் கைலாச முதலியாரைக் கோயில் தர்மகர்த்தா ஆக்கிவிடுவதுஎன்றதீர்மானத்தோடுதறிகாரர்களிடையே அவ்வப்போது பிரசாரம் செய்து பலம் திரட்டி வந்தார். அன்றுமாலை நடக்கவிருந்த ஊர்க்கூட்டத்தில் கூலி உயர்வுப் பிரச்னையையும் தர்மகர்த்தாப் பிரச்னையையும் முடிவு செய்வது என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. அன்றைக்குப் பொழுது அநேகமாகக் கருக்கலாகி

விட்டதால், வடிவேலு முதலியார் கைலாச முதலியாரைக் கூட்டத்துக்கு நேரில் சென்று அழைத்து வருவதற்காகச் சென்றிருந்தார்.

"அண்ணாச்சி, அண்ணாச்சி."

வாசலில் கூப்பிடு குரல் கேட்டதும் கைலாச முதலியாரின் மனைவி தங்கம்மாள் சேலையை இழுத்துத் தோளில் மூடிக் கொண்டு, வாசல் நடைக்கு வந்து எட்டிப் பார்த்தாள். வாசலில் வடிவேலு முதலியார் நிற்பதைக் கண்டதும், உள்ளே திரும்பிச் சென்று மாடிப் படிக் கட்டுக்கருகே நின்றவாறே மேல் நோக்கிச் சத்தம் கொடுத்தாள்.

"இந்தாங்க, உங்களத்தானே."

கைலாச முதலியார் மாடியிலிருந்து இறங்கி வந்தார். வந்தவரிடம் விஷயத்தைச் சொல்லிவிட்டுத் தன் வேலையைக்கவனிப்பதற்காகஉள்ளேசென்றாள் தங்கம்.

கைலாச முதலியார் வாசல் நடைமீதிருந்த வெற்றிலைப் பெட்டியை எடுத்துக் கொண்டு வெளியே வந்து, கடையை அடுத்துக் கிடந்த பெஞ்சியில் அமர்ந்தார். "வடிவேலுத் தம்பியா? வாங்க. என்ன நேரமாயிட்டுதா?" என்றுவிசாரித்தவாறேபெட்டியைத்திறந்தார்.

"ஆமா அண்ணாச்சிநேரத்தோட போயிட்டா நல்லது தானே. பெரிய முதலாளிகூட வாரதாக இருக்கு" என்றார் வடிவேலு.

கைலாச முதலியார் வெற்றிலையைப் போட்டு முடித்து விட்டு, "அப்ப இருங்க. வேட்டி மாத்திக்கிட்டு வந்திடுதேன்"என்றுகூறியவாறேஉள்ளேசென்றார்.

கைலாச முதலியாரும் வடிவேலு முதலியாரும் கூட்டம் நடக்கவிருந்த இடமான அம்மன் கோயிலுக்குச் செல்லும் போது பொழுது நன்றாக இருட்டி விட்டது. தெருக்களில் மின்சார விளக்கும் போய் விட்டது. கோயில் முன் மண்டபத்திலும் தெருவிலுமாகத் தறிகாரர்கள் பலர் காத்துக் கொண்டிருந்தார்கள். கோயிலுக்குள்ளே

வெளிப்பிரகாரத்தில் ஒரு பெட்ரோமாக்ஸ் விளக்கு புஸ்ஸென்று இரைந்து கொண்டிருந்தது. சமுக்காள விரிப்பில் உள்ளூர் ஜவுளி நூல் வியாபாரிகள் சிலர் உட்கார்ந்திருந்தனர். வடிவேலு முதலியார் கைலாச முதலியாரை உள்ளே அனுப்பி வைத்து விட்டு, மற்ற தறிகாரர்களோடுபோய்நின்றுகொண்டார்.

"வாங்க கைலாச முதலியார்வாள். திருச்செந்தூரி லிருந்து எப்பவந்தீக?" என்றுவிசாரித்தார் ஒருவியாபாரி.

"நேத்து ராத்திரியே வந்துட்டேனே" என்று பதிலளித்து விட்டு, "பெரிய முதலாளியும் வாரதாகச் சொன்னாகளாமில்லே.வரலியா?"என்று அர்த்தபாவமற்று நிச்சிந்தையாய்க்கேட்டார்.

அவருக்கு யாரோ ஒருவர் பதிலளிக்க முனைவதற்குள் வெளியேகார்வந்துநிற்கும்சத்தம்கேட்டது.

"வந்தாச்சிபோலிருக்கே!"

பெரிய முதலாளி தாதுலிங்க முதலியாரும், தர்மகர்த்தாமைனர்முதலியாரும்,சேர்ந்தாற்போல்உள்ளே வந்தார்கள்; பெரிய முதலாளியைக் கண்டதும் ஒரு சில வியாபாரிகள் மரியாதைக்காக எழுந்து நின்று உட்கார்ந்தார்கள்.

பெரியமுதலாளிஎன்றபெயருக்கொப்பத் தாதுலிங்க முதலியார் பூதாகரமான சரீரமும், அலட்சியம் நிறைந்த பார்வையும் கொண்டு விளங்கினார். கை விரல்களில் வைர மோதிரங்கள்பளிச்சிட்டுடாலடித்தன.காதிலேகொண்டிக் கடுக்கனின் வைர ஒளி நேரத்துக்கு ஒரு நிறம் காட்டியது, மெல்லிய கிளாஸ்கோ மல் துணியால் தொய்வாகக் கட்டிய பட்டத்தாரும், மேலே அணிந்திருந்த தும்பை வெள்ளை நிறமான தொளதொளத்த ஜிப்பாவும், நான்கு விரல் அகலக் கரை கொண்ட ஜரிகை அங்கவஸ்திர விசிறி மடிப்பும் அவரது பெரிய மனுஷத் தன்மையை அளந்து காட்டும் அளவுகோல்களாக விளங்கின. மைனர் முதலியார்வாளின்

ஆடையணிகளிலிருந்து பரவிக் கமழ்ந்த 'கான்பூர் நைட்குயினி'ன் நறுமணமும், கூட்டத்தினரிடையே நிலவிய அமைதியும் பெரிய முதலாளியின் வருகைக்கு ஒருபவித்திரச் சூழ்நிலையை உண்டாக்கிக்கொடுத்தன.

தாதுலிங்க முதலியாரும் மைனர்வாளும் கூட்டத்தினருக்குத்தலைமைதாங்கும்பாவனையில்மத்தியில்போய் அமர்ந்து கொண்டனர். அங்கு நிலவிய அமைதியை மைனர் தான் முதலில்கலைக்கத் துணிந்தார்.

"வியாபாரிகள் எல்லாரும் வந்தாச்சா? இன்னும் வரணுமா?"

"அநேகமாக வந்தாச்சி. கூட்டத்தை நடத்தலாம்" என்று ஒரு குரல் பதிலளித்தது.

தாதுலிங்கமுதலியார் முகத்தில்எந்தவிதமானபாவப் பிரதிபலிப்பும் இல்லாமல் கைலாச முதலியாரை நோக்கி, "என்ன கைலாச முதலியார்வாள், தறிகாரர்கள்ளாம் கூலி உசத்திக்கேக்கிறாங்களே.நீங்களென்ன சொல்லுதிய?"என்று கேட்டார்.

"கூடக்குறையன்னாலும்பாத்துக்குடுக்கவேண்டியது தான். இல்லேன்னு சொல்லிற முடியுமா?" என்றார் கைலாசம்.

கைலாச முதலியாரையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்த மைனர்வாளின் முகம் சட்டென்று வக்கிர உச்சம் பெற்றது. உடனே அவர் "இந்தத் தறிகாரர்களே இப்படித்தான். இதே வழக்கமாப் போச்சு. நூல் விலையானா, நாளுக்கு நாள் ஏறிக்கிட்டே போவுது. கூலியையும் உசத்திக் குடுத்துட்டா, அப்புறம் சரக்கு நகர்ந்த காலத்திலேதான் நிசம்!"என்று அடித்துப்பேசினார்.

"வாஸ்தவம்தான். ஆனால் நூல் விலை ஏறுதுங்கிறதுக்காக, கூலியைக் குறைச்சிச் சரிக்கட்ட முடியுமா? நாலஞ்சு வருஷத்துக்கு மின்னே கிடைச்ச

கூலியிலே, இப்போ தறிகாரங்களுக்கு அரைவாசிகூடக் கிடைக்கல்லே. இன்னிக்கி இருக்கிற விலைவாசியிலே அவங்க பாடும் ஓடியடைய வேண்டாமா?" என்றார் கைலாசம்.

"எல்லாம் பெரிய முதலாளி பார்த்துச் சொன்னா, சரிதான்" என்று பொறுப்பைத் தாதுலிங்க முதலியாரிடம் தள்ளிவிட முனைந்தார் ஒருவியாபாரி.

பிரச்சினை தாதுலிங்க முதலியாரிடம் கைமாறு வதற்குள் ஒரு சிறு வியாபாரி முந்திக்கொண்டு பேச முனைந்தார்; "அவாளுக்கு என்ன? நம்மைச் சொல்லுங்க. நமக்கும் தறிகாரர்களை வச்ச வாழ்வு; தறிகாரர்களுக்கும் நம்மை வச்ச வாழ்வு. கொஞ்சம் அனுசரித்துத்தான் போகணும். இல்லேன்னா, தறிகாரங்கள்ளாம் ஒண்ணு கூடிக்கிட்டு ஏதாவது தப்புத் தண்டான்னு ஆரம்பிச்சா, நம்மயாபாரமே தொலைஞ்சிது!"

இந்தப் பேச்சைக் கேட்டவுடன் தாதுலிங்க முதுலியார் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசத் தொடங்கினார்: "என்னய்யா பேசறிங்க? இப்ப மட்டும் வியாபாரம் ரொம்ப வாழுதாக்கும். வர வர ஜவுளி ஏத்துமதியே அத்துப்போச்சி. வியாபாரமோ நடக்கல்லெ. சரக்கெல்லாம் இடிச்சிவச்ச புளி மாதிரி இருக்கு. நூல் விலையோ ஏறுது கூலி உசத்திக் குடுக்கிறதுக்கு என்ன நியாயம் இருக்கு?"

தாதுலிங்க முதலியாரின் அதிகார மிடுக்கு நிறைந்த பேச்சு மைனர் முதலியாரின் வாயையும் திறந்து விட்டது: "சிலபேர் குடுத்துக்குடுத்து வழக்கம்பண்ணப்போய்த்தான் தறிகாரங்களும் கூத்தாடுறாங்க" என்று கூறிவிட்டு அர்த்த பாவத்தோடு கைலாச முதலியாரைப் பார்த்தார்.

கைலாசமுதலியார் அந்தக்குறிப்பைஉணர்ந்தவராக, "மனமறிஞ்சிஇனத்தான் வயிற்றில் அடிக்கக்கூடாது" என்று கூறி நிறுத்தினார்.

"யார் வயித்திலே யார் அடிக்கிறா? வேலைக்குத்தான் கூலியா? விருதாக் கூலியா?" மைனர்வாளின் குரல் மண்டபக் காலில் முட்டி மோதி எதிரொலித்தது.

சுமார் அரைமணி நேர வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகு இரு சாராருக்கும் பொதுவாக ஒரு முடிவு செய்யப்பட்டது. தறிகாரர்களுக்கு அப்போது கழிக்கு எட்டணா கூலிதான் கிடைத்து வந்தது. குறைந்தபட்சம் பன்னிரண்டணா வேண்டும் என்பது தறிகாரர்களின் கோரிக்கை. கடைசியில் பெரும்பான்மையான வியாபாரிகளின் அபிப்பிராயப்படி கழிக்குப் பத்தணாக் கூலி என்று 'தென்காசி வழக்' காகக் கூலி நிர்ணயம் செய்யப்பட்டது. இந்த் நிர்ணயிப்புக்கு வருவதற்கே கைலாச முதலியாரையொத்த சிறு வியாபாரிகள் பலரும் வெகு நேரம் வாதாட வேண்டியிருந்தது. பிறகு இந்த முடிவைத் தெரிவிப்பதற்காகத்தறிகாரர்கள் உள்ளே வரவழைக்கப்பட்டார்கள்.

முடிவு தெரிவிக்கப்பட்டது; தறிகாரர்களும் சம்மதித்துக் கொண்டார்கள்.

"அப்போ விஷயம் முடிஞ்சிது. கூட்டத்தைக் கலைச்சிரலாமா?" என்று கேட்டுக்கொண்டே இடத்தை விட்டு எழுந்திருக்க முனைந்தார் மைனர் முதலியார்,

உடனே ஒரு வியாபாரி குறுக்கிட்டு, "இருங்க. அவசரப்படுதியளே!" என்று இடைமறித்துக் கூறி அவரைக் கையமர்த்தி உட்கார வைத்தார். இதற்குள் வடிவேலு முதலியார், "முதலாளி, நம்ம அம்மன் கோயில் தர்மகர்த்தா விசயமா ஒரு முடிவு பண்ணனும்னு பல பேருக்கு எண்ணம். அதையும் இங்கேயே" என்று ஆரம்பித்தார். அவரை ஆமோதித்தார் ஒரு சிறுவியாபாரி.

தறிகாரர்களும் வியாபாரிகளும் பொருளாதார அந்தஸ்தில் வேறுபாடு உடையவர்களானாலும், ஊர்ப் பொதுக் காரியங்களில் சமூகத்தினர் அனைவருக்குமே சரிசமானமான வாக்குரிமை உண்டு. மேலும் அன்று

தறிநெசவாளிகள் பலர் வந்திருந்தார்கள். எனவே தர்மகர்த்தாப் பிரச்சினை தவிர்க்க முடியாததாகிவிட்டது. எனினும் தாதுலிங்க முதலியார் தமது அதிகார தோரணையைப் பிரயோகிக்கத் தயங்கவில்லை.

"என்னய்யா யோசனை? அருணாசலமுதலியார்வாள் தான் தர்மகர்த்தாவா இருக்காகளே, அவாளே இருந்துட்டுப் போகட்டுமே. எல்லாம் நிலைமை சீர்ப்பட்டு வந்த பிறகு பாத்துக்கிடலாம்" என்று அடித்துப் பேசினார்.

"மைனர்வாளை நான் குத்தம் சொல்ல வரலை. ஊர்ப் பொல்லாப்பு. நாலுபேர் நாலுவிதமாப் பேசுதாங்க. பொறுப்பைக் கைமாத்திக் குடுத்திட்டா, ஒரு வம்பு தும்பு இல்லை" என்று வடிவேலு முதலியாரை ஆதரித்த சிறு வியாபாரி அழுத்திப் பேசினார்.

இதைக் கேட்டதும் கூட்டத்தில் நின்ற சுப்பையா முதலியார், "அது என்ன அது? அண்ணாச்சியையும் கூட்டத்திலே வச்சிக்கிட்டு இப்படி அவமரியாதையாப் பேசுறதாவது?" என்று கண்டனக் குரல் எழுப்பி, தமது குடும்ப விசுவாசத்தை நிலைநாட்டிக் கொண்டார்.

"ஊர்க் காரியமின்னா நல்லதும் வரும்; பொல்லதும் வரும். நாலும் பொறுத்துத்தான் போகணும். கோவிச்சுக் கிட்டா முடியுமா?" என்று சூடாகப் பதில் அளித்தார் வடிவேலு முதலியார்.

கடைசியில் தறிகாரர்கள் அபிப்பிராயப்படியே தர்மகர்த்தா பிரச்சினை 'அஜண்டா' வில் இடம் பெற்றது. பெரிய முதலாளியும் மைனர்வாளும் கிளப்பிய ஆக்ஷே பணைகள் ஒன்றும் நிலைக்கவில்லை. முடிவாக வடிவேலு முதலியாரின் திட்டமே நிறைவேறியது. பெரும்பான்மை யோரின் ஆதரவின் மூலம் கைலாச முதலியார் அம்மன் கோயிலின் புதிய தர்மகர்த்தாவாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். புதிய தர்மகர்த்தாவிடம் கோயில் கணக்கு வழக்குகளையெல்லாம் அருணாசல முதலியார் கூடிய

சீக்கிரம் ஒப்படைப்பதென்றும் கூட்டத்தார் முடிவு செய்தனர்.

புதிய பொறுப்பை ஏற்றுக் கொண்ட கைலாச முதலியார் 'முருகா' என்று தமக்குத் தாமே கூறிவிட்டு, சபையோரைப் பார்த்து, "எல்லாருமாகச் சேர்ந்து கொடுக்கிற இந்தப் பொறுப்பை என்னாலானமட்டும் கவனிச்சிப் பார்க்கிறேன். அம்மன் பணிக்கு அட்டி சொல்லப்படுமா?" என்று அவையடக்கத்தோடு கூறிக்கொண்டார்.

பின்னர் கோயிலுக்குப் பூஜை செய்யும் ஓதுவார் மூர்த்தி அம்மனுக்குத் தீபாராதனை காட்டிவிட்டு வந்திருந்தவர்கள் அனைவருக்கும் விபூதிப் பிரசாதம் வழங்கினார். விபூதிப் பிரசாதத்தை வாங்கி நெற்றியில் தரித்தவாறே கூட்டத்தினர் கலைந்து சென்றனர். மைனர் முதலியார் கோயிலைவிட்டு வெளியேறும் வரையிலும் வாயே திறக்கவில்லை. ஒன்றும் பேசாமல், பெரிய முதலாளியுடன் சென்று அவரது காரில் ஏறிக்கொண்டார்.

இரட்டைக்குழல் ஹாரனை உறுமிவிட்டு, அந்தபியூக் கார் தெருமூலையைக் கடந்து திரும்பியது. அப்போதுதான் மைனர் முதலியார் தம் திருவாயை மலரச் செய்தார்.

"பாத்தியளா அண்ணாச்சி, உங்க பேச்சுக்குக்கூட மதிப்பில்லாமப் போச்சி. எல்லாம் அந்தக் கைலாசம் கைவரிசைதான். இன்னிக்கி ஊர் விவகாரத்திலே தறிகாரங்களையெல்லாம் ஒண்ணு திரட்டிக்கிட்டு நினைச்சதைச் சாதிக்கிறவன், நாளைக்கு நம்ம வியாபார விசயத்திலேயும் இந்த மாதிரி ஏதாவது பண்ண மாட்டான்னு என்ன நிச்சயம்?"

தாதுலிங்க முதலியாரிடமிருந்து இந்தக் கேள்விக்கு உடனே பதில் வந்து விடவில்லை. சில விநாடிகள் கழித்து அவர் சொன்னார்:

"தம்பி, கைலாசம் நான் வளர்த்து விட்ட பயிர்; வளர்த்து விடத் தெரிஞ்சமாதிரி, அதைச் சாகடிக்கவும் எனக்கு வழி தெரியும். அந்தக் கவலையை விடுங்க."

தாதுலிங்க முதலியாரின் வர்ம மொழியைக் கேட்ட பின்னர்தான் மைனர் முதலியாருக்கு ஆசுவாசமாக மூச்சு வந்தது.

## 5

'மங்கள பவனம்'—

மங்களபவனம்என்றசொல்தாதுலிங்கமுதலியாரின் வீட்டைப் பொறுத்தவரை காரணப் பெயர் என்று தான் சொல்லவேண்டும். தாதுலிங்க முதலியாரின் வீட்டை அப்படி அழைப்பது உயர்வு நவிற்சியாகி விட்டது. ஓர் அடுக்கு மாடிகொண்ட புதிய காரை வீடுதான் மங்கள பவனம்; எனினும் சுற்றுப்புறத்திலுள்ள பொட்டல் வெளியும், அக்கம் பக்கத்திலுள்ள தணிந்தமட்டப்பா, கூரைச் சாய்ப்பு வீடுகளும், மங்கள பவனத்தைத் தன்னிகரில்லாத் தலைவன் போல் ராஜகம்பீரத்துடன் காட்சி அளிக்க இடம் கொடுத்தன.வீட்டுக்கு முன் முகப்பில் போர்டிகோ;போர்டிகோவின் இருபக்கங்களிலும்வீட்டின் ராஜ கம்பீரத்துக்குக் கவரி வீசுவது போல இரண்டு விசிறி வாழைக் கன்றுகள்; போர்டிகோவிலிருந்து வெளிவாசல் நோக்கிச் செம்மண் சரலிட்டுப் பரப்பிய பாதை நடை பாவாடை விரித்ததுபோல் அழகு தந்தது. அந்தப் பாதையின் இருமருங்கிலும், போர்டிகோ அருகிலும், கத்தரித்து விடப்பட்ட பச்சைப் புதர்ச்செடிகளும், பால்ஸன், மேரி கோல்டு, கிரிஸாந்தம் முதலிய அன்னிய நாட்டுப் பூஞ்செடி கொடி வகைகளும் அலங்காரமாகக் குளுமை தந்து கொண்டிருந்தன.

செம்மண் சரல்பாதை வந்து முடியும் வெளிவாசலில் ஈயமுலாம்பூசப்பட்ட அழகிய பூவேலைப்பாடுகொண்ட இரும்புக் கிராதி கேட்; கேட்டுக்கு இருமருங்கிலும் உள்ள சுவர்களில் இரண்டு பித்தளைத் தகடுகள் பதிக்கப் பட்டிருந்தன. பளபளவென்று மின்னும் அந்தத் தகடுகள் ஒன்றில் 'ராவ் சாகிப் தாதுலிங்க முதலியார்' என்றும் மற்றொன்றில் 'மங்கள பவனம்' என்றும் விலாசங்கள் காணப்பட்டன. இரண்டாவது உலக யுத்த காலத்தில் தாதுலிங்க முதலியார் யுத்த நிதி, தேசியப் பாதுகாப்பு நிதி முதலியனவற்றுக்கு, ராஜ விசுவாசத்தோடு உதவி ஒத்துழைத்தகாரணத்தால், அப்போதையமேன்மைதங்கிய வெள்ளைக்கவர்னர் பெருமான் உவந்தளித்த புது வருஷப் பட்டம்தான் அந்த 'ராவ் சாகிப்' எனினும், இந்திய தேசியத் தலைவர்களின் கையில் ஆட்சி மாறிய காலக் கட்டத்தில், நமது நாட்டில் எத்தனையோ பெரிய மனிதர்கள் தாம் அன்னியராட்சியில் பெற்றிருந்த பட்டங்களையும் விருதுகளையும், உதறித் தள்ளி, தமது 'தேச பக்தி' விசுவாசத்தையும் 'தியாக' புத்தியையும் விளம்பரப்படுத்திக் கொண்டது போலவே, தாதுலிங்க முதலியாரும் யுத்தப் பிற்காலத்தில் அந்தப் பட்டத்தைத் திரஸ்கரித்து விட்டார் எனினும் அந்தப் பித்தளை போர்டில் மட்டும் அந்தப் பட்டம் அழிக்கப்படவில்லை. அது அழிக்கப் பெறாமல் இருந்ததும் ஒரு வகையில் நல்லதாய்ப் போயிற்று.

'ஒரு காலத்தில் ஸ்ரீமான் தாதுலிங்க முதலியார் ஒரு ராவ் சாகிப்பாக இருந்து, பின்னர் தேச பக்தியின் காரணமாக, அதைத் திரஸ்கரித்தவராக்கும்!' என்ற வெள்ளிடை மலை உண்மையை, அவரது தியாகத்தை, அவருக்கும் பிறருக்கும், காண்கிற வேளையெல்லாம் நினைவூட்டிக் கொண்டிருக்கும் சின்னமாக, சாட்சியமாக அந்தப் போர்டு இலங்கி வந்தது.

தாதுலிங்க முதலியார் அம்பாசமுத்திரத்திலுள்ள பரம்பரைப் பணக்காரர்களில் ஒருவர். பரம்பரைப்

பணக்காரர் என்றால் அவரது மூதாதையர்களில் எவரும் ராஜா வீட்டுக் குழந்தையாக, ஒரு ராஜ்யத்துக்கு வாரிசாகப் பிறந்து விடவில்லை. நாலைந்து தலைமுறைகளுக்கு முன்பு, ரூபாய்க்கு எட்டுப்படி பத்துப்படி அரிசி விற்ற அந்தக் காலத்தில், தாதுலிங்க முதலியாரின் மூதாதையர்கள் செயலுள்ள மத்தியதரவர்க்கத்தாராகத்தான் இருந்தார்கள். எனினும், அந்த மூதாதையர்கள் தம்மிடமிருந்த பணத்தை பூதம் காத்த புதையலைப் போல் பெட்டிக்குள் பூட்டி வைக்காமல், அந்தப் பணத்தை, தொழிலில் முதலீடு செய்து குட்டிபோடச் செய்யும் பொருளாதார வித்தையில் தாதுலிங்கமுதலியார் தான் தமது மூதாதையரையெல்லாம் விட, சிறந்தவராகவும் கெட்டிக்காரராகவும் விளங்கினார். மேலும், அவரது மூதாதையர்களின் காலத்தில் அவர்கள் தாது வருஷப் பஞ்சத்தின் அக விலையைப் பயன் படுத்தித்தான் ஏதோ கொஞ்சம் சொத்தைப் பெருக்க முடிந்ததே தவிர, யுத்த காலக் காண்ட்ராக்ட்கள், கள்ள மார்க்கெட், ஸ்டாக் எக்ஸ்சேஞ்சு, சூதாட்டம் போன்ற அட்டமாசித்திகளைக்கையாண்டுபெருஞ்செல்வம்திரட்ட முடியவில்லை. ஆனால் தாதுலிங்க முதலியாரோ இந்த வித்தைகளிலெல்லாம் கை வந்த சித்த புருஷராக விளங்கினார். அதன் காரணமாக, அவர் பஞ்சு நூல் ஜவுளி வியாபாரம், வீரவநல்லூர் அருகிலுள்ள உள்ளூர் முதலாளிகளின் டெக்ஸ்டைல் மில், மேற்கு மலையிலுள்ள தேயிலைஎஸ்டேட், உள்ளூர் முதலாளிகள் தொடங்கிய ஒரு பாங்கியில் டைரக்டர் பங்குத் தொகை முதலீடு முதலிய பற்பல துறைகளிலும் பணத்தை விதைத்து முறையாகக் கண்டுமுதல் பெற்று வந்தார்; அத்துடன் தர்மாம்பாளை அவர் தொட்டுத் தாலி கட்டிய புண்ணியத்தால், அவருக்கு 'கொள்ளி முடிந்த சொத்து' என்ற செளபாக்கிய சித்தியும் கிட்டியது.

திருமதி தர்மாம்பாள் செயலுள்ள குடும்பத்திலே பிறந்து செயலுள்ள குடும்பத்திலே வாழ்க்கைப்பட்டு, வாழ்க்கை யின் மேடு பள்ளங்களை அறியாது, இருந்து

சாப்பிட்டு, வாழ்ந்து அனுபவித்தவள். காதுகளில் வைரத்தோடுகள் பளீரென்று மின்ன, கொசுவம் வைத்துக் கட்டிய கொறநாட்டுப் புடவை உடுத்தி, இட்ட அடி பதிய, எடுத்த அடி தயங்க அவள் நடந்து வரும்போது, அதில் ஒரு பெருமிதமும் நிறைவும் நிரம்பித் ததும்பும். தர்மாம்பாள் வீடு நிறைந்த லக்ஷ்மியாகத்தான் விளங்கி வந்தாள். அவளுக்குத் தன் குழந்தைகளான சங்கரின் மீதும் கமலாவின் மீதும் அபார வாஞ்சை. அவர்கள் மனம் நிரம்பினால் அவள் மனம் நிரம்பிய மாதிரி.

தர்மாம்பாளுக்கும் தாதுலிங்க முதலியாருக்கும் இருபத்திரண்டு வருஷங்களுக்கு முன்னர் செல்வச் சிரஞ்சீவி சங்கர் சீமந்த புத்திரனாகப் பிறந்தபோது, அவர்கள் இருவரும் சங்கரைத் தங்கள் குலத்தை விளக்க வந்த கொழுந்தாகத் தான் கருதினார்கள். ஆனால், இப்போதோ தாதுலிங்க முதலியார் மட்டும் ஏகபுத்திரனை அந்த மாதிரிக் கருதவில்லை. குலத்தை விளக்க வந்த கொழுந்தாக இருப்பதற்குப் பதிலாக, சங்கர் எங்கே கோடாலிக்காம்பாக மாறி விடுவானோ என்ற அரிச்சலும், தம் கனவுகளை யெல்லாம் பாழாக்கி விடுவானோ என்ற அங்கலாய்ப்பும் அவருக்கு இருந்து வந்தன. காரணம், சங்கர் முதலாளிக்குப் பிறந்த சின்ன முதலாளியாக இராமல், அரசியல் ஈடுபாடும், 'அபாயகரமான' கருத்துக்களும் கொண்டவனாக இருந்தான். அவனது அரசியல் ஈடுபாடு தாதுலிங்க முதலியாருக்குப் பிடித்த அரசியலாக இருந்திருந்தால், அவனை அவர் இதற்குள் ஒரு 'எம்.பி.' யாகவோ அல்லது குறைந்த பக்ஷம் 'எம்.எல்.ஏ.' யாகவோ ஆக்கிவிடுவதற்கு லட்சம் ரூபாய் வேண்டுமானாலும் செலவழித்திருப்பார். ஆனால் சங்கரோ என்னென்னவோ 'இஸங்'களைப் பற்றியெல்லாம் பேசும் இளைஞனாக இருந்தான். எங்கேயோ கிடக்கும் ருஷ்யாவையும் சீனாவையும் பிரமாதப் படுத்திப் பேசும் புள்ளியாக இருந்தான். தன் தந்தை செய்யும் வியாபாரத் தந்திரங்களையெல்லாம், அவரையும் விடத் திறமையாகக் கண்டறிவதோடு மட்டுமல்லாமல், அவற்றை

அம்பலப்படுத்தி விடக்கூடிய ஆசாமியாகவும் இருந்தான். இவ்விதக் காரணங்களால் தாதுலிங்க முதலியார் தம் மகனைப் பற்றி எப்போதும் சந்தேகாஸ்பதமான கண்ணோட்டம்தான் கொண்டிருந்தார்.

அன்றுகாலைஒன்பதுமணிஇருக்கலாம்.

மங்களபவனத்தின் போர்டிகோவில் ஒரு மோரிஸ் மைனர் கார் நின்று கொண்டிருந்தது. போர்டிகோவை அடுத்து வீட்டின் இடது புறத்திலுள்ள தாதுலிங்க முதலியாரின் காரியாலயத்தில் தாதுலிங்க முதலியார் வருமானவரிஆபீசிலிருந்துவந்திருந்தஒருகுமாஸ்தாவிடம் ஏதோ தணிந்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்.

"அப்பா!"

வாசல் நடையில் வந்து நின்று குரல் கொடுத்த சங்கரின் பக்கம் திரும்பினார் முதலியார்.

"என்ன?"

"நாங்க இன்னிக்கி நம்ம எஸ்டேட் பக்கம் பிக்னிக் போயிட்டு வரப்போறோம்."

"நாங்கன்னா யாரு?" என்று சந்தேக பாவத்துடன் கேட்டார் தந்தை.

"நான், கமலா, மணி என்று சுருக்கமாகப் பதிலளித்தான் சங்கர்.

"ஏண்டா வயசுப்பெண்ணை எங்கேயெல்லாம் இழுத்தடிக்கிறது? ம்-போ போ. ஜாக்கிரதையாய்ப் போயிட்டு வா. அது சரி மணியும் வர்ரானா? அவன் எதுக்கு...?"

"துணைக்கு!" என்று இடைமறித்துப் பதில் கூறினான் சங்கர்.

தாதுலிங்க முதலியாரின் முகம் சட்டென்ற விகாரம் பெற்றது. எனினும் ஒன்றும் சொல்லவில்லை. இரண்டு

விநாடி நின்றுவிட்டு, சங்கர் தந்தையின் மௌனத்தைச் சர்வார்த்த சாதகமாக ஏற்றுக்கொண்டு வீட்டுக்குள் திரும்பினான்.

வீட்டிற்குள் தர்மாம்பாள் தனது புதல்வி கமலாவுக்குத் தலைவாரி முடிந்து கொண்டிருந்தாள். அழகிய கனகாம்பர நிறப் பட்டுப்புடவையும், பச்சை ரவிக்கையும் அணிந்து கோலாகலமாக வீற்றிருந்தாள் கமலா. எதிரேயிருந்து நிர்விசாரமாக லதா மங்கேஷ்கரின் ஹிந்தி சங்கீதத்தை வாரி வழங்கிக் கொண்டிருந்தது ரேடியோ.ரேடியோவிலிருந்து எழும்கீதத்தின் இசையோடு கமலாவும் வாய்க்குள் குதூகலத்தோடு முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். தர்மாம்பாள் கமலாவின் தலையில் மல்லிகைப் பூச்சரத்தைச் சூட்டிவிட்டு நெற்றி வழித்து விரல்களைச் சொடுக்கித் திருஷ்டி கழித்தாள். அலங்காரம் முடிந்து எழுந்தகமலாஎதிரிலேஆளுயரத்துக்குத்தோன்றிய பெல்ஜியம் நிலைக் கண்ணாடி முன் நின்று, நெற்றிக்குத் திலகம் இட்டுவிட்டு, கண்களை அப்படியும் இப்படியும் உருட்டி அழகுபார்த்துக்கொண்டாள்.

உள்ளேவந்தசங்கர்கமலாவைப்பார்த்தான்.

"அடடே! கமலாவுக்கு இன்னிக்கு அலங்காரம் பிரமாதமாயிருக்கே!" என்று கூறிவிட்டு தன் தாயிடம் திரும்பி "அம்மா, கமலா அசல் புதுப் பொண்ணு மாதிரி இல்லே! நீயே சொல்லு!" என்று கேட்டுவிட்டுக் கமலாவை, குறும்பாகப்பார்த்தான்.

அண்ணனின் பேச்சைக் காதில் வாங்கிய இன்பக் கிளுகிளுப்போடு 'போ அண்ணா, உனக்கு எப்பவும் கேலிதான்!"என்றுசெல்லக்கோபம்காட்டி,வெட்கித்தலை குனிந்தாள்கமலா.

சங்கர் விடவில்லை.

"அடடே.பொண்ணுக்குவெட்கத்தைப்பாரேன்!"

மேலும் வாய்கொடுத்துப் பரிகாசத்துக்கு ஆளாகாமல் கமலா வீட்டுக்குள் துள்ளி ஓடி மறைந்தாள்.

"ஏண்டாப்பா, அவ பொண்ணு மாதிரியில்லாம, பின்னே எப்படி இருப்பா? காலாகாலத்திலே அவளையும் ஒருத்தன் கையிலே பிடிச்சிக் கொடுக்க வேண்டியதுதானே" என்று வாய் நிறைந்த சொற்களோடு பதிலளித்தாள் தர்மாம்பாள்.

"ஏம்மா, கையிலே பிடிச்சிக் கொடுக்கிறதுக்கு அவ என்ன ஆடா, மாடா? அவள் இஷ்டப்பட்டவனை அவள் கட்டிக் கொள்ளணும். நான் ஒண்ணும் விளையாட்டாச் சொல்றேன்னு நினைக்காதே. ஆமா" என்று செல்லக் குரலோடும்அர்த்தபாவத்தோடும்பேசினான்சங்கர்.

"என்னமோடாப்பா. எல்லாம் நம்ம அந்தஸ்துக்கும் தகுதிக்கும் தகுந்த இடமாத்தான் பார்க்கணும். கமலாவின் அழகுக்கும் அந்தஸ்துக்கும் ஆயிரம் பேர் ஓடி வர மாட்டானா?"

"வருவான், வருவான். ஆனா, கமலா சம்மதத்தையும் தெரிஞ்சுதான் கல்யாணம் பண்ணனும்.சொல்லப்போனா, அவளே மாப்பிள்ளையைத்தேர்ந்தெடுத்துக்கொள்ளணும்."

தர்மாம்பாளுக்குச் சங்கரோடு மேலும் விவாதம் செய்து கொண்டிருக்க இயலவில்லை. எனவே சங்கரை மடக்குவதற்காக ஒரு கேள்வியைத் திடீரென்று கேட்டு வைத்தாள்.

"அது சரி.ஏண்டா, உன் கல்யாணம்?"

"அதுதான் சொன்னேனே. இந்தக் காலத்திலே பெண்ணே மாப்பிள்ளையைத் தேடிக் கொள்ளணும்; மாப்பிள்ளையேபெண்ணைத்தேடிக்கொள்ளணும்.அந்தக் கவலை உனக்கு எதுக்கு?"என்று சொல்லி விட்டு, பதிலை எதிர்பாராமலே மாடிக்குச் சென்றான்.

மாடிக்குச்சென்றுசங்கர்புறப்படுவதற்காகஆயத்தம் செய்து கொண்டிருந்த சமயத்தில் கமலா உள்ளே வந்தாள்.

"என்ன அண்ணா,கிளம்பலாமா?"

"கிளம்பி விட்டாயா?" என்று கேட்டுவிட்டு, சங்கர் கமலாவின் பக்கம் திரும்பினான்: "பெண்கள் அலங்காரம் செய்துகொண்டுகிளம்பறதுக்குத்தான்நேரமாகும்என்பது உலக வழக்கம். நீயானால், எனக்கு முன்னே ரெடியாகி விட்டாயே!" என்றான்.

"அதற்கில்லை அண்ணா. அத்தானிடம் ஒன்பது மணிக்கே வந்து விடுகிறோம்னு சொன்னேன். மணி ஒன்பதரை ஆச்சு. அத்தான் காத்துக்கிட்டிருக்கும்" என்று வெள்ளை மொழியில் பதில் சொன்னாள் கமலா.

சங்கர் ஒரு நிமிஷம் பதில் சொல்லவில்லை. பிறகு மிகவும் அமைதியாகக் கமலாவை நோக்கிப் பேசினான்:

"கமலா நானும், உன்னிடம் பல நாட்களாகக் கேட்கணும் என்றுதான் இருந்தேன். நீயும் மணியும் பழகி வரும் உறவையும் நான் உணர்ந்துதான் இருக்கிறேன். உங்கள் கனவை நனவாக்க வேண்டுமென்பதுதான் என் விருப்பம். மணியை மணந்து கொள்ள உனக்குச் சம்மதந்தானே" என்று கேட்டுவிட்டு, அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கினான்.

ஆனால் கமலாவோ தன் அண்ணன் கேட்பதற்குப் பதிலே கூறாமல், தோன்றாமல் தோன்றும் மெல்லிய புன்னகையோடு, தலை குனிந்து கால் பெருவிரலால் தரையைக் கீறிக் கொண்டிருந்தாள்.

சங்கர் மீண்டும் பேசினான்.

"கமலா, உன் இஷ்டம்தான் என் இஷ்டம். அம்மாவைச் சம்மதிக்க வைப்பது என்பாடு. அப்பாவைச் சரிக்கட்ட வேண்டியது அம்மா பொறுப்பு. சரி தானே!"

கமலா அதற்கும் பதில் சொல்லவில்லை.

சங்கர் மேலும் கேட்டான்:

"பதில் சொல்லு, கமலா. தங்கள் வாழ்க்கையையே பாதிக்கக்கூடிய இந்த ஜீவாதாரமான கேள்விக்குப் பதில் சொல்லத் தைரியமில்லாமல், நம்நாட்டில் எத்தனை பெண்கள் தங்கள் வாழ்க்கையைப் பாழாக்கியிருக்கிறார்கள் தெரியுமா? இதிலெல்லாம்..."

சங்கரை மேலும் பேசவிடவில்லை கமலா.

"சரி, அண்ணா" என்று கூறிவிட்டுக் கமலா தலை நிமிர்ந்தாள்.

"அப்படிச் சொல்லு!" என்று பரிகாசமும் மகிழ்ச்சியும் கலந்த குரலில் பதில் சொல்லிவிட்டு, "சரி கமலா, நீ போய்க் காரில் சாமான்களையெல்லாம் எடுத்து வைக்க ஏற்பாடு செய். புறப்படு" என்று கூறி வழியனுப்பினான்.

சிறிது நேரத்தில் மங்கள பவனத்தின் போர்டிகோவில் நின்ற மோரிஸ் மைனர் இடம்விட்டுப் பெயர்ந்து வெளி வந்தது; சங்கர் தான் காரை ஓட்டிக்கொண்டு வந்தான். கமலா பின்ஸீட்டில் குதூகலத்தோடு உட்கார்ந்திருந்தாள். புறப்பட்டதும் தெரியாமல், நின்றதும் தெரியாமல் கார் சில நிமிஷத்தில், கைலாச முதலியாரின் வீட்டுமுன் வந்து நின்று, தாளலயத்தோடு ஹார்ன் செய்தது.

"அண்ணாச்சி, கார் வந்துவிட்டுது, புப்பாய்ங் புப்பாய்ங்!" என்று கத்திக்கொண்டு, வீட்டுக்குள் ஓடிச் சென்றான், வாசலில் விளையாடிக்கொண்டிருந்த சிறுவன் ஆறுமுகம். சங்கரும் கமலாவும் காரைவிட்டு இறங்கி உள்ளே வந்தார்கள்.

"வாம்மா, கமலா" என்று பரிவோடு வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றாள் தங்கம்.

கூடத்தில் ஒட்டடை அடித்துக்கொண்டிருந்த

இருளப்பக் கோனார் "வாங்க தம்பி" என்று சங்கரை வரவேற்றார்.

"என்னப்பா மணி. என்ன புறப்பாடு ஆச்சா?" என்ற கேட்டுக்கொண்டே உள்ளே சென்றான் சங்கர்.

சிறிது நேரத்தில் மணி, சங்கர், கமலா மூவரும் புறப்பட்டுவெளியேவந்தார்கள்.மணியின் தம்பி ஆறுமுகம் தன் தாயிடம் போய் ஒட்டிக்கொண்டு, "அம்மா, நானும் போறேன்!"என்றுஅழாக்குறையாகக்கெஞ்சினான்.

"நம்ம எல்லாம் இன்னொருநாள் போவோண்டா" என்று அவனை ஏமாற்றினாள் தாய்.

வெளியே வந்த சங்கர், இருளப்பக்கோனாரைப் பார்த்து "என்ன கோனாரே, வாங்களேன். எஸ்டேட் பக்கம் போய் விட்டு வரலாம். எங்களுக்கும் துணை ஆச்சு" என்று அன்போடு கூப்பிட்டான்.

"கொல்லன் பட்டறையிலே ஈக்கு என்ன வேலை, தம்பி? நீங்க போயிட்டு வாங்க" என்று பதில் சொன்னார் இருளப்பக் கோனார். அவரது குரல் ஏனோ அடைபட்டுப் போன மாதிரி இருந்தது.

"அவர் வரமாட்டார்" என்று அர்த்த பாவத்தோடு ஆங்கிலத்தில் சொன்னான் மணி.

"ஏன்?" என்று பதிலுக்கு ஆங்கிலத்தில் கேட்டான் சங்கர்.

அதற்குமணிஎதுவும்பதில்சொல்லவில்லை.

"புறப்படலாமே"என்றுதான்மணிசொன்னான்.

மூவரும்காரில்சென்றுஏறிஅமர்ந்தார்கள்.

இருளப்பக் கோனாரும், தங்கம்மாளும் அந்தச் 'சின்னஞ், சிறுசுகள்'குதூகலத்தோடுசென்று அமருவதைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

தங்கம்மாள் ஆழ்ந்த பெருமூச்சு விட்டுவிட்டு, வாய்விட்டுத் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்:

"அழகான பெண்; அடக்கமான பெண். மணிக்குக் கொடுத்துவைக்கணும்!"

அவள் மீண்டும் பெருமூச்செறிந்தாள்.

"சாமி வரங் கொடுத்தாலும், பூசாரி தட்டிப் பறிக்காமல் இருக்கணுமே. பெரிய முதலியார் குணம் உங்களுக்கு தெரியாதாம்மா?" என்று கரகரக்கும் குரலில் பதில் சொன்னார் இருளப்பக் கோனார்.

இருளப்பக் கோனாரும் ஏனோ ஆழ்ந்த பெருமூச்செறிந்தார்.

தெருவில் நின்ற காரை 'ஸ்டார்ட்' எடுத்துக் கொண்டே சங்கர் மணியை நோக்கிக் கேட்டான்: "என்ன மணி, கோனார் ஏன் வரமாட்டார்?"

"அவர் கதை பெரிய கதை."

"என்னது?சொல்லேன்."

"இருக்கு. சொல்றேன்" என்று அழுத்திக் கூறினான் மணி.

"சரி" என்று கூறிவிட்டு, காரை ஓட்டத் தொடங்கினான் சங்கர். சிறிது தூரம் சென்றதும், சங்கர் மணியைப் பார்த்து, "நானும் உன்னிடம் ஒரு விஷயம் சொல்லணும்" என்றான்.

"என்னது?சொல்லேன்."

"இருக்கு. சொல்றேன்" என்று மணியைப் போலவே அழுத்தலாகப்பதில்கூறினான் சங்கர்.

சங்கர் குறிப்பிடும் விஷயத்தை உணர்ந்துகொண்ட கமலா, எதுவுமே அறியாதவள் மாதிரி கன்றிச் சிவந்த

கன்னங்களோடு தலையைக் குனிந்துகொண்டாள். முன் ஸீட்டிலிருந்தசங்கரும்மணியும்அதைக்கண்டுகொள்ளவே வழியில்லை.

# 6

வடிவேலுமுதலியாரும்அவரையொத்ததறிகாரர்கள் சிலரும் 'தனலக்ஷ்மி ஸ்டோரி'ன் வெளிக் கிராதி கேட்டைக் கடந்து உள்ளே நுழைந்தார்கள் 'தனலக்ஷ்மி ஸ்டோர்ஸ்-கைத்தறி அண்டு நூல் ஜவுளி மொத்த வியாபாரம்' என்று விலாசமிட்ட எனாமல் போர்டு மாட்டப் பெற்ற அந்தக் கடை-மாஜி ராவ்சாகிபும், பரம்பரைப் பெரிய முதலாளியுமானதாதுலிங்கமுதலியாரின்கிட்டங்கி.அந்தக் கிட்டங்கியில் மூன்று குமாஸ்தாக்களும், ஏழெட்டு எடுபிடி ஆட்களும் வேலை பார்த்து வந்தார்கள்; கிட்டங்கிக்குப் பின்புறம் சிறிது தள்ளி, தாதுலிங்க முதலியாருக்குச் சொந்தமான சாயப் பட்டறை ஒன்றும் இருந்தது. சாயப் பட்டறை வெளித்தோற்றத்துக்கு லகுவில் புலப்படா விட்டாலும், துர்க்கந்தம் வீசும் அந்தப் பட்டறையின் நெடி நாற்றம் மட்டும், மெயின்ரோடு வரையிலும் வியாபித்து நின்று, தாதுலிங்க முதலியாரின் பெருமையை நிலைநாட்டிக் கொண்டிருந்தது. தனலஷ்மி ஸ்டோர்ஸ் கிட்டங்கியிலிருந்துதான் தறிகாரர்களுக்குநெய்வதற்கு நூல் கொடுத்து வாங்குவதும், உள்ளூர்ச் சில்லரை வியாபாரிகளுக்கும், நூல், ஜவுளி முதலியன கொடுக்கல் வாங்கல் செய்வதும் வாடிக்கை. தனலஷ்மி ஸ்டோர்ஸ் ஒன்றுதான் ஊரும் உலகமும் அறிந்த, தெரிந்த கிட்டங்கி: இது தவிர, தாதுலிங்க முதலியாருக்கு வேறு சில கிட்டங்கிகளும் உண்டு. அந்தக் கிட்டங்கிகள் தாதுலிங்க முதலியாருக்கும் அவரது அந்தரங்கமான அடியாட்கள் சிலருக்கும்தெரியுமேதவிர,சாதாரணத்தறிகாரர்களுக்கோ., வருமானவரி, விற்பனை வரிச் சிப்பந்திகள் முதலியோருக்கோ தெரியாத விஷயங்கள்.

 

வடிவேலு முதலியாரும் அவரது சகாக்களும் தாதுலிங்க முதலியாரிடம் நெய்வதற்கு நூல் பெற்று வரத்தான்சென்றார்கள்.

உள்ளே நுழைந்ததும், கட்டிடத்துக்கு எதிராக வழிமறித்து நின்ற பியூக் காரைக் கண்டதும் உள்ளே பெரிய முதலாளி இருக்கிறார் என்ற உண்மையை அவர்கள் கண்டு கொண்டார்கள்; அது மட்டுமல்லாமல், கடையில் நடை வாசலை மிதித்ததுமே, அங்கு நிலவிய சாயப்பட்டறை நாற்றத்தையும் மிஞ்சி, அவர்களது சுவாசத்தைத் தொட்டு உலுப்பும் கான்பூர் ஸெண்டின் நறுமண வாசனையால், உள்ளே மைனர் முதலியார் வாளும் இருக்கிறார் என்பதையும் வடிவேலு முதலியார் உணர்ந்து கொண்டார்.

"உள்ளே சகுனி மாமாவுமில்லெ இருக்கார் போலிருக்கு!" என்று தம்கூட வந்தவரிடம் காதைக் கடித்தமாதிரிசொல்லிவிட்டுஉள்ளே நுழைந்தார்வடிவேலு முதலியார்.

தறிகாரர்களைக் கண்டதும் அங்கிருந்த குமாஸ்தா ஒருவர் "வாங்கய்யா வாங்க" என்று சம்பிரதாய பூர்வமாக வரவேற்றுவிட்டு, "என்ன, எங்கே வந்தீக?" என்று விசாரித்தார்.

"வேறேஎங்கேவருவோம்? நூல்வாங்கத்தான்"என்று ஒரு நெசவாளி பதிலளித்தார்.

உடனே அந்த குமாஸ்தா தொண்டையை ஒரு முறை கனைத்துச் செருமிவிட்டு, "அய்யா, நீங்க நூல் வாங்கிட்டுப் போறது சரி. ஆனால், பழைய கூலிக்கே நீங்க நெஞ்சி தாரதுன்னாத்தான் நூல் தரமுடியும். சம்மதம்தானா?" என்று கேட்டார்.

வந்திருந்த நெசவாளிக்கு இந்தக் கேள்வி புதிராகவும் வியப்பாகவும் இருந்தது.

"என்னங்க, குமாஸ்தாப் பிள்ளைவாள். போன ஊர்க் கூட்டத்திலெ எங்களுக்குக் கூலியை உசத்தித் தீர்மானம் பண்ணினது உங்களுக்குத் தெரியாதா? பெரிய முதலாளியும் இருந்துதானே தீர்மானிச்சாக!" என்று குமாஸ்தாவின் 'அப்பாவித்தன'த்தைச் சுட்டிக் காட்ட முனைந்தார் ஒரு அப்பாவி நெசவாளி.

"எல்லாம் தெரியும். அதனாலேதான் பழைய கூலின்னு சொன்னேன்" என்றார் குமாஸ்தா.

"இதென்னய்யா இது? ஊர்க் கூட்டத்திலே ஒண்ணு தீர்மானிக்கிறது, இங்கே வந்தா இப்படிச் சொல்றது. இதென்ன நியாயம்?" என்று ஆத்திரத்தோடு கேட்டார் வடிவேலு.

"வடிவேலு முதலியார்வாள், எல்லாம் முதலாளி உத்தரவு. நாங்க அதை மீறி ஒண்ணும் செய்ய முடியாது. வேணுமானா, நீங்க முதலாளியையே ஒரு வார்த்தை கேட்டுக்கிடுங்க. அவுஹ உள்ளேதான் இருக்காக" என்று கூறிக்கொண்டே, குமாஸ்தா உள்ளே இருந்த ஒரு அறையைச் சுட்டிக்காட்டினார்.

தறிகாரர்கள் அனைவரும் அந்த அறையை நோக்கிச் சென்றார்கள்.

"என்னவே, எங்கே வந்தீங்க?" என்று உள்ளேயிருந்த மைனர் முதலியார் கேட்டார். மைனர் முதலியாருக்கு எதிர்த்தாற்போலுள்ள மேஜை முன்னால், தாதுலிங்க முதலியார் மின்சார விசிறியின் சுகானுபவ லஹரியிலே மூழ்கியவராக அமர்ந்திருந்தார்.

தறிகாரர்கள் வந்த விஷயத்தை விளக்கினார்கள்.

"பழைய கூலிக்கு நெஞ்சி குடுக்கிறதானா, நூல் வாங்கிக்கிட்டுப் போங்க; இல்லேன்னா, கூலி கூட்டித் தர்ர மாராசனைப் பாருங்க" என்று சுருக்கமாகச் சொன்னார் பெரிய முதலாளி.

"இதென்ன முதலாளி, அன்னிக்கி ஊர்க் கூட்டத்திலே-"என்று ஆரம்பித்தார் வடிவேலு.

ஊர்க் கூட்டத்திலே முடிவு பண்ணிட்டா, உடனே அதற்கு நாங்க கட்டுப்படணும்னு கட்டாயமா? இஷ்டமிருந்தா நூல் தாரோம்; இல்லேன்னா இல்லை" என்றார் மைனர் முதலியார்.

"ஆமா, வே. உங்களுக்குக் கூலி உசத்திக் குடுத்து, இங்கே துணியைவாங்கி அடுக்கிவைக்கிறதைவிட, இருக்கிற நூலைமட்டும்வித்தாலேஎங்கள் வியாபாரம் நடந்துட்டுப் போகுது. நூலுக்கின்னாலும் என்னிக்கும் கிராக்கி உண்டு" என்று வியாபார சூட்சுமத்தை விட்டுச் சொல்லி பயமுறுத்தினார் பெரிய முதலாளி.

"உழைக்கிறதுக்குத்தானே, முதலாளிகூலியைஉசத்திக் கேக்கிறோம்? சும்மா, தானமா கேக்கிறோம்?" என்று வாய்விட்டுக் கேட்டார் வடிவேலு.

இதைக் கேட்டதும் தாதுலிங்க முதலியாருக்குச் சுருக்கென்றது.

"அட சரிதாம்வே! இப்பக் குடுக்கிற கூலி உங்களுக்குக் கட்டாமலா போச்சி? உங்களுக்கெல்லாம் கூலியை உசத்தியே குடுக்கப்படாது. குடுக்கிற துட்டையெல்லாம் காப்பிக் கடைக்கும் சினிமாக் கொட்டகைக்கும் அழுது தொலைச்சிட்டு, காணாது காணாதுன்னு எங்கய்யா போறது!" என்று அடித்துப் பேசினார், தாதுலிங்க முதலியார்.

மைனர் முதலியாரும் சும்மா இருக்கவில்லை; பெரிய முதலாளியைத் தொடர்ந்து பின்பாட்டாக ஒரு ஆவர்த்தம் பாடி முடித்தார்:

"...எதுக்கு நின்னுகிட்டு இருக்கிய? நாங்க ஒண்ணும் ஊர்க் கட்டுப்பாட்டுக்கு ஒத்துக்கிட முடியாது: இது அம்மன் கோயில் விவகாரமில்லை. வியாபார விசயம்.

இதிலே கொடுக்கிறதும், வாங்கறதும் எங்க இஷ்டம். இல்லேன்னா, அந்தத் தர்மப்பிரபு கைலாசம் இருக்காரே, அவரைப் போய்ப் பாருங்க. கர்ணன் போகையிலே அவரைத்தான் கையைக் காட்டிட்டுப் போனானாம். போங்க, போங்க."

வடிவேலு முதலியாரும் மற்ற நெசவாளிகளும் இன்னது செய்வதென்று தெரியாமல் சில வினாடிகளுக்கு ஒருவர் முகத்தை, ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். பிறகு அவர்கள் அனைவரும் ஒன்றுமே பேசாமல் நடை இறங்கி வெளியே வந்தார்கள்.

வெளிக் கிராதி கேட்டைத் தாண்டுவதற்குள்ளாகவே வடிவேலு முதலியார் அத்தனை நேரமும் கட்டுப்பட்டுக் கிடந்த தம் வாயைத் திறந்தார்.

ஊரிலே பெரிய முதலாளி ஆச்சேன்னு நான் வாயை மூடிக்கிட்டுக் கிடந்தேன். இல்லேன்னா, என் வாயிலே வந்ததுக்கு நல்லாக் கேட்டிருப்பேன்" என்று தமக்குத் தாமே சொல்லி, சமாதானம் தேட முயன்றார்.

"ஆமாம் தம்பி, ஊரிலே உள்ளவனுக்கின்னா ஒரு வழக்கு; இல்லாதவனுக்கின்னா இன்னொரு வழக்கு. தெரிஞ்சதுதானே?" என்ற அனுபவ சித்தாந்தம் பேசினார், ஒரு வயதான நெசவாளி.

அவர்கள் கேட்டைத் தாண்டி வெளிவந்ததுமே, எல்லோரும் தத்தம் வாயைத் திறந்து தமது ஆத்திரத்தைத் தணித்துக் கொண்டனர்.

"இவங்க தினம் தினம் பாலும் பழமும் அல்வாவும் நெய்யுமாத் தின்னு செழிக்கிறதிலே குத்தமில்லெ. என்னமோ நம்ம ஒருநாள் ஆசைப்பாட்டுக்கு காப்பிக் கடைக்கோ சினிமாவுக்கோ போறதுனாலேதான் ஓட்டையாப் போச்சாம். காசைக் கரியாக்குதோமாம்!" என்றார் ஒருவர்.

"இவரு மட்டும் என்ன? அன்னிக்கி நான் அம்மன் கோயில்லே வச்சி, பேப்பர்லெ வாசிச்சிக் காட்டலே? நம்ம மந்திரி இருக்கிறாரே, அவருகூட இப்படித்தான் பேசியிருக்காரு. கெவுருமிண்டு உத்தியோகஸ்தருங்க சம்பளத்தை உசத்திக் கேட்டா, அதிகச் சம்பளம் குடுத்தா, சினிமாவுக்குப் போய்க் கெட்டு போவே, பீடி குடிச்சிச் சீரழிந்து போவே அப்படின்னு இப்படின்னு சொல்லி யிருக்காரு, அது மாதிரி தான் இருக்கு இவரு பேச்சும்!" என்று வடிவேலு முதலியார் தமது அங்கலாய்ப்பையும் தெரிவித்துக் கொண்டார்.

"பசிச்சி அழுது ஒருவாய்ப் பருக்கை கேட்டா, அதிகம் சாப்பிட்டா அஜீர்ணம்னு புத்தி புகட்டவர்ர கதை யாயிருக்கு அண்ணாச்சி" என்று உவமான பூர்வமாக உண்மையை விளக்கினார் வேறொருவர்.

தறிகாரர்களுக்கிருந்த வயிற்றெரிச்சலில் வாய் ஓய்வதாயில்லை. வெகுநேரம் வரையிலும் பேசாதிருந்த ஒரு தொழிலாளி திடீரென்று ஒரு வாக்கியத்தை, கஷ்டப்படுகிற காலத்தில் பலரும் சொல்லிக் கொள்ளும் சமாதான மொழியைக் கூறினார்.

"ஆனைக்கு ஒரு காலம்னா, பூனைக்கும் ஒரு காலம் வரும்!"

இதைக் கேட்டவுடன் வடிவேலு முதலியாருக்கு எரிச்சல்தான் பொத்துக் கொண்டு வந்தது.

"வரும் வரும்னு சொல்லிக்கிட்டிருந்தா, கதை நடக்காது தம்பி. மயிலே மயிலேன்னா இறகு போடுமா? நாம எல்லாரும் நமக்குள்ளே ஒத்துமையில்லாமெ, நவக்கிரகங்கள் மாதிரி மூலைக்கு ஒருத்தரா, வக்கரிச்சிக்கிட்டு இருக்கப் போய்த்தான் இவனும் நம்மகிட்ட மச்சான் முறை கொண்டாடுதாங்க" என்று ஆக்ரோஷத்தோடு பேசினார் அவர்.

"அப்படிச் சொல்லுங்க, அண்ணாச்சி, நாம இல்லாமெ, இவங்க மட்டும் எப்படிச் சம்பாதிச்சாங்க? அன்னிக்கி, எம் மச்சினன் மதுரையிலேயிருந்து வந்திருந் தானே, அவன் சொன்னான். மதுரையிலே நெசவாளி கள்ளாம் சங்கம் வச்சி, ஒண்ணு சேர்ந்து ஒத்துமையா இருக்கதினாலே, எந்த முதலாளியும் தறிகாரர்கிட்டே, அப்படி இப்படி வாய்த்துடுக்காய்ப் பேசவே பயப்படு தானாம். நாமும் அந்த மாதிரிச் சங்கம் கிங்கம் வச்சி ஒண்ணு சேர்ந்தாத்தான் நமக்கும் விமோசனம்" என்று மூச்சுவிடாமல் பேசி முடித்தார் ஒரு நெசவாளி.

"சரி சரி, பேச்சைச் சுருக்குங்க. அந்தக் கோள்மூட்டி சுப்பையா எதிரே வாரான். அவன் காதிலே எதுவும் விழுந்து தொலையப் போவுது" என்று எச்சரிக்கை செய்தார் வடிவேலு.

வடிவேலுவின் எச்சரிக்கையை ஏற்றுக் கொண்ட நெசவாளிகள் அங்கிருந்தவாறே தத்தம் வழியில் பிரிந்து சென்றனர். வடிவேலு முதலியாரும் சிறிது நேரம் அங்கேயே நின்று, 'வீட்டுக்குச் செல்வதா, கைலாசம் அண்ணாச்சியைப் பார்ப்பதா, அல்லது மூப்பனார் கடைக்குப் போவதா' என்று விசாரத்தில் ஈடுபட்டுவிட்டு, ஒரு முடிவுக்கு வந்தவராய்த் தெற்கே திரும்பினார்.

## 7

கைலாச முதலியார் கோயில் தர்மகர்த்தாவான பிறகு லோகநாயகி அம்மனுக்கு யோககாலம் தொடங்கிவிட்டது.

ஏனெனில், மைனர் முதலியார்வாளின் காலத்தில் அம்மனுடைய நிலைமை பரிதாபகரமாயிருந்தது. அந்தக் காலத்தில், லோகநாயகி என்று அருமையான பெயர் படைத்த அந்தக் காவல் தெய்வத்துக்குக் கட்டிக்கொள்ள ஒரு நல்ல துணிகூடக் கிடையாது. உடுத்திய துணியைத் தவிர வேறு மாற்றுத் துணிக்குக்கூட அவளுக்கு விதியில்லை.

எண்ணெய்ப் பிசுக்கும் எண்ணற்ற கிழிசல்களும் நிறைந்த அந்த ஒற்றைத் துணி, கர்ணனோடு உடன் பிறந்த கவசம்போல், கழற்றவோ மாற்றவோ முடியாத நிலையில், அம்மனுக்கு மான சம்ரக்ஷணியாக உதவி வந்தது. இதுபோலவே, வருஷா வருஷம் மான்யம் வாங்கித் தொலைக்கும்கடனுக்காக,ஓதுவார்மூர்த்திகொண்டுவந்து ஊற்றும் வாய்க்கால் தண்ணீர் அபிஷேகத்தைத் தவிர, ஒரு எண்ணெய் முழுக்கு, பன்னீர் ஸ்நானம், சந்தனக் காப்பு என்ற விசேட சம்பிரமங்களும் அம்மனுக்குக் கொடுத்து வைக்கவில்லை. ஓதுவார் மூர்த்தியும் தம் வீட்டுச் செலவுக்காக நித்த நித்தம் கோயில் மடைப் பள்ளியில் சமைத்தெடுத்துச் செல்லும் வெள்ளைப் பொங்கலில் நாலைந்து பருக்கைகளுக்குக் குறைச்சலில்லாமல் அம்மனுக்குத் தூபம் காட்டி நிவேதனம் செய்து வந்ததால், தன்னைப் பட்டினி போடும் பாவத்தை ஊரார்மீதோ ஓதுவார் மூர்த்தி மீதோ சுமத்துவதற்கும் லோகநாயகிக்கு வழியில்லை. இந்தப் பருக்கைச் சோற்றைத் தவிர, அம்மனுக்குக்கொடைகூத்துஎன்றகொண்டாட்டங்களோ, படைப்புச்சோறுஎன்னும்புலால்விருந்தோ,பொங்கலோ, பூசையோ லபிக்கவில்லை."சோறு கண்ட மூளியார் சொல்?" என்றகேட்காதகுறையாகத்தான் அம்மன் இருந்துவந்தாள். எனினும் ஊரில் எப்போதாவது காலரா, பெரிய அம்மை முதலிய தொத்து வியாதிகள் கொஞ்சம் தன்னிச்சையாக வேட்டையாடத் தொடங்கிவிட்டால், அம்மன் பாடும் வேட்டைதான்.'தெய்வ குத்தத்' துக்குப் பயந்து அம்மனைச் சாந்தி செய்வதற்காக ஊர் மக்கள் தலைக்கட்டுவரி வசூல் செய்து பூப்படைப்பார்கள்; கஞ்சி காய்ச்சி ஊற்றுவார்கள்; விசேட மரியாதைகள் செய்வார்கள்.

கைலாச முதலியார் காலத்தில் இந்த நிலைமை மாறிவிட்டது.

கைலாச முதலியார் தமது சொந்த நன்கொடையாக, அம்மனுக்கு நாலைந்து சேலைகளை வழங்கி, அவள்

மானத்தைக் காத்தார். அத்துடன் மாதாமாதம் கடைசிச் செவ்வாயன்று அம்மனுக்கு விசேட அலங்காரங்களும் நைவேத்தியங்களும் பூசையும் பண்ணுவதற்கான ஏற்பாட்டைச் செய்து முடித்தார். கடைசி செவ்வாய்க் கிழமையன்று ஓதுவார் மூர்த்தியின் கைவண்ணத்தால் அம்மன் இனிமை ததும்பும் பேரழகு பெற்று விளங்குவாள். சந்தனக் காப்பிட்ட திருமுகத்தில் வெள்ளிக் கண்மலர்கள் ஒளிசிதற, நெற்றிக் குங்குமம் தகதகக்க, குருத்தோலைபோல் விரிந்து அழகோடு இலங்கும் அரக்குச் சிவப்புச்சேலை அணி செய்ய லோகநாயகி வீற்றிருக்கும் திருக்கோலம், பக்தர்கள் கண்களுக்கு ஒரு பெரு விருந்து. மேலும், கைலாச முதலியார் தமது சொந்தக் கைங்கரியமாக, அம்மன் சந்நிதிக்கு மின்சார விளக்குகளும் போட்டு ஒளிபெறச் செய்திருந்தார். கோயிலின் முன் முகப்பிலே நிலவுக் குளுமை பரப்பும் நீண்ட குழல் மின் விளக்கில், 'திரு. கைலாச முதலியார் உபயம்' என்ற எழுத்துக்கள் ஒளி செய்தன; அந்த விலாசத்தைகூட, அவர் வடிவேலு முதலியார் போன்ற தறிகாரர்களின் வற்புறுத்தலுக்காகத் தான் போட்டுக் கொள்ள அனுமதித்தாரே தவிர, மைனர் முதலியார் சொல்வது மாதிரி தற்பெருமைக்காகச் செய்து கொண்ட சுயவிளம்பரம் அல்ல. கைலாச முதலியார் பதவியேற்ற ஆறுமாச காலத்துக்குள்ளாகவே அவர் ஊரை ஒன்று திரட்டி அம்மனுக்கு மூன்றுநாள் கொடையையும் மேள தாளத்தோடு நடத்தி வைத்தார். அத்துடன் கொடையின் போது, வில்லுப்பாட்டு, கும்ப விளையாட்டு, கணியன் கூத்துமுதலியகளியாட்டங்களையும் நடத்தி, அம்மனையும் ஊரையும் ஒருங்கே திருப்தி செய்து வைத்தார்.

கைலாச முதலியார் தர்மகர்த்தாவான பின்பு அம்மனுடைய நிலையில் மாறுதல் ஏற்பட்டது போலவே, அவரது நிலைமையிலும் மாறுதல் ஏற்பட்டது. ஆனால் அம்மனுக்கு ஏற்பட்டதோ ஏறுதசையில்; கைலாச முதலியாருக்கோ இறங்கு தசையில்...

அதற்குக் காரணம்? அது ஒரு வரியில் சொல்லி முடிக்கக்கூடியதல்ல!

'என்னமோ அம்மன் சோதிக்கிறாள்!" என்று, 'கிரக சாரம் சரியில்லை, எட்டாமிடத்தை விட்டு சனி பகவான் இடம்பெயருகிறவரை இந்த இழுபறிதான்' என்றும், அவ்வப் போது கைலாச முதலியார் தமக்குத் தாமே கூறி ஆறுதல் தேடிக் கொண்ட போதிலும், அவருக்கு ஏற்பட்ட சிரமத்துக்கு லோகநாயகி அம்மனையோ, செந்தூர் முருகனையோ, அட்டமத்துச்சனீசுவரனையோ குற்றம்கூற வழியில்லை. ஏனெனில், அந்தச் சிரமம் கைலாச முதலியாருக்கு மட்டும் வந்த சிரமம் அல்ல; கைத்தறித் தொழிலை நடத்தியும் நம்பியும் வந்த லட்சோப லட்ச மக்களுக்கும் ஏற்பட்ட பொது நெருக்கடி அது. ஆகஸ்ட் சுதந்திரம் தந்த 'சுயராஜ்யப் பரிசு' அது-

ஆனால், ஆகஸ்ட் சுதந்திரத்தின் அபிநவ கலி புருஷர்களின் 'அருமை பெருமைகளை' யெல்லாம் கைலாச முதலியாரோ, அவரைப் போன்ற சிறு வியாபாரிகளோ, வடிவேலு முதலியார் போன்ற தறிகாரர்களோ தெரிந்து கொள்ளவில்லை. எனவே தான் அவர்களுக்குத் தமது சிரமங்களுக்குரிய காரணம் புரியாத புதிராக இருந்தது. "என்னமோ சுயராச்சியம் வந்துவிட்டது என்றார்கள். நம்ம நேருதான் பிரதம மந்திரி, நம்ம கொடிதான் பறக்கிறது என்று சொல்கிறார்கள். ஆனால், சுயராச்சியம் வந்த பிறகு மனுஷனுக்கு உள்ள சுகத்துக்கும்கூட அல்லவா கொள்ளை வந்துவிட்டது? இதுதான் சுயராச்சியமா? நல்ல சுயராச்சியம்!" என்றுதான் அவர்கள் அதிசயப்பட்டார்கள்; சலித்துக் கொண்டார்கள்...

'அமெரிக்கப் பஞ்சின் விலையேற்றம் என் மென்னி யைப் பிடிக்கிறது! நான் மில்லை மூடிவிடப் போகிறேன்' என்று பம்மாத்துப் பண்ணிய விக்கிரமசிங்கபுர வெள்ளையனைக் காங்கிரஸ் ஆட்சியின் கருணாமூர்த்திகள்

தாங்கித் தடுத்து, ஒரு கோடி ரூபாயை மானியமாகத் தஷிணை வைத்து வாழி பாடி வாழ்த்திய விவரத்தையும் அந்த அப்பாவி மக்கள் தெரிந்து கொள்ளவில்லை.

"என்னமோ யுத்தகாலத்தில் ஒருதட்டுத்தட்டினோம். யுத்தம் முடிந்த பிறகும் அதே நிலைமை இருக்குமா?" என்று ஒரு சிலர் புத்திக்குத் தட்டுப்பட்ட அளவில் சமாதானம் தேடிக்கொண்ட போதிலும்கூட, பிரத்தியட்சமான வியாபார நிலைமை அந்தச் சமாதானத்தையும் கூடத் தகர்த்து வந்தது. 'யுத்த காலத்தில் உள்ள நிலைமைதான் இல்லாதுபோகட்டும்.யுத்தத்துக்குமுந்திய நிலைமையாவது இருக்க வேண்டாமா? இப்போது நிலைமை படுகேவல மாகவல்லா இருக்கிறது?' என்று சிந்திக்கும் வேளையில் தான் அவர்கள் எந்தவிதச் சமாதானமும் காணமுடியாமல் தவித்தார்கள்.

யுத்தத்துக்கு முன்போ? யுத்தத்துக்கு முன்பு இந்த நாட்டின் கைத்தறித் துணியில் கிட்டத்தட்டப் பேர்பாதி அளவு அக்கரைச் சீமைகளுக்கு ஏற்றுமதியாகி வந்தது. அக்கரைச்சீமைகளான ரங்கூனிலும்சிங்கப்பூரிலும்இந்திய நாட்டுக் கைத்தறித் துணிக்கு நல்ல கிராக்கி.யுத்த காலத்தில் இந்தச்சீமைகளுக்குஏற்றுமதிஅதிகரித்ததோடுமட்டுமல்ல, உள் நாட்டிலும் கைத்தறித் துணிக்கு நல்ல கிராக்கி; நல்ல விலை. கைத்தறி நெசவாளருக்கும் வியாபாரிகளுக்கும் இதனால் சக்கைப்போடு; கவலையே கிடையாது. ஆனால், காருண்யம் மிகுந்த காங்கிரஸ் ஆட்சி வந்த பிறகு, வெளிநாட்டு ஏற்றுமதிக்கு 'அட்டமத்துச் சனி' பிடித்தது; ஏற்றுமதி தடை செய்யப்பட்டது; கொஞ்ச நஞ்சம் ஏற்றுமதியாகும் துணிக்கும் ஸ்பெஷல் வரி விதிக்கப் பட்டது. உள் நாட்டிலோ? உள் நாட்டில் நாளுக்கு நாள் மக்களுடையவரும்படிசுருங்கியது;யுத்தகாலத்தைப்போல் முரமுரக்கும் புது நோட்டுக்கள் காணப்படவில்லை. ஆனால், பொருள்களின் விலைவாசிகள் மட்டும் கொம்பேறி மூக்கனைப்போல் உச்சிக்கொம்பை விட்டு இறங்கவே

யில்லை. எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடுவதுதான் நாட்டு மக்களின் நிலைமையாகி விட்டது.

அமெரிக்க நாட்டிலிருந்து அதிக விலைக்குப் பஞ்சு வாங்குவதால் நூல் விலை ஏற்றம்; நூல் விலை ஏற்றத்தால் கைத்தறித் துணிகளின் அடக்க விலை ஏற்றம்; விலை ஏற்றத்தை எட்டிப் பிடிக்க முடியாத நாட்டு மக்களின் பொருளாதார நெருக்கடி; பொருளாதார நெருக்கடியால் வியாபார மந்தம்; வியாபார மந்தத்தால் கைத்தறித் துணித் தேக்கம்; கைத்தறி துணித்தேக்கத்தால் உற்பத்தி முடக்கம்; உற்பத்தி முடக்கத்தால், நெசவாளர் பிழைப்புக்கு ஆபத்து; பிழைப்பற்றுப் போனால்...

இப்படியெல்லாம்தர்க்கஞானத்தோடுஉண்மையைத் தெரிந்து தெளிவு பெற இயலாத காரணத்தால், கைலாச முதலியார் முருகப் பெருமானின் திருவருளையும், லோகநாயகியம்மையின் கருணா கடாட்சத்தையும் நம்பி, விடிவுகாலத்தின்உதயரேகையைஎதிர்பார்த்துக்காலத்தை ஓட்டி வந்தார். சிரமங்கள் அதிகரிக்க அதிகரிக்க அவரது தெய்வபக்தியும்மேன்மேலும்உரம்பெற்றுவைரம்பாய்ந்து வளரத் தொடங்கியது. சுருங்கச் சொன்னால் கவலையை மறக்க உதவும் கஞ்சா போதையைப்போல் முருக நாமஸ்மரணை அவருக்குஉதவிவந்தது.

அன்று காலையில் கைலாச முதலியார் தமது பூஜை அறையில் வழக்கத்துக்கு மீறி, அதிக நேரமாகப் பூஜையில் ஈடுபட்டிருந்தார், அவரது தர்மபத்தினி தங்கம்மாள் தோசையையெல்லாம் சுட்டெடுத்து வைத்துவிட்டு, புருஷனுடைய வரவு நோக்கி வெளியே காத்திருந்தாள். ஆறுமுகம் வெளிப்புறத்திலுள்ள நடைகூடத்தில் அமர்ந்து, 'அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை; பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு' என்ற குறளைக் குறுகத் ?றித்துப் பதம் பிரித்துப் பொருள் கூறி வாய்வலிக்க ?னப்பாடம்செய்துகொண்டிருந்தான்.

பூஜை அறையை விட்டு வெளியே வந்த கைலாச முதலியார் வந்ததும் வராததுமாய் ஆறுமுகத்தை நோக்கித் திரும்பினார்.

"ஏண்டா ஆறுமுகம், கொஞ்சம் மெள்ளப் படிச்சா என்னடா? நீ படிக்கிறது எட்டு வீட்டுக்குக் கேக்கணுமா?" என்று கண்டிப்பும் அன்பும் கலந்த குரலில் கடிந்து கொண்டார். ஒரு வேளை அவன் போட்ட சத்தம் பூஜையிலே அமர்ந்திருந்த கைலாச முதலியாரின் காதில் அசரீரி மாதிரி ஒலித்ததோ, என்னவோ?

கைலாச முதலியாரின் கண்டனத்துக்குப் பின் ஆறுமுகம் பாட்டை மனத்துக்குள்ளேயே படிக்கத் தொடங்கிவிட்டான். கைலாச முதலியார் நடையிலிருந்த திருநீற்றுக் கப்பரையிலிருந்து ஒரு விரல் திருநீற்றை எடுத்து நெற்றியிலும் உச்சியிலும் வாயிலும் இட்டுவிட்டு, 'முருகா' என்று இலைமுன் உட்கார்ந்தார். சாப்பிட்டுவிட்டுக் கையைக் கழுவும்போது, "இருளப்பக் கோனாரை எங்கே? இன்னம் வரலியா?" என்று மனைவியை நோக்கிக் கேட்டார்.

"நீங்கதானே எங்கேயோ போயிட்டு வரச் சொன்னீக" என்றாள் தங்கம்.

கைலாச முதலியாருக்கு அப்போதுதான் தமது ஞாபக மறதியைப் பற்றிய உணர்வு வந்தது. "ஆமா ஆமா. மறந்தே போச்சு" என்று தமக்குத்தாமே கூறிக்கொண்டு கூடத்துக்கு வந்தார்.

தன் புருஷனிடம் இதுநாள்வரை இல்லாத ஞாபக மறதியை உணர்ந்த தங்கம்மாள், 'என்ன கவலையோ? எல்லாம் அவுஹளுக்கு வரவர அயர்த்து மறந்து போவுது. கேட்டாலும் சொல்லுவாஹளா?' என்று மனத்துக் குள்ளாகவே சிந்தித்து, அந்தச் சிந்தனையின் பாரத்தை ஒரு நீண்ட பெருமூச்சின் மூலம் இறக்கி வைத்தாள்.

வெற்றிலையைச் சுகமாக மென்று கொண்டு, உள்ளங் கையில் காய்ந்து உலர்ந்துபோன தூள் புகையிலையை வைத்துக் கசக்கியவாறே, கைலாச முதலியார் முன் கட்டிலுள்ள கடைக்கு வந்து பட்டறைப்பலகையில் உட்கார்ந்தார்; புகையிலையை அண்ணாந்து வாயிலிட்டு அதுக்கிக் கொண்டார்.

"என்ன கணக்குப்பிள்ளே தறிகாரங்கள்ளாம் வந்திருந்தாங்களே, கொள்முதல் சரக்கையெல்லாம் சரிபார்த்து, சிட்டையிலே பதிஞ்சாச்சா?" என்று கேட்டார்.

"பதிஞ்சாச்சு, முதலாளி" என்று பவ்வியத்தோடு கூறினார் கடைக்கணக்கப்பிள்ளை.

"சரி, விற்பனைவரி ஆபீசிலேயிருந்து கணக்கு வகை தொகையோட வரச்சொல்லி நோட்டீசு வந்துதே. போக வேண்டாமா?"

"போகணும், முதலாளி."

கைலாசமுதலியார்பெருமூச்சுவிட்டார்.

"விற்பனை குறைஞ்சி போச்சுன்னு உண்மையைச் சொன்னா நம்புறாங்களா? கணக்கைக் கொண்டாடான்னு கழுத்தை அறுக்கிறது. பணக்காரன் ஆயிரமாயிரமாச் சுருட்டி மடக்கிக்கிட்டு, கள்ளக் கணக்குக் காட்டினாலும், அவன் முன்னால் 'ஆமாஞ்சாமி' போட்டுட்டு கையெழுத்து போட்டுப்பிடுதாங்க. ஹூம். இது நல்லவனுக்குக் காலமில்லை!"

அவர்மீண்டும்ஒருமுறைபெருமூச்செறிந்தார்.

"ஆமா முதலாளி, பணமின்னா பிணமும் வாய் திறக்கும்னு நம் பெரியவங்க நல்லாச் சொல்லி வச்சாங்க. பணக்காரன்னா–"

கணக்கப்பிள்ளையின்பேச்சைஇடமறித்துவெட்டித் தொலைத்தது வாசலில் வந்து நின்ற கார் சப்தம், கார்

நின்றதைத் தொடர்ந்து கதவைத் திறந்து மூடும் சப்தமும் கேட்டது.

தாதுலிங்கமுதலியார் உள்ளே வந்தார்.

தாதுலிங்க முதலியாரைக் கண்டதும், கணக்கப் பிள்ளை மரியாதையோடு எழுந்து நின்று கும்பிடு போட்டார். கைலாச முதலியாரும் இருப்பிடத்தை விட்டு இறங்கியவாறே, அவரை வரவேற்றார்.

"வாங்க, வாங்க, ஏது திடீருன்னு என்று கேட்டுவிட்டு, கணக்கப்பிள்ளையிடம் திரும்பி, "என்ன கணக்கப் பிள்ளே, அந்த வெத்திலைப் பெட்டியை எடுத்துக்கிட்டு வாரும்" என்று உத்தரவிட்டார்.

தாதுலிங்கமுதலியார் கூடத்தில்கிடந்தநாற்காலியில் அமர்ந்து கொண்டார்; உள்ளே சென்ற கணக்கப்பிள்ளை வெற்றிலைப்பெட்டியை ஒருபெஞ்சைஇழுத்துப்போட்டு அருகில் வைத்தார்.

தகவல் அறிந்து வெளியே வந்த தங்கம்மாள் வாசல் நடையின் நிலையை ஒட்டி நின்றவாறே, "அண்ணாச்சி வாங்க" என்று வரவேற்றாள்.

"ஆமம்மா" என்று மெல்லிய குரலில் பதிலளித்தார் பெரிய முதலாளி.

"ஏளா, தங்கம் அவுகளுக்குக் காப்பி கொண்டு வந்து கொடு" என்று மனைவியிடம் உத்தரவிட்டார் கைலாச முதலியார்.

"காப்பியா?" பெரிய முதலாளி வாயெல்லாம் பல்லாய்த் தெரிய லேசாகச் சிரித்தார். "காப்பி கீப்பி ஒண்ணும் வேண்டாம். காப்பியே சாப்பிடக் கூடாதுன்னு டாக்டர் உத்தரவு, 'ஸுகரே' சேத்துக்கிடக் கூடாதுன்னு சொல்லியிருக்கார்" என்று சொன்னார். தாதுலிங்க முதலியாரின் 'பெரிய மனுஷத்'துவத்தை அவரது பியூக் காரும், பணமும் மனுஷத்தனத்துக்குக்குரியதான 'டயபெட்டீஸ்'

என்னும் அதிநீரிழிவு வியாதியும் ஊர்ஜிதப்படுத்தியது. எனவேதான் 'ஸுகரே' கூடாது என்ற டாக்டரின் உத்தரவைக் கூறிக் கொள்வதில் அவர் உள்ளூரப் பெருமைப்பட்டுக் கொண்டார்.

வாசல் நடையில் நின்ற தங்கம்மாள் இந்த ரகசியங்களையெல்லாம் அறியாதவளாய், "வாசல் தேடி வந்துட்டிய. தொண்டையை நனைக்காமல் போறதாவது? பால் சுடவச்சிக் கொண்டாறேன்"

என்று கூறியவாறு பதிலை எதிர்பாராமலே உள்ளே சென்றாள்.

"அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்" என்றார் முதலாளி.

"அப்படிச் சொல்லப்படுமா? இது உங்க வீடு; உங்க சொத்து"என்றார்கைலாசமுதலியார்.

தாதுலிங்க முதலியார் சில விநாடிகள் ஒன்றும் பேசாதிருந்தார். பிறகு கைலாச முதலியாரைப் பார்த்து, "உங்கள்ட்டெ ஒருவிசயமாப் பேசணும்னு வந்தேன்" என்று கூறியவாறே கணக்கப் பிள்ளையைப் பார்த்தார்.

குறிப்பறிந்த கைலாச முதலியார் கணக்கப்பிள்ளை நோக்கி, "கணக்கப்புள்ளே, கொஞ்சம் வெளியே போயிட்டு வாரும்" என்றார். கணக்கப்பிள்ளையும் பலகையை விட்டு எழுந்து வெளியே சென்றார்.

தாதுலிங்க முதலியார் தொண்டையை லேசாகக் கனைத்துக் கொண்டார்.

"உங்கள்ட்ட அந்தப் பழைய பாக்கி விசயமா ஒரு வார்த்தைசொல்லிட்டுபோலாம்னுதான் வந்தேன்.மாசமும் தான் என்ன ஆச்சு?"

"அதுக்கென்ன? என் பணம் ஓடியா போவுது?" என்றார் கைலாசமுதலியார்.

"அதுக்குச் சொல்லலே. நாள் ஆக ஆக அசலும் வட்டியும் ஏறிக்கிட்டேதானே போகுது. உங்களுக்கே தெரியாதா? ஒரு வழியா அதை அடைச்சிட்டா ரெண்டு பேருக்கும் நல்லது."

"அடைக்காமலா இருக்கப் போறேன். இப்போ நிலவரம் நீங்க தெரியாததா? கொஞ்சம் போகட்டும்."

"நிலவரத்தைப்பார்த்தா முடியுமா? அலைஎப்பஓயும், தலைஎப்பமுழுகன்னகதைதான். உங்கள்ட்டே கண்டிச்சும் சொல்லக்கூடாது. தாய் பிள்ளையானாலும் வாய் வயிறு வேறெதானே. அப்படியில்லாட்டா, வியாபாரம் நடக்குமா. நீங்க எப்படியும் இந்த மாசக் கடேசிக்குள்ளே ஒரு வழி பண்ணித்தான் ஆகணும்"

"நீங்களே இப்படிச் சொன்னா? எல்லாம் இந்த மாசம் பொறுத்துக்கிடுங்க அப்புறம் நானே வந்து தகவல் சொல்கிறேன்."

"தகவல் என்ன, பணத்தோடே வர்ரதுக்குப் பாருங்க. அப்புறம் என்னைக் குறை சொல்லிப் புண்ணியமில்லே."

இதற்குள் தங்கம்மாள் ஒரு வெள்ளித் தம்ளரில் பசும்பாலைக் கொண்டுவந்து தாதுலிங்க முதலியாரின் எதிரே வைத்தாள்.

"சீனி போடலியே?" என்று கேட்டுக் கொண்டே பாலைக் குடித்து முடித்தார், தாதுலிங்க முதலியார். பிறகு இடத்தைவிட்டுஎழுந்திருந்தவாறே, கைலாசமுதலியாரைப் பார்த்து "அப்ப நான் வரட்டுமா? நான் சொன்னதை மறந்துடாதீங்க" என்று கூறிவிட்டு, தங்கம்மாளை நோக்கி "வரட்டுமாம்மா" என்றார்.

"சரி, அண்ணாச்சி" என்றாள் தங்கம்.

சில விநாடிகளில் வாசலில் நின்ற பியூக் கார் பயங்கரமாக ஹூங்காரமிட்டு உறுமி எச்சரித்து விட்டுப் பறந்து சென்றது!

# 8

பொழுதுசாயத்தொடங்கிவிட்டது.

மேல் வான விட்டத்தில் அந்திக் கருக்கலின் கபிலக் கறை படியத் தொடங்கியது; கூடுகளை நோக்கிச் செல்லும் வெள்ளிய கொக்குக் கூட்டம் ஒழுங்கோடு அணிவகுத்துப் பறந்து சென்று மறைந்தது. ஆறரை மணி கூட்ஸ் வண்டி, ரயில்வே பாலத்தின்மீது கடகடத்து ஓடுகின்ற சப்தம் வாய்க்கால் நீரின் வழியாகப் பரவிச் சிலிர்த்து கும்மென்று எதிரொலித்து அடங்கியது. வாய்க்கால் கரையை ஒட்டியிருந்த மைதானத்தில் 'பாட்மிண்டன்' விளையாடிக் கொண்டிருந்த இளைஞர்கள் அப்போதுதான் ஆட்டத்தை முடித்தார்கள்.

ஆட்டம் முடிந்ததும் சங்கர் கோர்ட்டை விட்டு வெளியே வந்தான்.

"என்ன சங்கர்?இன்னொரு'கேம்' ஆடலாமா?"என்று கேட்டான் ஒரு மாணவன்.

"இனிமேல் கண்ணாம்பூச்சி வேண்டுமானால் ஆடலாம். பந்தாட முடியாது. வாப்பா வெளியே. நேரம் இருட்டிப் போச்சி" என்றான் சங்கர்.

"ஆமாம்பா நேரமாச்சு; போவோம். பரீட்சையிலே பந்தாடுவதுஎப்படின்னுகேள்விகேட்கமாட்டான்.போயி, நேரங் காலத்திலே படிக்க உட்காரணும்" என்றான் மணி.

பரீட்சை என்றதும் அந்த மாணவர்களின் பேச்சு அதன் பால் திரும்பி விட்டது.

பரீட்சையை நினைத்தாலே பயமாத்தானிருக்கு. போன வருசம் ரிசல்ட்டைப் பார்த்தியா? எவ்வளவுபேர் பெயில் ஆயிட்டாங்க!

"இவ்வளவு ஸ்ட்ரிக்ட் வாலுவேஷன் கூடாதப்பா. நாமும் எவ்வளவு பணத்தைச் செலவழிச்சி, மூச்சைத் தொலைச்சிப் படிச்சித் தொலைக்கிறோம். அப்படிப் படிச்சும் இத்தனைப் பேரைப் பெயிலாக்கினா?" என்று அங்கலாய்த்தான் ஒருமாணவன்.

இதற்குள் சங்கரும் அவர்கள் பேச்சில் கலந்துகொள்ள முன்வந்தான்.

"என்னப்பா, விவரம் தெரியாமல் பேசுறியே? இப்பவே வேலையில்லாத் திண்டாட்டம் ஜாஸ்தியா இருக்கு. இன்னும் நிறையப் பேரைப் பாஸ் பண்ணவிட்டா, வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்காதா? எல்லாத்தையும் பாஸ் பண்ணவிட்டுட்டு, அப்புறம் வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகப்படுத்துறதற்கு நம்ம சர்க்காருக்கு என்ன பைத்தியமா பிடிச்சிருக்கு?" என்றான் சங்கர்.

"பாஸ் பண்ணுறது கிடக்கட்டுமப்பா. நாம எவ்வளவு தான் முட்டி மோதிப் படிச்சாலும், சமயத்திலே பரீட்சைப் பேப்பரே 'அவுட்' ஆயிடறது. அப்புறம் திரும்பவும் வையடா பரீட்சைன்னு வாணாளை வாங்குறது. நல்ல பரீட்சை" என்று சலித்துக் கொண்டான் வேறொருவன்.

"பரீட்சை பேப்பர் அவுட்டாவதைச் சொல்ல வந்துட்டியே. பட்ஜெட் ரகசியங்களே சந்தி சிரிக்குது!" என்று குறுக்கிட்டான் சங்கர்.

"நம்ம பாடுகூடப் பரவாயில்லை. என்னமோ மார்ச்-செப்டம்பர்-மார்ச் என்றாவது கரையேறி விடலாம். ஆனால், ஹைஸ்கூலைச் சொல்லு செலக்ஷன்னு ஒண்ணை வச்சி, ஒண்ணுக்குப் பாதியை வடிகட்டி அனுப்புறாங்க. அப்படி அனுப்பியும் பாதிக்கு மேலே பாஸாகலைன்னா, அர்த்தம் என்ன?" என்று கேட்டான் ஒருவன்.

"ஆறாவது பாரத்திலே படிக்க லாய்க்குன்னுதானே அஞ்சாவது பாரத்திலே பாஸ் பண்ணிவிடுதாங்க. அப்புறம்,

நம்மக் கிட்டே ஆறேழு மாசச் சம்பளத்தையும் வசூல் பண்ணி விட்டு, இடைவழித் தட்டிலே வடிகட்டி நிறுத்தினா? எதுக்கு இந்த ஸெலக்ஷன்?" என்று அங்க வாய்த்தான் ஒரு ஹைஸ்கூல் மாணவன்.

"தம்பி,எதற்கென்று நீ ஒருத்தன் கேட்டா போதுமா? நீ கேக்கணும்; உன்னோடொத்த மாணவர்கள் எல்லோரும் கேக்கணும்; உன்னைக் கஷ்டப்பட்டுப் படிக்கவைக்கிறாரே, உன் அப்பா-அவர் கேட்கணும். எல்லோருமாச் சேர்ந்து இந்தச் சர்க்காரைக் கேக்கணும். நாம் ஒன்றுபட்டால் தானப்பா இந்த ஊழலையெல்லாம் ஒழிக்க முடியும்" என்று கூறினான் சங்கர்.

"சரி, சரி. புறப்படுங்க. நேரமாகுது. சங்கரிடம் நீங்க பேச்சுக் கொடுத்தால், அவன் இப்போதைக்குள்ளே ஓய மாட்டான்" என்று குறுக்கிட்டுப் பேசினான் மணி.

"என்ன மணி, என்னை என்ன அதிகப்பிரசங்கின்னா சொல்றே?" என்று கேட்டான் சங்கர்.

"இல்லையப்பா. நீ சின்னப் பிரசங்கிதான். இருந்தாலும் பிரசங்கம் பிரசங்கம்தானே!" என்று கிண்டல் செய்தான் மணி.

சங்கர் அதற்குப் பதிலே கூறாமல், சிரித்துக்கொண்டே கோர்ட்டுக்கு அருகில் நின்ற மோரீஸ் மைனர் காரில் ஏறி உட்கார்ந்தான்; காரை ஸ்டார்ட் பண்ணியவாறே "யாராவது வர்ரீங்களா? என்ன மணி, நீ?" என்று கேட்டான்.

"இல்லை சங்கர், நாங்கள் நடந்தே வருகிறோம். நீ போ" என்று வழியனுப்பினான் மணி.

மோரீஸ் மைனர் அங்கிருந்து அகன்று சென்றது.

மாணவர்கள் அனைவரும் தங்கள் கையிலிருந்த பாட்மிண்டன் மட்டைகளை அலங்காரமாக வீசியாட்டிக் கொண்டு அங்கிருந்து கிளம்பி, ரோட்டுப் பாதைக்கு வந்தனர்.

மேலை வானத்தில் சுக்கில பட்சத்துப் பிறைப் பிள்ளை தத்தித் தவழ்ந்து மேலேறி ஒளிபெற்றுத் துலங்கத் தொடங்கியது; சந்திர கலையின் மங்கிய ஒளி மூட்டத்திலே அம்பாசமுத்திரம் நகரம் தெளிவற்ற சொப்பனம் போல் மங்கலாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. ரோட்டுப் பாதையில் ஆளரவம் அடங்கி மோனசமாதி குடியேறிக் கொண்டிருந்தது.

ஹாயாக ஒரு ஹிந்துஸ்தானி மெட்டைச் சீட்டியடித்துக் கொண்டு வந்த ஒரு மாணவன் திடீரென்று தன் சங்கீதத்தை அந்தரத்திலே விட்டுவிட்டுப் பேசத் தொடங்கினான்.

"என்னப்பா, சங்கரின் பேச்சைப் பார்த்தியா? அவன் எதை எடுத்தாலும் அரசியல் கண் கொண்டுதாம்பா பார்ப்பான்!"

உடனே பக்கத்தில் வந்த மாணவன் ஒருவன், "அவன் எதைப் பத்தின்னாலும் அழகாக விவாதம் செய்கிறான். ஆனா, அவன் என்னமோ கம்யூனிஸ்ட் அனுதாபியாமே கேள்விப் பட்டேன்" என்று ஆரம்பித்தான்.

"கம்யூனிஸ்டோ, சோஷியலிஸ்டோ? அவன் சொல்வதிலும் உண்மை இருக்கத்தானே செய்கிறது! சும்மா பொய்யா சொல்றான்? காலேஜிலே அவன் பேசுகிறான் என்றால், எவ்வளவு கூட்டம் கூடுகிறது? இல்லாட்டி, இந்த வருஷம் கல்லூரித் தமிழ்ச் சங்கத் தேர்தலிலே, அவன் அத்தனை மெஜாரிட்டி ஓட்டு வாங்கி ஜெயித்திருப்பானா? நாமெல்லாம் பள்ளிக்கூடப் புத்தகங்களேபரமபதம் என்று கிடக்கிறோம். அவனுக்கு உலக ஞானம் எவ்வளவு இருக்கிறது, தெரியுமா?" என்று சங்கரின் பெருமையை உற்சாகத்தோடு கூற முயன்றான் வேறொருவன்.

"அவன் மட்டும் என்ன? அவன் தங்கச்சி கமலா இருக்கிறாளே, அவள் கூட அப்படித்தான். நம்ப காலேஜிலே 'இண்டர் காலேஜியேட்' பேச்சுப் போட்டி நடந்ததே.

அன்னிக்கு அவள் என்னமாப் பேசினாள் தெரியுமா? அவளுக்குப் பரிசு கிடைத்ததிலே ஒண்ணும் ஆச்சரிய மில்லை" என்று கூறினான் இன்னொருவன்.

கமலாவைப்பற்றியஇந்தப்புகழுரையைக்கேட்டதும் மணியின் உள்ளம் குதூகலம் அடைந்து விம்மி நிமிர்ந்தது. அவன் முகத்தில் புன்னகையும் பூரிப்பும் அரும்பிமலர்ந்தன. இருளில் எவரும் அவனுடைய உணர்ச்சிப் பரவசத்தைப் கண்டு கொள்ளவில்லை. உடன் வந்த மாணவர்கள் பலரும் கமலாவின் அழகையும் திறமையையும் பற்றிப் பேசிக் கொண்டு வருவதைக் கேட்கக் கேட்க மணியின் உள்ளம் பெருமிதத்தால் இறுமாப்பு அடைந்தது.

அந்தஉணர்ச்சிப்பரவசத்தால்அவனால்அதிகநேரம் ஊமையாக இருக்க முடியவில்லை; திடீரென்று மணி வாய் திறந்தான்: "என்னப்பா, இவ்வளவு அழகும் திறமையும் உள்ள கமலாவைக் கல்யாணம் பண்ணினால்...

மணியின் இந்தப் பேச்சை, கூடவந்த மாணவர்களின் திடீர்ச் சிரிப்பும், கலகலப்பும் இடையில் முறித்துவிட்டன.

"அடடே! மணி! நீ அதற்குள் கல்யாணத்திற்குப் பிளான்போட்டுவிட்டாயா?" என்றுகேலியாகக்கேட்டான் ஒருமாணவன்.

"அட, சரிதாம்பா-இப்படிப்பட்ட பெண்ணைக் கட்டிக் கொள்ள வாய்ப்புக் கிடைத்தால், எவன்தான் வேண்டாம் என்பான்?" என்றது ஒருகுரல்.

"கொடுத்துவெக்கணும்பாரு!" என்றதுமறுகுரல்.

"நீ சொன்னே பாரு. அது நூத்திலே ஒரு வார்த்தை, கொடுத்துதான் வைக்கணும். ஆனா சும்மா உன்னையும் என்னையும் போலுள்ள வெள்ளை வேட்டிப் பண்டாரங் களுக்கு அந்தப் பாக்கியம் கிடைக்குமா? தாதுலிங்க முதலியார் பலேபேர்வழி. அவர் அவளுக்கு எந்த லட்சாதிபதி வீட்டில் சம்பந்தம் பேசுகிறாரோ!" என்று ஆரம்பித்தான் வேறொரு மாணவன்.

"எந்த லட்சாதிபதி வீட்டிலோ?" இந்த வார்த்தையைக் கேட்டதும் மணியின் மனம் இன்னதென இனம் காண முடியாத பயத்தால் ஒரு கணம் சிலிர்த்து நடுங்கியது. அந்தப் பயத்தைப் போக்குவதற்காக அவன் அந்த வார்த்தைக்குப் பதில் வார்த்தை தேட முனைந்தான்.

"கமலாவே யாரையேனும் விரும்பிக் கல்யாணம் செய்து கொள்ள முன்வந்தால்? இவ்வளவெல்லாம் பேசுகிறவள் பணத்துக்கு ஆசைப்பட்டுத் தன் தந்தைக்குப் பணிந்து விடுவாளென்றா சொல்கிறாய்?" என்று தனது மனத்தை உறுத்திய சந்தேகத்தைச் சங்கேதமாக வெளியிட்டான் மணி.

"வாஸ்தவம்தான். பெண்கள் சம்மதிச்சால் விஷயம் முடிந்த மாதிரிதான்!" என்று ஆமோதித்தான் வேறொருவன்.

"என்னப்பா, நீ உலகம் தெரியாமல் பேசறே? இப்போ நடக்கிற கல்யாணங்கள் எல்லாம் பெண்களின் சம்மதத்தைக் கேட்டா நடக்குது? தாதுலிங்க முதலியாரைப் பார்த்து கமலாவை எந்தக் கிணற்றில் தள்ளினாலும் அவள் விழவேண்டியவள் தானே! நம்ம நாட்டுப் பெண்களின் நிலை அதுதானே!" என்று உலக வழக்கை உபதேசித்தான் வேறொருவன்.

இதைக் கேட்டதும் மணியின் உள்ளத்திலிருந்த குதூகலமெல்லாம் குடியோடிப் போய்விட்டது. கையெட்டுத் தூரத்தில் தோன்றிய ஓர் அதிர்ஷ்டம் திடீரென்று காதவழி தூரத்திற்கு ஓடி விட்டதுபோல் ஒரு பிரமை தட்டியது.

"நீ என்ன இப்படிச் சொல்றே? கமலாதான் தன் இஷ்டத்துக்கு மாறாக நடக்கச் சம்மதிப்பாளா? இல்லை, அவள் அண்ணன் சங்கர்தான் அதற்கு இடங்கொடுப்பானா?" என்று கேட்டான் மணி.

"மலைவிழுங்கி மகாதேவனுக்குக் கதவு ஒரு அப்பளம். தாதுலிங்க முதலியாரிடம் எந்தப் பாச்சாவும் பலிக்காது. அவரை நமக்குத் தெரியாதா?" என்றான் முதலில் பேசிய மாணவன்.

"அது சரி. எதுக்கு இந்த வெட்டிப் பேச்சு? நடக்கிற காரியத்தைப் பேசுங்கள்!" என்றான் இன்னொரு மாணவன்.

"அது நடக்கிற காரியம்தான்!" என்று சொல்ல வேண்டுமென்று மணியின் ஆசையுள்ளம் துடித்தது. எனினும் அந்த வார்த்தையை இனந்தெரியாத பயமும் கலக்கமும் பிறக்க விடாமல் தடைசெய்தன. மணி ஒன்றுமே பேசாது அவர்களோடு நடந்து வந்தான். அதற்குள் லோகநாயகி அம்மன் சந்நிதி வந்துவிட்டதால் மணி மற்ற மாணவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வீட்டை நோக்கித் திரும்பினான்.

தன்னந் தனியனாகவரும் போதுதான் அவனது மனத்தை எண்ணற்ற கேள்விகளும் சந்தேகங்களும் வியூகமிட்டு வளைத்தன. அந்த மாணவர்கள் கமலா வைப்பற்றி ஏன் தான் பேசினார்களோ என்றிருந்தது அவனுக்கு. அதைவிட, தான் ஏன் இந்தக் கலியாணப் பேச்சைஎடுத்தோம்என்று நைந்தது அவன் உள்ளம். அவன் எவ்வளவுதான் சிந்தனையைத் திசை மாற்றி, அதை மறக்க முயன்றாலும், "எந்த லட்சாதிபதிவீட்டிலோ?" என்ற அந்த வார்த்தைகள் அவன் மனதில் வல்லீட்டிபோல் பாய்ந்து குத்தி, இல்லாத சந்தேகங்களையெல்லாம் எழுப்பிக் கொண்டிருந்தன.

## 9

இருட்டிஎட்டுநாழிகைநேரம்இருக்கலாம்

ஊருக்கு மேல்கோடியிலுள்ள தமது குடிசைக்கு வெளியேகிடந்தகயிற்றுக்கட்டிலின்மீது அமர்ந்து, கட்டில் காலின்மீது வெற்றிலை உரலை வைத்து லொட்டு லொட்டென்று இடித்துக் கொண்டிருந்தார் இருளப்பக் கோனார்.

குடிசையின் வெளிச் சுவரிலிருந்த மாடக் குழிக்குள் ஒரு சிறிய தகரக்குப்பி மண்ணெண்ணெய் விளக்கு மினுக் மினுக்கென்று எரிந்து புகை கக்கிக் கொண்டிருந்தது; பொருமிப் பொருமி வீசும் மேல்காற்று தன் ஜீவனைப் பறித்துக் கொண்டு சென்று விடாதவாறு, அந்த விளக்கின் வற்றி மெலிந்த தீச்சுடர் கூனிக் குறுகி வளைந்து கொடுத்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருந்தது. பனையோலை வேய்ந்த அந்தக் கூரைக் குடிசையின் உச்சியில் வழிதவறி வந்தஒருகாட்டுக்கூகைசிறிதுநேரம்அமர்ந்து,பயங்கரமாக அபயக் குரலெழுப்பிக் குழறிவிட்டு, படபடத்துப் பறந்து சென்று இருளில் மறைந்தது. குடிசைக்கு வெளிப்புறத்தில் கட்டியிருந்த கொடியில் அழுக்கும் கந்தலுமான சில துணிகளும், ஒரு சாட்டைக் கம்பும் தொங்கிக் கொண் டிருந்தன. குடிசையின் மூலையில் ஒரு பெரிய கழுநீர்ப் பானையும் ஆட்டுரலும், உடைந்தும் உபயோகமற்றும் போன பண்ட பாத்திரங்களும் கிடந்தன. மாட்டுச் சாணத்தின் நாற்றமும், கொசுக்களின் இரைச்சலும் அந்த இடமெங்கும் வியாபித்து நின்றன.

முழங்காலில்சுரீர்என்றுகடித்தகொசுவைக்கையால் அறைந்து கொண்டே, இருளப்பக் கோனார் குடிசையை ஒட்டியிருந்த மாட்டுத் தொழுவத்தை எட்டிப் பார்த்தார். தொழுவத்தில்இருளப்பக்கோனாரின்மனைவிமாரியம்மா வைக்கோல்படைப்பிலிருந்துவைக்கோல்பிடுங்கி,மாட்டுக் கொட்டிலில் போட்டுக் கொண்டிருந்தாள். தொழுவத்தில் கட்டியிருந்த மாடுகள் கடுக் கடுக்கென்று வைக்கோலைக் கடித்து அசைபோடும் மெல்லிய சப்தம்கூட, அந்த அமைதி நிறைந்தஇருள்வேளையில்தெளிவாகக்கேட்டது.

வைக்கோலை அள்ளிப் போட்டுவிட்டு, முற்றத் திலிருந்த தண்ணீர்த் தொட்டியில் முகங் கால் கழுவிவிட்டு, வந்துசேர்ந்தாள்மாரி.

மாரியம்மாவுக்கு வயது நாற்பத்தைந்து இருக்கலாம். எனினும் அவள் வயதுக்குமீறிய வயோதிகத் தன்மையோடு

தோற்றமளித்தாள். அள்ளி முடிந்திருந்த தலைமயிரில் பாதிக்கு மேல் நரைதட்டி வெளுத்துப் போயிருந்தது. நாரத்தங்காய் மாதிரி சுருக்கம் விழுந்து சொரசொரத்துப் போயிருந்த அவளது முகத்தின் விகாரத்தோற்றம், பாம்படமில்லாது தொளதொளத்துத் தொங்கிக் கொண்டிருந்தஓட்டைக்காதுகளால்மேலும்விகாரமாகத் தோற்றமளித்தது. அவள் உடுத்தியிருந்த சுங்கடிப் புடவை அவளுடைய மெலிந்து வாடிய உடம்பின்மீது சுமத்திய பெரும்பாரம்போல்தோற்றியது.கழுத்தில்கிடந்தகறுப்புக் கயிற்றில் சின்னஞ்சிறு பிள்ளையார் தாலி மட்டும் மறைவாகக் கிடந்தது. அந்தத் தாலியைத் தவிர, அவள் உடம்பில் அரை மஞ்சாடி தங்கமோ வெள்ளியோ கூட இல்லை.

"ஏளா மாரி, மாட்டுக்குப் பருத்திக்கொட்டை ஆட்டி வச்சியா?"என்றுசோர்ந்துபோய்நிர்விசாரமாகக்கேட்டார் கோனார்.

"வச்சேனே" என்று சொல்லிக்கொண்டே, கயிற்றுக் கட்டிலின் அருகில் உட்கார வந்தாள் மாரி.

அதற்குள் இருளப்பக் கோனார், "ஏளா, வீட்டுக் குள்ளே மாடக்குழியிலே ஒரு போயிலைக் காம்பு போட்டு வச்ச ஞாபகம். கிடந்தா எடுத்துக்கிட்டு வா" என்று உத்தர விட்டார்.

"சாப்பிட வேண்டாமா?" என்று கரிசனையோடு கேட்டாள்மாரி.

"இங்கே மனுசனுக்கு இருக்கிற கவலையிலே சாப்பாடு ஒண்ணுதான் குறைச்சல். சரி, அது கிடக்கு. கொஞ்ச நேரம் ஆகட்டும். நீ போயிலையை எடுத்துக்கிட்டு வா."

மாரி எழுந்து குடிசைக்குள் சென்றாள்.

இருளப்பக் கோனார் வெற்றிலை உரலை இடிக்கத் தொடங்கினார்.

'கவலை, கவலை. ஆயுசுக் காலம் பூராவும் கவலை. இந்தக் கவலைக்கு என்னிக்கித்தான் விடிவுகாலம் வரப் போவுதோ, இந்தக் கட்டை பூமியிலே சாயிற அன்னிக்கித்தானா?'

இருளப்பக் கோனாரின் சிந்தனைக்குப் பின்னணி இசைப்பதுபோல, உரலில் குழவி இடிபடும் சப்தம் தாள லயத்தோடு ஒலித்துக்கொண்டிருந்தது.

'இன்னிக்கி நேத்து ஏற்பட்ட கவலையா?'

இருளப்பக் கோனாரின் மனம் எத்தனை எத்தனையோ ஆண்டுகளையும்பிரதேசங்களையும்தாண்டி, பின்னால் சென்றது...

அப்போது அவர் சிவகிரியில் இருந்தார். சிவகிரி ஒரு ஜமீன் கிராமம். அவர் பிறந்தது. வளர்ந்தது, கல்யாணம் செய்தது, பிள்ளை பெற்றது எல்லாம் அந்த ஊரில்தான். மூன்றுதலைமுறைகளாகவிவசாயம்செய்துவந்தசாதாரண விவசாயக் குடும்பத்தில்தான் இருளப்பக் கோனார் பிறந்தார். சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் அவர் சிவகிரி ஜமீன் நிலத்தில் உழுது சாகுபடி செய்துதான் பிழைத்து வந்தார். இந்தியாவில் சாதாரண விவசாயிகள் பாடே திண்டாட்டம். அதிலும், கவனிப்பற்ற காட்டோரத்தில் அமைந்துள்ள ஒரு சிறு ஜமீனில் சிறு ஜமீனைக் கொண்டு பெருவாழ்வு வாழ்ந்து வரும் ஜமீன்தாரின் கெடுபிடி தர்பாரில், பிழைப்பு நடத்த முனைந்த இருளப்பக் கோனாரின் வாழ்க்கை சொல்லும் தரமன்று. நிலப்பிரபுத்துவத்தின் சகலவிதமான கொடுமைகளுக்கும் அவர் பலியானார். நாளுக்கு நாள் கடன், அரைப் பட்டினி, குறைப் பட்டினி, ஜமீன் வசூல் கெடுபிடிகள், ஜப்தி, அடி, உதை எல்லாம் அவருக்குப் பழகிப் பழகி மரத்துப் போன விஷயங்களாகி விட்டன. வருஷம்முழுதும்எலும்புமுறியப்பாடுபட்டும்,தமக்கும்தம் மனைவிக்கும் வேண்டிய அவசியத் தேவைகளைக்கூட

அவரால்பூர்த்திசெய்யமுடியவில்லை.பாம்பு தன் வாலைத் தானே விழுங்கிய கதையைப் போல், அவர் எப்படியோ வாழ்க்கைநடத்திவந்தார்.எனவே துடிப்பும் துறுதுறுப்பும் நிறைந்த அந்த வாலிப வயதில்கூட, அவரால் தம் ஆசை மனைவி விரும்பிக் கேட்கும் பொருள்களையோ, அவளது அபிலாஷைகளையோ பூர்த்தி செய்து வைக்க முடியாத அளவுக்கு, அவர் வறுமை வாய்ப்பட்டிருந்தார். இப்படிப் பட்டவாழ்க்கையின் மத்தியிலேதான் சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் வீரையா அவரது செல்வப் புதல்வனாகப் பிறந்தான். பெற்றோர்களோடு பசியையும் பட்டினியையும் பகிர்ந்து உண்டு, அந்தப் பிள்ளை தப்பிப் பிழைத்து சிரஞ்சீவியாக உயிர் வாழ்ந்து வந்தான். வருஷத்தில் முக்கால்வாசி நாட்கள் வயலில் வேலை செய்வது, மீதி நாட்களில் ஜமீனுக்குச் சொந்தமான மலைக்காடுகளுக்குச் சென்று, விறகுவெட்டிக் கொணர்ந்து பக்கத்து ஊர்களில் விற்பது, பாரவண்டிகளை வாடகைக்கு ஓட்டிச் செல்வது முதலிய பற்பல வேலைகளின் மூலம், இருளப்பக் கோனார் மூன்று ஜீவன்களின் வயிற்றைக் கழுவும்கடமையைஒருவாறுநிறைவேற்றிவந்தார்.

வீரையாவுக்குப் பதின்மூன்று பதினான்கு வயது இருக்கும். வாழ்க்கையே சோதனையாகவிருந்த இருளப்பக் கோனாருக்கு அந்த வருஷம் பெருஞ் சோதனையாகி விட்டது. கிட்டத்தட்ட இரண்டு வருஷ காலமாகவே கிராமத்தில் நல்லமழையில்லை; அதிலும் அந்தவருஷத்தில் மழையே இல்லை. வானம் பொய்த்தால் வளமை ஏது? விளைச்சலில்லை. வெள்ளாமை இல்லை. விதைத்துக் கதிர் தோன்றியிருந்த நிலங்களெல்லாம் வெந்து கருகிச் சுடுகாடாய்க் கிடந்தன; அந்தச் சுடுகாட்டில் பேய்த் தேர் என்னும்கானல்தான் களித்துக்கூத்தாடிக்கொண்டிருந்தது. தாகம் தாங்க முடியாத நிலப் பரப்புக்கள், வாய்வெடித்து அண்ணாந்து பிளவுற்றுக் கிடந்தன. ஆடுமாடுகளெல்லாம் குடி தண்ணீரோ, குளிப்போ இல்லாமல் வங்கும் சிரங்கும் சொறியும் பற்றி, தோல் விலைக்குக்கூடப் பெறாத அளவில்

வற்றி மெலிந்து வாடத் தொடங்கின. நிலத்தை நம்பிப் பிழைப்பு நடத்திவந்த விவசாயிகளின் நிலைமை படுமோசமாயிற்று. பஞ்சம் தலை விரித்தது. கிராமம் கிராமமாக அடுப்புப் புகையே காணாமல் வானம் வெளிறிட்டு நிர்மலமாய்க் கிடந்தது. வயிற்றுக்கு உணவற்ற விவசாயப் பெருங்குடி மக்கள் பன்றிகளைப் போல் நிலத்தைத் தோண்டி, அங்குக் கிடைத்த வறண்ட வேர் களையும் கிழங்குகளையும் தின்று வயிற்றைக் கழுவி னார்கள்; கற்றாழைக் கிழங்கைத் தின்றார்கள்; இனம்பேர் தெரியாத காய்கனி புல் பூண்டுகளைத் தின்றார்கள்; கழிச்சலெடுத்துச் செத்தார்கள். பலர் பிழைப்புக்கு வழி தேடி அயலூர் சென்றார்கள். 'மதுரைப் பக்கத்தில் பாலம் கட்டுகிறார்களாம்,' 'திருநெல்வேலியில் ரோடு போடு கிறார்களாம்' என்றெல்லாம் மக்கள் இன்று பேசுவார்கள்; நாளைப் பயணம் கட்டி விடுவார்கள். ஏதோ ஒரு பயங்கர ராக்ஷஸன் அண்டம் குலுங்க வந்து அந்தக் கிராமத்தையே சூறையாடி, நாசமாக்கிவிட்டுச் சென்றது போல், சிவகிரியின் விவசாய வட்டாரங்கள் அருளிழந்து, அலங் கோலமான, அவலமான நிலையில் இருந்தன. இருளப்பக் கோனாரின் குடும்பமும் இந்த நிலைமைக்கு விதிவிலக்கல்ல.

இந்த அழகில் ஜமீனின் வரி வசூல் கெடுபிடி வேறு. 'வெள்ளாமை இல்லை; எனவே இந்த வருஷம் வரிவஜா வேண்டும்' என்று குடியானவர்கள் ஜமீன்தாரிடம் முறை யிட்டுகொண்டார்கள்; சர்க்காருக்கு மனுச் செய்துகொண் டார்கள். பிழைப்புக்கு வழி காட்டும் முறையில் உள்ளூர்க் கண்மாயை ரிப்பேர் செய்யுமாறு, தூது சென்று தெரிவித் தார்கள். குடியானவர்கள் கேட்பதையெல்லாம் நிறைவேற்றி வைத்தால், அப்புறம் சர்க்காரின் அந்தஸ்தின் கதி என்ன ஆவது? எனவே சர்க்காரும் மௌனம் சாதித்துவிட்டது. விவசாயிகள் கொடுமைக்குப் பயந்து இரவோடு இரவாய்க் குடி பெயர்ந்தார்கள்; பண்ட பாத்திரங்களை, ஆடு மாடுகளை, கோழி, குஞ்சுகளைப் பறிகொடுத்தார்கள். ஆண்டவனை நோக்கி அழுது தீர்ப்பதைத் தவிர வேறு விமோசன மார்க்கம் தெரியாமல் வாடிவதங்கினார்கள்.

இருளப்பக் கோனாரும், அவரது மனைவியும் பிள்ளையும் இந்தச் சூழ்நிலையில் ஆடிக்காற்றுச் சுழியில் அகப்பட்ட பஞ்சுபோல், வாழ்வின் திக்குத் திசாந்திரம் தெரியாமல் திண்டாடினார்கள். ஜமீனிடம் பறிகொடுத்த பண்டபாத்திரங்கள் ஆடு மாடுகளைத் தவிர, தமக்குச் சொந்தமாயிருந்த சிறு புஞ்சை நிலத்தையும் மனைக் கட்டையும் வந்தவிலைக்குத் தள்ளிவிட்டுவிட்டு, வயிற்றைக் கழுவி வந்தார் இருளப்பக் கோனார். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோல் தவித்துக் கொண்டிருந்த இந்த வேளையில்தான் மேற்கு மலைத் தேயிலைத் தோட்டத் திலிருந்து ஒரு கங்காணி கூலிக்கு ஆள் பிடிக்க வந்தான். இருளப்பக் கோனாருக்குத் தேயிலைத் தோட்டத்துக்கு வேலை பார்க்கச் சென்றவர்களின் கதியைப்பற்றி ஓரளவு தெரியும். மருதுத் தேவரின் மகன் மாடசாமித் தேவர் நாலு வருஷங்களுக்கு முன்னால் தேயிலைத் தோட்டத்துக்கு வேலைக்குச் சென்று, அங்கு பட்ட அடி உதைகளால் வர்மத்தில் விழுந்து, பிறந்தமண்ணில் வந்து மண்டையைப் போட்டதும் அவருக்குத்தெரியும். அமாவாசிக்குடும்பனின் மனைவி சுடலி, மலைக்குச் சென்று தேயிலை கிள்ளிப் பிழைத்ததும், அங்கிருந்து உடம்பெல்லாம் அழுகி வடியும் மேகத் தொழும்புப் புண்கள் பெற்று, வேலையை இழந்து திரும்பி வந்ததும், வாசுதேவநல்லூர் ரோட்டுப் பாதையில் அவள் பிச்சையெடுத்துப் பிழைத்ததும், அழுகி நாற்றமெடுத்துச் செத்ததும் அவருக்கு மறந்து விடவில்லை. இன்னும் இவர்களைப்போல் தேயிலைக் காட்டுக்குச் சென்று மலைக் காய்ச்சல் பெற்று 'ஆஸ்பத்திரி மருந்து' என்னும் பச்சைத் தண்ணீரைக் குடித்து, பரலோகம் சென்ற அப்பாவிகளையும் அவர் அறிவார். இருந்தும் அந்தக் கங்காணியின் வரவு ஏதோ வரங்கொடுக்க வந்த தெய்வப் பிரசன்னம் மாதிரிதான் இருளப்பக் கோனாருக்குத் தோன்றியது.

கங்காணி வந்து சேர்ந்த இரண்டே நாட்களில் இருளப்பக் கோனார் பிறந்த மண்ணின்மீது தமக்கிருந்த

பாசத்தையும் பிடிப்பையும் உதறித் தள்ளிவிட்டு குடும்பத்தோடு தேயிலைத் தோட்டத்துக்குப் புறப்பட்டுச் சென்றார். மேற்குமலைத் தேயிலைத் தோட்டம் வெள்ளை முதலாளிகளும், உள்நாட்டு முதலாளிகளும் ஒன்றுசேர்ந்து கொள்ளையடிக்கும் ஒரு வேட்டைக்காடு. அந்தத் தோட்டக் கம்பெனியில்தான் தாதுலிங்க முதலியாருக்கும் ஒரு பங்கு இருந்தது; அத்துடன் அவருக்கெனத் தனிப்பட, சிறியதொரு தேயிலைப் பிரதேசமும் இருந்தது. சிவகிரியிலே ஜமீன்தார் அட்டகாசம் என்றால், மேற்கு மலையிலே முதலாளிகளின் அட்டகாசம். இருளப்பக் கோனாரும், அவரது மனைவி மாரியும், மகன் வீரையாவும் தாதுலிங்க முதலியாரின் தோட்டத்தில்தான் வேலைசெய்துவந்தார்கள். வேலைக்குப் போன ஒரு மாசத்துக்குள்ளேயே மாரிக்குமலைக்காய்ச்சல் வந்து விட்டது; அதில் அவள் தப்பிப் பிழைத்தது, இருளப்பக் கோனார் சொல்வது போல், 'ஏதோ தெய்வ கடாட்சம்' போலத்தான். ஆள் மட்டும் எலும்பும் தோலுமாக ஆகிவிட்டாள். முதலியாரின் தோட்டத்தில் சுமார் ஐநூறு பேர் வேலை பார்த்தார்கள். அந்தத் தோட்டத்தில் வேலை செய்யும் முதலியாரின் கையாட்களான ரைட்டர்களும்கங்காணிகளும் எமகிங்கரர்களாய்த் தானிருந்தார்கள். எந்தத் தொழிலாளியாவது எதையாவது வாய்திறந்துகேட்டுவிட்டால், உடனே அவனைப்பிடித்துக் கட்டி, உயிரை வைத்து உடலை உரித்துவிடுவார்கள். இந்தக் கொடுமைகளைத் தாதுலிங்க முதலியாரே கண்கூடாகப் பார்த்திருக்கிறார். என்றாலும், அவர் இதிலெல்லாம் தலையிட்டுத் தமது வரும்படியையோ கொள்ளையையோ, அந்தஸ்தையோ குறைத்துக் கொள்வதில்லை. இப்படிப் பட்ட நரக வாழ்க்கையின் மத்தியிலேதான் இருளப்பக் கோனார் தம்கும்பிக்கொதிப்பை ஆற்றுவதற்காக, தம்மனக் கொதிப்பை யெல்லாம் உள்ளடக்கி வந்தார். ஆனால், இருளப்பக்கோனாருக்கிருந்த இந்த மனப்பக்குவம் அவரது மகனான வீரையாவுக்கு இருக்கவில்லை. ஒருநாள் அவன் கங்காணியின் கொடுமையைத்தாங்கமாட்டாமல், அவனை

நோக்கி ஏதோ வாய்த்துடுக்காகக் கேட்டு விட்டான். அவ்வளவுதான். சிறுவன் என்றும் பாராமல், அந்தக் கங்காணி அவனை மரத்தோடு மரமாய்க் கட்டிவைத்து, சாட்டையைக் கொண்டு ரத்த விளாறாக விளாசித் தள்ளி விட்டான். இந்தக் கண்ணறாவிக் காட்சியைக் காண முடியாமல், தடுக்க முடியாமல், இருளப்பக் கோனாரும் மாரியும் தொண்டை வறள, அழுது கூச்சலிட்டதுதான் மிச்சம். இருளப்பக் கோனாருக்கு இருந்த மனப் பக்குவம் வீரையாவுக்கு இல்லா விட்டாலும், அவரிடமில்லாத ரோஷமும் மானமும் வீரையாவிடம் நிறைய இருந்தன. எனவே அவன் தன் பெற்றோரின் கண்களிலேயே விழிப்ப தற்குக் கூசியவனாய், அன்றிரவே சொல்லாமல் கொள்ளா மல் ஓடிப்போய் விட்டான். 'எங்கே போனான், என்ன ஆனான்', 'இருக்கிறானா, போய் விட்டானா' என்பதே இருளப்பக் கோனாருக்கும் மாரிக்கும் தெரியவில்லை...

மகனைஇழந்தகவலையோடுஇருளப்பக்கோனாரும் மாரியும் தேயிலைத் தோட்டத்தில் வேலை பார்த்து வந்தார்கள். இருளப்பக் கோனார் மலைமேலுள்ள தாதுலிங்க முதலியாரின் பங்களாவில் வேலைபார்த்து வந்தார். அப்போதுதான் ஒரு நாள் கைலாச முதலியாரும் தாதுலிங்க முதலியாரும் அங்கு வந்தார்கள். கைலாச முதலியாருக்குத் தமது செல்வாக்கையும் செல்வத்தையும் அறிமுகப்படுத்தி வைப்பதற்காக, தாதுலிங்க முதலியார் அவரை அழைத்து வந்திருந்தார். அந்தச் சமயத்தில்தான் இருளப்பக் கோனார் கைலாச முதலியாரின் நல்ல குணத்தையும் இரக்க சிந்தையையும் உணர்ந்து, அவரிடம் தமது கதையையெல்லாம் சொன்னார். இருளப்பக் கோனாரின் பரிதாபகரமான கதையைக் கேட்டுக் கண் கலங்கிய கைலாச முதலியார், அவருக்குத் தாம் ஆதர வளிப்பதாக வாக்குறுதியளித்து, அம்பாசமுத்திரத்துக்கு வந்து சேருமாறு கூறினார்.

மறுமாசமே இருளப்பக் கோனாரும் மாரியும் அம்பாசமுத்திரம் வந்து சேர்ந்தார்கள். கைலாச முதலியார்

இருளப்பக் கோனாருக்கு ஒரு வண்டிமாடு வைத்துக் கொடுத்துப் பிழைப்புக்கு வழி பண்ணிக் கொடுத்தார்; அத்துடன் ஊர்ப்புறத்திலிருந்த காலி மனையை விலைக்கு வாங்கி, குடியிருக்க ஒரு குடிசையும் போட்டுக் கொடுத்தார்; இருளப்பக் கோனாரும் விசுவாசத்தோடு கைலாச முதலியாரிடம் நடந்து வந்தார்; கைலாச முதலியாரின் வயல்களை மேற்பார்த்துக் கொண்டார்; வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டார்; அவ்வப்போது பாரம் ஏற்றிச் சென்று, அதில் கிடைக்கும் வருவாயின் மூலம் தமது வீட்டுப்பாட்டைக் கழித்து வந்தார். மாரியம்மாவும் வாரா வாரம் சேகரித்து வைத்திருக்கும் சாணத்தை யெல்லாம் தட்டி எடுத்து எருவாக்கி, வீதிகளில் சென்று விற்று வருவாள்; இருந்தாலும், அவளுக்கு மகனைப் பிரிந்த ஏக்கம் மட்டும் பத்து ஆண்டுகள் ஆகியும் இன்னும் குறையவில்லை. கைலாச முதலியாரின் மகன் மணியைப் பார்க்கும்போதெல்லாம், "என் புள்ளை உசிரோடு தப்பிப் பிழைச்சிக் கிடந்தா, தம்பி உசரத்துக்கு வளர்ந்திருப்பான்" என்று பைத்தியம் போல் தனக்குத் தானே சொல்லிக்கொள்வாள். இதைக் கேட்கும் கைலாச முதலி யாரும், "மாரி, கவலைப்படாதே. உன் பிள்ளையை எப்படி யானாலும் கண்டு பிடித்து உன்னிடம் கொண்டு வந்து சேர்த்துவிடுகிறேன்" என்று ஆறுதல்கூறத்தவறுவதில்லை.

உரலிலுள்ள வெற்றிலை பதமிழந்து கூழாவதையும் உணராமல் தம்மை மறந்தவராக இடித்துக் கொண்டேயிருந்தார் இருளப்பக் கோனார். உதடுகள் துடிதுடிக்க, பழைய நினைவுகளில் தோய்ந்து மீண்ட உணர்ச்சிப் பரவசத்தோடு, "வீரையா, வீரையா" என்று அவரது வாய் மட்டும் கரகரத்து முனகிக் கொண்டது.

உள்ளே சென்ற மாரிமட்டும் புகையிலைக் காம்பைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து சேர்ந்தாள்.

"இந்தாங்க, போயிலை" என்று சொல்லிக் கொண்டே அவரிடம் புகையிலையை நீட்டினாள்.

தன் நினைவு மீண்ட கோனார் 'ம்' என்று முனகிவிட்டு புகையிலையை வாங்கிக் கடைவாயில் ஒதுக்கினார். மாரி கட்டிலின் அருகில் தரையில் உட்கார்ந்தாள்.

"உங்களத்தானே, என்னமோ நினைப்பிலே இருக்கியளே! இருந்திருந்து நமக்கு இல்லாத கவலை புதுசா என்ன வந்திட்டுது? நம்ம வீரையாதான் பத்து வருசமா, என்னைக் கண்ணைக் கசக்கிக்கிட்டு இருக்கும்படியா, பண்ணிட்டுப் போயிட்டானே! எங்கே இருக்கானோ, என்னமா மருகுதானோ?" என்று கம்மிய குரலில் பிரலாபித்தாள் மாரி.

"ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணுண்ணு ஒருத்தன் இருந்தான். அவனையும் உசுரோடு உடலோடே தூக்கி வாரிவிட்ட மாதிரி ஆச்சி" என்று முனகினார் கோனார்.

"தீர்க்காயிசா பிழைச்சிக் கிடந்தா, நாம அவனைப் பார்க்காமலா இருக்கப் போறாம்? நம்ம முதலாளி தயவிருந்தா எப்படியும் அவனைக் கண்டு பிடிச்சிறலாம்."

"நமக்கு நம்ம கவலை; அவுகளுக்கு அவுக கவலை" என்று பெருமூச்செறிந்தார் இருளப்பக் கோனார்.

"அதென்ன? அவுகளுக்கு என்ன கவலை வந்து விட்டது?"

"அதையேன் கேக்கிறே? கடவுள் நல்லவங்களைத்தான் சோதிப்பாரு. நம்ம முதலாளிக்கு முன்னே மாதிரி இப்ப யாபாரம் ஓட்டமில்லை. கடன் வேறே!"

"அப்படியா?"

"ஆமா, என்னமோ ஜவுளியெல்லாம் விக்காமல் தங்கிப் போச்சாம். அக்கரைச் சீமைக்கும் அனுப்ப முடியலியாம். என்னமோ சுயராச்சியம் வந்துட்டுதுன்னு கொட்டி முழக்கினாங்க; மனுசனுக்கு தான் சுகத்தை காணம்!"

"இப்பஎப்படிஇருக்குதாம்,"

"எப்படி இருக்கும், முதலாளி முகத்திலே பழைய சந்தோசம் இல்லெ வீட்டுச் செலவை யெல்லாம்கூட, குறைச்சிக்கிட்டு வாராக. அருணாவரத்துப் பக்கத்திலே உள்ள வயல்கூட இப்ப அடமானத்திலேதான் இருக்கு. அம்மாவுக்குக் கூடத் தெரியாது. முதலாளியும் நானுமாய்ப் போயித்தான் முடிச்சிக்கிட்டு வந்தோம்."

"இருந்திருந்து இவுகளுக்கா இப்படி வரணும்?" என்று அங்கலாய்த்தாள் மாரி.

"முதலாளி மாசம் தவறினாலும் திருச்செந்தூருக்குப் போயி, சாமி தரிசனம் பண்ணத் தவற மாட்டாக. இப்ப ரெண்டு மூணு மாசமா, அவுகளுக்கு அதுக்குங்கூடத் தொலையலெ. அவுஹ தெய்வ பக்திக்குத் தெய்வம் இப்படிச் சோதிக்கப் பிடாது."

"அவுக கோயிலுக்குக்கூட, அவுகதானே தர்மகர்த்தா. இல்லே?"

"ஆமாமா, கோயில்பணத்தைச் சுரண்டித்தின்ன அந்த மைனருக்கு ஒரு குறைச்சல் இல்லெ. நம்ம முதலாளி அம்ம னுக்குச் செஞ்சிருக்கிற சேவைக்கு அவள் இப்படி வஞ்சகம் நினைக்கக் கூடாது. அவுஹ மேற்பார்வையிலே, ஊரிலே அட்டியான சொல் உண்டா? அம்மனுக்கே தெரியும்!"

மாரி சிறிது நேரம் பதில் பேசாது இருந்தாள். பிறகு பொங்கி வந்த ஏக்கத்தைப் பெருமூச்சாகப் பிதுக்கித் தள்ளி விட்டு, வாய் திறந்தாள்.

"கடவுளுக்குக் கண்ணிருந்தா, இந்த மாதிரிப் புண்ணியவானுக்குக் கஷ்ட காலம் வருமா? நாம் யாருக்கு என்ன குத்தம் செய்தோம்?" யாரு குடியைக் கெடுத்தோம்? நம்மபுள்ளையை ஏன் இப்படி உசுரோடே பிரிச்சு எடுத்துக் கிட்டுப் போவணும்? சாமிகூட வர வரப் பணக்காரன் சாமியாப் போயிட்டுது. அதுங்கூட, இருக்கிறவனுக்கு ஒரு நியாயம், இல்லாதவனுக்கு ஒண்ணுன்னு தட்டுக்கெட்டுப் போச்சே!"

"இந்தா பாரு, மாரி; தெய்வத்தைப் பழிக்காதே" என்று அமைதியோடு உபதேசம் செய்தார் கோனார்.

அந்த உபதேசத்தை மாரி காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. அவளிடமிருந்து எவ்விதப் பதிலும் வரவில்லை. அதற்குப் பதிலாக, அவள் விம்மி விம்மிப் பொருமுவதையும் அந்தப் பொருமலால் அவளது மெலிந்த உடல் குலுங்கிக் குமைவதையும்தான் இருளப்பக் கோனார் இருளினூடே கண்டுணர்ந்தார். உடனே அவர் தமது நடுங்கும் கரத்தால், அவளது தலையைப் பரிவோடு தடவிக் கொடுத்தவாறு, "ஏன் அழுவுதே? அழுது என்ன ஆகப் போவுது? எந்திரி. எந்திரிச்சு எனக்குச் சோத்தை எடுத்து வய்யி; வாய் கொப்பளிக்கக் கொஞ்சம் தண்ணி கொண்டா" என்று கூறி, அவள் சிந்தனையைத் திசை மாற்றித் திருப்பிவிட முனைந்தார்.

மாரியம்மாள் ஒன்றும் பேசாமல் இடத்தைவிட்டு எழுந்திருந்து, முன்தானையால் மூக்கையும் கண்ணையும் துடைத்துக் கொண்டு குடிசைக்குள் சென்றாள்.

அவர்களது சோகப் பெருமூச்சில் பங்கு பெறுவது போல், அந்த இருளின் அந்தகாரத்தில் எங்கோ ஒரு அக்காக் குருவி ஏங்கி ஏங்கி இடைவிடாது கூவிக் கொண்டிருந்தது.

## 10

"ஏன் இந்தப் பொருளாதார மந்தம்?"

கைலாச முதலியாரின் மனத்தை இந்தக் கேள்வி புழுப் போல் குடைந்து அரித்துத் தின்று கொண்டிருந்தது. நித்த நித்தம் இந்தக் கேள்வி பூதாகாரமாக விம்மி வளர்ந்து விசுவரூபம் பெற்று, அவரது இதயத்தை ஒரு பேய்க் கனவைப்போல் அழுத்திக் கொண்டிருந்தது. அந்தக் கேள்வியின் பாரச் சுமையை இறக்கி வைக்கக் கூடிய

தெளிவான விடையை அவரால் கண்டு கொள்ள இயல வில்லை.பொருளாதார நெருக்கடியின் மர்மத்தை விளக்கிக் கொள்வதற்காக, அவர் பத்திரிகைகளின் உதவியை நாடினார். ஆனால் அவர் மதிப்புக் கொடுத்து வாங்கிப் படித்த அந்தத் தேசியப் பத்திரிகைகளோ உண்மையைத் திரித்துக் கூறி அவரை மேன்மேலும் குழப்பத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தன.

'மக்களிடம்தெய்வபக்திகுன்றிப்போய்விட்டதுதான் துயரங்களுக்கெல்லாம்காரணம்'என்றுஉபதேசம்செய்தது ஒரு பத்திரிகை. ஆனால் அவரறிந்த வரையிலும் அவரறிந்த மக்களின் தெய்வ பக்தியோ அப்படியொன்றும் குன்றிப் போய்விட்டதாகத் தெரியவில்லை. லோகநாயகி அம்மன் கோயிலுக்கு முன்னைவிட, நெசவாளிகள் அதிகம் பேர் தரிசனம் செய்ய வந்தார்கள்; திருச்செந்தூர் விசாகத் திருநாளுக்கு திருநெல்வேலி ரயில் கெடியில் கூட்டம் ஒன்றும் குறைந்தபாடில்லை; ஆடி அமாவாசைக்குச் சொரி முத்தையன்கோயிலுக்குவண்டிகட்டிக்கொண்டுயாத்திரை செல்லும்பக்தர் கூட்டங்களுக்கும் பஞ்சமில்லை.

'கம்யூனிஸ்ட் அபாயம்தான் கஷ்டங்களுக்குக் காரணம்' என்றுபூச்சாண்டிபிடித்தது இன்னொருதினசரி. ஆனால், அவருக்கோ கம்யூனிஸம் என்றால் இன்னதெனத் தெரியாது.எனினும்அவரறிந்தமட்டில்கம்யூனிஸ்ட்என்று சொல்லிக் கொள்பவர்கள் யாரும் அபாயகரமான நபர்களாகவோ, பயங்கரமான ஆசாமிகளாகவோ இருக்க வில்லை.கோயிலுக்குச் சென்று விட்டு வரும் வழியில் அவர் ஒன்றிரண்டு சமயம் செங்கொடி கட்டிப் பறக்கும் கம்யூனிஸ்ட் பொதுக் கூட்டங்களிலும் தலை நீட்டிப் பார்த்திருக்கிறார். அவர்களில் யாரும் தாறுமாறாகப் பேச வோ, அடிபிடி சண்டைக்குக் கொடி கட்டவோ செய்ததாக அவருக்குத் தோன்றவில்லை; அவர்களில் யாரும் தாதுலிங்க முதலியாரைப்போல் கள்ள மார்க்கெட்டில் கொள்ளை யடித்ததாகவோ, .தோட்டக் கூலிகளைக் கட்டிவைத்து

உதைக்க அனுமதித்ததாகவோ, மைனர்வாளைப்போல் கோயில் சொத்துக்கு குழி பறித்ததாகவோ அவர் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை...

'சுதந்திரக்குழந்தைகள் இன்னும்பலமேற்படவில்லை. பக்குவம் ஏற்படவில்லை. அதற்குள் சுபிட்சத்தை எதிர் பார்க்கலாமா?" என்று தர்க்க நியாயம் பேசியது ஒரு சஞ்சிகை. அந்தத் தர்க்க நியாயத்தையும் கைலாச முதலியாரால் புரிந்து கொள்ள இயலவில்லை. வெள்ளைக் காரன் வெளியேறியதற்கும், உள்ளூர்க்காரன் அரசாள் வதற்கும் அவருக்கு எந்தவித வித்தியாசத் தன்மையும் புலப்படவில்லை. சுதந்திரம் வந்த பின்னால், இரவோடு இரவாகச் சுகமோ சுபிட்சமோ ஏற்பட்டு விடும் என்று எதிர்பார்த்து ஏமாறும் அளவுக்கு அவர் ஞான சூன்யராக இருக்கவில்லை. 'எனினும், சுதந்திரம் வந்த பின்னர், முன்னிருந்ததையும்விட நிலைமை மோசமாகவா போய்க் கொண்டிருப்பது?" என்றுதான் நினைத்தார் அவர். சுதந்திரம் வந்த பின்னர் அரிசி விலை ஏறிக் கொண்டுதான் சென்றதே ஒழிய இறங்கக் காணோம்; பணக்காரர்கள் மேலும் மேலும் பெரும் பணக்காரர்களாகவும், ஏழைகள் மேலும் மேலும் பரம ஏழைகளாகவும் தான் மாறிக் கொண்டிருந்தார்களேயன்றி, இருவர் வாழ்க்கையிலும் புதுமையான மாற்றம் எதுவும் ஏற்படவில்லை; லஞ்சமும் ஊழலும் முன்னை விட அதிகமாய்த் தானிருந்ததே ஒழியக் குறைந்தபாடில்லை; காங்கிரஸ்காரரிடத்தில் பிளவும், பூசலும், பதவிப் பித்தும், பொறாமையும் தான் அதிகரித் திருந்ததே தவிர, முன்னிருந்த சேவை வைராக்கியமோ, தியாக புத்தியோ காணப்படவில்லை...

பத்திரிகைகளில் காணப்பட்ட தர்க்கநியாயங்களைக் கொண்டு, கைலாசமுதலியார் எப்படியெப்படி எல்லாமோ கணக்குப் போட்டுப் பார்த்தாலும், தம்மை வருத்துகின்ற அந்தக் கேள்விக்கு அவரால் விடை தெரிந்து கொள்ள முடியவில்லை. நூல் விலை ஏன் ஏறியது? அது

இறங்குவதற்கு மார்க்கமுண்டா? வியாபாரம் ஏன் படுத்து விட்டது? அது நிமிர்வதற்கு வழிவகை யுண்டா? பணம் ஏன் சுருங்கிவிட்டது?தேவையான சாமான்களை வாங்குவதற்கு இயலுமா? ஏற்றுமதி ஏன் குறைந்து விட்டது? அதற்கு ஒரு விமோசனம் உண்டா?-தமது மனத்தை உறுத்தும் அந்த அடிப்படைக் கேள்வியை ஒட்டி அவரது மனத்தில் எத்தனையெத்தனையோ கேள்விகள் கொக்கியிட்டு வளைந்து நின்றன. எனினும் அவரால் அவற்றுக்கு எவ்வித விடையும் காண இயலவில்லை.

கைலாச முதலியார் போன்றவர்களின் கண்களிலிருந்து உண்மையை மூடி மறைத்து, முலாம் பூசி, பொத்திப் பொதிந்து திரித்துச் சிதைத்துக் கூறிவந்த அதே தேசியப் பத்திரிகைகள் அவரிடமிருந்து அந்த ஒரே ஒரு உண்மையை மட்டும் மூடி மறைக்கவில்லை; மறைக்க இயலவில்லை. சோற்றில் மூடி மறைக்க முடியாத முழுப் பூசணிக்காயாக, அந்தப் பிண்டப் பிரமாணமான உண்மை விளங்கியது.

அன்று காலையில் கைலாச முதலியார் பட்டறைப் பலகையில் அமர்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்த போது தான் அவர் அந்தச் செய்தியைக் கண்டார்; தெய்வ பக்தியின் அவசியத்தைப் பற்றி ஒரு மந்திரி பேசிய பேச்சை ஏழு பத்தித் தலைப்புக் கொடுத்துப் பிரசுரித்திருந்த அதே பக்கத்தின் கடைகோடி மூலையில் அந்தச் செய்தி முக்கியத்துவம் இழந்து ஒடுங்கிக் காணப்பட்டது.

## கைத்தறி நெசவாளி காலமானார்

நாமக்கல் ஏகாம்பர முதலியார் என்னும் கைத்தறி நெசவாளி பிழைப்புக்கு வழியில்லாமல் பதினைந்து நாட்களுக்கு மேல் பட்டினி கிடந்து, இன்று காலமானார்.

*பட்டினிக் கொடுமையின் காரணமாகவே அவர் காலமானாரென்று ஊர் மக்கள் பேசிக் கொள்கிறார்கள். அவரது சடலத்தை ஊர் மக்கள் பண வசூல் செய்து அடக்கம் செய்தனர்.*

*(நநி.)*

கைலாச முதலியாரின் பார்வையில் இந்தச் செய்தி தற்செயலாகப் பட்டிருந்தால் ஏதோ ஜாதீய அபிமானத்தால், ஒரு கணம் அனுதாபம் காட்டிவிட்டு, மறுபக்கத்தைத் திருப்பியிருப்பார். ஆனால் கொஞ்ச நாட்களாகவே அவர் இப்படிப்பட்ட செய்திகளைத்தான் பத்திரிகையில் தேடித் தேடிப் படித்து வந்தார். அன்றொரு நாள் ராசீபுரத்தைச் சேர்ந்த ஒரு நெசவாளியின் மனைவி பசிக்கொடுமை தாங்காது தன் இரண்டு குழந்தைகளைக் கிணற்றில் போட்டுத் தானும் விழுந்து இறந்ததாக அவர் செய்தி படித்தார்; மற்றொரு நாள் காஞ்சிபுரத்தில் இருபத்தைந்து வயது நெசவுத் தொழிலாளி ஒருவன் வறுமையின் காரணமாக, பட்டினி கிடந்து மாண்டதாகப் படித்தார்; இன்னொரு நாள் வேறொரு கைத்தறித் தொழிலாளி ரோட்டடிச் சாலைப் புறத்தில் ஒரு மரத்தில் தூக்கிட்டுத் தொங்கி, தற்கொலைசெய்துகொண்டதைவாசித்தறிந்தார்; குழந்தைக்குப் பால் வாங்கிக் கொடுக்க முடியாத இளம் தாயொருத்தி தன் பிள்ளையை ஒன்றரை ரூபாய்க்கு விற்று விட்ட பரிதாபக் கதையையும் அவர் பத்திரிக்கையில் பார்த்தார். தேசியப் பத்திரிகைகளாலும் மூடி மறைக்க முடியாதபற்பலசெய்திகளைப்படித்துப்படித்துக்கொஞ்ச நாட்களாகவே அவர் மனம் கலக்கமுற்று இருந்தது. ஏகாம்பர முதலியாரின் துயரச் செய்தியைப் படித்ததும், கைலாச முதலியாருக்குத் தன்னையும் அறியாமல் கண்கள் கலங்கின. அதே சமயத்தில் கடந்த சில நாட்களாகவே அவரது உள்ளத்தில் அவரறியாமலேயே இனந்தெரியாது உருவாகி வந்த அந்தப் பயபீதி, தாமும் இந்த மாதிரியான துர்க்கதிக்கு ஆளாகிவிட நேருமோ என்ற அச்சம், அவரது

உள்ளத்தை உலுக்கிவிட்டது. அந்தப் பயங்கர எண்ணத்தின் வேகத்தைத் தாங்கமுடியாதவராக, அவர் பத்திரிகையை மூடி யார் கண்ணிலும் பட்டுவிடக் கூடாது என்ற காரண காரியமற்ற எச்சரிக்கையோடு அதைப் பட்டறைப் பலகைக்கு அடியில் போட்டுக்கொண்டார்! 'முருகா' என்று ஒரு கணம் கண்ணை மூடி வாய்விட்டுப் பிரார்த்தித்துக் கொண்டார்; அலைமோதிக் கொந்தளிக்கும் சிந்தனையை அடக்கியாள முடியாமல், கண்களை மூடி யோக நிஷ்டை செய்யமுயன்றார்.

"முதலாளி!"

எதிர்பாராத விதமாக வந்த அழைப்புக் குரல் கைலாச முதலியாரின் யோகத்தைக் கலைத்து விட்டது. கண்ணைத் திறந்து பார்த்தார். எதிரே வடிவேலு முதலியாரும் வேறு சில வாடிக்கை நெசவாளர்களும் நின்று கொண்டிருந்தார்கள்.

"எங்கே வந்தீங்க" என்று தன்னுணர்வு பெற்றுத் திரும்பிய கைலாச முதலியார், அவர்களை நோக்கி நிர்விசாரமாகக் கேட்டார்.

"நூல் வாங்கிக்கிட்டுப் போகலாம்ணு வந்தோம்" என்று சுருக்கமாகப் பதிலளித்தார் வடிவேலு முதலியார்.

கைலாச முதலியார் இன்ன பதில் சொல்வதென்று தெரியாமல் ஒருகணம் சும்மாயிருந்தார். பிறகு அவர்களிடம் திரும்பி, "என்ன தம்பி, உங்களுக்கு நிலைமை தெரியாததா? வந்த சரக்கெல்லாம் அப்படியப்படியே உட்கார்ந்திருக்கு. ஒண்ணும் நகர்ந்த பாட்டைக் காணோம். இன்னும் நெய்து நெய்து எங்கேதான் அடுக்கி வைக்கிறது?" என்று பரிதாபமாகப் பதிலளித்தார்.

"அப்படிச் சொன்னா முடியுமா, முதலாளி? எங்க புழைப்பும் நடக்க வேண்டாமா?" என்று அங்கலாய்த்தார் ஒரு நெசவாளி.

அதற்குள் இன்னொருவர், "ஆமா முதலாளி? வேணு மின்னா கூலியைக் கூடக் குறைச்சிக்கிடுங்க. எங்க புழைப்பைக் கெடுத்துப் பிடாதீங்க" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்.

கைலாச முதலியாரின் இளகிய மனம் ஒரு கணம் தர்மாவேசத்தால் அலைக்கழிந்தது. அன்று கூலி உயர்வுக்காக, வாதாடி வழக்காடிப் பேசிய அதே தொழிலாளர்கள் இன்று தங்கள் வயிற்றுக் கொடுமையினால், கூலியைக்கூடக்குறைத்துக்கொள்ள முன்வரும்கோரத்தை, அந்தக் கோரத்தின் சூட்சுமத்தை அவர் உணர்ந்து கொண்டார். அந்த உணர்ச்சி ஏற்பட்டபோது எதிரே நின்ற அந்தத் தொழிலாளிகள் ஒவ்வொருவரும், அந்த இனம் தெரியாத ஏகாம்பர முதலியாரைப்போல் காட்சியளிப்பதாகவும், அவர்கள் அனைவரும் வற்றி மெலிந்து, வாடி உலர்ந்து எலும்புக் கூடுகளாக மாறுவது போலவும், ராமன் வீழ்த்திய மராமரங்களைப்போல, அந்த எலும்புக் கூடுகள் சடசடவென்று முறிந்து விழுந்து, பிடிசாம்பலாகக் குமைந்து குவிவது போலவும், அவரது மனக்கண் முன்னால் ஒரு பிரமைக் கனவு திரை விரித்தது. ஆனால், அதே பிரமையைத் தொடர்ந்து, தமது மனைவி தன் அருமை மகன் ஆறுமுகத்தைக் கிணற்றில் தள்ளிக் கொலை செய்வது போலவும், தமது உயிரற்ற சடலம் விக்கிரமசிங்கபுரம் ரோட்டுப் பாதையிலுள்ள புளிய மரத்தில் தூக்கிலிட்டுத் தொங்கிக்கொண்டிருப்பதுபோலவும், தமது அருமைமகன் மணி வயிற்றுக்குச் சோறின்றிப் புழுவாய் வாடிச் சுருண்டு கிடப்பதுபோலவும், ஒரு கண்காணாத உருவெளித் தோற்ற மயக்கம் அவரது மனத்திரையில் பளிச்சிட்டு மறைந்தது.

மறு கணமே அவர் தமது இளகிய மனத்தை இறுகப் பிடித்துக்கொண்டு பதிலளித்தார்:

"உங்களுக்கு நூல் கொடுத்து என்ன பிரயோசனம்? மேலும் மேலும் எனக்குத்தானே கைப்பிடித்தம். உங்க

வயிற்றுக் கொடுமை கூலியைக்கூடக் குறைக்கச் சொல்லுது. ஆனா, உங்களுக்கு உதவி செய்றதுக்குக்கூட, எனக்கு விதியில்லை. தயவு செய்து வேற யாரையாவது போய்ப் பாருங்க."

நெசவாளிகள் அந்த இடத்தை விட்டு அடி பெயரவில்லை.

வடிவேலு முதலியார் கட்டி வறண்டுபோன தொண்டையைலேசாகக்கனைத்துச்சரிபடுத்திக்கொண்டு, "அண்ணாச்சி, வெட்கத்தை விட்டுச் சொல்லுதேன். வீட்டிலே ஒரு மணி அரிசிகூட இல்லை. நேத்து ராத்திரியிலேயிருந்து ஒண்ணுமே சாப்பிடலை. வீட்டுக்காரிக்கு வேறே உடம்புக்குச் சரியில்லை–" என்று பரிதாபகரமாகச் சொல்லத் தொடங்கினார்.

கைலாச முதலியாரால் அந்தப் பிரலாபத்தைக் கேட்டுக் கொண்டிருக்க இயலவில்லை. எனவே அவர் விருட்டென்று இடத்தைவிட்டு எழுந்திருந்தவாறே, "தம்பி, உங்க கஷ்டம் எனக்குத் தெரியத்தான் செய்யிது. உங்களை மாதிரித் தறிகாரர் பாடும் திண்டாட்டம், என்னை மாதிரி 'தொட்டுக்கோ துடைச்சிக்கோ' என்றிருக்கும் சிறு வியாபாரிகள் பாடும் திண்டாட்டம். இப்போ உள்ள நிலைமையில் உங்களுக்கு எந்த உதவியும் செய்ய முடியாது. உங்களை ரொம்பவும் வேண்டிக்கிடுதேன். தயவு பண்ணி வேறே யாரையாவது போய்ப் பாருங்க" என்று மளமளவென்று பதில் கூறிவிட்டு, அதற்குப் பதிலை எதிர்பாராதவராக, எதிர்பார்க்கும் விருப்பம் அற்றவராக, வீட்டுக்குள் சென்று மறைந்தார்.

"முதலாளி" என்று ஒரு நெசவாளி அவயக் குரல் எழுப்பிப் பரிதாபகரமாக உரத்துக் கூப்பிட்டார். ஆனால் கைலாச முதலியாரோ முகத்தைக் கூடத் திருப்பவில்லை.

நெசவாளிகள் அனைவரும் இன்னது செய்வதெனத் தெரியாமல், அந்த இடத்திலேயே முளையறைந்த மாதிரி

பெருமூச்செறிந்து நின்றனர். எங்கு செல்வது, என்ன செய்வது என்பதே தெரியாமல், ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவாறு ஒருகணமும், ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கத் துணிச்சலற்று மறுகணமுமாக, சிறிது நேரம் அங்கேயே நின்றனர். அவர்களிடையே நிலவிய பயங்கரமான சவ அமைதியை ஒரு நெசவாளி துணிந்து கலைத்து அவர்களை உசுப்பிவிட்டார்:

"வாங்க, வாங்க. நின்னு என்ன பிரயோசனம்?"

நெசவாளிகள் குனிந்த தலை நிமிராமல் வீட்டை விட்டு வெளியேறினர்.

தீக்கோழி மணலுக்குள் தலையைப் புதைத்துத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள நினைக்கும் அசட்டுத் தனத்தைப் போல, கைலாச முதலியார் வீட்டுக்குள் சென்று தொல்லைகளிலிருந்து தப்பித்துக் கொள்ள விரும்பினாலும், சூழ்நிலை அவரை அப்படி இருக்க விடவில்லை. எண்ணற்ற சிந்தனைக் குழப்பங்கள் வலை பின்னிச் சிக்கிப் பிணைக்கும் வேதனையிலிருந்து, திமிறும் வழி தெரியாமல் திகைத்துப் போய், கட்டிலில் தலைசாய்த்துக் கிடந்த கைலாச முதலியாரை மீண்டும் அந்தக் குரல் உசுப்பி எழுப்பியது.

மாடியிலிருந்து இறங்கிவந்த மணி தந்தையின் அருகே சென்று நின்று, அருமையோடும் பவ்வியத்தோடும் அழைத்தான்.

"அப்பா"

கைலாச முதலியார் கண் விழித்து உட்கார்ந்தார்.

"என்னப்பா?"

"ஸீஸன் டிக்கெட் தீர்ந்து போச்சு. நாளைக்குப் புதுசு வாங்கியாகணும்" என்று விஷயத்தை விளக்கினான் மணி.

"எவ்வளவுடா?" என்று வேண்டா வெறுப்பாகக் கேட்டார் தந்தை.

"ஸெகண்ட் கிளாசுக்குப் பதினஞ்சு ரூபாய்."

கைலாச முதலியாரின் குரல் திடீரென்று வக்கிர கதி பெற்று விட்டது.

"ஸெகண்ட் கிளாஸ்! இனிமே நீ ஒண்ணும் ஸெகண்ட் கிளாஸிலே போக வேண்டாம். மூணாம் கிளாஸிலேயே போனாப் போதும். உன் செலவுக்கின்னு மாசம் அம்பது ரூவா தந்தும் உனக்குப் பத்தெலெ. வீட்டு நிலைமை தெரியாமல், நீ விளையாடுதே. நினைச்ச நினைச்ச வாக்கிலே சினிமாவுக்குப் போறதும், போத்தி ஹோட்டல்லெ கணக்கு வைக்கிறதும்-"

மணிக்குத் திடுக்கிட்டது. தன் தந்தை இவ்வாறு ஆத்திரத்தோடு பேசி அவன் அறிந்ததில்லை. அவரது எதிர்பாராத திடீர்த் தாக்குதலின் காரண காரியம் அவனுக்குப் புரியவில்லை. எனினும் அவரது அந்தச் சுடுசொல் அவனது சுயமரியாதையையே பங்கப்படுத்துவது போல், அவமானப் படுத்துவது போல் நெஞ்சில் உறைந்தது.

அவர் பேசி முடிப்பதற்குள்ளாகவே அவன் தன்னையும் அறியாமல் குறுக்கிட்டான்: "நான் செலவழிக்கிறதிலேதான் குடி முழுகிப் போவுதாக்கும்!"

கைலாச முதலியாருக்குக் கண்கள் சிவந்தன; உதடுகள் துடிதுடித்தன; அவருக்கும் தமது சுயமரியாதை, அதிலும் தாங்க முடியாத மனவேதனையினால் தவிக்கும் தமது தன்மானம் வடுப்பட்டுப் போனதுபோல் தோன்றியது. அடிபட்ட பாம்புபோல் அவர் சீறியெழுந்தார்.

"ஏண்டா, எதிர்த்தா பேசறே?" அவர் குரல் கடூரமாக ஒலித்தது: "நானே நொந்து போய்க் கிடக்கிறேன். என் உயிரை வாங்காதே. இனிமே, நீ உன் செலவையெல்லாம் ஒரு திட்டப்படுத்திச் சுருக்குற வழியைப் பாரு!"

"அப்படி நான் என்ன அநாவசியமா செலவழிக்கிறேன்?" என்று தனது நிரபராதத் தன்மையினால் ஏற்பட்ட தெம்புடன் கேட்டான் மணி.

"அநாவசியமோ, அவசியமோ? செலவைச் சுருக்குன்னு நான் சொல்றேன். தெரிஞ்சிதா? நம்ம வீட்டுக்கு உன் செலவு தாங்காது!"

தந்தைக்கும் மகனுக்கும் நடக்கும் சம்வாதத்தைக் கேட்டு, அடுப்பங்கரையிலிருந்த தங்கம்மாள் அகப்பையும் கையுமாக விரைந்து வந்து குறுக்கிட்டாள்:

"அவன் கிட்டே ஏன் போயி வாயைக் குடுக்கிய? நம்ம கஷ்டம் நம்மோடே புள்ளைக மனசை வேறெ புண்படுத்தணுமா?" என்று கணவனை நோக்கிக் கூறிவிட்டு, மகனிடம் திரும்பி, "மணி, நீ போடா மேலே" என்று கூறினாள் தங்கம்.

தங்கம்மாளின் குறுக்கீடு தந்தைக்கும் தனயனுக்கும் நிதான புத்தியை வரவழைத்தது. மணி ஒன்றும் பேசாமல், வீட்டைவிட்டுவெளியேசென்றான்; கைலாச முதலியாரும், மனச் சாந்தியை நாடி மாடியிலுள்ள தமது பூஜை அறைக்குள் சென்றார்.

பூஜை அறைக்குள் சென்று, அவரது நம்பிக்கைக்கும் பக்திக்கும் பாத்திரமான முருகப் பெருமானின் திருவுருவத்தின் முன்பு கண்மூடி, கைகூப்பி நின்று மனத்தை ஒரு நிலைப்படுத்த முயன்றும், அவரால் நிம்மதி பெற முடியவில்லை. 'நீளத்திரிந்து நின்றும் நீங்கா நிழல்போல' அவரை அலைக்கழிக்கும் சிந்தனைகள் அவரை மேலும் மேலும் வாட்டின. அந்தச் சிந்தனைகள் வகுத்த சக்கர வியூகத்தினூடே சிக்கித் தவித்து மனம் உளைத்தார் கைலாச முதலியார்.

'எத்தனை நெருக்கடிகள்! எத்தனை கடன்கள்! வியாபாரம் இல்லையென்று தெரிந்தும், அந்தக்

கொடும்பாவி தாதுலிங்க முதலியார் சமயம் பார்த்துக் கழுத்தை அறுக்கிறானே! பன்னிரண்டாயிரம் ரூபாயையும் ஒரு தேதியிலே பைசல் பண்ண வேண்டும் என்றால் என்னால் முடிகிற காரியமா?- அந்த மைனர் முதலியார்-அவனாவது பொறுத்திருக்கிறானா? இருந் திருந்து அவனிடம் போய் ஏன் கடன் வாங்கினேன்?-அந்தப் பயல் இழவுக்காக அரியநாயகிபுரம் பக்கத்திலிருந்த வயலைக்கூட அடமானம் வைத்தேனே- இத்தனை கடன்களையும் எப்படி அடைக்கப் போகிறேன்?- ஒண்ணா, ரெண்டா?- முருகா என்னை எப்படியப்பா மீட்கப் போகிறாய்? இந்தக் கவலையிலேயே என்னை உருக்கி உருக்கிக் கொன்று விடுவாய் போலிருக்கிறதே-முருகா! முருகா! முருகா!'

கைலாச முதலியாரால் ஓரளவுகூட நிம்மதி பெற முடியவில்லை. சொறி சிரங்கு மாதிரி அரித்துப் பிடுங்கும் அந்தச் சிந்தனைகளை மேலும் மேலும் கிண்டிக் கிளறி, இதயத்தில் ரத்தம் சொட்டச் செய்து கொண்டாரே ஒழிய அதிலிருந்து மீளும் வழியை அவரால் காண முடியவில்லை. ஓரிடத்திலும் இருக்க நிலை கொள்ளாமல் தவித்த கைலாச முதலியார், சிறிது நேரத்தில் மீண்டும் கீழிறங்கி வந்து, பட்டறையில் போய் அமர்ந்தார். அவரது கை அவரையும் அறியாமல் பட்டறைப் பலகைக்கு அடியில் கிடந்த செய்தித் தாளை எடுத்தது; அவரது கண்களும் மனமும் ஏனோ அதே செய்தியை-நாமக்கல் ஏகாம்பர முதலியாரின் மரணச் செய்தியைத்தேடிப்பார்த்தன.

அதைப் படித்த போது மீண்டும் அவர் மனத்தில் பயபீதி உருவாயிற்று; கைகளும் மனமும் நடுங்கிச் சிலிர்த்தன.

"முதலாளி!"

எதிர்பாராது வந்த அந்தக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனார் கைலாச முதலியார். ஏதோ செய்யத் தகாத காரியத்தைச் செய்யும் போது, கையும் மெய்யுமாகப்

பிடிபட்டது போல் அவர் கலவரமுற்றுக் குழம்பினார்; அவசர அவசரமாக, தினசரிப் பத்திரிகையைப் பலகைக்கு அடியிலே தள்ளினார்; தள்ளிவிட்டுக் குரல் வந்த திசையில் தலையைத்திருப்பினார்.

எதிரே நின்றவரைக் கண்டதும், அவருக்கு நாக்கே உள்ளிழுத்துக் கொண்டது போல் இருந்தது. எமலோகத் திலிருந்து ஓலை கொண்டு வந்த கிங்கரனைப் போல் அவரெதிரே தாதுலிங்க முதலியாரின் கணக்கப்பிள்ளை நின்று கொண்டிருந்தார்.

"கணக்கப்பிள்ளையா?" கைலாச முதலியாரின் குரல் கட்டிப்போய்அடைத்துஒலித்தது.

"முதலாளி அனுப்பிச்சாக. உடனே பணம் வேணுமிண்ணு, கையோடே பணம் வாங்கிக்கிட்டு வரச் சொன்னாக.ரெண்டிலேஒண்ணுதெரிஞ்சிக்கிட்டுவான்னு விரட்டிட்டாக" என்று பவ்வியத்தோடு கூறி நிறுத்தினார் கணக்கப்பிள்ளை.

கைலாச முதலியார் பரிதாபகரமாகப் பெருமூச் செறிந்தார்.

"என்ன கணக்கப்பிள்ளை?நம்மகஷ்டம்அவுகளுக்குத் தெரியாதா?"

"அதென்னமோ அவுஹ பாடு, உங்க பாடு" என்று மெட்டாகப் பேசி நிறுத்தினார் பிள்ளை.

கைலாச முதலியார், ஒரு நிமிஷ நேரம் ஒன்றுமே பேச வில்லை.பிறகு 'முருகா' என்று வாய்விட்டுச் சொல்லிவிட்டு, மடியிலிருந்து சாவிக்கொத்தை எடுத்து இரும்புப் பெட்டியைத்திறந்தார்.அதிலிருந்துநோட்டுக்கட்டுக்களை எடுத்து ஒவ்வொன்றாக எண்ணி முடித்தார்.

"இந்தாரும், இதிலே மூவாயிரம் இருக்கு; இதை கொண்டு குடுங்க. பாக்கிக்கு நான் வந்து தாக்கல் சொல்ற தாகச் சொல்லுங்க" என்று கூறியவாறே நோட்டுக்

கட்டுக்களை எடுத்துப் பெட்டியடி மேஜைமீது வைத்தார் முதலியார்.

கணக்கப் பிள்ளை அந்த நோட்டுக் கட்டுக்களைத் தொடவேஇல்லை.

"இதென்ன இது, மூவாயிரத்தைக்குடுத்தா, அஞ்சுக்குக் குறைஞ்சி வாங்கிட்டுப் போனா, முதலாளி முக்த்திலேயே முழிக்க முடியாது. தயவு செஞ்சி கொஞ்சம் பார்த்துக் குடுத்திருங்க" என்றார் பிள்ளை.

"இப்ப அவ்வளவுக்குத் தொகை இல்லையே. இருந்தா பெரியமுதலாளிக்கா தவணைசொல்லப்போறேன்?" என்று இரங்கிய குரலில் வேண்டிக்கொண்டார் கைலாச முதலியார்.

"அதென்னமோ, இது ரொக்கப் பாவத்தாம். அதனாலே மொத்தமா வேணுமாம். அத்தோடே நூல் கொடுத்த பாக்கியையும் கேட்டுட்டு வரச் சொன்னாக" என்று விடாப் பிடியாகப் பேசினார் பிள்ளை.

கைலாசமுதலியாருக்குஎன்னபதில்சொல்வதென்றே தெரியவில்லை. கிடுக்கித் தாக்குதல் மாதிரி நாலா புறத்திலிருந்தும் நெருக்கடிகள் ஸ்தூலமாக முற்றி வந்து மோதுகின்ற நிலைமையைப் பிரத்தியட்சமாக உணர்ந்தார். அந்த உணர்ச்சியிலிருந்து மீளும் வகைதெரியாமல், 'முருகா முருகா' என்று முனகியவாறே எதிரே தொங்கிய ஆறுமுகப் பெருமானின் படத்தை நோக்கினார். புன்னகை ததும்பும் இன்முகத்தோடும், வள்ளிதெய்வானைசமேதராகவும், வைர வைடூரிய அலங்காரபூஷிதராகவும், வடிவேல் அழகராகவும் அபயக் கரம் காட்டி, அசையாது நின்றார் ஆறுமுகப் பெருமான். அந்த அபயக் கரத்திலிருந்து கைலாச முதலியார்மீது எந்தவித அருளும் சொரியப் போவதாகத் தெரியவில்லை. ஆறுமுகப் பெருமானையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்த கைலாச முதலியார் திடீரென்று ஏதோ தீர்மானத்துக்கு வந்ததுபோல் பட்டறைப் பலகையிலிருந்து எழுந்து வீட்டுக்குள் சென்றார்.

"தங்கம்!" அவர் குரலில் இன்னதென அறிய முடியாத வெறிபுரையோடியிருந்தது.

தங்கம்வந்தாள்

"நகைகள் எல்லாம் எங்கே இருக்கு?" என்று யந்திரம் போல் கேட்டார் அவர்.

"பீரோல்லெதான் இருக்கு" என்று கூறியவாறே சாவியைக் கொண்டு வந்து கொடுத்தாள் மனைவி.

கைலாச முதலியார் திருடிப் பழக்கமற்ற புதிய கள்ளனைப் போல் அவசர அவசரமாகப் பீரோவைத் திறந்து நகைகளில் பலவற்றை எடுத்து மடியில் கட்டிக் கொண்டார். கணவரின் வெறி பிடித்தது போன்ற இந்தச் செய்கையைக் கண்டு, வியப்பும் பயமும் கொண்டவளாக இமைத்த கண் வாங்காது பிரமித்து நின்றாள் தங்கம்மாள்.

கைலாச முதலியார் பீரோவைப் பூட்டிவிட்டுத் திரும்பும் போது, தங்கம் அமைதியாக மெதுவாகக் கேட்டாள்.

"எதுக்குஇதெல்லாம்?"

கைலாச முதலியார் பதிலே சொல்லாமல், மனைவியைஒருபார்வை பார்த்துவிட்டுவெளியேவந்தார்; நகைகளைமேஜைமீது அள்ளிவைத்தார்.

"இந்தாரும்; எடுத்துக்கிட்டு போய்த் தொலையும்" என்று உள்ளடங்கிய கோபத்தோடு கூறினார் கைலாச முதலியார்.

மேஜை மீதிருந்த நோட்டுக்களையும் நகைகளையும் முந்தியில் வாரி முடிந்தவாறே "கணக்கு?" என்று கம்மிய குரலில் உசாவினார் பிள்ளை.

"எல்லாம் நான் வந்து பார்த்துக்கிடுதேன். என் மானத்தை வாங்காதேயும். போய்த் தொலையும்!" என்று கடூரமாக கூறிவிட்டு முகத்தை வெட்டித் திருப்பிக் கொண்டார் முதலியார்.

கணக்கப் பிள்ளை அந்த இடத்தை விட்டு அகன்று சென்ற பிரக்ஞையேயற்று, கைலாச முதலியார் சிறிதுநேரம் வரையில் அசையாது இருந்தார். புகைமூட்டம் போட்டது போல் அவரது உள்ளம் உள்ளுக்குள் பொருமிப் பொருமிப் புழுங்கிக் கொண்டிருந்தது. இன்னதென்று தெரியாத ஒரு வேதனை உடம்பெல்லாம் பரவி நின்று, உறுத்துவது போலிருந்தது. தன் நினைவு திரும்பிய கைலாச முதலியார் மீண்டும் எதிரே கிடந்த படத்தின்மீது கண்களைத் திருப்பினார்.

எதிரே ஆறுமுகப்பெருமானின் அபயக்கரம் மீண்டும் காட்சி அளித்தது; ஆனால், அவரது மனக்கண்ணின் முன்போ இனம் தெரியாத அந்த ஏகாம்பர முதலியாரின் குரக்கு வலித்து விகாரமாய்த் தோன்றிய உயிரற்ற சடலம் தான் தோற்றம் அளித்து!

## 11

தலைக்கு மேலே மின்சார விசிறி சுழன்று கொண்டிருந்தது.

தாதுலிங்க முதலியார் தமது மேஜைக்கு எதிரே உட்கார்ந்து கால்களை மேஜைமீது தூக்கிப் போட்டுக் கொண்டு, கண்களை மூடி அறிதுயில் பள்ளி கொண்டிருந்தார். மேஜை விளக்கு மேஜைமீது விரிக்கப்பட்டுக் கிடந்த கணக்குப் புத்தகங்களின்மீது நிஷ்காமியாக ஒளி செய்துகொண்டிருந்தது.

தாதுலிங்க முதலியார் கண்களை மூடி ஆடாது அசையாது இருந்த போதிலும், அவரது மனம் மட்டும்

எண்ணற்ற கணக்குகளையும், வியாபார விஷயங்களையும் அலசி ஆராய்ந்து கொண்டிருந்தது!

-"இப்போ பிளாக் மார்க்கெட்டில் கட்டு ஒண்ணுக்கு முப்பத்தஞ்சு ரூபாய்தான் கிடைக்குது. அந்த மேலப் பாளையத்து ராவுத்தர் கட்டு ஒண்ணுக்கு நாற்பது ரூபாய் தருகிறேன்னு ஒத்துக்கிட்டுப் போயிருக்கார். அட்வான்ஸ் வேறெ குடுத்திட்டார். அதனாலே எப்படியும் வந்துதான் சேருவார் ஒரு வாரத்திலே லாரியைக் கொண்டுவந்து டெலிவரிஎடுத்துக்கிட்டுப்போறதாகச்சொன்னமனுசனை இன்னிக்கித் தேதி வரையிலே காணோம். அவர் வந்து சேர்ந்தா, இந்த முந்நூறு பேலையும் தள்ளி விட்டிறலாம். கைமேலே பணம்-

-"இந்தக் கைலாச முதலியாரைத் தொலைச்சித் தலை முழுகணும்னு மைனர் முதலியார் ஒத்தக் காலிலே நிற்கிறார். அவர் சொல்றதும் சரிதான். இந்தக் கைலாசம் குடுக்கிற இளக்காரத்தாலே, தறிகாரங்கள்ளாம் ஒண்ணு சேர்ந்துக் கிடுதானுக, இருந்தாலும் நல்லவேளையா சங்கம் கிங்கம்ணு வச்சி, நம்ம உயிரை வாங்காம இருக்கானுக. அந்த மட்டிலே சேமம்தான்-

-"நம்ம கணக்குப்பிள்ளை என்ன இருந்தாலும் எமகாதகன்தான். பிடிச்ச பிடியிலே அந்தக் கைலாசத் திட்டேயிருந்து ரூபாய் மூவாயிரத்தைக் கறந்துட்டு வந்துட்டானே. நகை வேறே. நகை இப்ப உள்ள விலைக்கு ரெண்டாயிரம் பெறும். கணக்கப் பிள்ளை அன்னிக்கி சம்பளம் உயர்த்தித் தரணும்னு கேட்டான். ஆகட்டும்ணு சொல்லுக்குச் சொல்லிவச்சேன். இப்போ இந்தப் பயலுக்குச் சம்பளத்தை உயர்த்தினா, மத்தவங்கள்ளாம் சும்மா இருப்பானா? அவன் கேக்கிறதிலே குத்தமில்லெ. அவனும் வேலைக்கு வந்து இத்தனை வருசமா, விசுவாச மாய்த்தானிருக்கான். அதுக்காக, இப்ப இருக்கிற நில்வரத் திலே சம்பளத்தை உயர்த்துறதாவது?...அது அவ்வளவு தான்.

"கைலாச முதலியாரை இன்னம் சுத்தி வளைச்சு ஒரு பிடி பிடிச்சா, அவன் கிட்டேயுள்ள ஜவுளியையெல்லாம் கூட மலிவா விலைபோட்டு எடுத்துக் கிடலாம். பிழைப் பிலே மண்ணை வ.ாரிப் போட்டதாகத் திட்டுவான் இந்தத் திட்டுக்கெல்லாம் பயந்தா, காரியம் நடக்குமா? வியாபாரத் திலே தர்ம நியாயம் பார்த்தா, அவனை மாதிரி விதியேன்னு தலையிலே கை வைக்க வேண்டியது தான்-அந்த ஆறா யிரத்துச்சொச்சத்தையும் அவன்கிட்டேபிரிக்கிறவழியைப் பார்க்கணும்-இருக்கிற நிலவரத்தைப்பார்த்தா எவனெவன் எந்த நிமிசத்திலே, ஐப்பி. குடுப்பான்னு தெரியலெ-அது விசயமா வக்கீலுக்குத் தாக்கல் சொல்லணும்.

-"வியாபாரமும் மின்னே மாதிரி இல்லெ. நூல் விலை ஏத்தமா இருக்கிறதாலே நம்ம பிஸினஸ் ஒரு வழியா ஓடிக்கிட்டிருக்கு. இல்லென்னா, ஆபத்துத்தான். ஏத்து மதிக்கு மட்டும் மின்னே மாதிரி இடமிருந்தா ஒரு தட்டுத் தட்டலாம். ஆனா, இந்த சர்க்கார் அதுக்குவேறே வரியைப் போட்டுத் தொலைச்சிட்டுது. சொல்லப்போனா, இந்த சர்க்கார் வெள்ளைக்காரன் சௌகரியத்தைக் கவனிக்கிற அளவுக்கு, நம்ம சௌகரியத்தைக் கவனிக்கக் காணோம். மில் துணிப் போட்டி வேறெ-லாபத்துக்குப் பங்கம் வராமப் பார்த்துக் கிடணும்னா, உழைக்கிறவன் தலையிலே கை வைக்கிறதை விட வேறே விதியில்லை-இப்ப இருக்கிற நிலைமையிலே இந்த சர்க்கார் இல்லேன்னா, இது கூட ஓடாது-ஆமா பூனைக்குப் பயந்து புலி வாயிலே விழக்கூடாது-

-"சங்கரைப்பத்தி என்னென்னமோ பேச்சு காதிலே விழுது. இரணியனுக்குப் பிரகலாதன் பிறந்த மாதிரி, எனக்குன்னு வந்து பிறந்திருக்கு, இந்தத் தறுதலைக் கொள்ளி-அவனைக் கொஞ்சம் கண்டிச்சு வைக்கணும்."

தம்முள்ளே தாமாகி, தாமுக்குள் எல்லாமாய் முயங்கி நின்று, தாதுலிங்க முதலியார் ஆத்ம விசாரம் செய்து,

ஆதாயக் கணக்குப் போட்டுக்கொண்டிருந்த வேளையில் அவரது மனைவி தர்மாம்பாள் அங்கு வந்து சேர்ந்தாள்.

"இந்தாங்க."

மனைவியின் குரல் கேட்டுக் கண் விழித்தார் தாதுலிங்கமுதலியார்.

"எங்கேவந்தே?"

"மணி ஒன்பது அடிக்கப்போவுது. சாப்பிட வேண்டாமா?"

"சரி.சங்கர் எங்கே?வீட்டில் இல்லையா?"

"இல்லெ, திருநெல்வேலிக்குப் போயிருக்கான். காலையிலே வந்து விடுவதாகச் சொல்லிட்டுப் போனான், சினிமாப்பார்க்கப்போறதாகச்சொன்னான்."

"திருநெல்வேலியில் இவனுக்கு என்ன சோலி? அவனைப் பத்தி என்னென்ன பேச்செல்லாம் வருது, தெரியுமா? எனக்குப் பிறந்த புள்ளெ இப்படி கெட்டுக் குட்டிச்சுவராகப் போவான்னு நான் நினைக்கவே இல்லெ!" என்று வருத்தமும் கோபமும் கலந்து குமுறும் வார்த்தைகளில்சொன்னார் தாதுலிங்கமுதலியார்.

அவரது பேச்சு தர்மாம்பாளின் மனத்தைத் திடீரென்று கலக்கியது. அவள் எண்ணாததெல்லாம் எண்ணினாள். பிறகு கணவனை நோக்கி, "நீங்க என்ன இப்படிச் சொல்லுதிய? சங்கரைப்பத்தி அப்படிச் சந்தேகப் பட முடியுமா? அவனாவது, தாறுமாறா அலையுறதாவது? யார்சொன்னா அப்படி?"என்றுஉரிமையோடுகேட்டாள்.

"நீ நினைக்கிறமாதிரிகெட்டழிஞ்சிருந்தாக்கூட, நான் கவலைப்படமாட்டேன். ஒரு கலியாணத்தைப் பண்ணி, பெண்டாட்டியை வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டால் சீராயிருவான் என்றாவது தேற்றிக் கொள்வேன். ஆனால், அவன் என் குடியையில்லா கெடுத்துருவான் போலிருக்கு!

இவன் என்னமோ இந்தக் கம்யூனிஸ்டுகளோடு சேர்ந்து சுத்திக் கிட்டுத் திரியுதானாம். இவனுக்கு எதுக்கு இந்த வேண்டாத பயல்களோடே யெல்லாம் சகவாசம்? நம்ம குடும்பத்துக்கு இது அடுக்குமா? எவனெவன் எப்படிப் போனா என்னான்னு கிடக்கிறதை விட்டுட்டு- என்ன அரசியல் வேண்டியிருக்கு, அரசியல்!" என்று ஆத்திரத் தோடு கூறினார் தாதுலிங்க முதலியார்.

தாதுலிங்க முதலியார் இவ்வாறு விஷயத்தைத் தெளிவாக்கிய பின்னர்தான் தர்மாம்பாளுக்கு நிம்மதி பிறந்தது; அத்துடன் தன் மகனைப்பற்றி, தான் சந்தேகஸ்பதமான வீண்பழியைத் தவறாகச் சுமத்த நேர்ந்த தன் மனச்சாட்சியையும் கடிந்து கொண்டாள்; அதன் காரணமாக, அவளுக்குத் தன் மகன்மீது திடீரென்று ஒரு பெரும் அனுதாப உணர்ச்சி தோன்றியது.

"இவ்வளவுதானா?"என்று ஆசுவாசமாகப்பெருமூச்சு விட்டாள் தர்மாம்பாள். "நீங்க மட்டும் கூட்டங்களுக் கெல்லாம் போகமலா இருக்கீக? எலெக்சன் காலத்திலே நீங்களும்தானே காரைப் போட்டுக்கிட்டு மேற்கும் கிழக்குமாகத் திரிஞ்சீக. அவன் செய்தது மட்டும் குத்தமாப் போச்சாக்கும்!"

மனைவியின் பேச்சைக் கேட்டு, தாதுலிங்க முதலியா ருக்குக் கோபம்தான் பொங்கியது. எனினும் தமது மனைவியிடம் கோபத்தைக் காட்டிக் கொள்வதில் அர்த்தமில்லைஎன்பதைஉணர்ந்தவராக,"என்னகுத்தமாப் போச்சா? அவன் போறபோக்கிலே, நான் பண்ணுகிற பிளாக் மார்க்கெட் பிஸினெஸையெல்லாம் சந்தி சிரிக்க வச்சிடுவான் போலிருக்கே!" என்று சலித்துக்கொண்டார்.

"ஆமா, உங்களுக்கும் எதுக்கு இந்த வம்பு? கள்ள மார்க்கெட் பண்ணி நாலுபேர் வயித்திலே அடிச்சா, பணம் சம்பாதிக்கணும்?சங்கரன் கூடத்தான் அன்னிக்கிஎன்னென் னமோ சொல்லிக்கிட்டிருந்தான், நீங்க கைவசம் இருக்கிற

நூலையெல்லாம் ஏறக் குறையன்னாலும் தள்ளி விட்டிருங்க"என்று உபதேசிக்கமுன்வந்தாள் தர்மாம்பாள்.

"இந்தா பாரு, தர்மா, வியாபாரமின்னா நாலும்தான் இருக்கும். அதிகாரிகள் லஞ்சம் வாங்குகிறவரையிலே, கள்ள மார்க்கெட்டாவது, வெள்ளைமார்க்கெட்டாவது? எல்லாம் ஒரு எழவு மார்க்கெட்டுதான்" என்று கூறி, அத்துடன் பேச்சைச் சுருக்கிவிட்டு, "சரி வா, சாப்பிடப் போகலாம்" என்று கிளம்பினார்.

தர்மாம்பாளும் கணவனைப் பின்தொடர்ந்தாள்.

தாதுலிங்க முதலியார் சாப்பிட்டு முடித்துவிட்டு, வீட்டின் நடு ஹாலுக்கு வந்தார்; ஹாலின் மத்தியில் கிடந்த சோபாவின்மீது உட்கார்ந்து, கையிலிருந்த குச்சியால் பல்லைக் குத்திக் கொண்டிருந்தார். ஹாலுக்கு இடது புறமுள்ள அறைக் கதவு சாத்தப்பட்டிருந்தது; எனினும் உள்ளே விளக்கெரிவது, கதவுக்கு மேலுள்ள வர்ணக் கண்ணாடியின்மூலம் தெரிந்தது. சிறிது நேரத்தில் ஒரு வெள்ளித் தம்ளரில் பால் கொண்டுவந்து தாதுலிங்க முதலியாரிடம் கொடுத்துவிட்டு, பக்கத்தில் உட்கார்ந்தாள் தர்மாம்பாள்.

தாதுலிங்கமுதலியார் பாலைக்கொஞ்சம்கொஞ்சமா ருசித்துச் சாப்பிட்டுவிட்டு, தம்ளரைக் கீழே வைத்தார்; ஒரு இளம் ஏப்பம் அவரது தொண்டையைத் தடவிவிட்டுக் காற்றில்கலந்தது.

"ஆமா, உங்களிடம் ஒண்ணு கேக்கணும்னு இருந்தேன், மறந்தே போச்சு" என்று ஆரம்பித்தாள் தர்மாம்பாள்.

"என்னது?"

"நேத்து கணக்கப் பிள்ளை மூலமா, கொடுத்தனுப்பிச்சிங்களே, நகை. அதென்ன, அடகுக்குவந்துதா?"

தாதுலிங்க முதலியார் பெருமிதத்தோடு பதில் கூறத் தொடங்கினார்.

"அடகுமில்லே, ஒண்ணுமில்லே. அதெல்லாம் அந்தக் கைலாச முதலியார் வீட்டு நகை. அவன் வியாபாரத்தை நடத்தத்தெரியாமநடத்தி,கெடுத்துக்கிட்டான்.அற்பனுக்கு வாழ்வு வந்தால், அர்த்த ராத்திரியிலே குடை பிடிக்கிற மாதிரி, என்னமோ கோயில் தர்மகர்த்தா ஆனதிலே, கிடைக்காத பதவி கிடைச்சிட்ட மாதிரி, 'டாம் டீம்'னு செலவுபண்ணிக்கெட்டுக்குட்டிச்சுவராப்போனான்.நம்ம பாக்கிக்கு அவன் இன்னம் ஆறாயிரத்துச் சில்வானத்துக்கு மேலே தரணும். நம்ம கடனுக்காக, அவன் கொடுத் தனுப்பினநகைதான் அது!"

கணவனின் பதிலைக்கேட்டு தர்மாம்பாளுக்கு உள்ளூர இனம் தெரியாத கலவரமும் பயமும் ஏற்பட்டது. எனினும், அவள் அதை வெளிக் காட்டிக்கொள்ளாமல் மேலும் பேசினாள்:

"அதென்ன அப்படிச் சொல்லுதீக? அவரு ரொம்ப நல்லவருன்னு எல்லாரும் சொல்லுதாக..."

அவளது பேச்சைத் தாதுலிங்க முதலியார் முடிக்க விடவில்லை; சட்டென்று குறுக்கிட்டு விஷயத்தை தெளிவு பண்ணினார், அவர்:

"எல்லாம்ஒருஅளவோட இருக்கணும்,தர்மா."

தர்மாம்பாளுக்கு மேற்கொண்டு என்ன பேசுவ தென்றே தெரியவில்லை. திகைத்தாள்; மருண்டாள்; அவளது உதடும் உள்ளமும் துடியாய்த் துடித்தன. சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு, அவள் உள்ளடங்கி நின்ற நிதானத்தோடு பேச முனைந்தாள்:

"நானும் உங்களிடம் ஒரு விசயம் சொல்லணும் ணுதான் இருந்தேன். நீங்களானா இப்படிக் காரியம் செஞ்சிருக்கீக" என்று குறைப்பட்டுக்கொண்டாள்.

"என்னது?" என்று கேட்டுக்கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தார் தாதுலிங்க முதலியார்.

"கமலாவை அந்தக் கைலாச முதலியார் மகன் மணிக்குக் கட்டிக் கொடுக்கணும்னு ஒரு யோசனை. கமலாவுக்கும் மாப்பிள்ளையைப் பிடிச்சிருக்கு. சங்கர் தான் எல்லாத்தையும் சொன்னான். சரி, பார்ப்போமின்னேன்-" தர்மாம்பாள் எப்படியோ இந்த விசயத்தைச் சொல்லி முடித்துவிட்டாள்.

தர்மாம்பாளின் பேச்சைக் கேட்டதும், தாதுலிங்க முதலியாருக்கு இன்னதென அறியமுடியாத ஒரு வேகமும் வெறியும் ஏற்பட்டன. அவர் தமது இருக்கையிலிருந்து துள்ளி எழுந்தார். அந்த ஹால் முழுவதும் எதிரொலித்து விம்மும்படி, ஒரு உறுமல் உறுமிவிட்டு, கோபாவேசமாகப் பேசத்தொடங்கினார் அவர்:

"என்ன சொன்னே? அந்த ஊதாரிப்பயல் மகனுக்கா என் பெண்ணைக் கட்டிக் கொடுப்பேன்? சொத்துபத்து இல்லாத சோம்பேறி நாய்களோடேயா சம்பந்தம்? சங்கர் சொன்னானாம்;இவள் கேட்டாளாம்!இந்தவீட்டுக்குநான் அதிகாரியா?இல்லை,அவன் அதிகாரியா?"

தரையிலேகால்கள் தரிக்காமல், நிலைகொள்ளாமல் புழுங்கித் தவித்தார் தாதுலிங்க முதலியார். என்றைக்கும் இல்லாதவாறு தன் தந்தை ஏதோ கோபாவேசத்தில் அலறுவதையும், அதில் தன் பெயரும் அடிபடுவதையும் கேட்டுணர்ந்தகமலா தன் அறைக்கதவைத்திறந்துகொண்டு வெளியேவந்தாள்.கமலாவருவதைக்கண்டதும்,தாதுலிங்க முதலியார் தமது ஆக்ரோஷத்தையெல்லாம் உள்ளடக்கிக் கொண்டு, "கமலா, இங்கே வா" என்று கூப்பிட்டார். கமலா தன் தாயருகே வந்து நின்றுகொண்டு, "என்னப்பா?" என்று பயமும் வியப்பும் கலந்த குரலில் கேட்டாள்.

தாதுலிங்க முதலியார் பலவந்தமாக வரவழைத்த சாந்தபாவத்தோடு, தம் மகளிடம் பேசத் துணிந்தார்:

"இந்தா பாரு, கமலா. உன் கலியாண விசயமாக அம்மா சொன்னாள். நீ அந்த எண்ணத்தை அடியோடே மறந்துடு. நீ படிச்ச பொண்ணு; புத்திசாலி. உனக்கே தெரிய வேண்டாமா? நம்ம குடும்ப கௌரவமென்ன அந்தஸ் தென்ன? இருந்திருந்து ஒரு தறிகாரன் வீட்டுக்கா நீ மருமகளாகப் போவது...?"

தாதுலிங்க முதலியாரின் இந்தப் போதனையைக் கேட்டு கமலா தாக்குண்டாளெனினும், அவள் தடுமாறி விடவில்லை. தந்தையின் பேச்சினால் குழம்பிச் சிதறிய உணர்ச்சிகளையெல்லாம் அவள் ஒருநிலைப்படுத்தி உறுதி செய்துகொண்டு, தந்தைக்குப் பதில் கொடுக்க விரும்பினாள். எனினும் அவள் எதிர்பார்த்த மாதிரி வாயிலிருந்து உடனே வார்த்தைகள் பிறந்து விடவில்லை. தனது விருப்பத்துக்கெதிராக தன் வாழ்வையும் ஆசைக் கனவுகளையும் பாதிக்கும் விதத்தில் தன் தந்தை குறுக்கிட்டு நிற்பதை, அவளால் எடுத்த எடுப்பில் தடுத்துப் பேச இயலவில்லை. அவள் கண்களிலே கண்ணீர் மல்கிப் பெருகியது; துடிதுடிக்கும் உதட்டைப் பல்லால் அதுக்கிக் கடித்து உணர்வூட்டிக்கொண்டாள்.

கமலாவின் அந்த மௌன நிலையின் மர்மத்தை உணராதவராக, தாதுலிங்க முதலியார் "கமலா, போ. போய்ப் படி" என்று சாவதானமாகச் சொன்னார்.

ஆனால் கமலா போகவில்லை. அதற்குப் பதிலாக, அவள் தந்தையை நிமிர்ந்து நோக்கினாள்; கண்ணில் பொங்கிய கண்ணீரைக் கைவிரலால் சுண்டி விட்டுக் கொண்டாள்; கணீரென்று ஒலிக்கும் குரலில் பதில் சொன்னாள்:

"அப்பா, நான் மணி அத்தானைத்தான் கல்யாணம் செய்துகொள்வேன்!"

தமது மகளின் தைரியத்தைக் கண்டு தந்தை ஒரு கணம் மலைத்தார். ஆனால் மறுகணமே அவரது ரோஷ உணர்ச்சி

யும், கோபமும் உக்கிரகதி பெற்றன.

"அத்தான்! எந்த முறையிலடி, அத்தான்? மரியாதையா அவனை மறந்துவிடு."

"முடியாது.நான் அவரைக்காதலிக்கிறேன்."

"காதல்! காலேஜுக்குப் படிக்கப் போறேன், போறேன்னுட்டு, இந்தக் காதலைத்தான் கத்துக்கிட்டு வந்தியா?"

"அப்பா எனது இஷ்டத்துக்கு மாறாக நீங்கள் எதுவும் செய்ய முடியாது!"

"நான் உயிரோடிருக்கிறவரையில் இந்த வீட்டில் என் இஷ்டத்தை மீறி எதுவும் நடக்க முடியாது. தெரியுமா?"

"அதையும்தான் பார்க்கப் போகிறேன். கல்யாணம் செய்து கொள்ளப் போவது நான்தானே ஒழிய, நீங்களல்ல. எனது சுகதுக்கங்களைக் கவனித்துக்கொள்ள எனக்குத் தெரியும்.உங்களுடைய பணத்தாசைக்கும்,பதவியாசைக்கும் பயந்து, நான் என் வாழ்வைப் பலிகொடுக்க மாட்டேன்."

"என்னடி, பிரசங்கம் பண்றே? அந்தப் பயல் சங்கர் தான் பிரசங்கம் பண்ணிப் பண்ணிக் குட்டிச்சுவராப் போறான்னா, நீ வேறெ ஆரம்பிச்சிட்டியா? மரியாதையாப் போ உள்ளே. வீணா என் கோபத்தைக் கிளறிக் கொண்டிராதே" என்று முகமும் உதடுகளும் சிவந்து கனன்று துடி துடிக்கச் சீறி விழுந்தார் தாதுலிங்க முதலியார்.

மகளுக்கும் கணவனுக்கும் நடந்த வாக்குவாதத்தைக் கேட்டு, திகிலும் திகைப்பும் அடைந்து கல்லாய்ச் சமைந்து நின்ற தர்மாம்பாள், இன்னது செய்வதெனத் தெரியாமல் வாயடைத்து மூச்சடைத்து நின்றாள்.

உணர்ச்சியின் உத்வேகத்தோடு தந்தையின் சுடு சொற்களைத் தூக்கியெறிந்து பேசிநின்ற கமலாவால்,

தந்தையின் கோபாவேசத்தை அதிகநேரம் தாக்குப் பிடித்து நிற்க முடியவில்லை. திடீரென்று உள்ளத்தில் ஏற்பட்ட ஒரு கணத்தைரியச் சிதைவு அவளது இதயத்திலே முட்டி மோதிக் கொண்டிருந்த அழுகையையும் வேதனையையும் அணை யுடைத்து வெளிப் பாயச் செய்தது.

"அம்மா!" என்று பயங்கரமாகக் கதறிக்கொண்டே, தன் தாயின் மீது சாய்ந்து, அவளைக் கட்டிக்கொண்டு விக்கி விக்கி அழத் தொடங்கினாள் கமலா.

கமலாவின் அலறலைக் கேட்டதும்தான் தர்மாம்பாளும் தனது திக்பிரமையிலிருந்து விடுபெற்றாள். தர்மாம்பாளுக்கும் கண்ணில் கண்ணீர் கரித்து முட்டியது. தொண்டைக் குழியில் ஏதோ உருண்டோடுவதுபோல் தோன்றியது. அவள் தனது பாசக் கரத்தால் கமலாவை இறுக அணைத்துக் கொண்டு "அழாதேம்மா" என்று உள்ளடங்கிக் கம்மிப் போன குரலில் தேற்றினாள். அத்துடன் தன் கணவனையும் நோக்கி, "எதுஎதை எப்படிச் சொல்லணும்னு கிடையாதா? இப்போ இவளை அழவச்சி, என்னத்தைக் கண்டுட்டிக?" என்று கட்டிப்போன குரலில் கடிந்து கொண்டாள்.

ஆனால் தாதுலிங்க முதலியாரோ மனைவியின் பேச்சைக் கேட்பதற்காக அங்கு காத்து நிற்கவில்லை. ஹாலைவிட்டு வெளியேறி வெளி வராந்தாவுக்குச் சென்று விட்டார்; நிலை கொள்ளாது புழுங்கித் தவிக்கும் மனத்தோடு வராந்தாவில் மேலும் கீழும் வெறி பிடித்தது போல் உலவிக் கொண்டிருந்தார்.

"நல்லபிள்ளை வந்து வாய்த்தான்! எனக்கு! குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பு! பாவிப் பயல், இந்தப் பொண்ணு மனசையுமில்லெ கெடுத்து வச்சிருக்கான்!" என்று அவர் வாய்விட்டுத் தமக்குத் தாமே முனகியவாறு தமது ஆத்திரத்தைத் தணிக்க முயன்று கொண்டிருந்தார்.

அதேபோல் கமலாவும் தன் உள்ளத்திலிருந்து பொங்கிப் பொங்கியெழும் அழுகைக்கு அணை கட்டாமல் கண்ணீரைப் பெருக்குவதன்மூலம் தன் மனப் பாரத்தைக் குறைக்க முயன்று கொண்டிருந்தாள்.

# 12

"கைத்தறித் துணியை ஆதரியுங்கள்!"

கைத்தறித் துணியை மக்கள் ஆதரிக்க முன்வந்தால் கலி நீங்கி விடும் என்று 'கனம் பிரமுகர்கள்' பல்லவி பாடினார்கள்; மகாத்மா காந்தியடிகளின் பொன்மொழி களைத் தேடிப் பிடித்துச் சொல்லி மகாத்மியங்கள் பாடி னார்கள்; 'ஆதரவு அளியுங்கள்!' என்று கோஷ்டிகான வர்ஷம் பொழிந்தார்கள். பத்திரிகைகள் இந்த ஞானோப தேச தத்துவ நுட்பத்தை விளக்கி, தலையங்கங்கள் எழுதின; 'வள்ளுவர் வழிவந்த தொழிலை வாட விடலாமோ' என்று வக்கணைகள் பேசின; மக்களின் சுதேசிய பக்தியைத் தட்டி எழுப்ப முயன்றன. ஒரு சில திடீர் அபிமானிகள் கைத்தறித் துணி மீது தமக்கு ஏற்பட்ட புதிய மோகத்தைப் புலப்படுத் துவதற்காக, அத்தாட்சிபெற்றகதரைக்கூடத் துறந்துவிட்டு, கைத்தறி உடைகள் தரித்து மினுக்கித் திரிந்தார்கள்; சினிமாக் கொட்டகைகளில் சிலைடுகள் போடப்பட்டன; கலா நிகழ்ச்சிகள் நடைபெற்றன; தேசியப் பொருட்காட்சிக் களிலும் மாநாட்டுப்பந்தல்களிலும் கைத்தறி 'எம்போரிய'ங் களைத் திறந்துவைத்துச் சொற்பொழிவாற்றினார்கள்; அந்த எம்போரியங்களின் முன்னால் எலும்பும்தோலுமாய்க் காட்சியளித்துக் கையேந்தி நிற்கும் ஒரு கைத்தறி நெச வாளியின் குடும்பத்தை வர்ண சித்திரமாகத் தீட்டி வைத்து 'இவர்களை ஆதரியுங்கள்' என்று ஜிகினா தூவிய பொன்னெழுத்துக்களைப் பொறித்து வைத்து, பொது மக்களின் அனுதாபத்தைக் கவர முயன்றார்கள்; மத்திய

சர்க்கார் மந்திரியும், மாகாண சர்க்கார் மந்திரியும் கரைபோட்ட வேட்டிகளைக் கைத்தறிக்கு ஒதுக்குவதா வேண்டாமா என்று காரசாரமான வாதப்பிரதிவாதங்களை நடத்தி, கைத்தறி பிரச்னை மீது தமக்குள்ள அக்கறையை நாட்டுமக்கள் அறிய நாடகமாடிக்காட்டினார்கள்-

ஆனால்-?

இந்தத் திருப்பணிகளால் நிலைமை மாறி விட வில்லை; இவற்றால் உறங்கிக் கொண்டிருந்த கைத்தறி களெல்லாம் உசும்பி யெழுந்து இராப்பகலாய் கடகடத்து வேலை செய்யவில்லை. இதற்குப் பிறகும் கைத்தறி நெசவாளர்கள் பிழைத்துக்கிடந்தார்கள் என்றால், வேலை செய்து கூலி பெற்றுப் பிழைக்கவில்லை. ஆனால் வீடு வாசலை, நிலபுலத்தைவிற்றுத்தான் பிழைத்தார்கள்; பண்ட பாத்திரங்களை, நகைநட்டுக்களை அடகுவைத்தும், விற்றும் பிழைத்தார்கள்; தாலியை விற்றுப் பிழைத்தார்கள்; பிள்ளைகளை விலைகூவிப் பிழைத்தார்கள்; பிச்சை யெடுத்துப் பிழைத்தார்கள்: மானத்தை மரியாதையை, கற்பை, கண்ணியத்தை விற்றுத்தான் பிழைத்தார்கள்...

இதனால், நாளாரம்பத்தில் கைத்தறிப் பிரச்னை மூன்றுலகையும் ஈரடியால் அளந்து முடித்த வாமன அவதாரியைப் போல், விஸ்வரூபம் கொண்டு கைத்தறி நெசவாளிகளை, அவர்களைச் சார்ந்து வாழும் சிறு வியாபாரிகளை, இந்த நாட்டு மக்களின் பரம்பரை நலன்களை, உயிர்களைப் பலிகேட்டு நின்றது...

"ஏன், ஏன்?" என்று நெசவாளர்கள் ஏங்கினார்கள்; வியாபாரிகள் கவலை கொண்டார்கள்; பொதுமக்கள் சிந்தித்துப் பார்த்தார்கள்...

கைலாச முதலியாரும் சிந்தித்தார்; கவலை கொண்டார்.

ஆனால், தமது கஷ்டத்தின் காரணத்தைப் பற்றிய சிந்தனையோ அவருக்குமரத்துத்தடித்துப்போய்விட்டது.

இப்போது அவருக்கு இருந்தது ஒரே ஒரு கவலைதான். தொழில் நெருக்கடியிலிருந்து எப்படி மீளுவது என்பதல்ல அந்தக் கவலை; கடன்காரர் தொல்லையிலிருந்து எப்படித் தப்பிப்பது என்பதுதான் அவரது கவலை; சிந்தனை. இந்தக் கவலையால், அவருக்குஇரவெல்லாம்சிவராத்திரி ஆயிற்று; தூக்கத்துக்குக் கூட அவர்மீது கருணை இல்லை. இரவு கழிந்து பகற்பொழுது வந்துவிட்டாலோ, 'கடன்காரர்கள் வந்து நிற்பார்களே' என்ற கவலை ஒவ்வொரு கணமும் நச்சரித்துப் பயமுறுத்திப் பிடுங்கிக் கொண்டிருந்தது.

அன்றிரவு கைலாச முதலியாருக்குக் கண்ணே அயர வில்லை; படுக்கையில் கிடந்து நிலை கொள்ளாமல் அப்படியும் இப்படியும் புரண்டுப் புரண்டு புழுங்கித் தவித்துக்கொண்டிருந்தார். அவரது மனத்திலோ எண்ணற்ற சிந்தனைகள் முள்வாங்கிகளைப் போல் குத்திக் குடைந்தன; துன்புறுத்தின.

"பாவி! இந்தத் தாதுலிங்க முதலி என் குடியையே கெடுத்து விட்டானே. சண்டைக் காலத்திலே, இவன் கள்ள மார்க்கெட்டில் லட்ச லட்சமாய்ச் சம்பாதிக்கிறதுக்கு நான் தானே ஒத்தாசையா இருந்தேன். அந்த நன்றிவிசுவாசத்தைக் கூட மறந்துட்டானே. வியாபாரம் மந்தமாயிருக்கிற நேரம் பார்த்து மென்னியைப் பிடிச்சுட்டானே. ரொக்கக் கடனுக்கும் நூல் வகை பாக்கிக்கும் ஒத்தைத் தேதியிலே பணத்தைக் குடுன்னு உயிரை எடுத்துட்டானே. துரோகி! நன்றி கெட்ட துரோகி!"

அவரையும் அறியாமல் அவர் வாய் 'துரோகி!' என்று முனகிஓய்ந்தது.

தூரத்திலுள்ள போலீஸ் சாவடியில் இரவு மணி இரண்டு அடிக்கும் சேகண்டியோசை உள்வாங்கி மங்கி ஒலித்தது.

"பாவி! அவன் செய்த வஞ்சகத்தை நினைத்தால்? அன்னிக்கி அவன் எழவுக்கு ரூபாய் மூவாயிரத்தையும்

நகைகளையும் அழுது தொலைச்சேன். அத்தோடு விட்டானா? ஜவுளி நூல்கட்டுப் பாக்கி ஆறாயிரத்துச் சொச்சத்துக்கும் வக்கீலை வச்சி நோட்டீஸ் வேறே குடுத்து, என் மானத்தை வாங்கினான். அந்த ஈவிரக்கமற்றவனுக்கு என் ஜவுளியையெல்லாம் குறைஞ்ச விலைக்கு வித்து அடைச்சேன்—அவன் விளங்குவானா?

தூக்கத்தில் அவரது மகன் ஆறுமுகம் ஏதோ முனகிப் புலம்புவது காதில் விழுந்தது; அவரது மனைவி, "என்னடா ஆறுமுகம்? தூங்கு" என்று தூக்கக் கலக்கத்தில் கூறிவிட்டு அவனைத் தட்டிக்கொடுப்பதும் காதில் விழுந்தது.

கைலாச முதலியார் கண்களை இறுக மூடிப் பார்த்தார். ஆனால் அந்தக் கண்களோ மறுகணமே கொட்டக் கொட்டத் திறந்துகொண்டன.

"அவனோடே போச்சா? ஒண்ணா, ரெண்டா? அந்தத் தாதுலிங்க முதலிதான் இந்த மைனரைத் தூண்டிவிட்டானா? இல்லை. இந்த மைனர்தான் அவனைத் தூண்டிவிட்டானா? இவனுமில்லா சமயம் பார்த்து நெருக்குறான்; இவன் பாக்கிக்கு வீட்டை அடமானம் எழுதிக் கொடுத்தும், கொஞ்சம்கூட இரக்கம் காட்ட மாட்டேன்கிறானே. இந்தக் கிராதகன் கிட்டேயா நான் மாட்டிக்கிடணும்?"

கைலாச முதலியாரின் சிந்தனை வேறு திசையில் திரிந்தது.

"தாதுலிங்க முதலியார் பாக்கியை அடைச்சதில்லா, தப்பாப் போச்சி? அதைக் கண்டுக்கிட்டு அத்தனை பேருமில்லா சுத்தி வளையுதான். இந்தத் தொல்லையிலிருந்து எப்படி மீளப் போகிறேன்? அந்தக் கல்லிடைக் குறிச்சி வியாபாரி செஞ்ச மாதிரி, நாமும் கோர்ட்டிலே ஐ.பி. போட்டுட்டா என்ன? ஆனா, அவன் சொத்தையெல்லாம் பெண்டாட்டி பேருக்கு மாத்தி வச்சிட்டுல்லே அப்படிச் செய்தான். எனக்கு அதுக்குக்கூட நாதியில்லையே, வீடு,

நிலம், நகை எல்லாம் போச்சி, பெருங்காயம் இருந்த டப்பா மாதிரி, வெளி வேசத்திலே காலம் தள்ளுதேன்–அப்படியும் செய்யப் போமா? சேச்சே? அப்புறம் மானஸ்தனா வாழ வேண்டாம்? ஊரானுக்கு நாமத்தை சாத்திட்டு மான வெட்கம் இல்லாமல் தலை நிமிர்ந்து திரியுறதா–? ஆனால், இந்த உலகத்திலே எந்தப் பணக்காரன் இந்த மாதிரி மானாபிமானத்துக்கு அஞ்சுதான்? இந்தத் தாதுலிங்க முதலிமட்டும் என்னவாம்? தேயிலைத் தோட்டத்திலே இவன் அந்த ஏழை சனங்களின் வாயிலே வயத்திலே அடிச்சித்தானே சம்பாதிக்கிறான்...!"

கைலாச முதலியார் மீண்டும் புரண்டு படுத்தார். ஒரு ஆழ்ந்த பெருமூச்சு அவரது மனப்பாரத்தைக் குறைக்க முயன்று தோல்வி கண்டது. எங்கோ ஒரு பல்லி இடைவிடாது சப்தித்துக் கொண்டிருந்தது.

சேகண்டி மணியோசை நான்கு முறை ஒலித்து அடங்கியது. பக்கத்து வண்டிப் பேட்டைகளிலிருந்து அயலூருக்குப் புறப்பட்டுச் செல்லும் பார வண்டிகளின் மணியோசை இருளினூடே கலகலத்துத் தேய்ந்தது.

கைலாச முதலியார் எழுந்து சென்று ஒரு மடக்குத் தண்ணீர் குடித்துவிட்டுவந்துபடுத்தார்.

"என் பெண்டு பிள்ளைகளையெல்லாம் நான் எப்படிக் காப்பாற்றப் போகிறேன்? என் வாழ்வில் தோன்றிய பாக்கிய சுகங்களெல்லாம் இப்படி மின்னல் மாதிரியாகவா வெட்டி மறைய வேண்டும்? முருகா! நான் மேல்நிலைக்கு வராமல், பழைய பஞ்சைப் பரதேசியாகவே இருந்திருக்கக் கூடாதா? இவ்வளவு நாளும் கௌரவமாய் வாழ்ந்துவிட்டு, இனிமேலா இந்த அவக்கேடு?–எங்காவது ஓடிப்போய்விடலாமா?எங்கேஓடுவது?என் குழந்தைகளை நிராதரவாய் விட்டுவிட்டா?–வேறு வழி?–முருகா!–லோகநாயகி! என்னை ஏனம்மா சோதிக்கிறாய்? உனக்கு நான் என்ன குறை செய்தேன்?–செந்தில் ஆண்டவா! உன் திருவிளையாடலையெல்லாம் தாங்க, இந்த ஏழையிடம்

சக்தி கிடையாது. என்னை விட்டுவிடு. தயை செய்து என்னைக் காப்பாற்று-முருகா!"

கைலாச முதலியார் தம்மை மறந்தவராய் 'முருகா முருகா!' என்று வாய்விட்டுப் புலம்பிக் கொண்டார். பிறகு அந்த முருகனின் திருவுருவத்தையே மனக்கண் முன்னால் கற்பனை சொரூபமாக நிலை நிறுத்தி, முருக நாம ஸ்மரணையின் மூலம் மனத்தை ஒருநிலைப்படுத்தித் தூங்க முயன்றார்; ஆனால், அந்த முருகனுடைய சன்னிதியிலும் ஏகாம்பர முதலியாரின் இனம் தெரியாத உருவம்தான் அடிக்கொருதரம் இடையிட்டு மறித்துக்கொண்டிருந்தது.

அருணோதயப் பொழுதில் எங்கோ பக்கத்து வீட்டில் தெருவாசல் பெருக்கி, தண்ணீர் தெளிக்கும் சப்தம் கேட்கும் சமயத்தில்தான் அவருக்குக் கண்கள் லேசாகக் கிறங்கின; சிறிது நேரத்தில் அவர் தூங்கிவிட்டார்.

காலை எட்டு மணி சுமாருக்கு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த கைலாச முதலியாரை, அவரது மனைவி தங்கம்மாள் உசுப்பி எழுப்பினாள்.

"உங்களைத்தானே!"

எதிர்பாராதவிதமாக, வழக்கத்துக்கு விரோதமாக, தம் மனைவி தம்மைத் தட்டி எழுப்புவதை உணர்ந்த அவர் திடுக்கிட்டு விழித்தெழுந்தார். கண்களைக் கசக்கிக் கொண்டே, "எவனாவது வந்திருக்கானா?" என்று படபடத்துக் கேட்டார்.

"ஒண்ணுமில்லே. நம்ம ஆறுமுகத்துக்கு உடம்புக்குச் சரியில்லே. காப்பித் தண்ணிகூட வேண்டாமின்னுட்டான் காய்ச்சலானா பொரிச்சுத் தட்டுது. கிடையாகக் கிடக்கிறான். ராத்திரியே அவனுக்கு மேல் காஞ்சிது; உங்களை எழுப்பிக் காட்டலாமின்னு நினைச்சேன். தூக்கத்திலே எழுப்ப வேண்டாமின்னு இருந்திட்டேன்" என்று சொல்லி

முடித்தாள் தங்கம்.

'ராத்திரி தூங்கவா செய்தேன்?' என்று உள்ளூர முனகிக்கொண்டது கைலாச முதலியாரின் மனம்.

"சரி, மணியை அனுப்பி, உடனே டாக்டரைக் கூட்டிக் கொண்டாந்து காட்டச் சொல்லு. ஆறுமுகம் எங்கே?" என்று கேட்டவாறே கட்டிலைவிட்டு இறங்கி வந்தார் கைலாச முதலியார்.

ஆறுமுகத்திடம்போய் அவனது மார்பைத்தொட்டுப் பார்த்தார். தங்கம் சொன்னதுபோல் நெஞ்சில் தீப்பொறி பறக்காத குறையாகத்தான் சுட்டுக் கொண்டிருந்தது. கைலாச முதலியார் 'முருகா' என்று முனகியவாறே எழுந்திருந்தார். புறவாசலுக்குச் செல்லுமுன் மணியைக் கூப்பிட்டு, டாக்டரை அழைத்துவரச் சொல்லி அனுப்பி வைத்தார்.

மணி டாக்டரை அழைத்துவந்தான்.

"டாக்டர், இவர்தான் என் தந்தை" என்று கைலாச முதலியாரை டாக்டர் நடராஜனிடம் அறிமுகப்படுத்தி வைத்தான் மணி.

டாக்டர் வணக்கத்தோடு மரியாதை காட்டிக் கொண்டார். பிறகு ஆறுமுகத்தைப் பரிசோதித்துப் பார்த்தார்; வழக்கமான கேள்விகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். கைலாச முதலியாரும் தங்கம்மாளும் டாக்டர் என்ன சொல்லப் போகிறாரோ என்று ஆவலுடனும், ஆதங்கத்துடனும் நின்று கொண்டிருந்தனர்.

ஸ்டெத்தாஸ்கோப்பையும், தெர்மாமீட்டரையும் தமது தோல் பைக்குள் வைத்து மூடியவாறே டாக்டர் மணியை நோக்கி ஆங்கிலத்தில் சொன்னார்:

"மிஸ்டர் மணி, இது டைபாய்ட் ஜுரம் என்றே நான் நம்புகிறேன். ஜாக்கிரதையாகக் கவனிக்க வேண்டும். டிஸ்பென்சரிக்கு ஆள் அனுப்புங்கள். மருந்து தருகிறேன்."

பிறகு அவர் கைலாச முதலியாரிடம் திரும்பி, "ஒன்றும் பயமில்லை. ஆரஞ்சுப்பழச் சாறும், குளுகோசும் கொடுத்து வாருங்கள். நான் சாயந்திரம் வந்து பார்க்கிறேன். வரட்டுமா?" என்று கூறி வணங்கி விடைபெற்றுக் கொண்டு வெளியேறினார் டாக்டர்.

மணி அவரைப் பின்தொடர்ந்து சென்று வழியனுப்பி விட்டுத் திரும்பி வந்தான்.

" என்னப்பா மணி, டாக்டர் உங்கிட்டே என்ன சொன்னார்?" என்று ஆவலோடு கேட்டாள் தங்கம்மாள்.

மணி விஷயத்தைச் சொன்னான்.

"என்ன டைபாய்டா?.."

கைலாச முதலியார் அப்படியே தாக்குண்டு நின்றார். அவர் கண்களிலே அவரையும் அறியாமல் கண்ணீர் துளித்தது; அந்தக் கண்ணீர்த் திரைக்கு அப்பால் அந்த இனம் தெரியாத ஏகாம்பர முதலியாரின் உருவெளித் தோற்றம் பயமுறுத்துவது போல் இருந்தது.

## 13

ஆறுமுகத்துக்குக் காய்ச்சல் வந்து பத்து நாட்களுக்கு மேலாகிவிட்டது.

முந்திய நாள் இரவு முழுவதும் அவன் கண்ணே திறக்கவில்லை; முனகி முனகிப் புரண்டு கொடுத்தவாறே படுத்திருந்தான்; உடம்பில் சூடும் தணியவில்லை. கதகத வென்று கொதித்த வண்ணம் இருந்தது. தங்கம்மாளுக்கு இரவு முழுவதும் தூக்கமில்லை. ஆறுமுகத்தின் அருகிலேயே உட்கார்ந்து அவனையே கவனித்துக் கொண்டிருந்தாள்.

"சுப்பிரமணியா, உன்னைத்தாண்டா நம்பியிருக் கிறேன். பெத்த வயித்திலே பாலை ஊத்தப்பா. மோசம்

பண்ணிராதே உன் சன்னிதிக்கு இவன் பேராலே மணி யடிச்சிப் போடுதேன்" என்று அவள் மனத்துக்குள்ளாகவே ஆயிரம் தடவை நேர்ந்து கொண்டாள்; லோகநாயகி அம்மனுக்குச்சந்தனக்காப்புசாத்துவதாகநேர்ந்து,மஞ்சள் துணியில்கால்ரூபாய்க்காசைஎடுத்துமுடிந்துவைத்தாள்.

விடிந்து எட்டுமணி ஆனபிறகும் ஆறுமுகம் கண் விழிக்கவில்லை.

கைலாச முதலியாரும் ஆறுமுகத்தின் நிலைமையைக் கண்டு கவலை கொண்டவராக, இன்னது செய்வதென்று தெரியமல் டாக்டரின் வரவை எதிர்நோக்கி, கட்டிலின் மீது இடித்துவைத்த புளியாக அமர்ந்திருந்தார். காப்பி குடித்து விட்டு வருவதற்காக ஹோட்டலுக்குச் சென்றிருந்த மணி, "என்னம்மா, தம்பிக்கு எப்படியிருக்கு?" என்று கேட்டுக் கொண்டேஉள்ளேவந்தான்.

"எல்லாம் அப்படிதான் இருக்கு" என்று சலிப்புடன் கூறிவிட்டு, "மணி, அடுப்பிலே வெண்ணி போட்டிருந்தேன். காஞ்சிட்டுத்தான்னு பாரு" என்று வேண்டிக்கொண்டாள் தங்கம். மணி வெந்நீரைப் பார்ப்பதற்காக அடுக்களையுள் சென்றான்.

சிறிது நேரத்தில் டாக்டர் வந்து சேர்ந்தார். "அதோ டாக்டர் வந்துட்டாரு" என்று கணவனிடம் கூறியவாறே விலகிக் கிடந்த சேலையை இழுத்துத் தோளை மூடிக்கொண்டு எழுந்து நின்றாள் தங்கம்மாள். உள்ளே சென்றிருந்த மணியும் வெந்நீரை எடுத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். "வாங்க டாக்டர். ராத்திரிப் பூராவும் கண்ணே திறக்கலை; ஒண்ணும் சாப்பிடவுமில்லை" என்று கூறிக் கொண்டே கட்டிலை விட்டு இறங்கி வந்தார், கைலாச முதலியார்.

எல்லோருடைய முகங்களும் அருள் அற்றுக் கவலை தோய்ந்திருந்தது.

டாக்டர் ஆறுமுகத்தைப் பரிசோதித்தார். பரிசோதித்து முடித்துவிட்டு, மணியிடம் திரும்பி, "மிஸ்டர் மணி, இது மிகவும் நெருக்கடியான கட்டம். நீங்கள் ஒன்றும் பயப்பட வேண்டாம், ஒரு ஊசி போடவேண்டும்" என்று ஆங்கிலத்தில் கூறிவிட்டு, கைலாச முதலியாரிடம் திரும்பி, "பையனுக்கு ஊசி போடணும். நான் ஒரு மருந்து எழுதித் தருகிறேன். ஆளையனுப்பி வாங்கிவரச் சொல்லுங்கள். பத்துப் பத்தரைக்குள் நான் திரும்பவும் வந்து ஊசியைப் போட்டுவிட்டுச் செல்கிறேன்" என்று நிதானத்தோடு கூறிவிட்டுஒருதுண்டுத்தாளில் மருந்தின் பெயரைஎழுதிக் கொடுத்தார்.

டாக்டர்வெளிச்சென்றபிறகு,தங்கம்மாள்மணியைப் பார்த்து "ஏம்ப்பா, டாக்டர் என்ன சொன்னாரு?" என்று கேட்டாள்.

"ஒன்றும் பயமில்லைன்னுதான் சொன்னார்" என்றான் மணி.

ஏனோஅவன்குரல்கம்மிஉடைந்துகரகரத்தது.

கைலாச முதலியார் டாக்டர் எழுதிக் கொடுத்த சீட்டை எடுத்துக் கொண்டு வெளி முற்றத்துக்கு வருவதற்கும், இருளப்பக் கோனார் வந்து சேர்வதற்கும் சரியாக இருந்தது.

"முதலாளி, பிள்ளைக்கு எப்படியிருக்கு?" என்று வந்ததும்வராததுமாய்ஆவலுடன்விசாரித்தார்இருளப்பக் கோனார்.

"இன்னம் கண்ணே முழிக்கலே. இப்பதான் டாக்டர் வந்துட்டுப் போனார். சரி, வாரும் இப்படி" என்று கூறிக் கொண்டே, முன்கட்டிலுள்ள தமது கடையைத் திறந்து, பட்டறையில் அமர்ந்தார். இருளப்பக் கோனார் மரியாதையோடு வந்து அவரருகில் நின்றார்; கைலாச முதலியார் இரும்புப் பெட்டியைத் திறந்து, பணம்

வைத்திருக்கும் பெட்டியை இழுத்தார்; அதை இழுத்துப் பார்த்தபோதுதான் அவருக்குநெஞ்சுபகீரென்றது.

பெட்டியில் ஏழே ஏழு ரூபாயும், கொஞ்சம் சில்லரையும்தான் இருந்தன!

அப்போதுதான் அவருக்கு முந்திய நாள் மாலை ஒரு பாக்கி வகைக்காக, ரூபாய் இருநூறு கொடுத்தது ஞாபகம் வந்தது; அவசரத்தில் அவர் அந்தப் பாக்கியை அடைத்து விட்டாரே ஒழிய, அந்தச் சமயத்தில் கையிருப்பு எவ்வளவு என்று கவனிக்கவில்லை; வேறு எங்கேனும் ரூபாய் ஒதுங்கிக் கிடக்கிறதா என்று ஒவ்வொரு அறையாகத் துழாவித் துழாவிப்பார்த்தார். ஆனால் இரும்புப்பெட்டி பணத்தைப் பாதுகாத்துத்தான் தருமே ஒழிய, குட்டி போட்டுத் தருவதில்லையே!

'டாக்டர் எழுதிக்கொடுத்த மருந்தை வாங்க இது போதும்' என்று தமக்குத் தாமே நம்பிக்கை ஊட்டியவராய், ஏழுரூபாயை எடுத்து இருளப்பக்கோனாரிடம் கொடுத்து, "சீக்கிரம் போய் இந்த மருந்து எங்கிருந்தாலும் உடனே வாங்கி வாரும்" என்று உத்தரவிட்டார்.

இருளப்பக் கோனார் சென்ற பிறகுதான் அவருக்குப் பல சந்தேகங்கள் எழுந்தன. 'ஒரு வேளை மருந்து கிடைக்கா விட்டால்? மருந்து கிடைத்தாலும் விலை அதிகமா யிருந்தால்?'

கைலாச முதலியார் இப்படித் தமக்குத் தாமே மனம் உளைந்து கலங்கிக் கொண்டிருக்கும் போதுதான் அந்தக் கிங்கரக் குரல் திடீரென்று ஒலித்தது.

"என்ன'வே, கைலாச முதலியார்! இருக்கே'ரா?"

ஸெண்ட் மணம் கமகமக்க, மைனர் முதலியார் அழுத்தலாக வந்து கைலாச முதலியாருக்கு எதிரே கிடந்த பெஞ்சின் மீது அமர்ந்தார்.

மைனர் முதலியாரைக் கண்டதுமே, கைலாச

முதலியாருக்குக் குலைநடுக்கம் எடுத்து விட்டது. "பாவி, எமன் மாதிரிநேரிலேயே வந்துவிட்டானே"என்று அவரது மனம் கறுவிக் கொண்டது. எனினும், அவர் வாய் விட்டு, "வாங்கய்யா"என்றுகூறிக்கொண்டார்.

"என்ன‘வே, நானும் ஆள்மேலே ஆள் அனுப்பிப் பாத்துட்டேன். ஒரு செப்புக் காசு நகர மாட்டேங்குதே!" என்றுஎகத்தாளமாகக்கேட்டார்மைனர் முதலியார்.

"என்ன முதலியார்வாள், நிலைமை தெரியாதா, உங்களுக்கு? பணம் வந்தால் நானே கொண்டு வந்து தரமாட்டேனா?என்றுகெஞ்சாதகுறையாய்ச்சொன்னார் கைலாசமுதலியார்.

"எனக்கா தருவேரு?அந்தத்தா துலிங்கமுதலியாருக்குக் கொண்டு கொடுப்பீரு. அவரு பெரிய பணக்காரரு. அவருக்குப் பாக்கி வைக்கக் கூடாது. என்ன அப்படித் தானே?"

"அதெல்லாமில்லை. அவர் கோர்ட் மூலமாய் நடவடிக்கை எடுக்கிறதுன்னு ஆரம்பிச்சார். அதனாலே தான்..." என்று இழுத்தார் கைலாச முதலியார்.

"நானும் ஏன் அப்படிச் செய்யலைன்னு புத்தி சொல்லிக் கொடுக்கேரா?" என்று எகத்தாளமாகப் பேசி விட்டு, "இந்தா அந்தான்னு மாசக்கணக்கா சொல்லிக்கிட்டு வாரீரே. இந்த ஓட்டை வீட்டை அடமானம் வச்சதோடே, உம்மகடன் தீர்ந்துபோச்சுன்னு நினைச்சிட்டீரா?இல்லெ, கேக்கிறேன்-" என்று முகத்தில் உக்கிர நெருப்பு கனன்று மிஞ்ச, முறைத்துப் பேசினார் மைனர்.

கைலாச முதலியாருக்குப் பதில் சொல்ல நாக்கே வளையவில்லை.

"கோபிக்காதிங்க. வந்து-"

"பின்னே நீர் செஞ்ச வேலைக்கு, கோபிக்காம, உம்மோடேகொஞ்சவாசெய்வாங்க?மரியாதையா எனக்குச் சேர வேண்டியதுக்கு இந்த வாரக் கடேசிக்குள்ளே ஒரு வழி பண்ணியாகணும். இல்லேன்னா, நான் பொல்லாத வனாயிருவேன்?" என்று ஆத்திரம் பொங்கப் பயமுறுத்தி விட்டு, இடத்தை விட்டு எழுந்து நின்றார் மைனர் முதலியார்.

அவருக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் கைலாசமுதலியார் திண்டாடிக்கொண்டிருந்தவேளையில், இன்னொருவரும் கடன் பாக்கிக்காக வந்துவிட்டார். வந்தவரைக் கண்டதும் கைலாச முதலியாரின் உள்ளம் படபடத்துக்குதித்தது; வாயே அடைத்துப்போய்விட்டது; கைகால்கள் குளிர்ந்துவிறைப்பதுபோலிருந்தன.

"என்ன முதலியார்வாள் முதலாளி அனுப்பிச்சாக. ரெண்டிலே ஒண்ணு கேட்டுட்டு வரச் சொன்னாக" என்று சுருங்கச்சொல்லிவிளங்கவைத்தார்புதிதாகவந்தவர்.

கைலாச முதலியார் திக்கிமுக்கி அவருக்குப் பதில் சொல்லமுனைந்தார்.

"இந்தாங்க, பிள்ளைவாள். இன்னம் கொஞ்ச நாளைக்குப் பொறுத்துக்கிடச் சொல்லுங்க. அப்புறம் நானே-"

இடத்தைவிட்டு எழுந்து நின்ற மைனர் அருணாசல முதலியார் உதட்டில் ஏளனம் நிறைந்த புன்னகை தோன்ற, கைலாச முதலியார் மீது மீண்டும் சீறி விழுந்தார்.

"என்ன'வே முழுங்குறேரு? கடன்காரனுக்குப் பதில் சொல்லிஅழத்தான் உமக்குநேரமிருக்கும்போலிருக்கு.ஏன்? அதுக்கும் ஒரு சம்பள ஆளைப் போட்டு வையுமேன்."

கைலாச முதலியாருக்கு உடம்பில் ஆயிரம் தேள்கள் ஏக காலத்தில் கொட்டுவது போலிருந்தது. உள்ளத் தினுள்ளே ஏதோ ஒரு உணர்ச்சி களுக்கென்று குன்றிக்

குமைந்தது. அவரது கண்கள் சிவுச்சிவென்று கலங்கிச் சிவந்தன; உதடுகள் உணர்ச்சி வசப்பட்டுத் துடித்து நடுங்கின.

"உங்களுக்குப் பாக்கி தரணுமின்னா, அதுக்காக இப்படிமானக்குறைவாகப்பேசாதிங்க"என்றுகெஞ்சினார் கைலாச முதலியார். அவரது குரல் உள்ளடங்கி உடைந்து ஒலித்தது.

மைனர் முதலியாருக்கு உடனே அனுதாபம் பிறந்து விடவில்லை; ஆத்திரம்தான் வந்தது. "அடேயப்பா! பெரிய மானஸ்தன் பேச்சைப் பாரு. நீர் கெட்ட கேட்டுக்கு உமக்கு கோயில் தர்மகர்த்தா உத்தியோகம் வேறெ. வெட்கமில்லெ? ஆசையிருக்கு தாசில் பண்ண; அதிர்ஷ்டம் இருக்கு கழுதை மேய்க்க!" என்று நீட்டி முழக்கினார் மைனர்.

"முருகா!" என்று இரு செவியையும் பொத்திப் பரிதாபகரமாய் முனகினார் கைலாச முதலியார். "நல்லாயிருப்பீங்க. நானே நொந்து போய்க் கிடக்கிறேன். என்னை மேலும் மேலும் துன்பப் படுத்தாதீங்க" என்று அழாக்குறையாகக் கெஞ்சினார்.

மைனர் முதலியாருக்குக் கைலாச முதலியார் ஏதோ சொல்லக் கூடாததைச் சொல்லிவிட்டது போல் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. தொண்டையைக் கனைத்து இருமி விட்டு, ஆக்ரோஷமாகச் சீறி விழுந்தார்.

"உம்மை ஏனையா துன்பப் படுத்தப்போறேன், பாக்கிப் பணத்தைக் கீழே எண்ணி வச்சிட்டா? கோபம் மட்டும் மூக்குக்கு மேலே முட்டிக்கிட்டு வருதே. வாங்கின பாக்கியைக்கொடுக்கிறதுக்குவக்குஇல்லேன்னா,ஆத்திலே குளத்திலே விழுந்து சாகப்படாது?ஒருமுழக் கயித்துக்குமா விதியத்துப் போச்சு?"

கைலாச முதலியார் "ஐயோ!" என்று கம்மிக் கரகரத்த குரலில் அலறிக் கொண்டு பெட்டியடி மேசைமீது குப்புற விழுந்தார்; அவர் உடல் குலுங்கியது.

கீழே ஏதோ வார்த்தை தடிப்பதாக உணர்ந்த மணி, மாடியிலிருந்து அவசர அவசரமாகக் கீழே இறங்கிவந்தான்; ஆனால் அவன் வருவதற்குள் மைனர் முதலியாரும் அவருக்குப் பின் வந்த ஆசாமியும் வெளியேறிவிட்டார்கள்.

மணி தன் தந்தை இருந்த நிலையைப் பார்த்தான். கூப்பிடுவோமா வேண்டாமா என்று ஒருகணம் தயங்கினான்.

"அப்பா-அப்பா"

மேஜைமீது தலை சாய்த்துக் கிடந்த கைலாச முதலியார் தம் மகனின் முகத்திலேயே விழிக்கக் கூசினார். அவரது உடலெல்லாம் குன்றிக் குறுகி ஒடுங்குவது போலிருந்தது.மகனை ஏறிட்டுப் பார்க்காமலே, "நீ போடா. ஒண்ணுமில்லே"என்று கட்டி வறண்டுபோன அடிக்குரலில் கூறினார்.

மணி நிலைமையை ஊகித்தவனாக ஒன்றும் பேசாமல் வீட்டுக்குள் திரும்பிச் சென்றான்.

மகன் சென்ற பின்னர் கைலாச முதலியார் தமது வேட்டி முனையை எடுத்துக் கண்ணில் ததும்பிக் கரித்து நின்ற கண்ணீரைத் துடைத்துக்கொண்டார்; கலங்கிய கண்களோடு தலை நிமிர்ந்தார்.அவருக்கு எதிரே ஆறுமுகப் பெருமான் கல்யாண சொரூபனாய் அசையாது நின்றார்; அந்தப் படத்தையே வெறித்துப் பார்த்தவாறு வெந்து சாம்பும் உள்ளத்தோடு கல்லாய்ச் சமைந்திருந்தார் கைலாச முதலியார்.

"முதலாளி!"

உணர்வு மீண்ட முதலியார் திரும்பிப் பார்த்தார். எதிரே இருளப்பக்கோனார் வெறுங்கையோடு நின்று கொண்டிருந்தார்.

"என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டார் முதலியார்.

"மருந்து விலை பதினெட்டு ரூபாயாம்!" என்று சொல்லமாட்டாமல் சொல்லி முடித்தார் கோனார்.

"பதினெட்டு ரூபாயா!" பிளந்த வாய் மூடாமல் பிரமை பிடித்தவர்போல் சுவரில் சாய்ந்தார் முதலியார்; அவரது கண்களிலிருந்து நீர் பொங்கி வழிவதை அவரால் தடுக்க முடியவில்லை.

இருளப்பக் கோனாருக்கு நிலைமையைப் புரிந்து கொள்ள வெகுநேரம் ஆகவில்லை. அவர் மனம் இருண்டது. ஆனால் மறு கணமே அவர் மனத்தில் ஒளி வீசியது. தமது முதலாளியின் பதிலையே எதிர்பாராதவராக, "முதலாளி, கவலைப்படாதிங்க. எப்படியும் மருந்தை வாங்கிக்கிட்டு வந்திருதேன்" என்று கூறிவிட்டு, ஓட்டமும் நடையுமாக வெளியேறினார் இருளப்பக் கோனார். அவரது மனக்கண் முன்னால் அவரது மனைவி மாரியம்மாளின் கழுத்தில் கிடந்த பிள்ளையார் தாலி நம்பிக்கை ஒளி பரப்பி அவரது கால்களுக்குப் புத்துணர்வும், புது வலிவும் ஊட்டியது!

கைலாச முதலியார் உயிரும் உணர்வுமற்ற கற்சிலை போல் ஆடாது அசையாது அமர்ந்திருந்தார். அவரது கண்ணிலிருந்து கொப்புளித்துப் பெருகும் நீர்த் திரைக்கு அப்பால், எதிரே ஆறுமுகப் பெருமான் கொவ்வைச் செவ் வாயில் குமிண் சிரிப்புக் குதூகலித்துப் பொங்க, தமது பக்தனை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண் டிருந்தார்.

கைலாச முதலியாரின் உள்ளம் காளவாய் நெருப்பி லிட்டது போல் வெந்து கனன்று நீறிக் குமைந்தது. அவரது சித்த வெளிக்குள்ளே கோடானு கோடி எரிமலைகள் தமது அடிவயிற்றைத் திருகிக் கலக்கும் வேதனையைத் தாங்க மாட்டாமல், நெருப்பையும் அக்கினிக் குழம்பையும் புகையையும் புழுதியையும் ஓங்கரித்து வாந்தியெடுக்கப் போவது போல் குமுறிக் கொதித்துக் கொண்டிருந்தன; பிரளய கால ஊழி நாசம்போல், அவரது உள்ளத்தில்

எண்ணிறந்தமகாசமுத்திரப்பரப்புக்கள்பொங்கியெழுந்து, ஆயிரம் தலை உயர்த்திய ஆதிசேடனைப்போல் தங்கள் அலைக்கரங்களை வீசிப் புடைத்து ஆர்ப்பரித்தன. அவரது சின்னஞ்சிறு இருதயமும் கொதிப்புற்ற மூளையின் முகுளத் தலமும் பிரபஞ்ச கோளங்களைப்போல வீங்கிப் புடைத்துப் பருத்து அசுர வேகத்தில் சுறங்கிச் சுழல்வது போலிருந்தன.

கைலாச முதலியார் தமக்கு எதிரே தோன்றிய ஆறுமுகப் பெருமானை, திரிபுரத்தையும் எரித்த ருத்திரனைப்போல் கண்ணில் தீப்பொறி பறக்க வெறித்து நோக்கினார்.

அவரது எண்ணக் குகையிலே திசைமாறிச் சுழலும் எண்ணற்ற உணர்ச்சிச் சுழிப்புக்கள் குமிழியிட்டுக் கொப்புளித்துப் பெருகின.

-"முருகா! என் அப்பனே! எனக்கு ஏனப்பா இந்தச் சோதனை? என்னை ஏன் இப்படி சந்தி சிரிக்க வைக்கிறாய்? உனக்கு நான் என்ன குறையப்பா வைத்தேன்? கோயில் சொத்தைத் திருடித் தின்றவர்களெல்லாம் நல்ல முறையில் வாழும்போது, தெய்வத் திருப்பணியில் ஒரு குறையும் வைக்காத எனக்கா இந்த நிலைமை? எனக்கா இந்த அவமானம்? பதில் சொல்.

-"சொல்ல மாட்டாயா? சிரித்துக் கொண்டா நிற்கிறாய்? நான் படும் அல்லலைக் கண்டு உனக்குச் சிரிப்பா வருகிறது? என் மீது உன் சித்தம் இறங்கவில்லை? கள்ளமார்க் கெட்காரனுக்குத்தானா உன் கருணாகடாட்சம்? அடே, கல் நெஞ்சுக்காரா! என் வீடு வாசல் நிலம் புலம் எல்லா வற்றையும் சூறையாடி வாரியிறைக்க வைத்ததும் காணா தென்று என் குழந்தையையுமா பலிகேட்டுச் சிரிக்கிறாய்? பெற்றெடுத்த பிள்ளைக்கு ஒருவேளை மருந்து வாங்கிக் கொடுக்கக்கூட விதியற்றுச் செய்து விட்டாயே. நீ தெய்வம்தானா?

-"நீயா தெய்வம்? இல்லை, நீ ஈரநெஞ்சமற்ற வெறுஞ் சித்திரம்தானா? பணக்காரர்கள் எங்களை ஏமாற்றிக் கொள்ளையடிப்பதற்காக, பிடித்து வைத்த பொம்மை தானா? நீ உண்மையிலேயே தெய்வமானால் நல்லவனை ஏன் துன்புறுத்துகிறாய்? ஏமாற்றுகிறவனை ஏன் வாழ வைக்கிறாய்? சீ! நீ ஏழைகளுக்குத் தெய்வமல்ல. பணக்கார னுக்குத் தெய்வம்; பணக்காரனுக்குப் பங்காளி!

-"இனி உன்னை நம்பி என்ன பலன்? நீ என்னை இனியா கௌரவம் கொடுத்து வாழவைக்கப் போகிறாய்? கடன்காரர்கள் முன்னால் நானும் என் மனைவி மக்களும் கதிகலங்கி நிற்பதைத் தடுத்து ஆட்கொள்ளப் போகிறாயா? இல்லை, இல்லை..."

கைலாச முதலியார் சீறிச் சிவந்த கண்களோடு அந்தச் சித்திரத்தைச் சுட்டெரித்து விடுவதுபோல் பார்த்தார். அந்தச் சித்திரத்துக்குப் பின்னால், அந்த இனம் தெரியாத ஏகாம்பர முதலியாரின் குரக்கு வலித்த பிணக் கரங்கள் கைலாச முதலியாரை வாவாவென்று அழைப்பது போ லிருந்தன; அதே கணத்தில் மைனர் முதலியாரின் அந்தக் கடைசி வார்த்தைகள், விஷம் தோய்ந்த சொல்லம்புகள் அவரது உள்ளத்தில் புகுந்து தைத்தன; அந்த அவமான கோஷம் அண்ட சராசரங்களையும் உலுக்கிக் குலுக்கும் அதிர்வேட்டைப்போல் பயங்கரமாக பன்மடங்காக விம்மி விம்மி ஒலித்து வீங்குவதுபோல் அவரது உள்ளத்தில் உணர்வு தட்டியது.

"ஒரு முழக் கயித்துக்குமா விதியத்துப் போச்சு? ஆத்திலே குளத்திலே விழுந்து சாகப்பிடாது? ஒரு முழக் கயித்துக்குமா விதியத்துப் போச்சு? ஒரு முழக் கயித்துக்குமா-"

கைலாச முதலியார் தமது காதில் யாரோ கொதிக்கின்ற ஈயத்தைக் காய்ச்சி ஊற்றி விட்டதுபோல் திடீரென்று இரு காதுகளையும் இறுகப் பொத்திக்

கொண்டார். ஆனால் அவரது மனக் கதவை இழுத்து மூடுவதற்கோ அவருக்கு மார்க்கமே தெரியவில்லை...

திக்பிரமை பிடித்ததுபோல் வீற்றிருந்த கைலாச முதலியார் தங்கத்தின் குரல் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தெழுந்தார்.

"உங்களைத்தானே, எந்திரிச்சதிலேயிருந்து பல்லு கூடத் தேய்க்காம இப்படிக் கவலைப்பட்டுக்கிட்டிருந்தா? வாங்க, சாப்பிட" என்று அருமையுடன் அழைத்தாள் தங்கம்.

"இப்போ சாப்பாடு ஒண்ணுதான் பாக்கி" என்று சலித்துக் கொண்டார் முதலியார்.

"அதுக்காக? எல்லாம் திருச்செந்தூருக்கு நேந்திருக்கேன். நம்ம ஆறுமுகத்துக்கு ஒரு குறையும் வராது. வாங்க."

கைலாச முதலியார் இடத்தைவிட்டு எழுந்திருந்து தங்கத்தைப் பின் தொடர்ந்தார். வீட்டுக்குள் வந்ததும் திரும்பவும் ஏதோ மனம் மாறியவராகத் திடீரென்று நின்றார்; தங்கம் அவரை அர்த்த பாவத்தோடு திரும்பிப் பார்த்தாள்.

"எனக்குச் சாப்பாடு வேண்டாம். பசியே இல்லெ. மச்சியிலே போய் இருக்கேன். டாக்டர் வந்தா கூப்பிடு" என்று சாவதானமாகக் கூறிவிட்டு மாடிப்படிகளில் ஏறி மேலே சென்றார் கைலாச முதலியார்.

கணவன் மேலே ஏறிச்சென்று மறைவதைக் கவனித்துக் கொண்டு நின்ற தங்கம் ஆழ்ந்த பெருமூச்சு விட்டுவிட்டு, ஆறுமுகத்தினருகே சென்றாள்; மணி ஆறுமுகத்துக்குப் பக்கத்தில் அமர்ந்து, "தம்பி, தம்பி, ஆறுமுகம்" என்று கூப்பிட்டு, அவனுக்குப் பிரக்ஞை மீளுகிறதா என்று பார்த்துக்கொண்டிருந்தான்.

சிறிது நேரத்தில் ஆறுமுகம் லேசாக அசைந்து

கொடுத்தான்; கண்ணைத் திறந்து பரக்கப் பரக்க விழித்தான்; அவனது முகத்தில் புதியதொரு களை தோன்றுவது போலிருந்தது.

"இந்த பாருடா ஆறுமுகம், அண்ணன் கூப்பிடுதான் பாரு" என்று பாசமெல்லாம் தோய்ந்து கலந்த வார்த்தைகளில் அருமையோடு பேசினாள் தங்கம்.

ஆறுமுகத்தின் முகத்தில் மெல்லிய புன்னகை வதங்கிச் சாம்பியது; அண்ணனையும் தாயையும் வெறித்து நோக்கினான். ஆனால் மறுகணமே அவன் கண்கள் ஏறச் சொருகின; வெள்ளை விழி பிதுங்கி பயங்கரமாகச் சுழன்றது; மூச்சு கொர கொரத்துத் திணறத் தொடங்கியது.

தங்கம் பதறினாள்.

"என்னடா இது? ஏண்டா இப்படி மயங்குதே? வயித்தை என்னமோ பண்ணுதேடா- ஆறுமுகம்- ஆறுமுகம்" என்று கலங்கிக் குழம்பிய குரலில் பரிதவித்தாள் தங்கம்.

இந்தச் சமயத்தில் டாக்டர் வந்து சேர்ந்தார்; டாக்டரைக் கண்டதும் தங்கம்மாளின் கலங்கிய மனத்தில் சிறு தெளிவு, சிறு நம்பிக்கை பிறந்தது.

"டாக்டரையா, என் பிள்ளையைப் பார்த்து ஒரு நல்ல வார்த்தை சொல்லுங்கையா" என்று குழறினாள் தங்கம். பிறகு மணியிடம் திரும்பி, "மணி, அப்பாவைக் கூப்பிடு" என்று வேண்டிக் கொண்டாள். மணி எழுந்து அவசர அவசரமாக மாடிப்படி ஏறினான்.

டாக்டர் மௌனமாகச் சென்று ஆறுமுகத்தின் கையைப் பிடித்துப் பார்த்தார்; மூக்கின் முன்னால் விரலை வைத்துப் பார்த்தார். ஆறுமுகத்தின் கை 'கொளக்' கென்று விழுந்தது.

"டாக்டர், டாக்டர்" என்று கத்தினாள் தங்கம்.

டாக்டர் குனிந்த தலைநிமிராமல் நின்றார்.

தங்கத்துக்கு விஷயம் புரிந்து விட்டது. "போயிட்டியாடா மகனே!" என்று அவள் அலறினாள்; அவளது கதறல் அந்த வீட்டின் முகட்டையே பிய்த்துப் பேர்த்தெறிவது போல் எதிரொலித்து விம்மியது...

மணியின் வரவை எதிர்நோக்கி வெளி வராந்தாவில் வந்து நின்று கொண்டார் டாக்டர்.

இருளப்பக்கோனார் மேல் மூச்சு வாங்க ஓட்டோடியும் வந்தார். ஆனால் அவர் வீட்டுவாசலை நெருங்குவதற்குள்ளாகவே, உள்ளிருந்து பொங்கியெழுந்த தங்கத்தின் அழுகுரல் அவருக்கு விஷயத்தைத் தெரிவித்து விட்டது. அவரது கால்கள் குழலாடிச் சோர்ந்தன; அவர் அப்படியே வாசற் புறத்திலேயே திடுக்கிட்டு நின்று விட்டார். அவரது கையில் இருந்த மருந்துப் பெட்டி பிடி தவறிக் கீழே விழுந்து சப்தித்தது. உடைந்து கசியும் ஊசி மருந்து அந்த அட்டைப் பெட்டியை நனைந்து வழிந்தோடியது!...

திடீரென்று தங்கம்மாளின் பிரலாப ஓலத்தையும் மிஞ்சிக் கொண்டு, "அப்பா!" என்ற கோடையிடி அலறல் மாடிப்புறத்திலிருந்து அதிர்ந்து ஒலித்தது; தொடர்ந்து இடி விழுவது போல் 'திடு' மென்ற பேரோசையும் கேட்டது.

வெளியே நின்று கொண்டிருந்த டாக்டரும் இருளப்பக்கோனாரும் விழுந்தடித்துக் கொண்டு மாடிக்கு ஓடினார்கள்.

மாடியில், பூஜை அறையை ஒட்டியிருந்த வெளி வராந்தாவில், மணி அலங்கோலமாக விழுந்து கால்பரப்பிக் கிடந்தான்; அவனது மண்டையிலிருந்து குங்குமச் சேறு போன்ற ரத்தம் கொழுகொழுத்துப் பொங்கி வழிந்து கொண்டிருந்தது.

டாக்டர் சிறிதுகூடத் தாமதிக்கவில்லை. இருளப்பக் கோனார் போட்டிருந்த மேல் துண்டை இழுத்துப் பிடுங்கி,

மணியின் தலையில் மடித்து வைத்துக் கட்டினார். இருளப்பக் கோனார் 'முதலாளி முதலாளி' என்று கூப்பிட்டுக் கொண்டே பூஜையறைக் கதவை இடி இடியென்று இடித்தார். பதில் இல்லை. கதவு உட்புறம் தாளிடப்பட்டு இருந்தது.

இதற்குள் இருளப்பக் கோனாரை டாக்டர் அவசர அவசரமாகக் கூப்பிட்டார். இருளப்பக் கோனார் யந்திரம் மாதிரி டாக்டரிடம் திரும்பி ஓடினார். அவரது வயோதிக உடலில் புதிய தெம்பும் பலமும் எங்கிருந்தோ வந்து குடிகொண்டுவிட்டது போலிருந்தது. எனினும் உணர்ச்சிக் கொந்தளிப்பால் அவர் உடல் படபடத்துப் பதறியது.

"பெரியவரே, மணிக்குப் பலத்த காயம். உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகணும். வெளியே என் கார் நிக்குது சீக்கிரம் இவரைத் தூக்குங்கள்" என்று அவசர அவசரமாகப் பேசி முடித்தார்.

இருளப்பக் கோனார் பொங்கிவரும் அழுகையை உதட்டைக் கடித்து உள்ளடக்கிக் கொண்டு, மணியைப் பிடித்துக் தூக்கினார்; டாக்டரும் அவருக்கு ஒத்தாசையாக ஒரு புறத்தைப் பிடித்துக் கொண்டார். இருவரும் சிறிதும் காலம் தாழ்த்தாமல் மணியைத் தூக்கிக்கொண்டு மாடியை விட்டுக் கீழிறங்கி வந்தார்கள்.

அந்த அலங்கோலக் காட்சியைக் கண்டு தங்கம்மாள் "ஐயோ!" என்று அலறினாள். "டாக்டரையா, எம் புள்ளைக்கு என்னய்யா நேர்ந்துட்டுது?" என்று புலம்பினாள்.

"ஒண்ணுமில்லேம்மா" என்று சொல்லியவாறே டாக்டர் நடை இறங்கினார். இருளப்பக் கோனார் மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தவாறே, மணியைக் காரில் கொண்டு போய்ச் சேர்த்தார்.

"பெரியவரே, நீர் ஆகவேண்டியதைக் கவனியும்; நான் வருகிறேன்" என்று கூறியவாறே ஸீட்டில் தாவி

உட்கார்ந்தார் டாக்டர். மறுகணமே கார் விருட்டென்று புறப்பட்டுச் சென்றது.

"கோனாரே,என்ன நடந்தது?என்ன?சொல்லுமேன்!" என்று அழுகையுடன் அழுகையாய்ப் பதறிப் போய்க் கேட்டாள் தங்கம்மாள்.

இருளப்பக் கோனார் பதிலே கூறாமல் மடமட வென்று மாடிப்படி வழியாக மேலேறிச் சென்றார்; அவசர அவசரமாகப் பூஜையறைக் கதவருகே சென்று கதவைப் பலங்கொண்ட மட்டும் தட்டினார். "முதலாளி, முதலாளி" என்று கத்தினார். பிறகு இன்னது செய்வதென்று தெரியா மல் மொட்டை மாடிக்கு ஓடி, பூஜையறை வெளிச்சுவருக்கு மேலாக இருந்த உயரமான ஜன்னலின் மீது தொத்திநின்று, பூஜையறைக்குள்ளே பார்வையைச் செலுத்தினார்.

பூஜையறைக்குள்ளே கிழக்கே பார்த்திருக்கும் பூஜை மாடத்துக்கு எதிரே, முகட்டின் உத்திரக்கட்டையிலிருந்து ஒரு முழக்கயிற்றில் கைலாச முதலியாரின் உயிரற்ற சடலம் ஊசலாடிக்கொண்டிருந்தது; அந்தக்காட்சிக்குப்பின்னணி தீட்டியதுபோல், உதட்டில் ததும்பிய புன்னகை மறை யாமல், கண்களிலே துள்ளும் களிப்புக் குறையாமல், வள்ளி தெய்வானைமீது போட்ட கையை எடுக்காமல் அபயஸ் தானம் காட்டும் கையைச் சுருட்டி மடக்காமல், நிர்க்குண நிச்சிந்தையனாய் நிற்கும்பன்னிருகைவேலனின் திருவுருவச் சித்திரம் பூஜை மாடத்தில் தொங்கிக்கொண்டிருந்தது!

## 14

கைலாச முதலியாரின் மரணச் செய்தி காட்டுத்தீ போல் பரவியது.

சிறிது நேரத்தில் ஆணும் பெண்ணுமாக அந்தத் தெருவிலுள்ளவர்கள் அனைவரும் அங்குகூடிவிட்டார்கள்;

தன்னந் தனிமையில் நிர்க்கதியாக அழுது புலம்பித் தவித்த தங்கம்மாளோடுவந்திருந்தபெண்கள் அனைவரும்சேர்ந்து அழத்தொடங்கி, தங்கள் அனுதாபத்தைக் காட்டிக் கொண்டார்கள். வந்திருந்த ஆண்களின் துணையோடு இருளப்பக் கோனார் மாடியிலுள்ள பூஜையறைக் கதவை உடைத்து, கயிற்றை அறுத்து, கைலாச முதலியாரின் உயிரற்ற சடலத்தைக் கீழே இறக்கிக் கொண்டு வந்தார். தன்னைக் கைப்பிடித்து மணந்த கணவனின் உடலைக் கண்டதும், தங்கம் அதன் மீது விழுந்து முகத்திலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறிப் புலம்பினாள்.

கைலாச முதலியார் தூக்கிட்டு இறந்துபோன போதிலும் அவரது முகம் விகாரமாயிருக்கவில்லை; சோர்ந்து படுத்துறங்கும் நோயாளியைப் போல் அவர் தோற்றமளித்தார்; வாயும் கைகளும் கிட்டித்து இறுகிப் போயிருந்தன; முகத்தில் நிம்மதி ததும்புவது போலிருந்தது. கடன்காரர்களையும், கஷ்டங்களையும், கடவுளையும் ஏமாற்றிவிட்டுத் தப்பித்துச் செல்கிறோம் என்ற இறுதிநேர எண்ணத்தில் பிறந்த நிம்மதியோ, என்னவோ?

தந்தையும் மகனும் ஒரே தினத்தில் காலன் வாய்ப்பட்ட கோரத்தைக் கண்டு வந்திருந்த பெண்கள் கண் கலங்கினார்கள்; தங்கள் தாலிப் பாக்கியம் எப்படி எப்படியோ என்ற அச்சத்தால் உள்ளம் நடுங்கினார்கள்! அந்தப் பயங்கரக் காட்சியைக் காணவே அஞ்சினார்கள்; கூசினார்கள்.

வீட்டுக்குள்ளிருந்துபெண்களின் அழுகையும் ஓலமும் இடைவிடாது சப்திக்கும் கடலலையைப் போல், கும் மென்று இரைந்து எதிராலித்துக் கொண்டிருந்தது. இருளப்பக்கோனார் இன்னதுசெய்வதெனத் தெரியாமல், வெளி முற்றத்தில் ஒரு மூலையில் உட்கார்ந்து வாயில் வேட்டியை வைத்துப் பொத்திக் கொண்டு, விக்கி விக்கி அழுது கொண்டிருந்தார். வந்திருந்த தறிகாரர்களும், வியாபாரிகளும் வெளி முற்றத்தில் கிடந்த பெஞ்சியிலும்

திண்ணையிலும் தரையிலுமாக உட்கார்ந்து, அந்தத் துக்ககரமான சம்பவத்தைப்பற்றிப் பேசி, தத்தம் மனப்பாரத்தைத் தணித்துக் கொண்டிருந்தார்கள்.

"இருந்திருந்து இவருக்கு இந்தக் கதி வந்திருக்க வேண்டாம்.எவ்வளவு நல்ல மனுசன்!" என்று கூறினார் ஒரு நெசவாளி.

"நல்ல மனுசனைத்தான் உலகத்திலே பிழைக்க விடுறதில்லையே. எல்லாம் அந்தப் பெரிய முதலாளியும், மைனர்வாளும் சேர்ந்து செஞ்ச வேலையாலேதான் இவுக கதி இப்படியாச்சி!" என்று பக்கத்திலிருந்த வடிவேலு முதலியார் ஆத்திரப்பட்டுக் கொண்டார்.

"வே, வீணா எதுக்கு அவுஹ பேரையெல்லாம் இழுக்கிய? என்னமோ கைலாச முதலியார்வாளுக்கு விதிச்ச விதி அவ்வளவுதான்!" என்று அந்தப் பேச்சைத் தட்டிக் கழித்தார் சுப்பையா முதலியார்.

சுப்பையா முதலியாருக்குத் தக்கவாறு பதில்கொடுக்க வேண்டுமென்று வடிவேலு முதலியார் நினைத்தார். ஆனால் சந்தர்ப்பம் சரியில்லை யென்பதை உணர்ந்து, தம் மனத்திலிருந்து துள்ளி வந்த பதிலைப் பல்லைக் கடித்து உள்ளமுக்கிக் கொண்டு, "விதியாமில்லெ!-என் வாயிலே என்னமாத் தான் வருது-?" என்று கூறியவாறே, சுப்பையா முதலியாரைமுறைத்துப்பார்த்துக்கொண்டார்.

இதற்குள் இன்னொரு சிறு வியாபாரி, ஆழ்ந்த பெரு மூச்செறிந்தவாறே, "என்னமோ, கைலாச முதலியார் கதை முடிஞ்சி போச்சி. இருக்கிற நிலைமையிலே யாரார் கதி எப்படியாகப் போவுதோ? இனிமே நம்ம கதை என்னென்னைக்கோ?" என்று நீட்டி முழக்கிச் சலித்துக் கொண்டார்.

"பாவம், அந்தச் சின்னவனுமில்லெ செத்துப் போனான். மணிக்குப் பலத்த அடியாம். ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிருக்காகளாம். கடைசி நேரத்திலே

செத்தவுங்க முகத்தைப் பார்க்கக்கூட அவனுக்குக் குடுத்து வைக்கலெ போலிருக்கு!" என்றது மற்றொருகுரல்.

"அதுவும் ஒரு வழிக்கு நல்லதுதான். இந்தக் கண்றாவியைப் பார்க்கிறதை விட-" என்று பதிலளித்தது மற்றொன்று.

வந்திருந்தவர்கள் அனைவரும் இவ்வாறு தத்தம் அபிப்பிராயங்களைப் பரிமாறி, மனத்தைச் சாந்தி செய்து கொண்டிருந்த வேளையில் வெளியே கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. தொடர்ந்து, அவசர அவசரமாக உள்ளே ஓடிவந்தான் சங்கர்.

சங்கர் உள்ளே வந்ததும் ஓரிருவர் பெரிய முதலாளியின் மகன் என்ற காரணத்துக்காக, "வாங்க தம்பி" என்று வரவேற்றுக் கொண்டனர்.

சங்கர் எதையுமே காதில் வாங்கிக்கொள்ளாமல் நேராக உள்ளே வந்தான்; சங்கரைக் கண்டதும் இருளப்பக் கோனார் வாய்விட்டுக் கோவென்று அலறி விட்டார்.

"கோனாரே, அழுது என்ன பயன்? நடந்தது நடந்து விட்டது. இனி ஆகவேண்டியதை கவனியுங்கள்" என்று தேற்றியவாறே சங்கர் வீட்டுக்குள் சென்று, நடுவீட்டில் கிடத்திப் போட்டிருக்கும் சடலங்களை கவனித்தான்.

"பாருடாப்பா, சங்கர்! பாரு, எங்க அலங்கோலத்தை!" என்று பயங்கரமாக அலறிக் கதறினாள் தங்கம்மாள்.

சங்கருக்கு நெஞ்சில் வேதனை முட்டிக்கொண்டு வந்தது; அவன் கண்கள் கலங்கிச் சிவந்தன; கண்ணீர் துளித்துச் சொட்டியது. பிரமை பிடித்தவன்போல் அந்தப் பிணங்களை ஒரு நிமிஷ நேரம் பார்த்துவிட்டு, கண்ணைத் துடைத்துக் கொண்டு வெளியே வந்தான்.

வெளியே வந்த சங்கர் இருளப்பக் கோனாரைக் கூப்பிட்டு, "என்ன கோனார், செலவுக்குப் பணம் இருக்கா?" என்று ரகசியமாகக் கேட்டான். கோனார் இன்னது

சொல்வதெனத் தெரியாமல் மாலை மாலையாகக் கண்ணீர் சொரிந்து நின்றார். "நான் போய் உடனே ஆள் மூலம் பணம் அனுப்பி வைக்கிறேன். மணியை நான் இப்போதே பார்த்தாகணும். அடி பலமோ" என்று சொல்லியவாறு நடை இறங்கினான் சங்கர்.

சிறிது நேரத்தில் சங்கரின் கார் உள்ளடங்கிய மெல்லிய உறுமலோடு புறப்பட்டுச் சென்றது.

சங்கர் தன் வீட்டுக்குச் சென்று, ஒரு வேலைக்காரன் மூலமாய் இருளப்பக் கோனாருக்குப் பணத்தை அனுப்பி விட்டு, நேராக ஆஸ்பத்திரிக்குக் காரை ஓட்டினான்.

ஆஸ்பத்திரி போர்டிகோவில் காரை நிறுத்திவிட்டு அவசர அவசரமாக உள்ளே சென்று, அங்கிருந்த கம்பவுண்டரிடம் " டாக்டர் எங்கே?" என்று கேட்டான்.

"வாங்க, மிஸ்டர் சங்கர். டாக்டர் உள்ளே வேலையாய் இருக்கிறார். உங்கள் சிநேகிதர் மணி..."

கம்பவுண்டர் பேச்சை முடிக்குவரை சங்கர் காத்து நிற்கவில்லை.

"மணிக்கு எப்படி இருக்கிறது? அதைத் தெரிந்து கொண்டுபோகத்தான் வந்தேன்" என்று ஆத்திரப்பட்டான் சங்கர்.

"ஆபத்து ஒன்றுமிராது. டாக்டர் வந்தால் தெரியும். மணிக்கு வைத்தியம் செய்யத்தான் போயிருக்கார்."

"இப்போது பார்க்கமுடியாதா?"

"யாரையும் உள்ளே விடக்கூடாது என்று உத்தரவு."

சங்கர் பதிலொன்றும் பேசாமல் ஆஸ்பத்திரி வராந்தாவிலேயே குறுக்கும் மறுக்கும் நடக்கத் தொடங்கினான்; அவனுடைய உள்ளம் மணியின் நிலைமையைத் தெரிந்து கொள்ளத் துடியாய்த் துடித்தது.

'மணியும் அவன் தம்பியைப்போலவே-ஒரே தினத்தில் மூன்று பேரா-அதைப்போல் வேறு கோர பயங்கரமே கிடையாது!-எல்லாம் என் தந்தையால் வந்த வினை! தந்தை மட்டும் தானா? எல்லாம் இந்த சர்க்காரால் வந்த வினை!-மணியின் உயிருக்கு-சேச்சே! அப்படியிருக்காது. அப்புறம் கமலா என்ன பாடு படுவாள்?-மணியைப் போன்ற நல்ல பையன் கிடைப்பானா? நல்ல சிநேகிதன் கிடைப்பானா-?' சங்கரின் மனம் நிலைகொள்ளாமல் அலைமோதிக் கொண்டிருந்தது.

அவனது மனப் போக்கின் வேகத்தைப் போலவே அவனும் ஓரிடத்தில் தரித்து நிற்க முடியாமல் மேலும் கீழும் அலைந்து கொண்டிருந்தான்.

திடீரென்று ஆஸ்பத்திரிக் கட்டிடத்தின் கடப்பைக் கற்களின்மீது பூட்ஸ் காலின் சப்தம் 'டக் டக்' கென்று ஆரோகணித்து வரத் தொடங்கியது.

சங்கர் திரும்பிப் பார்த்தான்; டாக்டர் நடராஜன் வந்து கொண்டிருந்தார்.

"வணக்கம், டாக்டர்" என்று கூறியவாறே அவரை நோக்கிச் சென்றான் சங்கர்.

டாக்டரும் மறு வணக்கம் கூறிவிட்டு, "வாருங்கள் உள்ளே" என்று அவரது அறைக்குள் அழைத்துச் சென்றார்.

சங்கர் பரபரப்போடு அவருடன் சென்றவாறே, "டாக்டர் ஸார், மணிக்கு எப்படி இருக்கிறது? ஆபத்தில் லையே!"என்றுகேட்டான்.

"பயமில்லை வாருங்கள், சொல்கிறேன்" என்றவாறே டாக்டர் உள்ளே சென்று தமது ஆசனத்தில் அமர்ந்தார்' சங்கர் அவருக்கு எதிராகக் கிடந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

"என்ன சங்கர், நீங்கள் மணியின் வீட்டுக்குப் போய் விட்டுத் தானே வர்ரீங்க?" என்று சந்தேகாஸ்பதமாய்க் கேட்டார் நடராஜன்.

"ஆமாம் டாக்டர்! ஒரே நாளில் இரண்டு சாவு; மணியின் தகப்பனார், கைலாச முதலியாரும் தற்கொலை பண்ணிக்கொண்டார்; அந்தப் பையனும் போய்விட்டான். மகா பயங்கரமான சம்பவம், ஸார்!" என்று அங்கலாய்த்தான் சங்கர்.

கைலாச முதலியாரும் இறந்து விட்டார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும் டாக்டர் எதையோ யோசித்தவாறே, "தற்கொலையா?" என்று வியந்தார்; மறுகணமே,"நான் அப்படித்தான் நினைத்தேன்"என்றுகூறி முடித்தார்.

சங்கரால் ஒரு கணம்கூட அமைதியோடிருக்க முடியவில்லை; அவன் நிலை கொள்ளாமல் புழுங்கிக் கொண்டிருந்தான்.

"டாக்டர்ஸார்,மணியைநான்பார்க்கமுடியுமா?"

"மன்னிக்க வேண்டும்" என்றார் டாக்டர். "சங்கர், மணியை இப்போது பார்ப்பதால் எந்தப் பயனும் இல்லை. மணிக்கு மண்டையில் நல்ல அடி; ரத்தக் காயம். ரத்த சேதத்தாலும், இருதய பலவீனத்தாலும் பிரக்ஞை இழந்துவிட்டார். இப்போதுதான் தையல் போட்டுக் கட்டிவிட்டு வந்தேன். ரத்தம் செலுத்தியிருக்கிறேன்."

இன்னது சொல்வதெனத் தெரியாமல் திகைத்துப் போனான் சங்கர்.

"நீங்கள் ஒன்றும் பயப்படத் தேவையில்லை. ஆபத்து ஒன்றுமில்லை. இருந்தாலும், அதிர்ச்சி பாருங்கள். கவனமாகத்தான் பார்க்க வேண்டும்" என்று டாக்டர் ஆறுதல் கூறினார்.

திகைப்புணர்ச்சியிலிருந்து விடுபட்ட சங்கர் டாக்டரின் பதிலுக்கு என்ன மறுமொழி கூறுவதென்று தெரியாமல் ஒரு கணம் மௌனமாயிருந்தான்; ஆனால், மறுகணமே, அவன் டாக்டரை நோக்கி, "டாக்டர் ஸார், மணியைத் தாங்கள் தான் காப்பாற்ற வேண்டும். என்ன செலவானாலும் நான் தருகிறேன்" என்று ஆவலோடு கூறினான்.

சங்கரின் பேச்சைக் கேட்டு டாக்டர் மெல்லச் சிரித்துக் கொண்டார். ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பிறகு அவர் மிகுந்த நிதானத்தோடு சங்கருக்குப் பதில் சொல்ல முனைந்தார்.

"சங்கர், 'பிறவிகளில் உயர்ந்தவனான மனிதனை நோய்நொடியிலிருந்தும்,மரணத்திலிருந்தும்காப்பாற்றும் பணியை'நான்செய்வதாகநீங்கள்தான்ஒருநாள்என்னைப் பாராட்டினீர்கள். ஞாபகமிருக்கிறதா? உங்கள் நண்பரைக் காப்பாற்றிக் கொடுப்பதும் அந்தப் பணியில் ஒரு பகுதிதானே. அது என் கடமையில்லையா? 'மனிதனுக்கு மனிதன்தான் உயர்ந்தவன்' என்றுதான் நீங்கள் அன்று சொன்னீர்களே ஒழிய, பணம்தான் பெரிது என்று சொல்லவில்லையே!"

டாக்டரின் சமத்காரமான பதிலைக் கேட்ட பிறகு தான் சங்கருக்குத் தன் தவறு புரிந்தது; இவ்வளவு தூரம் நெருங்கிப் பழகும் ஒரு நண்பரிடம் எடுத்த எடுப்பில் பணத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்திருக்கக் கூடாதுதான் என்று அவன் உள்ளூர உணர்ந்து கொண்டான்; எனவே அவன்தன்சொல்லுக்குநாணிலேசாகத்தலைகவிழ்ந்தான்.

"சங்கர், ஸ்மோக் பண்ணுறீங்களா?" என்று அன்போடுகேட்டவாறே,தமதுசிகரெட்கேஸைநீட்டினார் டாக்டர்.

"வேண்டாம், டாக்டர்" என்று கூறியவாறே தலை நிமிர்ந்தான்சங்கர்.

டாக்டர் தாம் மட்டிலும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்து, அதன் புகைச் சுருள்கள் காற்றில் உலைந்து உலைந்து கலைவதைச் சுவாரசியத்தோடு கவனித்துக் கொண்டிருந்தார். பிறகு திடீரென்று சங்கரிடம் திரும்பிப் பேசத்தொடங்கினார்.

"சங்கர், கைலாச முதலியார் ஏன் தற்கொலை செய்து கொண்டார்? காரணம் என்ன? உங்களுக்கு ஏதாவது தெரியுமா?"

டாக்டரின் கேள்வியைக் கேட்டதும் சங்கரின் முகம் உணர்ச்சியினால் கன்றிச் சிவந்தது.

"அவரா தற்கொலை செய்தார்? இல்லை, டாக்டர்! இந்த அரசாங்கத்தின் ஜவுளிக் கொள்கைதான் அவர் உயிரைக் குடித்து விட்டது!" என்று ஆவேசத்தோடு பதில் கூறினான் சங்கர்.

டாக்டர் உள்ளிழுத்த புகையை வெளிவிட மறந்தவராய் "என்னது?" என்று வியப்புடன் கேட்டார்.

சங்கர் நிமிர்ந்து உட்கார்ந்து பேச முனைந்தான்:

"ஆமாம், டாக்டர் உண்மையைச் சொல்லப் போனால், அதுதான் அடிப்படைக் காரணம். சர்க்காரின் ஜவுளிக் கொள்கையால் நெசவாளர் சமூகமே சீர்குலைந்து விட்டது. சர்க்காரின் போக்கால் கைத்தறி ஜவுளிகளுக்கு ஏற்றுமதியும் இல்லை; விற்பனையும் இல்லை; இதனால் வியாபாரம் மந்தம்; தொழில் முடக்கம். பின் ஏழை நெசவாளிகளும் அவர்களை நம்பி வாழும் சிறு வியாபாரிகளும், ஏன் ஸார், சீரழிய மாட்டார்கள்? அந்தச் சீரழிவைச் சுட்டிக் காட்டும் களபலிதான், கைலாச முதலியாரின் மரணம்!"

சங்கர் உணர்ச்சி வசப்பட்டவனாய் சர்க்காரின் ஜவுளிக் கொள்கையின் லாப நஷ்டங்களையெல்லாம் எடுத்துக் கூற முனைந்தான்; அமெரிக்கப் பஞ்சை அதிக விலை கொடுத்து வாங்குவதால் ஏற்படும் பாதக

விளைவுகளைச் சுட்டிக் காட்டினான்; ஏற்றுமதிக்கு விதித்த தடையால் ஏற்பட்ட ஜவுளித் தேக்கத்தை எடுத்துரைத்தான்; கைத்தறித் தொழிலாளர்கள் நசித்து நசித்து புழுவாய்ச் செத்து மடியும் பல செய்திகளைக் குறிப்பிட்டும் பேசினான்.

சங்கர் சொல்வதையெல்லாம் ஆர்வத்தோடும் கவனத்தோடும் கேட்டுக் கொண்டிருந்த டாக்டர் ஏதோ ஞாபகம் வந்தவராக இடைமறித்துப் பேசினார்.

"சங்கர், நீங்கள் அன்னிக்குக் கொடுத்தீர்களே, ஒரு புத்தகம். அதைப் படித்த பின்புதான் அன்னியர் மூலதனத்தால் நமது தொழில் வளர்ச்சி எவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறது என்ற விஷயமே எனக்குப் புரிந்தது."

"ஆமாம் டாக்டர், 'வெள்ளையனே வெளியே போ' என்று கோஷித்த கோஷத்தின் வேலை இன்னும் தீரவில்லை. இந்த சர்க்கார் வெள்ளையனின் சொத்தைப் பாதுகாத்துக் கொடுப்பதில்தான் கவனமாயிருக்கிறதே ஒழிய இந்த நாட்டு மக்களின் உயிரைப் பாதுகாத்துக் கொடுக்க முனையவில்லை. மனித உயிரின் விலை இந்த நாட்டில் அத்தனை மலிவாகப் போய் விட்டது, பாருங்கள். நித்த நித்தம் எத்தனை பட்டினிச் சாவுகள்! இதுவா சுதந்திரம்?" என்று வருத்தமும் ஆக்ரோஷமும் கலந்த குரலில் பேசினான் சங்கர்.

டாக்டர் சங்கருக்கு உடனே பதில் சொல்லவில்லை. தலையை மட்டும் ஆட்டிவிட்டு சிறிது நேரம் மௌனமாயிருந்தார். பிறகு, "வாஸ்தவம்தான், சங்கர்" என்று ஆமோதித்தவராய் மேலே பேச முனைந்தார்.

"பாருங்கள், இங்கே ஆஸ்பத்திரிக்கு வருகிற நோயாளிகளைப் பார்த்தால் ஒரே பரிதாபமாயிருக்கிறது. இங்கு வருகிறவர்கள் பெரும்பாலும் நோயாளிகளே அல்ல. சத்தான உணவோ, வேளா வேளைக்குச் சாப்பாடோ, போதுமான ஓய்வோ இல்லாமல் உடல் நலம் கெட்டு வருகிறவர்கள் தான் அதிகம். இந்த ஜனங்களுக்கெல்லாம்

நல்ல ஓய்வும் சாப்பாடும் இருந்தால் இங்கு வருவார்களா?"

"உங்கள் அனுபவத்தைக் கொண்டே பாருங்கள். நாட்டு நிலைமையின் பிரதிபலிப்புத்தானே உங்கள் அனுபவம், இல்லையா?" என்று கூறியவாறே சங்கர் கைக் கடிகாரத்தைப்பார்த்துவிட்டுஇடத்தைவிட்டுஎழுந்தான்.

"என்ன,புறப்பட்டாச்சா?"

"ஆமாம், டாக்டர்..மணி வீட்டுக்குப் போகணும். சரி, மணியை எப்போது பார்க்கலாம்?"

"காலையில்வாருங்கள்சொல்லுகிறேன்"என்றுபதில் கூறியவாறே கையிலிருந்த சிகரெட்டை அணைத்துவிட்டு சங்கரை வழியனுப்புவதற்காக இடத்தை விட்டு எழுந்து வெளியே வந்தார் டாக்டர்.

இருவரும் வெளியே வந்த சமயத்தில் எதிரே கமலா அவசர அவசரமாக வந்து சேர்ந்தாள். அவளது முக மெல்லாம் வியர்த்து விதிர்விதிர்த்துக் களையிழந்து போயிருந்தது. ஆத்திரமும் ஆவலும் கொண்ட கமலாவின் முகத்தில் படிந்திருந்த சோகத் திரை சங்கரைக் கண்டதும் திடீரென்று விலகியது.

படிக்கட்டில் ஏறியும் ஏறாமலும், "அண்ணா, அத்தானுக்கு ஒன்றுமில்லையே!" என்று ஆத்திரத்தோடு கேட்டாள் கமலா.

டாக்டர்அவளுக்குப்பதிலளிக்கமுந்திக்கொண்டார்.

"பயப்படாதேம்மா, உன் அத்தான் உயிருக்கு நான் ஜவாப்தாரி!"

கமலா தன்னை மீறியெழுந்த நாணத்தோடும் உதட்டில்தோன்றியபுன்னகையோடும்"தாங்க்யூ,டாக்டர்!" என்று வாய்க்குள்ளாகவே சொல்லிக் கொண்டாள்.

சங்கர் அவளருகில் சென்று "வா, கமலா, மணிக்கு ஒன்றும் ஆபத்தில்லை"என்றுகூறியவாறேகாரின் கதவைத் திறந்தான்.

சிறிது நேரத்தில் அந்தக் கார் ஆஸ்பத்திரி போர்டி கோவைவிட்டுக் கிளம்பிச் சென்றது; தாதுலிங்க முதலியாருக்குத் தப்பிப் பிறந்துவிட்ட அந்த இளம்பிள்ளைகளைக் கண் மறையும்வரையிலும் வைத்தகண் வாங்காமல் வியந்து பார்த்துக் கொண்டு நின்றார் டாக்டர் நடராஜன்.

## 15

அன்று மாலை ஆறரை மணிநேரமிருக்கும்.

அம்மன் கோயில் மண்டபத்திலுள்ள வாசக சாலையிலும், கோயிலை அடுத்துள்ள மூப்பனார் வெற்றிலை பாக்குக் கடை முன்பும், அந்த வட்டாரத்திலுள்ள நெசவாளர்கள் பலர்கூடி நின்றார்கள்; வடிவேலு முதலியார் மண்டபத்தில் உட்கார்ந்து கைரேகை மயங்கும் அந்த அந்தியிருட்டு வேளையில், ஒரு பத்திரிகையைக் கண்ணுக்கெதிரே பிடித்து, எழுத்துக்களை தடம் கண்டுபிடிக்க முயன்று கொண்டிருந்தார். சுப்பையா முதலியார் மூப்பனார் கடைச் சரப்பலகையைப் பெஞ்சாக மாற்றிப் போட்டு தெருவைப் பார்க்க உட்கார்ந்தார்.

இப்போதெல்லாம் அம்மன் கோயில் முன்பு மாலை வேளைகளில் அதிகம் பேர் தென்பட்டு வந்தார்கள். வாழ்க்கையில்சிரமங்கள் அதிகரிக்க அதிகரிக்க, அவர்களில் சிலருக்கு உலக நடப்பைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற புதிய ஆர்வம் ஏற்பட்டிருந்தது. எனவே, அவர்கள் அம்மன் கோயில் மண்டபத்திலுள்ள வள்ளுவர் வாசக மன்றத்துக்கு வந்து, வடிவேலு முதலியார் போன்றவர்களைப் பத்திரிகை படிக்கச் சொல்லி, செய்திகளைத் தெரிந்து கொண்டார்கள்; பத்திரிகையில் பட்டினிச் சாவுகளைப் பற்றியும் நெசவாளர் பற்றியும் செய்திகள் வரும்போது அவற்றைக் கேட்டுத்தெரிந்துகொள்வதில்ஒரு ஆர்வமும், தெரிந்து கொண்டபின் இன்னதெனப் புரியாது

எங்கோயிருந்து பயமுறுத்தும் அச்சவுணர்ச்சியும் அவர்களுக்கு ஏற்பட்டன. வேறு சிலர் பத்திரிகை பார்ப்பதற்காக வராவிட்டாலும், வேறு பல காரணங்களை முன்னிட்டு அங்குக்குழுமிவந்தார்கள்; சிலர் நாள் தவறாது லோகநாயகி அம்மனைச் சேவித்து, தமது கஷ்டங்களையெல்லாம் அவளோடு மானசீகமாக எடுத்துச் சொல்லி, ஆத்ம சாந்தி தேடிக்கொள்ள வந்தார்கள். இன்னும் சிலர் வீடு தேடி வந்து விரட்டுகின்ற கடன்காரர்களிடமிருந்தும், வீட்டுத் தேவைகளுக்காக நச்சரிக்கும் மனைவிமார்களிடமிருந்தும், "அப்பா, ஒரு காலணா" என்று அழுது புலம்பும் குழந்தைகளிடமிருந்தும், சில மணி நேரமாவது தப்பித்து விலகி நிச்சிந்தையாகயிருக்கலாம் என்று கருதி வந்தார்கள்; வேறுசிலர் ஒரு வேளை வெற்றிலையை வாங்கி மென்று விழுங்கியோ அல்லது ஒரு காரச் சுருட்டை வாங்கிப் புகைத்து, புகையை உள்ளிழுத்து ஜீரணிப்பதன் மூலமோ, வயிற்றுப் பசியைச் சாகடித்து, மந்தித்துப் போகச் செய்து அன்றைய ராத்திரிச் சாப்பாட்டுக் கவலையைத் தீர்த்துக் கொள்ள எண்ணியும் வருவதுண்டு.

கடைக்கார மூப்பனாருக்கும் முன்பெல்லாம் சுமாராகவாவது வியாபாரம் நடந்து வந்தது. இப்போதோ? இப்போது கடைக்கார மூப்பனார் தமது வாடிக்கைக் காரர்களைப் பார்த்து, "ஏனய்யா, வெத்திலை தரட்டுமா? போடுதியளா?" என்று வாய்விட்டுக் கேட்டு விற்பனை செய்ய முயன்றாலுங் கூட, பலிப்பதில்லை. "என்ன மூப்பனார் வாள்? காசு, குடுக்கிற அன்னிக்கி வாங்கிக் கிடுவியளா?" என்றுதான் பெரும்பாலும் அவருக்குப் பதில் கிடைத்தது. முன்பெல்லாம் காசை எதிர்பார்க்காமலே ஓசி வெற்றிலை கொடுத்து, வந்தவர்களை உபசரிப்பார் மூப்பனார்; நெசவாளிகளுக்கு ஓசி வெற்றிலை வாங்கிப் போடுவதற்குக் கூசிக்கொண்டே "காலணா யாபாரம், இதிலே யார் வாரிக் கட்டிக்கிட்டுப் போகப் போறோம்?" என்று மெட்டாகக் கூறிவிட்டுக் காசைக் கொடுத்து விடுவார்கள். இப்போதோ ஓசிக்கு வெற்றிலை

கொடுப்பதற்கும் மூப்பனார் முன் வருவதில்லை; ஏனெனில் காலணாவுக்கு வியாபாரம் நடந்தால் அது அவருக்கு ஒரு மகத்தான சாதனையாகப் பட்டது. நெசவாளிகளும் பொதுவாக வெற்றிலை வாங்கிப் போடுவதற்கு முன் வரவில்லை; ஏனெனில் அவர்களிருந்த நிலைமையில் வெற்றிலை பாக்குப் போடுவதுகூட, தமது சக்திக்கு மீறிய, ஆடம்பரமான, அனாவசியமான செலவு என்று பட்டது. சுருங்கச் சொன்னால், அந்தத் தெருவாசிகளுக்கு, அங்குள்ள நெசவாளிகளுக்கு, காலணா நாணயம் மிகவும் அர்த்த புஷ்டியும், மதிப்பும் வாய்ந்த செல்வமாகி விட்டது!

அம்பாசமுத்திரத்திலுள்ள கைத்தறி நெசவாளர்கள் பெரும்பாலும் பரம்பரை பரம்பரையாக நெசவுத்தொழில் செய்தும் வாழ்வில் முன்னேற்றமின்றி நித்ய மார்க்கண் டேயர்களாக, வளர்ச்சியோ தேய்வோ இன்றி வாழ்ந்தும் வந்தவர்கள்; அவர்களில் பெரும்பாலோர் குடியிருக்க ஒரு குச்சுவீடு, அல்லது இரண்டு மரக்கால் விரைப்பாடு, அல்லது மனைவியின் கழுத்தில் பத்துப் பதினைந்து பவுன் எடையுள்ள தங்க நகைபோன்ற சொத்துக்கு அதிபதிகளாய் இருந்து வந்தவர்கள்; இருந்தாலும் வருஷம் முன்னூற்றி அறுபத்தைந்து நாட்களிலும் இந்தச் சொத்து அடகி லேயோ, அல்லது ஒத்தியாகவோ இருந்துவரும்; அதுவும் இல்லையென்றால், வட்டிக்குக் கடன் கொடுக்கும் உண்டியல் கடைச் செட்டியாரிடம், குறைந்த பட்சம் இருநூறு ரூபாய்க்காவது, 'பிராமிசரி நோட்' என்னும் வாக்குறுதிக் கடன்பத்திரம் "தாங்கள் விரும்பும் காலத்தில் தங்களுக்கோ, தாங்கள் வாரிசுதாரர்களுக்கோ, தங்கள் அத்தாட்சிபெற்றவருக்கோ, அசலையும்வட்டியையும்தந்து கணக்கைப் பைசல் செய்து இந்தப் பிராமிசரி நோட்டை வாபீஸ் பெற்றுக் கொள்வேனாகவும்" என்ற உறுதி மொழியோடு, அவர்களது நபர் நாணயமேனும் அடகு வைக்கப்பட்டிருக்கும். எனவே அவர்கள் சீர் சிறப்போடு, இருந்து சாப்பிடும் பெருவாழ்வுக்கு ஆசைப்பட முடியா மலும், இருக்கின்ற வாழ்வு தரங்கெட்டுச் சிறுமை

யடையாமலும், தாமும் தம் குடும்பமுமே பிரபஞ்சமாகக் கருதி, வரவினங்களைக் கோடு கிழித்து வரம்பு கட்டிச் செலவழித்து வருவார்கள். குண்டு சட்டிக்குள்ளே குதிரை ஓட்டுவது போல், 'தொட்டுக்கொள், துடைத்துக்கொள்' என்றிருக்கும் இந்த நிதி நிலைமைக்குள்ளேயே, தம் ஆயுளையும் தம் குடும்பத்தாரின் க்ஷேமநலன்களையும் பாதுகாக்கும்யோகசாதனையைத்தான் அவர்கள்வாழ்நாள் முழுவதும்பயின்றுவந்தார்கள்.எனவே அவர்கள் அரசியல் என்னும் 'வம்பு தும்புக்'கோ, விக்கிரமசிங்கபுரம் பஞ்சாலைத் தொழிலாளர்களைப் போல் தொழிற்சங்கப் போராட்டம் என்னும் 'அடாபிடித்தன'த்துக்கோ ஆளாகாமல், 'தாம் உண்டு தம் வீடு உண்டு' என்று பொது வாழ்க்கையைப் பற்றிய நிர்விசாரத்தோடும், பற்றின்மையோடும் இருந்து வந்தார்கள். எனவே அவர்கள் தமது தொழிலில் கூலி உயர்வு அல்லது சலுகைகள் பெறவேண்டுமென்றாலும், முதலாளிமார்களை அடுத்தவனுக்குத் தெரியாமல்காக்காய்பிடித்துத்தாஜாசெய்தவன்மூலமோ, அல்லது ஒருவனுக்கொருவன் அந்தரங்கமாகக் கோள் சொல்லி, தத்தம் சுயகாரியத்தைச் சாதித்துக் கொள்வதன் மூலமோதான் பெற முனைவார்கள். அல்லது சமூகத்தில் நாலு பேர் துணிந்து முன் வந்து கூலி உயர்வுக்காகப் போராடும்போது, அவர்களோடு சேர்ந்து போராடாமல் விலகியிருந்து, அவர்கள் வெற்றி பெற்றால் பங்குக்கு முந்துவதும், தோல்வி கண்டால் "நான் தான் அப்பவே சொன்னேனே" என்று வாய்விட்டுக் கூறி, தமது புத்திசாலிதனத்தை விளம்பரப் படுத்திக்கொள்வதும் ஆன ராஜ தந்திரத்தின் மூலமோதான் சாதித்துக்கொள்ள முயல்வார்கள்.

இதுதான் அங்கு நிலவிவந்த பொதுவான வாழ்க்கை முறை; ஆனால் சமீப காலத்திலோ இந்த வாழ்க்கை பல்வேறு விதத்திலும் தகர்ந்து உருமாறிப் போய்விட்டது. இப்போதோ அவர்கள் எல்லோருக்கும் பிழைப்புக் கெட்டுவிட்டது; லோகமே புரண்டு வந்தாலும், தம்

தொழிலுக்கு மோசமில்லை என்று பரம்பரை பரம் பரையாகக் கருதிவந்த அவர்கள் எண்ணத்தில் இடி விழுந்து விட்டது. வியாபாரிகள் எல்லோரிடத்திலும் கைத்தறி ஜவுளி தேங்கிப் போய் விட்டதால் விற்பனை மந்தமாகிவிட்டது. எனவே வியாபாரிகள் சரக்கைக் கொள்முதல் செய்யவே தயங்கினார்கள்; தறிகாரர்களும் எப்போதாவது நூல் கொடுத்து நெய்து வாங்க முன் வந்தார்களே யன்றி, நிரந்தரமாக நூல் கொடுக்க முன்வர வில்லை; அவர்களால் முடியவுமில்லை. இதனால் தறிகள் நாட் கணக்கில் தூங்குவதும், ஒன்றிரண்டு நாள் விழித்திருந்து இராப் பகலாய் ஓடி அமருவதுமாக இருந்தன. எனவே கைத்தறி நெசவாளர்களின் வரும்படி குறைந்து விட்டது. மேலும், நூல் விலை உயர்வாலும், மில் துணி போட்டியாலும், மக்களிடம் பணப் புழக்கம் குறைந்து விட்டதாலும், அதிக விலைகொண்ட கைத்தறி ஜவுளிகள் விற்பனையாகவில்லை; கைத்தறித் துணியை மக்களிடம் விற்க வேண்டு மென்றால், அதன் அடக்க விலையைச் சாத்தியமான அளவுக்குக் குறைக்க வேண்டிய நிர்ப்பந்தம் வியாபாரிகளுக்கும், மாஸ்டர் வீவர்களுக்கும் ஏற்பட்டது. நூல் விலையைக் குறைக்க வழி செய்து, அடக்க விலையைக் குறைக்கவழியிருந்தால் ஜவுளி ஓரளவேனும் விலைபோகும். ஆனால்சர்க்காரின் ஜவுளிக்கொள்கையோ நூல்விலையை எந்த விதத்திலும் குறைக்கக் கூடியதாயில்லை. இதனால் வியாபாரிகள் அடக்க விலையைக் குறைப்பதற்கு, நெச வாளிகள் தலையில்தான் கைவைத்தார்கள்.வேலைகேட்டுப் பல்லெல்லாம் தெரிய நிற்கும் நெசவாளியின் நெருக்கடி யைப் பயன்படுத்தி, "வேணுமின்னா, நான் தர்ர கூலிக்கு நெய்து கொடும்" என்று வேண்டா வெறுப்பாகக் கூறி, நெசவாளிகளுக்கு வேலை கொடுத்துக் 'காப்பாற்றும்' புண்ணிய கைங்கரியத்தில் ஈடுபட்டார்கள் வியாபாரிகள். நெசவாளிகளும் கிடைக்கிற காசுக்கும் ஆபத்து வந்துவிடக் கூடாதேயென்று "நீயேஎன்னை முழுங்கிடு"என்றுசொன்ன சோலகோவின் குஞ்சு மீனைப்போல், குறைந்த கூலிக்குத்

தம்மை இரையாக்கினார்கள். ஆனால் நாளாரம்பத்தில் அந்தக் கூலிக்கும் கூட ஆபத்து ஏற்பட்டுவிட்டது.

நெசவாளிகள் நிலைமை நாளாவட்டத்தில் க்ஷீணித்துக் கேவலமடையத் தொடங்கி விட்டது. வயிற்றுப் பசியையும் வாழ்க்கைத் தேவைகளையும் அவர்கள் வீட்டுக்குள்ளேயே மூடிவைத்திருக்க முடியவில்லை. நெருக்கடி முற்ற முற்ற அவர்கள் கடன் வாங்கிப் பிழைத்தார்கள்; கடன் வாங்குவதற்குள்ள வழிகளெல்லாம் அடைபட்டுப் போனபின், பண்ட பாத்திரங்களை, நகைகளை அடகு வைத்தும் விற்றும் வயிற்றைக் கழுவினார்கள்; சிலர் தங்கள் தறிச் சாமான்களையும் கூட விற்று விட்டனர். வீடு வாசல் நிலம் உள்ளவர்கள் அவற்றையும் விற்றுத் தீர்த்தார்கள். அரைப்பட்டினிகுறைப்பட்டினியோடு உடம்பில் உயிரைத் தாங்கிக் கொண்டிருந்தால் விடிவுகாலம் பிறந்ததும், மீண்டும் தளிர்த்துக் கொள்ளலாம் என்ற ஒரே நப்பாசையோடு, நம்பிக்கையோடு அவர்கள் பட்டுக் கருகிக்கொண்டு வந்தார்கள். நெசவாளிகளின் பிள்ளைகள் பள்ளிக்கூடப் படிப்பை விட்டுவிட்டு கடை கண்ணிகளில் வேலை பார்த்தார்கள்; பெண்கள் அக்கம் பக்கத்துத் தெருக்களில் பத்துப் பாத்திரம் துலக்கியும், வீட்டு வேலைகளைச் செய்தும் பிழைக்க முன் வந்தார்கள். ஒன்றிரண்டு நெசவாளிகள் வீட்டுக் கஷ்டம் தாங்க முடியாது, 'வேலை பார்த்துவிட்டுவந்து கூட்டிச்செல்கிறேன்' என்ற நம்பிக்கை மொழி ஒன்றையே தம் பெண்டு பிள்ளைகளிடம் துணையாக விட்டு, பரதேசம் சென்றுவிட்டார்கள். சுருங்கச் சொன்னால், அவர்கள் நாளுக்குநாள் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருந்தார்கள்; செத்துக் கொண்டிருக்கும் சீவனை இழுத்துப் பிடித்து நிறுத்துவதற்காகப் பிச்சை எடுத்தார்கள்; பிழைப்புத்தேடிச் சென்றார்கள்; மோசடிகள் செய்தார்கள். என்றாலும், அவர்கள் செத்துக் கொண்டே தான் இருந்தார்கள்.

கைத்தறி நெசவாளர்களின் வாழ்க்கைப் பிரச்னை நெருக்கடியானகட்டத்துக்குவந்தசமயத்தில்தான்கைலாச

முதலியார் தமது கதையைத் தாமே முடித்துக் கொண்டு விட்டார்.

கைலாச முதலியார் காலமாகி மூன்று நாட்கள் ஆகிவிட்டன.

கைலாசமுதலியாரின் அஸ்திதாமிரபருணிநதியோடு கலந்து போய்விட்டது; தங்கம்மாளின் கழுத்தில் கிடந்த தாலி அகற்றப்பட்டாய் விட்டது; தர்மகர்த்தா ஸ்தானம் காலிவிழுந்து விட்டது; மைனர் முதலியாரின் கனவு ஈடேறி விட்டது.

எனினும், அம்பாசமுத்திரம் வாசிகளிடையே, குறிப் பாகநெசவாளர்களிடையே, கைலாசமுதலியாரைப்பற்றிய பேச்சுத்தான் இருபத்திநாலு மணி நேரமும் நடந்து கொண்டிருந்தது. எங்கும் எப்போதும் இதைப்பற்றியே பேச்சு; ஏனெனில் எல்லோருடைய மனத்திலும் அவர் களுடையஎதிர்காலத்தைப்பற்றிய ஒரு [illegible]கத்தை, எச்சரிக் கையை, பயபீதியை அந்த நிகழ்ச்சி ஏற்படுத்திவிட்டது.

அம்மன் கோயில் மண்டபத்திலும், மூப்பனார் கடை முன்பும் கூடிநின்ற நெசவாளிகள் கைலாச முதலியாருக்கு ஏற்பட்ட துர்க்கதியைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந் தார்கள்.

"ஊரையே கலங்க வச்சுப்பிட்டாரே, மனுசன். இருந்திருந்து கைலாச முதலியார் இந்த வேலையா செய் வாரு? மனுசன்னா கஷ்டங்கள் வாரதுதான், போரது தான். அதுக்காக? இப்போ நாமெல்லாம் செத்தா போயிட் டோம்?"

"அட, சரிதான். இப்படி அணுவணுவா நித்த நித்தம் செத்துக் கொண்டிருக்கிறதைவிட, இப்படிச் செஞ்சிட்டா அலுப்பு விட்டதுன்னு போகும். நம்மவங்கள்ளெ இன்னம் யார் யாருக்கு எந்த ஆறுகுளம் குடுத்து வச்சிருக்கோ? யார் கண்டா?" என்று பதிலுக்குச் சலித்துக் கொண்டார் ஒருவர்.

"சீ! அவசகுனம் புடிச்சாப்பிலே பேசாதியும்! எல்லாம் நல்ல காலம் புறக்காமலா போகப் போவுது?" என்று சிந்தையில் தோன்றிய உள்ளரிச்சலோடு வாய்விட்டுக் கூறித் தம்மைத்தாமே தேற்றிக் கொண்டார் வேறொருவர்.

"நல்ல காலமா? அதைத்தான் நம்ம வடிவேலு முதலியார் தினம் தினம் படிச்சிக் காட்டுதாரே. ஆத்திலே விழுந்து செத்தான், குளத்திலே விழுந்து செத்தான், மருந்தைத்தின்னு செத்தான், மாயத்தைத்தின்னு செத்தான், பட்டினி கிடந்து செத்தான், -செத்தான் செத்தான்னு வார சேதிதானே இப்ப பேப்பரிலே மலிஞ்சிக்கிட்டு வருது. நமக்குன்னு மட்டும் சொர்க்கம் கீழே இறங்கி வந்துவிடப் போவுதா?" என்று குறுக்கிட்டுப் பேசினார் இன்னொரு நெசவாளி.

"எல்லாம் அந்தத் தாதுலிங்க முதலியார் பண்ணின வேலை. இல்லேன்னா, நாம எல்லாம் பிழைச்சிக் கிடக்கயிலே, கைலாச முதலியாருக்கு மட்டும் இந்தக் கெதி வருவானேன்?" என்று தமது பல்லவியைத் தொடங்கினார் வடிவேலு முதலியார்.

சுப்பையா முதலியாருக்கு உடனே அதற்குப் பதில் கொடுக்கவேண்டுமென்று நினைப்புவந்தது. எனினும் தமது கட்சிக்குப் பலமில்லை என்பதை உணர்ந்து, மௌனமாக உட்கார்ந்து கொண்டார்.

அதற்குள் வடிவேலு முதலியாரை ஆதரித்து, "கஷ்டப் படுகிற காலத்திலே மனுசனுக்கு மனுசன் உதவுகிறதுதான் மனுசத்தனம். இவரானா, சமயம் பார்த்துக் கழுத்தை அறுத்துட்டாரே! இன்னம் யார் யார் தலையிலே கொள்ளி வைக்கப் போறாரோ?" என்று வயிறெரிந்து கொண்டார் ஒருவர்.

"மாமன் மச்சான் ஆனா என்ன? அண்ணன் தம்பி ஆனா என்ன? பணக்காரன் பணக்காரன்தான்; ஏழை ஏழைதான். இதுதான் தம்பி எனக்குப் பட்டது" என்று ஒரு

வயது முதிர்ந்த நெசவாளி தமது அனுபவத்தைச் சூத்திர வடிவாக்கினார்.

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போதே, சங்கர் அந்த வழியாக வந்து கொண்டிருந்தான்.

சங்கரைக் கண்டதும், வடிவேலு முதலியாரை ஆதரித்துப் பேசிய நெசவாளி, சங்கரைச் சுட்டிக் காட்டி, "இவன் இன்னும் என்னென்ன கூத்துக்கு வாரானோ? இவனும் அவருக்குப் புறந்தவன்தானே!" என்று தம் பக்கத்திலிருந்தவரிடம் மெதுவாகக் கூறினார்.

இதற்குள் வடிவேலு முதலியார் குறுக்கிட்டு, "சேச்சே! தம்பியை அப்படிச் சொல்லாதிங்க. இவன் என்னமோ அந்தக் குடும்பத்திலே தப்பிப் பிறந்துட்டான். இவன்தானே கைலாச முதலியார் செத்த அன்னிக்கு செலவுக்கில்லாம் பணம்கொடுத்து ஒத்தாசையா இருந்தான். இவனைப்போல தங்கமான பிள்ளையைப் பார்க்க முடியுமா?" என்று புகழத் தொடங்கினார்.

"அப்படியா?" என்று மூக்கின்மீது விரலை வைத்து வியந்தார் அந்த முதியவர்.

இதற்குள் சங்கர் வந்துசேர்ந்துவிட்டான்.

சங்கரைக் கண்டதும் வடிவேலு முதலியார் 'என்னப்பா சங்கர்? எங்கேயிருந்து வாரே?" என்று அருமையோடு கூப்பிட்டார்.

"ஆஸ்பத்திரியிலேயிருந்து" என்று பதில் கூறியவாறே அருகில் வந்தான் சங்கர்.

"ஆமா, மணிக்கு எப்படி இருக்கு?"

"தேவலை."

"என்ன சங்கர், உன் தகப்பனார் செஞ்ச வேலையைப் பாத்தியா? ஒரு குடும்பமே பாழாப் போச்சு!" என்று ஆவலாதி கூறுவதற்கு முந்திக் கொண்டார் முதியவர்.

அவரது பேச்சைக் கேட்டதும், சங்கருக்கு உள்ளம் குமைந்தது; ரத்தம் கொதித்தது; வெட்கம் பிடுங்கித் தின்றது. இன்ன பதில் சொல்வதென ஓடாமல் ஒரு கணம் உள்ளுக்குள் குமுறினான். ஆனால் மறுகணமே அவனது வாய்ப்பூட்டு உடைந்து விட்டது.

"பெரியவரே, என் அப்பாவின் பணத்தாசைதான் கைலாச முதலியாரின் உயிரையே குடித்தது என்பது எனக்குத் தெரியும். அதை நினைத்து நினைத்து நானும்தான் வருத்தப்படுகிறேன்; நெஞ்சு குமுறுகிறேன். இப்படிப்பட்ட ஈவிரக்கமற்ற மனிதர் எனக்குத் தந்தையாக வந்து வாய்த்தாரே என்று வெட்கமடைகிறேன். ஆனால், நீங்களும் நானும் சேர்ந்து என் தந்தையைத் திட்டுவதன் மூலம் ஆகப்போவது என்ன? அதனால் உங்கள் கவலை தீர்ந்து விடுமா? கைலாசமுதலியார் ஒருவர் மட்டும்தானா கஷ்டப்பட்டார்? இப்போது நீங்களெல்லாம் கஷ்டப்பட வில்லையா? உங்கள் பிழைப்பு ஏன் இந்த அங்கோலத்துக்கு வந்தது என்று யோசித்துப் பார்த்தீர்களா?" என்று மளமளவென்று உணர்ச்சி வசப்பட்டவனாய்ப் பேசி முடித்தான் சங்கர்.

அவன் பேச்சைக் கேட்டதும் அங்கிருந்த யாருக்கும் மறு வார்த்தை சொல்ல ஓடவில்லை. பிரமை பிடித்தவர்கள் போல் பேசாது இருந்தார்கள். சில கணங்கள் அங்கு அர்த்த புஷ்டியுள்ள ஒரு அமைதி நிலவியது.

அங்கு நிலவிய அமைதியை வடிவேலு முதலியார்தான் கலைக்க முன்வந்தார். "வா தம்பி, இப்படி உட்காரு" என்று சங்கரை அழைத்து, தமக்கு அருகில் உட்காரச் சொல்லிய வாறே, "தம்பி சொல்றதும் சரிதானே. நாம என்னைக்காவது யோசிச்சுப் பார்த்தோமா?" என்று அங்கு கூடியிருந் தோரைப் பார்த்து ஒரு கேள்வியைப் போட்டார். பிறகு அவர் சங்கரிடம் திரும்பி, "சங்கர் உனக்குத்தான் எல்லா விசயமும் தெரியுமே. இப்ப இருக்கிற நிலைமை எப்பப்பா மாறும்?" என்று பரிதாபத்தோடு கேட்டார்.

சங்கர் அந்தக் குரலில் தொனிந்த திக்கற்ற தன்மையை உணர்ந்து கொண்டே, "மாறும், மாறும்-நீங்க எல்லாரும் மனசு வச்சா!" என்று பதில் கூறினான்.

"விளங்கச் சொல்லு, தம்பி. அழிப்பாங்கதை போடுதியே!" என்று அந்த முதியவர் கேட்டுக் கொண்டார்.

"தாத்தா, உங்க கஷ்டம் இருக்கே, இது அவ்வளவு லேசிலே தீருகிற விஷயமில்லே. இந்த சர்க்காரோடே ஜவுளிக் கொள்கை மாறினால் ஒழிய, நிலைமை மாறப் போறதில்லை. அதுதான் சொன்னேன்" என்றார் சங்கர்.

"அப்படின்னா?" என்று கேட்டு நிறுத்தினார், வடிவேலு.

"சொல்கிறேன். ஒரு தாதுலிங்க முதலியார்தான் கைலாச முதலியாரின் பிழைப்பைக் கொடுத்தாரா? இந்த நாட்டிலுள்ள எத்தனை எத்தனையோ தாதுலிங்க முதலியார்கள் நூலைக் கள்ள மார்க்கட்டில் விற்றுக் கொள்ளையடிக்கும் பணக்காரர்கள், எத்தனையோ குடும்பங்களை நாசமாக்கவில்லையா? நீங்களும்தான் பேப்பர் பார்க்கிறீர்களே, இன்னிக்கு எத்தனை நெசவாளிக் குடும்பங்கள் சீரழிந்து தெருவில் நிற்கிறார்கள்; பிச்சை எடுக்கிறார்கள்! நமது பெண்கள் தங்கள் மானத்தையே விற்கிறார்களே. இல்லையா? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ஊராரின் மானத்தையெல்லாம் காப்பதற்காக, நீங்கள் துணி நெய்து கொடுத்தீர்கள். ஆனால் இன்று உங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள உங்களுக்கு வழி இருக்கிறதா?"

சங்கரின் கேள்வி அங்கிருந்த நெசவாளிகள் அனைவர் மனத்திலும் புதியதொரு ஒளியைப் பாய்ச்சியது. தங்கள் தொழிலின் மேன்மையையும், அந்த சமயம் தாங்கள் அடைந்துள்ள தாழ்வையும் பற்றி அவர்கள் ஒவ்வொருவர் மனத்திலும் கர்ப்போட்டம் போன்று ஒரு உணர்ச்சி சில்லிட்டுப் பரவுவதை அவர்கள் உணர்ந்தார்கள். குன்றிக்

கிடந்த அவர்களது ஆத்ம சக்தி ஏதோ தளையறுபட்டு விடுதலை பெற்றதுபோல் ஒருகணம் நிமிர்ந்து சுடர் விட்டது.

"ஆமா தம்பி, ஆமா. நீ சொல்வது சரிதான்" என்று தமது எண்ண உலகிலிருந்து இறங்கி, பிரக்ஞை பெற்ற வடிவேலு முதலியார் பெருமூச்செறிந்துகொண்டார்.

அங்கிருந்தவர்கள் முகத்தில் தெரியும் ஆர்வத்தை உணர்ந்தவனாக, சங்கர் உற்சாகத்தோடு பேசத் தொடங்கினான்:

"இந்த சர்க்கார்தான் உங்கள் கஷ்டத்துக்கெல்லாம் காரணம்; பொறுப்பாளி. கைத்தறித் துணியின் ஏற்றுமதியைத்தடை செய்து அமெரிக்க நாட்டிலிருந்து அதிகவிலைக்குபஞ்சைவாங்கி நூல்விலையைக்கொள்ளை கொள்ளையாக ஏற்றுவதற்கு வழி செய்தது இந்த சர்க்கார். அதனால்தான் கைத்தறி ஜவுளியெல்லாம் விற்காமல் தேங்கிப் போய்விட்டது.உங்களுக்கும் பிழைப்புக் கெட்டுப் போயிற்று. கஷ்டப்படுபவர்கள் நீங்கள் மட்டும் அல்ல. இந்த நாட்டிலுள்ள ஆறு லட்சம் நெசவாளிகளையும், அவர்களை நம்பிப்பிழைக்கும்லட்சோபலட்சக்கணக்கான பெண்டு பிள்ளைகளையும் கொல்லாமல் கொன்று கொண்டிருக்கிறது இந்தஅரசாங்கம்.தெரிந்ததா?"

சங்கரின் உக்கிரமான பேச்சு ஆங்காங்கு நின்று கொண்டிருந்த நெசவாளிகளையும் மண்டபத்துக்கருகே கவர்ந்து இழுத்தது. நெசவாளிகள் அனைவரும் தமது நிலைமையைத் தெரிந்து கொள்வதில் ஆர்வமும்,தெரிந்து கொண்டதால் உண்டாகும் கவலையும் ஏககாலத்தில் முகத்தில் பிரதிபலிக்க, சங்கரின் வாயையே பார்த்துக் கொண்டுநின்றார்கள்.

பஞ்சடைந்து ஒளியிழந்து போன கண்களோடு பரிதாபமாய்க்காட்சியளித்தஒருநெசவாளி,"தம்பி, இதுக்கு விமோசனமே கிடையாதா? இப்படி நித்த நித்தம் செத்துப்

பிழைப்பதுதான் எங்க தலைவிதியா?" என்று கரகரத்துக் கேட்டார்.

சங்கர் மெல்ல இளநகை புரிந்துகொண்டான். "விதியை நினைத்துச் சாவை வரவேற்பது கோழைத்தனம். நீங்கள் எல்லோரும் சாகவா விரும்புகிறீர்கள்? வாழத்தானே விரும்புகிறீர்கள். அப்படியானால், நீங்கள்தான் உங்கள் விதியை மாற்ற, சாவைத் தவிர்க்க வழிசெய்ய வேண்டும்" என்றான் சங்கர்.

"எப்படியப்பா விதியை மாத்தறது? அன்னிக்கி எழுதினவன் அழுச்சி எழுதப் போறானா?" என்று அந்த முதியவர் குழந்தைபோலக் கேட்டார்.

"என்ன தாத்தா, சாவித்திரி எமனோடேயே போராடி, தன் புருஷன் விதியை மாத்தலையா? இன்று உங்கள் பிழைப்புக்கு எமனாகவுள்ள ஜவுளிக் கொள்கையை நீங்களும் எதிர்த்துப் போராடினால், உங்கள் விதியும் தானே மாறிவிடும் தாத்தா?" என்றான் சங்கர்.

"நீ என்ன சொல்லுதே?" என்று ஆர்வத்தோடு ஒரு குரல் கேட்டது.

"இன்னிக்குள்ள ஜவுளித் தேக்கம் போகவும், நூல் விலை இறங்கவும் நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, சங்கம் வைத்து சர்க்காரின் போக்கைக் கண்டிக்கவேண்டும். உங்கள் கோரிக்கைகளைப் பூர்த்திசெய்யுமாறு நிர்ப்பந்திக்க வேண்டும்; உங்கள் ஒற்றுமையும், உறுதியும் தான் உங்களைக் காப்பாற்றும் மருந்து; உங்கள் விதியை மாற்றும் ஆயுதம்."

"என்னது? சங்கம் வைக்கிறதா? இந்தா பாருங்க. தம்பி சின்னப் புள்ளெ, என்னமோ வாய்க்கு வந்ததைச் சொல்லுவான். அதை நம்பி, வம்பிலே தும்பிலே மாட்டிக்கிடக் கூடாது" என்று எடுத்த எடுப்பில் நெசவாளிகளை எச்சரிக்க முன் வந்தார் சுப்பையா முதலியார்.

சங்கர் சட்டென்று அவர் பக்கம் திரும்பினான்.

"சங்கம் வைப்பது என்ன தப்பான காரியமா? நூல் வியாபாரிகளும், முதலாளிகளும் தமக்கென்று சங்கம் வச்சிக்கிறபோது, நீங்க மட்டும் வைக்கக் கூடாதா? சமூக சேவைக்கென்று தொடங்கிய பத்திரிகையைக்கூட, முதலாளிகள் தங்கள் சௌகரியத்துக்குத்தானே உபயோகப் படுத்திக் கொள்கிறார்கள்! இதெல்லாம் உங்களுக்குத் தெரியாத விஷயமா, என்ன?"

"அதெல்லாம் முதலாளிமாருங்களுக்குச் சரி. தம்பி. நாமளும் அந்த மாதிரி செய்யப்படுமா?" என்று கேட்டார் சுப்பையா முதலியார்.

வடிவேலு முதலியார் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கச் சுப்பையா முதலியார் மீது சீறி விழுந்தார்.

"வே, சுப்பையா முதலியார்! முதலாளிக்கு ஒரு வழக்கு, நமக்கு ஒரு வழக்கா? வாயைப் பொத்திக்கிட்டு ஒரு இடத்திலெ கிடையும். உம்மை மாதிரி, இருக்கிறவன் காலைச் சுத்திவந்து, எச்சிப் பிழைப்புப் பிழைக்க நாங்க தயாராயில்லெ. உபகாரம் இல்லாவிட்டாலும் உபத்திர மாவது பண்ணாமெ இரியும்!"

எங்கே வார்த்தை தடித்து விடுமோ என்று பயந்த அங்கிருந்த பெரியவர் இருவரையும் கையமர்த்தி, "எதுக்கு வாயைக் குடுத்து வாயை வாங்குதிய? தம்பி கிணத்திலே விழுங்கன்னு சொன்னா, உடனே நாம விழுந்துடவா போறோம்? நாலும் யோசிச்சி நல்லதுன்னா செய்வோம். இதுக்கு ஏன் வீண் சண்டை?" என்று சாவதானமாகப் பேசிச் சமரசம் செய்து வைத்தார்.

"ஆமா தம்பி, சர்க்காரோடே போராடணும். அப்படியிப்படிங்கிறியே அதென்ன நடக்கிற காரியமா?" என்று ஒரு சந்தேகத்தைக் கிளப்பினார் ஒரு நெசவாளி.

சங்கர் அவர்களது கேள்விகளுக்கெல்லாம் உற்சாகத் தோடு பதில் கூறத் தயாராயிருந்தான்; அவர்கள் கேள்வி

கேட்கக் கேட்க அவனது உற்சாகமும் உவகையும் அதிகரித்தன.

"ஏன் நடக்காது? சர்க்காரிடம் அதிகார பலம், ஆயுத பலம் எல்லாம் இருப்பதால் தானே அது நம்மை ஆளுகிறது? அதனாலதானே நீங்கள் பயப்படுகிறீர்கள்? யோசித்துப் பாருங்கள். நாமில்லாமல் இந்த சர்க்கார் ஆகாயத்திலிருந்து குதித்து வந்து விட்டதா? சர்க்காரிடம் அதிகார பலம் இருக்கலாம்; உங்களிடமோ மக்கள் பலம் இருக்கிறது. மக்கள் கோடிக்கால் பூதம் போன்றவர்கள். நீங்கள் ஒன்று சேர்ந்து நிர்ப்பந்தித்தால் சர்க்கார் இணங்கித்தானாக வேண்டும். நீங்கள் ஒன்றுபட வேண்டும் என்பதற்காகத்தான் சங்கம் வையுங்கள் என்கிறேன்" என்றான் சங்கர்.

நெசவாளிகள் எல்லோரும் சங்கருக்குப் பதிலே சொல்லாமல் ஒருவரையொருவர் பார்த்தனர்: சங்கர் சொல்லுகிறபடி நடந்தால் விமோசனமுண்டா என்ற கேள்வி ஒவ்வொருவரின் மனத்திலும் தளிர் விட்டது.

"யானைக்குத் தன் பலம் தெரியாததால்தான் அது மாவுத்தனுக்குப் பயப்படுகிறது. அதுபோல் நீங்களும் பயந்து பின்னடைகிறீர்கள். ஆனால் உங்கள் ஒற்றுமையின் பலத்தை நீங்கள் உணர்ந்துவிட்டால், பிறகு சாவு உங்களுக்கல்ல. ஒன்றுபட்ட மக்களின் சக்தியை எந்த சர்க்காராலும் நசுக்க முடியாது. இது சரித்திரம் கண்ட உண்மை!" என்று ஆணித்தரமாகக் கூறி முடித்தான் சங்கர்.

அங்கிருந்தவர்கள் அனைவரும் சங்கரின் உறுதி வாய்ந்த பேச்சின் வசிய சக்தியால் கட்டுப்பட்ட நாகங்கள் போல் பேசாது உட்கார்ந்திருந்தனர். வடிவேலு முதலியார்தான் நெசவாளிகள் அனைவரையும் ஒரு முறை சுற்றிப் பார்த்து விட்டு, ஆத்திரத்தோடு பேச முன் வந்தார்.

"என்னையா பேசாம இருக்கீங்க? அழுத பிள்ளைதான் பால் குடிக்கும் வாயுள்ள பிள்ளைதான் பிழைக்கும். சங்கம் வச்சா, கழுத்துக்கு கத்தி ஒண்ணும் வந்திராது. மதுரையிலே

சங்கம் வச்சி என்னமா வேலை செய்யறாங்க தெரியுமா? நானும் ரொம்ப நாளா யோசிச்சுக்கிட்டுதான் இருந்தேன். நாமும் சங்கம் வச்சிற வேண்டியதுதான். இப்படி நித்த நித்தம் பைத்தியம் பிடிச்ச நாய் மாதிரி சுத்திச் சுத்தி வந்து சாகிறதை விட, வாழ வழி தேடும் போராட்டத்திலே செத்துத்தொலைஞ்சாலும்பரவாயில்லெ.சாவாவது நல்ல சாவா இருக்கும்!"

வடிவேலு முதலியாரின் உணர்ச்சியும் உத்வேகமும் நிறைந்த வார்த்தைகள் அங்கிருந்தவர்கள் உள்ளங்களை யெல்லாம் மின்சாரத்தால் தாக்கியது போல் உலுக்கிக் குலுக்கி விட்டன.

"அதுவும் சரிதான்" என்று மெல்லிய குரலில் ஆமோதித்தார் பெரியவர்.

அதே நேரத்தில் அம்மன் கோயில் ஓதுவார் மூர்த்தி அந்த நேர பூஜை செய்து மணியடிக்கும் ஓசையும் கண கணவென்று விம்மி ஒலித்துப் பரவியது.

"அம்மன்கூட வாக்குக் குடுத்திட்டா. பயப்படாமெ, தம்பி சொல்றபடிக் கேளுங்க" என்றார் முதியவர்.

எல்லோருடைய முகத்திலும் திடீரென்று ஒரு நிம்மதியும் தெளிவும் பிறந்தது.

"அப்ப சரி, சங்கரா! சங்கம் வைக்கிறதுக்கு நீதான் எல்லாம் சொல்லிக் கொடுக்கணும் தெரிஞ்சிதா?" என்று சங்கரை வேண்டிக் கொண்டார் வடிவேலு முதலியார்.

பூரணப் பொலிவும் திருப்தியும் நிறைந்த முகத்தோடு, 'நான் எப்பவும் தயார்' என்று கூறியவாறே சங்கர் மண்டபத்தைவிட்டு எழுந்தான்.

கீழ்த் திசை வானத்தில் பூர்ண சந்திரோதயத்தின் செக்கர் ஒளி மெல்ல மெல்ல இருளை விரட்டியடித்துக் கொண்டு மேலேறத் தொடங்கியது.

# 16

"என்னம்மா கமலா, மணியும் ஒன்பது அடிக்கப் போவுது. இன்னும் சாப்பிடாம, இப்படியே உக்காந் திருந்தா? வாம்மா சாப்பிட!" என்று கமலாவின் தலையைத் தடவிக் கொடுத்தவாறே அன்போடு கூப்பிட்டாள் தர்மாம்பாள்.

"எனக்குப் பசியில்லேம்மா" என்று கமலா துணிந்து பொய் சொன்னாள்.

"பொய்தானே சொல்றே? மத்தியானம்கூட நீ சரியாச் சாப்பிடலையே. அண்ணன் எப்பயெப்ப வர்ரானோ? வாம்மா சாப்பிட. மணிக்கு ஒரு குறையும் வராது" என்று மீண்டும் தேற்றி, கமலாவை வற்புறுத்தி அழைத்தாள் தாய்.

கமலாவோ இருந்த இடத்தை விட்டு அசையவே மறுத்து விட்டாள்.

"சொல்லத்தானே செய்யலாம். இப்படி முரண்டு பிடிச்சா?" என்று சலிப்பும் வருத்தமும் தோன்றக் கூறிவிட்டு, தர்மாம்பாள் திரும்பிச் சென்றாள்.

கமலா அந்த நாற்காலியிலேயே அசையாமல் உட்கார்ந்து, மேஜை மீதுள்ள விளக்கையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். மேஜைமீது ஒரு புத்தகம் திறந்த வாக்கில் கிடந்தது. கமலாவின் மனமோ ஒரு நிலை கொள்ளாமல் அலை பாய்ந்து கொண்டிருந்தது. அன்று காலையில் ஆஸ்பத்திரிக்குச் சென்று விட்டு வந்த சங்கர், மணிக்குப் பிரக்ஞை வந்து விட்டதாகவும், எனினும் அவன் ஜன்னி கண்டது போல் ஏதேதோ பிதற்றுவதாகவும், ஜுரமும் அடிப்பதாகவும் தெரிவித்தான். அதைக் கேள்விப் பட்டதிலிருந்தே, கமலாவுக்கு மனம் எண்ணாத எண்ண மெல்லாம் எண்ணி அலைக்கழியத் தொடங்கி விட்டது. மத்தியானம் அவளுக்குச் சாப்பாடே செல்லவில்லை;

அம்மாவின் வற்புறுத்தலுக்காக, வேண்டாவெறுப்பாக, சில பருக்கைகளைக் கொறித்துத் தீர்த்தாள். சாப்பிட்டு முடித்ததுமே சங்கர் ஆஸ்பத்திரிக்குச் சென்று வருவதாகச் சொல்லிப் புறப்பட்டுப் போய் விட்டான். சீக்கிரமே திரும்பி வந்துவிடுவதாகச் சொல்லிச் சென்றவன் மணி ஒன்பது அடித்தும் வரவில்லை...

எனவேதான் கமலா என்னமோ ஏதோ என்று தவித்துக் கொண்டிருந்தாள்; சங்கர் காரணமில்லாமல் எங்கும் காலம் தாழ்த்த மாட்டான் என்று அவளுக்குத் தெரியும்.

கடந்த மூன்று தினங்களாகவே கமலாவிடமிருந்த உற்சாகம் குடியோடிப் போய் விட்டது. கைலாச முதலியார் வீட்டில் விழுந்த இரட்டைச் சாவுகளும், மணி அடிபட்டு ஆஸ்பத்திரிக்குப் போன நிகழ்ச்சியும் அவளது குதூகலத்தையெல்லாம் பறித்துக்கொண்டுபோய்விட்டன. தன் தந்தை தன் கல்யாண விஷயமாய்ச் சம்மதிக்காவிட்டாலும், தன் அண்ணன் சங்கர் இருக்கும்போது தனது இஷ்டத்துக்கு விரோதமாக எதுவும் செய்ய முடியாது என்று இறுமாந்திருந்த கமலாவுக்கு, சந்தர்ப்பம் செய்த சதிபோல, அந்தக் கோர நிகழ்ச்சி நடந்தேறி விட்டது. அன்றிலிருந்து மங்கள பவனத்தில் கமலாவின் கலகலப்பான பேச்சும் சிரிப்பும் கேட்கவில்லை; அவள் அடிக்கடி கேட்டு ரசிக்கும் ஹிந்தி சங்கீதம் ஒலிக்கவில்லை; மங்கள பவனத்திலிருந்த ரேடியோ அன்று முதல் ஊமையாகி விட்டது.

"மூன்று நாட்களாகியும் இன்னும் அத்தானைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே. நாளையாவது கொடுத்து வைக்குமா? இல்லை-சங்கர் சொன்னதைப் பார்த்தால்-இனிமேல் அந்தப் பாக்கியமே எனக்குக் கிட்டாமல் போய் விடுமா?"

கமலாவின் மனம் குரங்குப் பிடிக்குள் சிக்காமல் தப்பித் தப்பி ஓடிக் கொண்டிருந்தது; அதன் வெறியாட்

டத்தை நிறுத்துவதற்காக, கமலா புத்தகத்தை எடுத்துப் புரட்டினாள். அதில் கறுப்பு மையும் வெள்ளைத் தாளும் தான் தெரிந்தனவேயன்றி எழுத்துக்கள் தெரியவில்லை; எழுத்துக்கள் தெரிந்தாலும், அதன்வாக்கியச் சேர்க்கைகளோ பொருள் அமைதியோ அவள் மண்டைக்குள் ஏறவே இல்லை. கமலா ஆயிரம் தடவை புத்தகத்தை திறந்தாள் ஆயிரம் தடவை மூடினாள். புத்தகத்தில் மனம் செல்லாததனால் புத்தகத்தை மூடிவிட்டு, விளக்கையும் அணைத்துவிட்டு இருளின் துணையிலே இருந்தாள்.

அறையிலிருந்த கண்ணாடி ஜன்னல் வழியாக, தெருவிலுள்ள மின்சாரக்கம்பவிளக்குபுகைமூட்டம்போல் ஒளி செய்தது; வெளியே சிணுசிணுத்துப் பெய்து கொண்டிருந்தசிறு தூற்றல்கண்ணாடி ஜன்னல்மீது துளித் துளியாகப் படருவதும், பின்னர் அந்தத் துளிகள் ஒன்று சேர்ந்து தாரை தாரையாக மாறுவதும் அவள் கண்ணைக் கவர்ந்தது. எனினும் அந்தக் காட்சியைக் கண்டெழுந்த அவளது கற்பனை மீண்டும் அவள் மனத்தைக் கட்டவிழ்த்து விட்டது; "ஒருவேளை இதோ அழுது சிணுங்கி, ஜன்னல் கண்ணாடிமீது தாரை தாரையாகக் கண்ணீர் சிந்தும் மழைநீர் எனக்கு வரவிருக்கும் ஆபத்தின் அறிகுறி தானோ?.."

கமலாவுக்கு இந்த மாதிரியான மூடத்தனங்களி லெல்லாம் நம்பிக்கை கிடையாது. எனினும் அவள் இருந்த நிலையில் தனது மூடத்தனத்தைப் பற்றியோ, புத்திசாலித் தனத்தைப் பற்றியோ ஆராய்ச்சி செய்ய இயலவில்லை.

எனவே கமலா அந்தக் கண்ணாடியிலிருந்து கவனத்தை வேறு பக்கம் திரும்பினாள். சங்கர் வரும் காலடி ஓசை கேட்கிறதா என்று காதைத் தீட்டி வைத்துக்கொண்டு காத்திருந்தாள். ஆனால் மழைத் தண்ணீர் சொட்டுச் சொட்டென்று முற்றத்திலிருந்த விசிறி வாழையிலைகளில் விழும் சப்தத்தையும், உள்வீட்டிலிருந்தகடிகாரம் தாள அளவோடு சப்திக்கும் ஒலியையும் தவிர வேறு அரவமே இல்லை.

சங்கர் கமலாவை ஒன்பதரை மணிவரையிலும் தவிக்க விடவில்லை; அதற்குள் வந்து சேர்ந்து விட்டான். செருப்பின் ஓசையைக் கேட்டதும் 'அண்ணன்தான்' என்று தெரிந்து கொண்டவளாய் கமலா வெளியே ஓடி வந்தாள்.

வந்ததும் வராததுமாய் "அண்ணா, அத்தானுக்கு எப்படியிருக்கு?" என்று ஆவலோடு கேட்டாள்.

"ஒண்ணும் பயமில்லை, கமலா. காய்ச்சல் இறங்கி விட்டது" என்று விஷயத்தைச் சொன்னான் சங்கர்.

சங்கர் சொல்வதைக் கேட்டுக் கொண்டே வெளிவந்த தர்மாம்பாள், "வாடாப்பா! அண்ணனைக் காணாமல் சாப்பிடவே மாட்டேன்னு ஒரே சாதனையாய் சாதிச்சித் தீர்த்துட்டா, உன் தங்கச்சி! இப்பவாவது நல்ல வார்த்தை கொண்டாந்தியே!" என்று நிம்மதி நிறைந்த பெருமூச்சுடன் சொன்னாள் தர்மாம்பாள்.

கமலாவின் முகத்தில் ஒரு அசட்டுப் புன்னகை மலர்ந்து கூம்பியது.

"அசடு. இவ்வளவு நேரமும் சாப்பிடாமலா இருந்தே? மணிக்கு ஒரு ஆபத்துமில்லைன்னு அன்னிக்கி டாக்டர் நடராஜனே உங்கிட்ட சொல்லலியா?" என்று செல்லமாகக் கடிந்து கொண்டான் சங்கர்.

"சரி, சரிவாங்க ரெண்டுபேரும், சாப்பிடலாம்" என்று கூறியவாறே உள்ளே திரும்பினாள் தர்மாம்பாள்.

"போம்மா, வர்ரேன்" என்று சொல்லிவிட்டு, கைகால் கழுவுவதற்காகக் குழாயடிக்குச் சென்றான் சங்கர்; கமலா அவனைத் தொடர்ந்து குழாயடிக்குத் தானும் சென்று விட்டாள்.

"அண்ணா, அத்தானை நாளைக்காவது பார்க்கலாமா?" என்று கொஞ்சும் குரலில் கேட்டாள் கமலா.

"இன்னம் ரெண்டு நாளைக்கு டாக்டர் யாரையுமே

அனுமதிக்க மாட்டாராம். மீண்டும் மணிக்கு ஏதேனும் அதிர்ச்சி ஏற்பட்டுவிடக் கூடாதே என்று அவர் பயப் படுகிறார். இத்தனை நாள் பொறுத்திருந்தவள் இன்னம் இரண்டு நாளைக்குப் பொறுத்திருக்கக் கூடாதா?" என்று கூறியவாறே முகத்தைத் துடைத்து கொண்டான் சங்கர்.

கமலாவுக்குத் தோன்றிய புது உற்சாகத்தால், அவள் மேலும் பேச முனைந்தாள்:

"நீ வருகிற வரையிலும், எனக்கு ஒண்ணுமே ஓடலை. ஏன் அண்ணா, வர்ரதுக்கு இவ்வளவு நேரம்?"

"உனக்கு நல்ல செய்தி கொண்டு வரணும்கிறதுக்காக, மணிக்கிக் காய்ச்சல் இறங்குகிற வரையிலும் ஆஸ்பத்திரியிலேதான் இருந்தேன். அப்புறம் வர்ர வழியிலே, நம்ம ஊருத் தறிகாரங்க எல்லாம் என்னை நிறுத்திட்டாங்க. மணி வீட்டிலே நடந்த விஷயம் அவங்க கண்ணைத் திறந்து விட்டிருக்கு. சங்கம் வச்சிப் போராடினாத்தான் விமோசனம் என்ற எண்ணம் இப்போதுதான் அவங்களுக்குப் புரிய ஆரம்பிச்சிருக்கு. அதுதான் வர நேரம் ஆயிட்டுது" என்று விளக்கிச் சொன்னான் சங்கர்.

"அப்போ, இனிமேல் நம்ம அப்பா முன்னே மாதிரி கொள்ளையடிக்க முடியாதுன்னு சொல்லு!" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் கமலா.

இதற்குள் தர்மாம்பாள் உள்ளேயிருந்து கூப்பிடும் சப்தம் கேட்டது.

"ரெண்டு பேரும் என்னத்தைத்தான் பேசிக்கிட்டு இருக்கிய? வாங்க சாப்பிட. வயிறு பசிக்கலையா?" என்று கூப்பிட்டாள் தர்மாம்பாள்.

சங்கரும், கமலாவும் வீட்டுக்குள் சென்று சாப்பிட உட்கார்ந்தார்கள்.

தர்மாம்பாள் இருவருக்கும் பரிமாறிக்கொண்டே,

"ஏண்டாப்பா சங்கர், மணிக்கு ஒண்ணும் பயமில்லையே!" என்று கேட்டாள்.

"அதெல்லாம் ஒண்ணும் இல்லேம்மா. இன்னும் ஒரு வாரத்துக்குள்ளே அவன் ஆஸ்பத்திரியிலேருந்து வந்திடு வான்" என்று கூறிக்கொண்டே, சோற்றை வாயில் வைக்கப்போன சங்கர் ஏதோ நினைத்தவனாக மீண்டும் பேசினான்: "அப்பாவின் பேராசை ஒரு குடும்பத்தையே சீர்குலைத்துவிட்டது.இன்னும்எத்தனைகுடித்தனங்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளப் போகிறார் களோ?-அம்மா, ஜனங்கள் என்றைக்கும் இப்படியே இருக்க மாட்டார்கள். அவர்கள் விழிப்படையும் காலத்தில்..."

சங்கர் அந்தக் காலத்தை மனத்தில் கற்பனை செய்து பார்த்தவனாகப் பெருமூச்செறிந்தான்.

தன் கணவனைப்பற்றிக் குறைகூறுவதைக் கண்டதும் தர்மாம்பாளின் உள்ளுணர்ச்சி பதிவிசுவாசத்தால் ஒரு கணம் குன்றியது. அதை அவள் வெளிக் காட்டிக் கொள்ளாமலே, "சங்கர், என்ன இருந்தாலும், நீ இப்படியெல்லாம் பேசி, அப்பா மனசைப் புண்படுத்தக் கூடாது. மணியோட அப்பா விசயமாய் இவ்வளவு கடுமையாய் நடந்திருக்கக் கூடாதுன்னு நான்கூட அப்பாக்கிட்டே சொன்னேன்-" என்று பேசத் தொடங்கினாள்.

சங்கர் தன் தாயின் மனவுணர்ச்சியை உணர்ந்தவ னாகவோ, அவள் கூறுவதை நம்புபவனாகவோ காணப் படவில்லை. வாயில் போட்டிருந்த சாதத்தை மென்று விழுங்கி விட்டு, ஒரு மடக்குத் தண்ணீரும் குடித்துவிட்டு, தர்மாம்பாளுக்குப் பதில் சொல்ல முனைந்தான்.

"என்னம்மா சொன்னே? பணக்காரனுக்கு என்றைக் கும் பரிதாப உணர்ச்சி பிறந்துவிடாது, அம்மா. பணத்தின் பேராசை இந்த உலகத்து மக்களை எத்தனை முறை யுத்தத்துக்கு ஆளாக்கி ரத்தம் குடித்திருக்கிறது தெரியுமா?

பணக்காரனுக்கு வெளி நாக்கு சர்க்கரை; உள் நாக்கு விஷம் அம்மா, விஷம்! தெரியுமா?"

தர்மாம்பாளுக்குஅவன்பேச்சைக்கேட்கஎன்னவோ போலிருந்தது.

"சரிதாண்டாப்பா, சங்கர். சீக்கிரம் சாப்பிட்டுட்டு எழுந்திரு. நல்லாத்தான் பேசறே? இலை முன்னாலே உக்காந்துக்கிட்டு, ரத்தம், விஷம் அப்படி இப்படின்னு" என்று செல்லமாகக் கடிந்து கொண்டாள்.

தன் தாயின் பதிலைக் கேட்டுக் 'களுக்'கென்று சிரித்தாள் கமலா.

"அண்ணா, உன்னைப் பேச்சிலே மடக்க முடியாதுன்னு பெருமை அடிச்சிக்கிடுவியே. இப்போ அம்மா உன்னை மடக்கிப்புட்டாளே!" என்று சொல்லிக் கண்ணைச் சிமிட்டினாள் கமலா.

"வாயாடி!" என்று கூறி நிலைமையைச் சமாளித்தான் சங்கர்.

சாப்பிட்டு முடிந்தபின் மூவரும் நடுஹாலுக்கு வந்தனர். சங்கர் கமலாவைப் படுக்கப் போகச் சொல்லி விட்டு, தன் தாயிடம் திரும்பி, "அம்மா நான் மணி வீட்டு வரையிலும் போய், தங்கம்மா அத்தைக்கு மணியைப் பத்தி தகவல் தெரிவிச்சிட்டு வந்திடுறேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பினான்.

"உன் அத்தையை நீதான் மெச்சிக்கிடணும். அன்னிக்கி நான் துட்டி கேக்கப்போனதும், அவள் என்னை முகம் கொடுத்துக்கூடப் பார்க்கலெ!" என்று சொல்லிப் பெருமூச்செறிந்தாள் தர்மாம்பாள்.

"எப்படியம்மா பார்ப்பாள்? நம்ம அப்பா வாலேதானே அவளுக்கு இந்தக் கதி நேர்ந்தது?"

சங்கரின் பேச்சு மீண்டும் பழைய தடத்துக்குச் செல்வதையுணர்ந்த தர்மாம்பாள், "சரி, சரி, போயிட்டு, சீக்கிரமா வந்து சேரு. மணி பத்தாச்சு" என்று சொல்லி அவனை வழியனுப்பிவைத்தாள்.

சங்கர் சென்ற சிறிது நேரத்துக்குள்ளாகவே தாதுலிங்க முதலியார் வந்து சேர்ந்தார். வரும்போதே, "சங்கர் எங்கே?" என்ற கேள்விதான் அவர் வாயிலிருந்து பீறிட்டு வெடித்தது.

"ஏன்? என்ன விசயம்?" என்று கேட்டு நிறுத்தினாள் தர்மாம்பாள்.

"என்ன விசயமா? இப்பதான் அந்தச் சுப்பையா முதலி ஸ்டோருக்கு வந்து சொல்லிட்டுப் போனான். இவன் என்னமோ தறிகாரங்களையெல்லாம் கூட்டிக்வச்சிக்கிட்டு, சங்கம் வைக்கணும், அது வைக்கணும், இது வைக்கணும்னு சொல்லிக்கிட்டிருந்தானாம். என்னைப்பத்தி வேறே, என்னென்னமோ சொன்னானாம்-இருந்திருந்து எனக்குன்னு வந்து முளைச்சானே, இவன்! ஒத்தைக்கு ஒரு பிள்ளையேன்னு பார்க்கிறேன். இல்லேன்னா, தொலைச்சித் தலை முழுகிட்டு ‘அக்கடா’ன்னு இருந்திருவேன். எங்கே அவன்?" என்று படபடத்துப் பேசினார் தாதுலிங்க முதலியார்.

"அவன் இன்னம் வரலெ" என்று துணிந்து பொய் சொன்னாள் தர்மாம்பாள்.

அறைக்குள்ளிருந்து இத்தனையையும் ரகசியமாகக் காது கொடுத்துக் கேட்டிருந்த கமலா "அப்பா! இனிமேல் நீங்கள் ஜனங்களையும் ஏமாற்ற முடியாது; என்னையும் ஏமாற்றமுடியாது!" என்று குதூகலத்துடன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

உள் வீட்டுக் கடிகாரம் ‘டங்’கென்று பத்தரை அடித்தது.

# 17

டாக்டர் நடராஜன் தம் வாக்குறுதியை நிறைவேற்றித் தந்துவிட்டார்; மணி உயிர் பிழைத்துவிட்டான்.

ஆனால், அவனுக்குப் பிரக்ஞை மீண்டதிலிருந்து அவன் பதறிப் பதறிப் புலம்ப ஆரம்பித்து விட்டான். அவனுக்குப் பிரக்ஞை மீண்டபோது அவனருகே டாக்டரும் சங்கரும்தான் நின்று கொண்டிருந்தார்கள். பிரக்ஞை திரும்பிக் கண் விழித்தவுடன் அவன் ஏதோ பேயைக் கண்டு மிரளுவதுபோலப் பரக்கப் பரக்க விழித்தான்: மறுகணமே உடம்பெல்லாம் பதறித் துடிக்க, "டாக்டர்! டாக்டர்! அதோ அப்பா தொங்கிக் கொண்டிருக்கிறார்களே! வாருங்கள். டாக்டர்! வாருங்கள் டாக்டர்!" என்று ஆஸ்பத்திரி அறையே அதிர்ந்து குலுங்கும்படி அலறிக் கத்தினான். கட்டிலை விட்டுக் குதித்தோட முனைபவன் போல் துள்ளித் திமிறினான். டாக்டரும் சங்கரும் அவனை அசைய விடாதபடி இறுகப் பிடித்தவாறே, அவனுக்குத் தெளிவூட்ட முயன்றனர்.

"மணி, இதோ பார். நான்தான் சங்கர். என்னைத் தெரியவில்லை?" என்று மணியின் முகத்துக்கு நேராகத் தன் முகத்தை வைத்துக் கொண்டு கேட்டான் சங்கர்.

மணி சங்கரை வெறிக்க வெறிக்கப் பார்த்தான்.

"நான்தான் சங்கர்!" என்று மீண்டும் அறிமுகப் படுத்தினான் சங்கர்.

"சங்கரா? என்னை ஏமாத்தப் பாக்கிறே! நீதான் எமன்! எமன்?" என்று கத்தினான் மணி.

சங்கருக்கு மணியின் நிலைமையைக் கண்டு கண்ணில் நீர் வந்துவிட்டது. அவனுக்கு எப்படித் தெளிவூட்டுவது

எனத் தெரியாமல் திகைத்தான்; சங்கரின் நிலைமையைக் கண்ட டாக்டர் மணியின் உடம்பைப் பிடித்துக் குலுக்கியவாறே, "மணி, என்னைப் பாருங்கள்-" என்று சொன்னார்.

மணிடாக்டரைவெறித்துப்பார்த்தான்.

"மணி, நான் யார்?"

"நீங்களா? டாக்டர்!சார்! என் அப்பா-"

டாக்டர் குறுக்கிட்டார்: "நான்தான் டாக்டர் தெரிந்ததா?"

"ஆமாம் டாக்டர்!" என்று அமைதியுடன் பதில் அளித்தான் மணி.

"மிஸ்டர் மணி, நீங்கள் இப்போது என் பேஷியண்ட். பாருங்கள். இது ஆஸ்பத்திரிக் கட்டில்; இது மருந்து பாட்டில், இது தெர்மாமீட்டர்-தெரிகிறதா?" என்று ஒவ்வொரு பொருளாக அவனுக்குச் சுட்டிக் காட்டினார். மணி ஒவ்வொன்றையும் திருகத் திருகப் பார்த்தான்.

"இங்கேஎப்படிவந்தேன்டாக்டர்?"என்றுபதறினான் மணி.

டாக்டர் அவன் கையை எடுத்து அவன் தலையில் கட்டியிருக்கும் மண்டைக் கட்டைத் தொட்டுணரச் செய்தார்.

"உங்கள் மண்டையில் கட்டுப் போட்டிருக்கிறது தெரிந்ததா? உங்களுக்கு மண்டையில் அடிபட்டு விட்டது! அதுதான் இங்கு கொண்டு வந்தோம்."

"டாக்டர், என் அப்பா?"

"அப்பாதானே! உங்கள் தகப்பனார் தற்கொலை செய்துகொண்டதைநீங்கள்பார்க்கவில்லை?பார்த்தவுடன் கால் தவறிக் கீழே விழவில்லை? ஞாபகம் இருக்கிறதா?"

மணிக்கு மறந்து போன கனவு மீண்டும் திரும்புவது போல் புத்தியில் சலன அலை வீசியது.

"டாக்டர், அப்பா செத்துப்போயிட்டாங்க, டாக்டர்!"

மணி கதறினான். 'அப்பா அப்பா' என்று அலறினான். அவனுக்கு மீண்டும் மயக்கம் போட்டுவிட்டது. டாக்டர் அவனைத் தாங்கிப் பிடித்துப் படுக்க வைத்தார்; நாடியைப் பரிசோதித்துப் பார்த்தார்; மயக்கம் தெளிவதற்கு ஏதோ ஒரு ஊசி போட்டு முடித்தார். ஆஸ்பத்திரி நர்சைக் கூப்பிட்டு மணியைக் கவனித்துக் கொள்ளச் சொல்லிவிட்டு சங்கரிடம் திரும்பினார்.

"சங்கர், ஒன்றும் பயமில்லை! வாருங்கள். வெளியில் இருக்கலாம்" என்று கூறியவாறே தம் அறைக்கு நடந்தார்; சங்கரும் அவரை பின் தொடர்ந்து வந்து சேர்ந்தான்.

"என்ன சங்கர், மணிக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை. பயத்தின் காரணமாக ஏற்பட்ட அதிர்ச்சிதான் நீங்க வில்லை. இரண்டு நாளைக்குள் நான் அவரைத் தன் னிலைக்குக் கொண்டு வந்துவிடுகிறேன்" என்று தைரியம் கூறினார் டாக்டர்.

"இயற்கையிலேயே மணி பயந்த சுபாவம் உடை யவன்; அதிலும் இந்த மாதிரியான அதிர்ச்சி அவனுக்கு இதற்குமுன் ஏற்பட்டதில்லை; ஏற்படும் சந்தர்ப்பமும் இல்லை" என்றான் சங்கர்.

"அதிர்ச்சி சொல்லிக் கொண்டா வருகிறது? எதை யும் தாங்கிக் கொள்ளத் தைரியம் வேண்டும்."

"தைரியம் அனுபவத்தில்தான் வரவேண்டும், டாக்டர். வாழ்க்கையையே சொப்பனம் போல் வாழ்ந்து கொண் டிருந்தால், நனவுலகத்தில் திடீர் மோதல் அதிர்ச்சியைத் தானே உண்டுபண்ணும்" என்று ஏதோ சொல்லத் தொடங்கினான் சங்கர்.

அதற்குள் ஆஸ்பத்திரி நர்ஸ் வந்து மணிக்குப் பிரக்ஞை திரும்புவதாகத் தெரிவித்தாள்; டாக்டர் அவசரமாக எழுந்து, "சங்கர் இங்கேயே இருங்கள். நான் இதோ வந்துவிடுகிறேன்" என்று சொல்லியவாறே நர்ஸைப் பின் தொடர்ந்தார்...

'ஆம். மணி சொப்பன வாழ்க்கைதான் வாழ்ந்தான்' என்று முனகியது சங்கரின் சிந்தனை. அதைத் தொடர்ந்து மணியின் வாழ்க்கை அவன் கண்முன் விரிந்தது...

மணி பணக்காரனின் பிள்ளையாகப் பிறக்கா விட்டாலும், சுகபோகியாக எந்தவிதக் கவலையும் அற்றுத்தான் வாழ்ந்தான். கைலாச முதலியார் நெசவாளி என்ற நிலைமையிலிருந்து சிறு வியாபாரி என்ற நிலைக்கு உயர்ந்தது வரை மணிக்கு வாழ்வில் எவ்விதக் குறையும் இல்லை.அவனுக்கு அறிவு வந்தது முதல் அவன் வாழ்க்கைக் கவலைகள் எதுவுமின்றித்தான் வாழ்ந்தான். கைலாச முதலியாரும் மூத்த மகன் என்ற பாசத்தால் அவனுக்கு எவ்விதக் குறைவும் இல்லாமல்தான் பார்த்து வந்தார்.மணி படிப்பில் கெட்டிக்காரன்தான்; எனினும் அவன் தன் படிப்பைத் தவிர, தன்சொந்தச் சுகதுக்கங்களைத் தவிர, வேறு எதிலும் கவனம் செலுத்த மாட்டான். என்னவோ தான் உண்டு தன் படிப்பு உண்டு என்று இருப்பவன் போலத் தோற்றுவான். சங்கர் எப்போதாவது அவனிடம் அரசியல் அல்லது பொது விஷயங்களைப் பற்றிப் பேசினாலும் 'அதெல்லாம் உனக்குச் சரி' என்று சொல்லி, அதிலிருந்து தப்பித்துக் கொள்ள முயலுவான்.

உலகப் பிரச்னைகளில் அவன் கவனம் எப்படித் திரும்பவில்லையோ, அதுபோல் அவனுக்குத் தன் உள்வீட்டு நிலைமைகளிலும் கவனம் கிடையாது. தன் தந்தையின் வியாபாரம் நாளுக்கு நாள் க்ஷீணித்து வந்ததைக்கூட அவன் உணரவில்லை. அதனால்தான் ஒருநாள் அவன் ஸீஸன் டிக்கட் எடுப்பதுபற்றி, தந்தையிடம் நடத்திய வாக்கு

வாதத்தைப் பற்றி சங்கரிடம் பிரமாதமாகச் சொல்லிக் கொண்டான். கமலாவுக்கும் அவனுக்கும் ஏற்பட்ட நட்பு நீண்ட நாள் தொடர்பாலும், மணியின் குண நலங்களாலும் உரம் பெற்றிருந்தது. அவர்கள் இருவருக்கும் திருமணம் நடக்கத் தன்னால் ஆனதைச் செய்வதாக, சங்கர் கூறியபோது கூட அவன் அந்தத் திருமணம் நடப்பதற்கான சூழ்நிலையின் சாதக பாதகங்களைப் பற்றிச் சிறிதும் சிந்திக்கவில்லை. என்னவோ கல்யாணமே நிச்சயமாகி விட்டதுபோல் கனவுலகில் நீந்தத் தொடங்கி விட்டான் மணி.

சுருங்கச் சொன்னால் மணி எதையும் எதிர்த்துப் போராடும் சக்தியோ தைரியமோ அற்றவனாக வளர்ந்து வந்திருந்தான். கமலாவிடமும், சங்கரிடமும் காணப்பட்ட தைரியமோ, தனது விருப்பத்துக்கு எதிரானவற்றை எதிர்த்துப் போராடும் மனப்பான்மையோ மணியிடம் இல்லை. வெற்றி என்பது தானே தன்னை வந்து சேரவேண்டும் என்று கருதுபவன் போலிருந்தான் மணி; அதனால்தான் தாதுலிங்கமுதலியார் கமலாவைத் தனக்குத் தரச் சம்மதிக்கவில்லை என்று தெரிந்தபோது, தன் காதலுக்கு முடிவு காலம் வந்து விட்டதென்றே கருதிப் பயந்தான்; எத்தனை தாதுலிங்க முதலியார்கள் எதிர்த்த போதிலும், தான் விரும்பும் கமலாவைத் தான் மணந்தே தீருவேன் என்று சொல்லக்கூடிய வைராக்கிய சித்தம், தைரியம் அவனுக்கு ஏற்படவில்லை. கமலாவும் சங்கரும் தான் அவனுக்குத் தன்னம்பிக்கை ஊட்ட முயன்று வந்தார்கள்.

உலகப் போக்கின் நெளிவு சுழிவுகளைப் பற்றியும், தன்மைகளைப் பற்றியும் மணிக்குத் தெளிவான அபிப்பிராயமில்லை யென்றாலும், அவற்றைப் பற்றிய பிரக்ஞைகூட இருந்ததில்லை, 'மணியின் குணாதிசயங்களுக்கும் புத்திக் கூர்மைக்கும் அவன்மட்டும் உலகத்தைப்பற்றிக் கவலை கொண்டால் - பிரத்தியட்ச

வாழ்க்கையின் குரூர வசீகரங்களைக் கண்டுணர்ந்தால் - அவன் உள்ளத்திலே புதைந்து கிடக்கும் தர்மாவேசம், உலகில் சத்தியத்தை நிர்த்தாரணம் செய்வதற்காகச் சீறியெழுந்தால் என்றெல்லாம் சங்கர் நினைத்ததுண்டு.

'ஆனால் வாழ்க்கை என்பது கற்றுக்கொடுத்து வருவதில்லை; சூழ்நிலைதான் வாழ்க்கையைக் கற்றுக் கொடுக்கும்-'

'அப்படியானால், மணிக்கு இப்போது ஏற்பட்டுள்ள சூழ்நிலை, இப்போது ஏற்பட்டுள்ள அதிர்ச்சி, அவனுக்கு உலகைப்பற்றிய பிரக்ஞையைக் கொண்டுவருமா? மணியின் கண்களை அவனது தந்தையின் மரணம் திறந்துவிடுமா...?'

சங்கர் மணியைப்பற்றி ஏதேதோ சிந்தித்துக் கொண்டிருந்தான்.

"என்ன சங்கர், பலத்த யோசனை?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார் டாக்டர்.

"எப்படி இருக்கிறது டாக்டர்?" என்று தன்னிலை திரும்பிய சங்கர் ஆத்திரத்தோடு கேட்டான்.

"ஒன்றும் பயமில்லை தம்பி இறந்த விஷயம்கூட அவருக்குத் தெரிந்து விட்டது. இனிமேல் ஒன்றும் ஆபத்தில்லை. அவருக்குத் தூக்க மருந்து கொடுத்திருக்கிறேன். நன்றாகத் தூங்கட்டும், நாளை அல்லது நாளை நின்று எல்லாம் சரியாகிவிடும்" என்று கூறினார் டாக்டர்.

சங்கருக்கு மனம் நிம்மதியடைந்தது.

டாக்டர் கூறியதுபோலவே மணிக்கு இரண்டு நாட்களில் சித்தம் தெளிந்துவிட்டது. அன்று மாலையில் அவன் தூங்கி விழித்தபோது எதிரே டாக்டர் நடராஜன்தான் நின்றுகொண்டிருந்தார்.

"டாக்டர்!" என்று கூறியவாறே அவரைப் பரிதாப கரமாகப் பார்த்தான் மணி.

"என்ன வேண்டும்?" என்று அன்புடன் கேட்டார் டாக்டர்.

"என் குடும்பத்துக்கு நேர்ந்த கதியைப் பார்த்தீர்களா, டாக்டர்?" என்று கண் கலங்கினான் மணி.

"மணி. தைரியமாயிருங்கள். வீணாய்க் கவலைப்பட்டு உடம்பை அலட்டிக் கொள்ளாதீர்கள். உங்களுக்குத் தைரியம் வேண்டும். தைரியம் இல்லாத காரணத்தால்தான் நீங்கள் மண்டையிலடிபட்டு இந்தக் கோலத்துக்கு ஆளாகி விட்டீர்கள்."

டாக்டர் கூறியதற்கு இன்ன பதில் சொல்வதெனத் தெரியாமல் திகைத்தான் மணி.

"டாக்டர், நீங்கள் எங்கேயும் போக வேண்டாம். இங்கேயே இருங்கள். எனக்குப் பயமாயிருக்கு" என்றான் மணி.

"இங்கேதானே இருக்கிறேன். இப்போதுதானே சொன்னேன், தைரியமாயிருங்கள் என்று" என்று செல்லக் கண்டனத்தோடு கூறினார் டாக்டர்.

"இருக்கேன் டாக்டர்" என்று உள்ளுக்குள் அடங்கிய குரலில் பதில் தெரிவித்தான் மணி. பிறகு சிறிது நேரம் கழித்து, "எனக்கு எல்லாரையும் பார்க்கணும்போலே இருக்கு" என்று ஆசையோடு தெரிவித்தான்.

"எல்லாரையும் வரச்சொல்கிறேன். போதுமா?"

"டாக்டர்!"

"பேசப் பேசக் களைப்புத்தான் தோணும். கண்ணை மூடிக்கொண்டு படுத்திருங்கள்."

"சரி, டாக்டர்."

மணி அன்றிரவு நன்றாகத் தூங்கினான்.

ஆஸ்பத்திரிக் கடிகாரம் ஏழுமணி அடித்தது, காலை இளஞ்சூரியனின் நீளக்கதிர்க்கரங்கள் ஜன்னலின்வழியாக நீண்டுவந்து மணியை உசுப்பிஎழுப்பின; நெடுமூச்சு வாங்கி நிம்மதியாய்த் தூங்கிக் கொண்டிருந்த மணி கதிரொளியின் கதகதப்பால் தன்னுணர்வு பெற்றுத் தூக்கம் கலைந்தான்; எனினும் பலவீனப்பட்டு உள்ளுக்குள் குளிரால் நடுக்குவது போன்றிருந்த அவன் உடம்புக்கு, சூரிய ஒளி புது வலுவையும் புதுச் சுகத்தையும் ஊட்டுவது போலிருந்தது. தன்னைப் போர்த்திக் கிடந்த போர்வையின் ஸ்பரிச சுகத்தையும், போர்வையைத் தாண்டி உடலை வந்து தொட்டுத் தடவும் கதகதப்பின் இன்ப அரவணைப்பையும் அனுபவித்து உள்ளம் குளிர்ந்தவனாக அவன் கண்களைத் திறந்தான்.

பொழுது புலர்ந்து ஆஸ்பத்திரி எங்கும் ஒளிப் பிரவாகம் நிரம்பி வழிந்தது.

கண்ணை விழித்தவாறு படுத்திருந்த மணியை 'கீச்கீச்' என்ற ஒரு ஜோடி அடைக்கலாங் குருவிகளின் சத்தம் கவர்ந்திழுத்தது. ஆஸ்பத்திரி ஜன்னலுக்கு மேலே காற்று வரப்போக வைத்திருந்த ஒரு வட்டப் பொந்தில் அந்தக் குருவிகள் கூடு கட்ட முயன்று கொண்டிருந்தன. எங்கு இருந்தோ வைக்கோல் துரும்புகளைக் கொண்டுவந்து சேர்ப்பதும், அந்தத் துரும்புகள் எத்தனை முறை கீழே தவறி விழுந்த போதிலும் விடாமுயற்சியோடு அவற்றை மீண்டும் மேலே கொண்டு போய்ச் சேர்ப்பதுமாக இருந்தன. அந்தக் குருவிகள் கீச் கீச் சென்று கத்திக் கொண்டு அவை அங்கு மிங்கும் ஜிவ்வென்று பறந்து திரிவதை மணி வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

"இந்தக் குருவிகளுக்குள்ள தைரியமும் விடா முயற்சியும் எனக்கிருந்தால்." என்று தன்னையும் மறந்து அவன் உள்ளம் ஒருகணம் ஏங்கியது. மறுகணமே டாக்டர்

சொன்ன புத்திமதி ஞாபகத்துக்கு வந்தது. "தைரியமாய் இருங்கள்". டாக்டரே பக்கத்திலே வந்து நின்று அப்படிச் சொல்லுவது போல் அவனுக்குப் பட்டது.

கட்டிலில் படுத்திருந்தவாறே மணி சென்றுபோன விஷயங்களைச் சிந்தித்துப்பார்த்தான்.'தந்தை தற்கொலை செய்து கொண்டார்; தம்பி இறந்துவிட்டான் நானும் இப்படி வந்து விழுந்து கிடக்கிறேன்-அம்மா தன்னந்தனியாக என்ன பாடுபட்டாளோ? என்ன அவதிப்படுகிறாளோ?-இனிமேல் நான் எப்படி உயிர் வாழப் போகிறேன்?-தைரியம் வேண்டும்-டாக்டர் சொல்வது போல், அன்று மட்டும் நான் தைரியத்தோடு இருந்திருந்தால், செத்துப்போன என் தம்பியையும், தந்தையையும் பார்க்கக்கூட கொடுத்து வைக்காத இந்த அவலநிலைக்கு ஆளாயிருக்க வேண்டாம்-என் தைரியக் குறைவுதான் என்னை இருந்தும் இல்லாதவனாகச் செய்து விட்டது-ஆனால், இத்தனை அலங்கோலங்களுக்குப் பிறகு, எனக்குத் தைரியம் எங்கிருந்து வரும்...?'

இரவு முழுவதும் சரியான தூக்கமின்றி விடிந்த பிறகு தான் கண்விழித்த இருளப்பக் கோனார் திடுக்கிட்டு விழித்தெழுந்து மணியின் கட்டிலருகே வந்தார். கோனாரைக் கண்டதும், மணி தன் படுக்கையை விட்டு எழுந்திருக்க முயன்றான்.

"தம்பி தம்பி, எந்திரிக்கக் கூடாது. படுத்தே இரிங்க" என்று கூறியவாறு அவனை எழவிடாமல் தடுத்து நிறுத்திப் படுக்க வைத்தார். மணியைப் பார்த்ததும், இருளப்பக் கோனாருக்குக் கண்கள் இரண்டும் கலங்கிச் சிவந்தன. என்ன பேசுவது என்று தெரியாமல் அவரது உதடுகள் உணர்ச்சி வசப்பட்டுத் துடித்தன; வயோதிகம் புகுந்துவிட்ட அவரது மெலிந்தவுடல் முளைக்கீரைத் தண்டு போல் நடுங்கியது.

"கோனாரே-!" மணியின் குரல் கரகரத்தது; அவன் கண்களில் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது.

"பயப்படாதீங்க, தம்பி. நடந்தது நடந்து விட்டது. இந்தக் கட்டை உசுரோடே இருக்கிறவரையில், கவலையே படாதீங்க, தம்பி!" என்று ஆறுதல் கூற முனைந்தார் கோனார்.

கோனாரின் ஆறுதல் மணிக்குச் சிறிது தெம்பு அளித்தது; ஆழ்ந்த பெருமூச்செறிந்தவாறே கண்களை மூடிக்கிடந்தான். சிறிது நேரம் கழித்து மணி கண் விழித்தான். விழித்ததும் கோனாரை நோக்கி, "சங்கர் வந்தானா?"என்றுகேட்டான்.

"அவுக தினம் தினம் வந்து உங்களைப் பார்த்துட்டுத் தானே போறாக. தம்பி, சங்கரய்யாவைச் சும்மா சொல்லக் கூடாது அவுகதான் இந்த சமயத்திலே நமக்கு ஒத்தாசையா இருந்தாக. இன்னிக்கி அவுக தங்கச்சியையும் கூட்டிக்கிட்டு வரணும்னு சொல்லிட்டுப் போனாக" என்று உற்சாகத் தோடுபதிலளித்தார்கோனார்.

கமலாவைப் பற்றிக் கேள்விப்பட்டதும், மணியின் மனவேதனை குறைவது மாதிரித் தோன்றியது.

"அம்மாவையும் பார்க்கணும்போலே இருக்கு" என்று கூறிஅவள் இருக்கக்கூடிய அமங்கலக்கோலத்தைக்கற்பனை பண்ணிப் பார்த்துக் கூசிச் சாம்பினான் மணி. "அப்பாவின் பிரேதத்தைக் கூடச் சரியாகப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை எனக்கு. கொள்ளி வைக்கிறதுக்கு ரெண்டு பிள்ளைகள் இருந்தும், ரெண்டும் உதவாமல் போகணும் கிறதுதான் அப்பாவின் தலையெழுத்து போல் இருக்கு!" என்று கம்மியடைந்த குரலில் தேம்பினான்.

"அவுக அவுக தலையெழுத்துப் போல ஆச்சி. அன்னிக்குஎழுதினவன் அழிச்சாஎழுதப்போறான்?" என்று தமக்குத் தெரிந்த வேதாந்தத்தைக் கூறி மணியைச் சாந்தி செய்ய முயன்றார் கோனார்.

மணி இதயமே உடைந்து விட்டது போல் பலத்த பெருமூச்சுவிட்டான்.அவனுக்குச்சோர்வுதட்டியது.சிறிது நேரத்தில் மீண்டும் அந்தக் குருவிகளின் கீச்சுக் குரல் அவனைக் கவர்ந்தது. வைக்கோல் பொறுக்குவதற்காக வெளியே சென்றிருந்த அந்த ஜோடிக் குருவிகள் திரும்பி வந்துவிட்டன.

'உலைந்துஉருக்குலைந்துபோனஎங்கள்குடும்பத்தை இந்தக்குருவிகளைப்போல்இனிமேல்நான்தான் உருவாக்க வேண்டும் போலிருக்கிறது' என்று அவன் தனக்குத்தானே சிந்தித்துக்கொண்டான்.

'இந்தக் குருவிக் காதலியைப் போல் எனக்கும் ஒத்தாசையாக இருக்க, கமலா வந்து சேருவாளா? அவள் தந்தை அவளை எனக்குக் கட்டிக்கொடுக்கச் சம்மதிக்க வில்லை என்று அவள்தான் சொன்னாள். இப்போதோ? நான் சொத்துச் சுகமிழந்த, தற்கொலை செய்து கொண்டு இறந்து போன ஒருவரின் பிள்ளை. அப்போதே முடியாது என்றவர் இப்போது மட்டும் மாறவா போகிறார்?-விதி விட்டபடி நடக்கிறது-ஆனால், எங்கள் குடும்பத்தையே சீரழித்தவர் அவர்தானே-அவர் குடும்பத்திலா சம்பந்தம்?-அதற்குக் கமலா என்ன செய்வாள்?-கமலா என்னை ஒரு நாளும் மறக்க மாட்டாள். ஆனால் நான்தான் அவளை மறந்து விடுவேனோ? சேச்சே!-ஏன் இந்த அதைரியம்? ஏன் இந்த அவநம்பிக்கை...?'

அவன் மனத்தில் மீண்டும் டாக்டர் வந்து நின்று தைரியம் ஊட்டுவது போல் தோன்றியது.

மாலையில் டாக்டர், சங்கர், கமலா மூவரும் வந்து சேர்ந்தார்கள். காலடிச் சப்தம் கேட்டதுமே மணி ஆர்வத்தோடுதலையைஉயர்த்திஅவர்களைப்பார்த்தான். கமலாவின் வருகையைக் கண்டதும் மணியின் முகத்தில் களை தட்டியது. மெல்லிய புன்னகையுடன் அவர்களை வரவேற்றான்.

நடராஜன் மணியின் அருகே வந்தவுடன், "என்ன மணி, இப்போ எப்படியிருக்கு?" என்று கேட்டார்.

"தேவலை ஸார். களைப்புத்தான் அதிகமாயிருக்கு" என்றான் மணி. "மணி, இனிமேல் உங்களுக்கு என் மருந்தே தேவையில்லை. அதோ உங்கள் உள்ளத்துக்குத் தெம்பளிக்கும் டானிக்!" என்று கமலாவைத் தூண்டிக் காட்டி, மணியைக் களிப்பூட்ட முயன்றார் டாக்டர்.

மணி கமலாவைக் கடைக்கண்ணால் பார்த்தான். ஆனால்கமலாவோ அவன் எதிர்பார்த்ததற்குவிரோதமாக மாலை மாலையாகக் கண்ணீர் சிந்தி நின்றாள். மணி தன்னைப் பார்ப்பதைக் கண்டவுடன் அவளுக்கு அழுகையே வந்து விட்டது. விசித்து விசித்து அழத் தொடங்கினாள். மணியின் கண்களில் ததும்பிய களிப்புக் குடியோடிக் கண்ணீர் தளும்பியது.

உடனே சங்கர் எழுந்திருந்து கமலாவிடம் சென்று "அசடே! எதுக்கு அழறே? மணிக்குத் தைரியமூட்டுவதை விட்டுவிட்டு, இப்படிக் கண்ணீர் சிந்தினால்?" என்று கண்டித்தான்.

கமலாவுக்குஅப்போதுதான் தன் தவறுபுரிந்தது.அழ வேண்டும் என்பது அவள் விருப்பமில்லை. எனினும் மணியைப் பார்த்ததும், அவனது வெளிறிய முகத்தையும், கட்டுப்போட்ட தலையையும் கண்டவுடன், அவர்கள் குடும்பத்துக்குத் தன் தந்தையால் நேர்ந்த அவலநிலை ஞாபகத்துக்கு வந்துவிட்டது.

சங்கர் கண்டித்தவுடனேயே அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மணியிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். ஆனால், "அத்தான்!" என்று ஏங்கிக் குமுறிய ஒரே வார்த்தையோடு அவள் வாய் அடைத்துப் போய் விட்டது. மணியிடம் என்னென்னவோ பேச வேண்டும் என்றுதான் அவள் விரும்பி வந்தாள். ஆனால், அந்த நிலையில் அவளால் எதுவுமே பேச இயலவில்லை.

சங்கர் மட்டும் மணியைத் தைரியமாயிருக்கச் சொல்லிப் பலவாறு தேற்றினான். சங்கரின் தைரிய மொழிகள் மணிக்குத் தெம்பும் ஆறுதலும் தருவன வாயிருந்தன.

"நீ உன் குடும்பத்துக்கு நேர்ந்த கதியைப்பற்றி வீணாய் மனத்தை அலட்டிக்கொள்ளக் கூடாது. இதுதான் என் வேண்டுகோள்" என்று கூறி முடித்தவாறே சங்கர் புறப்படத் தயாரானான்.

"அப்போ - நான் வரட்டுமா மணி?" என்றான் சங்கர்.

கமலா அப்போதுதான் திடீரென்று ஞாபகம் வந்தவளாக தன்வசமிருந்த பையை எடுத்தாள். "அத்தான், உங்களுக்குக் காஷ்மீர் திராக்ஷைன்னா ரொம்பப் பிரியமேன்னு வாங்கிக்கிட்டு வந்தேன்" என்று கூறியவாறே இரண்டு குலை திராக்ஷைப்பழங்களை எடுத்துக் கட்டிலுக்கு அருகே கிடந்த மேஜை மீது வைத்தாள்.

அந்தப் பழங்களைக் கண்டு ஆச்சரியமடைந்த சங்கர் "அடேடே, இதை நீ என்னிடம்கூடச் சொல்லவில்லையே. பங்குக்கு வந்துவிடுவேன் என்று பயமா?" என்று கூறிச் சிரித்தான்.

இதற்குள் டாக்டர் நடராஜன் குறுக்கிட்டு, "என்னம்மா கமலா, என்னுடைய அனுமதியில்லாமல் என் பேஷியண்டுக்கு நீங்கள் பழம் வாங்கிக் கொடுக்கிறீர்களே. இது நியாயமா?" என்று கேலியாகக் கேட்டார்.

"அதற்கென்ன? ஒரு குலையை வேண்டுமானால் நீங்கள் அபராதமாக ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறி, களுக்கென்று சிரித்தாள் கமலா.

அங்கு நிலவிய குதூகலத்தைக் கண்டு மணிக்குக் கவலையெல்லாம் மறைந்து இன்பவுணர்ச்சி தோன்றுவது போலிருந்தது. சங்கர் விடைபெற்றுத் திரும்பும்போது "சங்கர், நான் அம்மாவைப் பார்க்கணும்" என்று கேட்டுக் கொண்டான் மணி.

"அதற்கென்ன? கூட்டி வருகிறேன்" என்று கூறிவிட்டுத் திரும்பினான் சங்கர்.

அவர்கள் அனைவரும் வெளியேறினர். டாக்டர் விடைபெற்றுக் கொண்டு தமது அறைக்குச் சென்றார். இருளப்பக்கோனார் வாசல்வரையிலும் வந்து சங்கரையும் கமலாவையும் வழியனுப்பிவிட்டு, "போயிட்டு வாங்க தம்பி" என்று அருமையோடு கூறியவராய் உள்ளே திரும்பினார்.

சங்கர் ஏதோ ஞாபகம் வந்தவனாகக் கோனாரைக் கூப்பிட்டான்.

கோனார் திரும்பி வந்தார்.

சங்கர் தன் சட்டைப் பையிலிருந்து ஐம்பது ரூபாய் நோட்டுக்களை எடுத்து இருளப்பக் கோனாரிடம் கொடுத்து, "இதை வைத்துக் கொள்ளுங்கள். டாக்டரிடம் கேட்டு, மணிக்கு ஏதாவது வாங்கிக் கொடுங்கள். மற்றச் செலவுக்கும் இருக்கட்டும்" என்று கூறியவாறே தன் காரில் ஏறி உட்கார்ந்தான்.

கார் புறப்படப் போகும்போது, கமலா இத்தனை நேரமும் தன்னுள் அடக்கி வைத்திருந்த கேள்வியைச் சங்கரிடம் கேட்டுவிட்டாள். "என்னண்ணா, டாக்டரிடம் நீ இதையெல்லாமா சொல்லி வைக்கிறது?"

"எதை?" என்று தெரியாதது போல் கேட்டான் சங்கர். எனினும் அவன் முகத்தில் அரும்பிய குறுஞ்சிரிப்பு அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டது.

"போ அண்ணா!" என்று செல்லமாகச் சிணுங்கிக் கொண்டாள் கமலா.

கார் புறப்பட்டுச் சென்றது.

இருளப்பக்கோனார், அவர்கள் எதைப்பற்றிப் பேசிக் கொண்டார்கள் என்று புரியாதவராய் அவர்கள் இருவரின் அன்பையும் செளஜன்யத்தையும் வியந்து போற்றி,

மனத்தால் ஆசீர்வதித்தவராக உள்ளே திரும்பி வந்தார். அவர் வந்த போது மணி, கமலா கொண்டு வந்திருந்த திராக்ஷைப் பழங்களை ஒவ்வொன்றாக எடுத்து வாயிலிட்டுச் சுவைத்துக் கொண்டிருந்தான்.

அவனது நாக்கில் தட்டுப்படும் இனிமையைப் போலவே அவன் மனத்திலும் சங்கர், கமலா, டாக்டர், கோனார் முதலியோரின் அன்பையும் பரிவையும் பற்றிய எண்ணம் தோன்றி இனித்துக் கொண்டிருந்தது. எல்லாவற்றையும்விட, கமலா தன்மீது கொண்டுள்ள மாறாத அன்பைக்கண்டு அவனுக்குத்தன் நம்பிக்கையும்தைரியமும் ஏற்பட்டன. எனினும் மறுகணமே அவனுக்குக் கமலாவை மணந்து கொள்ள இயலுமா என்ற சந்தேகமும், தனது குடும்பத்துக்கு நேர்ந்த அவக்கேடும், தனது தைரியமற்ற தன்மையும், தன்னை எதிர்நோக்கி நிற்கும் பொறுப் புணர்ச்சிகளைப் பற்றிய பயப்பிராந்தியும், உள்ளத்திலே குடி புகுந்து, அந்த இனிப்பைப் புளிக்க வைத்தன.

## 18

மணிக்கு உடம்பு குணமாகிவிட்டது.

தலையிலுள்ள கட்டை அவிழ்த்து நாலு தினங்கள் ஆகிவிட்டன. அவன் எழுந்து நடமாடத் தொடங்கி விட்டான். எனினும் டாக்டர் நடராஜன் அவனது குடும்ப நிலைமையை உத்தேசித்தும், மணியின் மனோநிலையைக் கருதியும் அவனை மேலும் சில தினங்கள் ஓய்வு பெறுமாறு கேட்டுக்கொண்டார். எனவே அவன் ஆஸ்பத்திரியில்தான் இருந்தான். தினம்தினம் சங்கர் வந்து மணியைச் சந்தித்துப் போனான். கமலாவும் அடிக்கடி வந்து சென்றாள். மணியின் தாய் தங்கம்மாளும் இரண்டு தடவைகளுக்குமேல் வந்து மகனைப் பார்த்துவிட்டுச் சென்றாள். இருளப்பக்கோனார் மட்டும் பகலில் மூன்று வேளைகளிலும் வந்து மணிக்கு

'என்ன வேண்டும், ஏது வேண்டும்' என்று விசாரிப்பதோடு, இரவில் மணியுடன் துணைக்காகப் படுத்தும் வந்தார்.

மணிக்கு உடல் நிலைதான் குணமாயிற்றேயொழிய மனநிலை நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டு வந்தது. தனது உடல் நலத்தில் இத்தனைபேரும் காட்டிவந்த ஆர்வத்தையும் அன்பையும் கண்டு, அவன் மனம் ஒரு பக்கம் திருப்தியடைந்த போதிலும், அந்தத் திருப்தியுணர்ச்சிக்கும் மிஞ்சிய வேறு பல பயவுணர்ச்சிகள் அவன் மனத்தை அலைக்கழித்தன. அவனுக்கு ஏற்பட்டிருந்த மன உளைச் சலை அவன் யாரிடமும் சொல்லி ஆற்றிக்கொள்ளவும் கூசினான். தன் மனக்குகையில் தோன்றிச் சுழித்துக் குமுறும் எண்ண அலைகளை, அவன் தனக்குள்ளாகவே உள் ளடக்கித் தவித்துக் கொண்டிருந்தான். இந்த மன உளைச்சல்தான் அவனிடம் நாளுக்குநாள் வெற்றிக் கண்டதே ஒழிய, அவன் அதை வெற்றி காணவில்லை. எனவே அவனுக்கு இரவில் சரியான தூக்கமில்லை. இரவில் விளக்குகள் எல்லாம் அணைக்கப்பட்டு ஆஸ்பத்திரியே தூங்கத் தொடங்கிய பிறகும் அவன் தூங்குவதில்லை.

இந்த மாதிரியான வேதனையால் அவனுக்கு 'இரவு ஏன் தான் வருகிறதோ' என்றிருந்தது.

ஆனால் நித்தம் நித்தம் இரவு வந்து கொண்டு தானிருந்தது.

அன்றிரவு மணிபத்தும் அடித்துவிட்டது.

ஆஸ்பத்திரி எங்கும் அமைதி குடிகொண்டு விட்டது. எங்கோ பக்கத்து அறையில் படுத்திருந்த நோயாளி இடையிடையே 'லொக்கு லொக்கு' என்று இருமுவது மட்டும் இரவின் அமைதியைக் குளப் பாசிபோல் சில கணங்கள் சிதற விட்டது. மணி படுத்திருந்த அறைக்குள் மாட்டப்பட்டிருந்தகடிகாரம் இப்போதுதான் உயிர்பெற்று ஓடத் தொடங்கியதுபோல் 'டிக் டிக்' கென்று தாள லயம் தவறாது சப்தித்தவாறே இருளின் பயங்கரத்துக்குப்

பின்னணி இசைத்து வலுவேற்றிக் கொண்டிருந்தது. இருளப்பக் கோனார் அந்த அறையின் வாசல்புறத்தில் ஓரமாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார்.

மணிபோர்வையை இழுத்துமார்புவரையிலும்மூடிக் கொண்டு படுத்திருந்தான். அவன் கண்கள் அந்த அறையில் கவிந்துநின்ற இருளை வெறித்துப் பார்த்துக் கொண் டிருந்தன; காதுகள் கடிகாரத்தின் தாள லயத்தை உற்றுக்கேட்டு,அந்தலயத்தின் இசைவோடுஅவன்மனத்தை ஒரு நிலைப்படுத்த முயன்று கொண்டிருந்தன. இடை யிடையே அடி வானத்தில் வெட்டி மினுக்கி மறையும் மின்னல் தூண்டில் போட்டு இழுப்பதுபோல் ஆஸ்பத்திரி அறைக்குள் ஒரு கணம் ஒளியை மிதக்க விடுவதும், மறு கணமே அதைச் சுண்டி வாங்குவதுமாக இருந்தது.

இருளையே பார்த்தவாறு கிடந்த மணியின் மனமும் எண்ணற்ற சிந்தனைக் குழப்பங்களால் ஒளி பெறுவதும் இருள் மூடுவதுமான நிலையில் தவித்துக் கொண்டு இருந்தது.

-எத்தனை நினைவுகள்!எத்தனை எண்ணங்கள்!

-அன்று ஒருநாள் சங்கர் மணியின் தாயை அழைத்து வந்திருந்தான்.வெள்ளைப்புடவையும்,குங்குமமிழந்த பாழ் நுதலும், மங்கல நாணை இழந்த வெறுங் கழுத்துமாக, தலைவிரி கோலமாய், அழுதழுது வீங்கிச் சிவந்த கண்களோடும், ஒளியிழந்து வாடி வதங்கிய முகத்தோடும் அவள் அந்த அறைக்குள் வந்தபோது,மணியின் உள்ளத்தில் ஏதோ திடீரென்று சுளுக்கிக் கொள்வது போலிருந்தது அந்தச் சுளுக்கின் நரக வேதனையைத் தாங்கமாட்டாமல் அவன் கண்கள் கண்ணீரைப் பிதுக்கித் தள்ளின.

தங்கம்உள்ளேவந்ததும்ஓவென்று அலறிப்புடைத்து விட்டாள்.

"அப்பா மணி, மகனே! என்னை இந்தக் கோலத் திலாடா பார்க்கணும்? உங்க அப்பாவையும் தம்பியையும்

தூக்கி விட்டுட்டேண்டா! இனிமே யாரடா எனக்குத் துணை? என்னடா செய்யப் போறேன்...?"

உணர்ச்சிவசப்பட்டுக்குமுறினாள் தங்கம்.

அருகில் நின்ற கோனாரும், சங்கரும் இன்னது செய்வதெனத் தெரியாமல் திகைத்து நின்றார்கள். தாயின் கண்ணீர் பெருகுவதற்கு முன்பே, மணியின் கண்ணீர் தலையணையை நனைக்கத் தொடங்கிவிட்டது.மணிவிக்கி விக்கி அழத் தொடங்கி விட்டான்.

நல்லவேளையாகடாக்டர்வந்துசேர்ந்தார்.

வந்ததும் வராததுமாக அவர் தங்கம்மாளைப் பார்த்து, "இதென்னம்மா சத்தம்? உங்கள் பிள்ளை நோயாய்ப் படுத்திருக்கிறார் என்பதுகூடத் தெரியாமல் இப்படி அழுகிறீர்களே, அவருக்கு நீங்கள் ஆறுதல் சொல்லித் தேற்றுவதை விட்டு விட்டு, நீங்களே இப்படி அழுதால்? அப்புறம், உங்கள் பிள்ளைக்கு எப்படிக் குணமாகும்? மேலும் நீங்கள் அழுவதால் ஆஸ்பத்திரி யிலுள்ள மற்ற நோயாளிகளுக்கும் சிரமம். வருத்தம் எல்லோருக்கும்தான் இருக்கிறது. அதை இப்படி அழுது தீர்த்துத்தான் காட்டிக்கொள்ள வேண்டுமா?" என்று கண்டனமும் பணிவும் நிறைந்த வார்த்தைகளைப் பேசி, தங்கம்மாளைச் சமாதானப்படுத்தி அழுகையை நிறுத்தி னார்.

பிறகுதான் மணியும் தன் கண்களைத் துடைத்து விட்டு, "அழாதேயம்மா. நீயே அழுதால் பிறகு எனக்கு யாரம்மா ஆறுதல்?" என்று கம்மினான்.

"அழணும்ணு விதி இருக்கயிலே அழாமல் இருக்க முடியுமாடா மகனே!" என்று பொங்கிவந்த அழுகையை உள்ளடக்கிக் கொண்டு சொன்னாள் தங்கம்.

மணிக்கு அதற்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. திகைத்தான்.

அதற்குள் டாக்டர் சங்கரைக் கூப்பிட்டு, "இந்த அம்மாளைச் சீக்கிரம் அழைத்துக் கொண்டு போய் விடுங்கள். பெண்கள் எல்லோருமே இப்படித்தான். லகுவில் உணர்ச்சி வசப்பட்டு விடுகிறார்கள்" என்று ஆங்கிலத்தில் கூறிவிட்டு வெளியே சென்றார். தங்கமும் சிறிது நேரம் தன் மகனிடம் இன்னது பேசுவது என்று தெரியாமல் விசும்பி விசும்பித் தன் மனப் பாரத்தைக் குறைக்க முயன்று கொண்டிருந்தாள்.

சங்கர் குறுக்கிட்டு, "வாங்க அத்தை. மணிக்கு நல்ல ஓய்வு வேணும், தூங்கச் சொல்லுங்கண்ணு டாக்டர் சொல்லிட்டுப் போனார்" என்று ஒரு பொய்யைச் சொல்லி, தங்கம்மாளை அங்கிருந்து கிளப்பிக் கூட்டிக்கொண்டு சென்றான்.

தாய் வந்து சென்றதில் மணிக்கு வருத்தமும் மகிழ்ச்சியும் கலந்து நின்று மனத்தில் தட்டு மறித்துக் கொண்டிருந்தன.

ஆஸ்பத்திரிக் கடிகாரம் பதினோரு மணி அடித்தது, அந்த மணிச் சப்தத்தினால் தடைபட்டுப் போனதுபோல் தோன்றிய பெண்டுலஓசை, மீண்டும் டிக்டிக்கென்று ஒலிக்கத் தொடங்கி விட்டது. ஆனால் தாளகதி நடைமாறி லயபேதம் ஏற்பட்டது போன்ற ஒரு பிரமை மணிக்கு ஏற்பட்டது.

அவன் சிந்தனையும் தடம் மாறியது; வேறு லயத்தில் திரியத் தொடங்கியது...

-மூன்றுதினங்களுக்குமுன்னால்கமலாவந்திருந்தாள் அன்று அவளுடன் சங்கரோ டாக்டரோ வரவில்லை; கோனாரும்எங்கோவெளியில்சென்றிருந்தார்; கமலாவைத் தனிமையில் சந்திப்பதால் உண்டாகும் இன்பவுணர்ச்சி மணியின் உள்ளத்தைச் சிலிர்க்கச் செய்தது.

"கமலா-சங்கர் வரலையா?" என்று கேட்டான் மணி.

"இல்லை".

கமலாவுக்கும் இத்தனை நாட்களுக்குப் பிறகு மணியைத் தனியே சந்திப்பதில் உண்டாகும் மகிழ்ச்சியும், இடம் பொருள் முதலிய சந்தர்ப்பங்களினால் ஏற்படும் இனந்தெரியாத கலவர உணர்ச்சியும் மனத்தில் புகுந்து குறுகுறுத்தன.

"என்ன அத்தான் எப்படியிருக்கு?" என்று கேட்டுக் கொண்டே அருகில் வந்தாள் கமலா.

"இப்படி உட்கார்" என்றான் மணி.

கமலா அருகில் கிடந்த நாற்காலியில் அமர்ந்தாள்.

"பக்கத்திலே வாயேன்."

கமலா நாற்காலியை அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டாள். மணி அந்தத் தனிமையினால் ஏற்பட்ட குறுகுறுப்பினால், கமலாவின் கரத்தை எடுத்துத் தன் கன்னத்தோடு வைத்துக் கொண்டான்; அவளது சிவந்த கரத்தில் மெல்ல முத்தமிட்டான். கமலாவுக்கு உடம்பெல்லாம் புல்லரித்துக் கிளுகிளுத்துச் சிலிர்த்தது. அந்த ஸ்பரிச சுகத்திலிருந்து மீளும் துணிவோ பிரக்ஞையோ அற்றவளாக, அவள் அப்படியே மெய்மறந்து உட்கார்ந்திருந்தாள்.

"இந்த மாதிரிக் கைகளினால் எனக்கு வைத்தியம் செய்வதானால், நான் என் ஆயுள் முழுவதும் இப்படியே கழித்து விடுவேன்!" என்றான் மணி.

"அசடுமாதிரிப் பேசாதிங்க!" என்று செல்லமாகக் கூறியவாறே கையை மெல்ல விடுவித்துக் கொண்டாள் கமலா. "யாராவது வந்திடப் போறாங்க, அப்புறம்...?"

"அப்புறம் என்ன?"

கமலா பதில் கூறாமல் "குறும்பைப் பாரு!" என்று செல்லமாக மணியின் கன்னத்தில் இடித்தாள்.

இருவரும் மெல்லச் சிரித்துக்கொண்டார்கள்.

"கமலா, நீ என்னைப் பார்க்க இப்படி வந்திடுறியே, உங்க அப்பா கண்டா விடுவாரா?" என்று ஆவலோடு கேட்டான் மணி.

"அப்பாவுக்கு அம்மா எப்படியாவது பதில் சொல்லிக் கிடுவாள்!"

கமலாவுக்குத் தன் தந்தையை நினைத்ததும், அவர் மணியின் குடும்பத்துக்கு இழைத்த கொடுமை நினைவுக்கு வந்துவிட்டது.

"அத்தான், அப்பாவாலேதானே உங்களுக்கு இந்தக் கதி? அதை நினைச்சி, நீங்க என்னோடு எங்க முகங் கொடுத்துக்கூடப் பேசமாட்டியளோன்னு பயந்துக்கிட் டிருந்தேன்."

மணி ஆழ்ந்த பெருமூச்சு விட்டான். "அதுக்கு நீ என்ன செய்வே?"

"அதுக்குத்தான் அப்பாவைப் பழி வாங்கிற மாதிரி, நான் உங்களைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேனே!" என்று வெட்கமும் வேடிக்கையும் கலந்த குரலில் உற்சாகத்தோடு கூறினாள் கமலா.

"அதெப்படி முடியும், கமலா?" என்று கவலையோடு கேட்டான் மணி. "இனிமேல் மட்டும் அவர் சம்மதிப்பாரா? அதிலும் எங்க குடும்பம் இவ்வளவு கேவலப்பட்டு, சந்தி சிரிச்ச பிறகு?"

மணியின் கண்கள் எதையோ பறி கொடுக்கப் போவது போல் கலங்கி மிரண்டன; அவனுக்கு நம்பிக்கை பிறக்கவில்லை.

"அப்பா என்ன சொன்னாலும் சரி நம் கல்யாணம் நடந்தே தீரும்!"

"அதுமுடிகிறகாரியமா, கமலா?"

"ஏன் முடியாது? என் தந்தையையே நான் புறக்கணிக்கத் துணிந்தால்?"

அவளுடைய பேச்சில் தொனித்த உறுதியைக் கண்டு மணி மலைத்தான்; அவளுக்குள்ள உறுதிகூடத் தனக்கு இருக்குமா என்பதை அவன் சிந்தித்துப் பார்க்கக் கூடத் தயங்கினான்.

"எனக்காக நீ உன் சொத்துச்சுகத்தையெல்லாம் விட்டு விடுவதா?" கேள்வியைக் கேட்ட பிறகுதான் அதை ஏன் கேட்டோம் என்றிருந்தது, அவனுக்கு.

"அத்தான் எனக்குச் சொத்துச் சுகம் பெரிதல்ல; என் லட்சியம்தான் பெரிது. அதை அடைவதற்காக நான் எதையும் விட்டு விடுவேன். அண்ணா கற்றுக் கொடுத்த பாடம் அது!"

கமலாவின் தைரிய மொழியால்தான் மணியின் மனம் ஆறுதல் அடைந்தது. அவன் தனது இதயத்தில் முட்டிக் கொண்டிருந்த அன்பையெல்லாம் வாரிப்பொழிந்தவனாய், "கமலா!" என்று கம்மியடங்கிய குரலில் அவள் கையைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டான்.

செருப்புச் சத்தம் கேட்ட கமலா "யாரோ வர்ராங்க" என்று கூறியவளாய் கைகளை விசுக்கென்று பிடுங்கிக் கொண்டு இடத்தை விட்டு எழுந்தாள்; டாக்டர்தான் வந்தார். கமலா டாக்டருக்கு வணக்கம் செலுத்திவிட்டு, விடைபெற்றுச்சென்றாள்.

கமலா வந்து சென்றதில் புதிய உற்சாகமும், அவள் கூறிய தைரியத்தால் நம்பிக்கையுணர்வும், கூறியபடி அவள் நடக்க முடியுமா என்ற சந்தேகத்தால் சிறு கலக்கமும் மணியின் மனத்தில் புகுந்து ஊடாடின.

ஆஸ்பத்திரிக்கடிகாரம் மணி பன்னிரண்டு அடித்தது.

இருளப்பக் கோனார் தூக்கம் கலைந்து எழுந்து வெளியே சென்று விட்டு வருவதற்காகக் கதவைத் திறந்தார். கதவு திறக்கும் சப்தம் கேட்டு மணி, "யாரது கோனாரா?" என்று கேட்டான்.

"என்ன தம்பி, இன்னுமா தூங்கலே?"

"இல்லே இப்பதான் விழிச்சேன்!"

"தூங்குங்க தம்பி. கண் முழிச்சா உடம்புக்கு ஆகாது!"

கோனார் வெளியே சென்றுவிட்டுத் திரும்பி வந்து படுத்ததும் மணிக்குத் தெரியும். எனினும் அவன் மீண்டும் குரல் கொடுத்துத் தன்னைத்தானே காட்டிக் கொடுக்க விரும்பவில்லை. இருளப்பக் கோனாரின் குறட்டைச் சப்தம் சிறிது நேரத்தில் மெதுவாக இழையத் தொடங்கியது. மணி நெடிய பெருமூச்செறிந்தவாறே ஜன்னலுக்கு வெளியே பரவிக் கிடந்த இருட்பிரவாகத்தைப் பார்த்தான்.

அடி வானவட்டத்தில் மின்னல் பளீர் பளீர் என்று ஜோதி வீசிக் கண்ணைப் பறித்தது. வான விளிம்பில் திரண்டிருந்த மேகக் கருமை, மின்னல் ஒளியில், நிரை சாய்ந்து படுத்துறங்கும் காட்டானைக் கூட்டம்போல் தோற்றம் அளித்தது. அத்துவானக் காட்டுக்குள்ளிருந்து சோர்ந்து பிளிறும் களிற்றைப்போல் இடி முழக்கம் மெல்ல முனகி ஓய்ந்தது.

மணியின் சிந்தனையில் சங்கரின் நினைவு பளிச்சிட்டது.

- ஒருநாள் மாலையில் சங்கர் மணியுடன் அமர்ந்து வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தான். நடந்தது நடந்து விட்டது. இனி நடக்கவேண்டியதை யோசனை செய் என்று ஆறுதல் கூறினான்; என் அப்பா தன் பணத்தைத் தான் கட்டியாள முடியுமே தவிர, என்னையோ கமலாவையோ கட்டியாள முடியாது என்று தைரியம் கூறினான். அதற்குப் பிறகு-

மணியின் சிந்தனையில் அந்த வார்த்தைகள்தாம் மின்னலைப் போல வெட்டி மினுக்கின.

"மணி, நான் இன்னொன்றும் சொல்ல விரும்புகிறேன். நீ என்னவோ இதுநாள் வரை பொது வாழ்க்கையிலேயேஈடுபடமறுத்துவந்தாய்.நான்ஏதாவது உன்னிடம் பேசமுனைந்தாலும்நட்புரிமைக்காகக்காதுகொடுப்பாயே தவிர, உன் மனம் அதைப் பற்றிக் கவலை கொண்டதில்லை. என்னவோ உன் காரியத்தை மட்டும் நீ ஒழுங்காகப் பார்த்துக்கொண்டு போவது போல் நடந்து கொண்டாய். ஆனால், இன்றாவது நீ யோசித்துப் பார். உன்னைக் கேட்காமலே உலகநிலை உன்னை இக்கோலத்துக்கு ஆளாக்கிவிட்டுவிட்டது.தந்தையை இழந்தாய்; தம்பியைப் பறிகொடுத்தாய், இவையெல்லாம் உன் இஷ்டப்படியா நடந்தன? நாம் என்னென்ன கனவுகள் கண்டாலும், எப்படித்தான் வாழ முயன்றாலும் உலகப்போக்கைப் பற்றி பிரக்ஞை இல்லாதவரை நம் வாழ்க்கை நாம் நினைப்பது போல் நடப்பதில்லை; நம் கனவுகள் நிறைவேறுவதில்லை. இதை நீ இப்போதாவது உணர்கிறாயா?"

"இன்று உலகநிலை, நம் நாட்டின் நெருக்கடி உன்னை நேரடியாகப் பாதித்துவிட்டது. உன் தந்தையின் கோர மரணம் உனக்கு அதிர்ச்சியைத் தந்தது. ஆனால் இதுபோல் உலகில் தினம் தினம் எத்தனை சம்பவங்கள் நடக்கின்றன தெரியுமா? அவை உன் அனுதாபத்தைக் கூடக் கவரவில்லை. இல்லையா?"

சங்கர் கூறுவதை மணி கவனத்தோடு கேட்டான்; ஆனால் அவனது இதயம் அந்த வார்த்தைகளின் அர்த்த பாவத்தைச் சரிவர வாங்கிக் கொள்ளவில்லை; அவனுக்குச் சங்கர் கூறுவது புரியவில்லை.

"நீ என்ன சொல்ல விரும்புகிறாய்?" என்று குறுக்கிட்டான் மணி.

"மணி, இந்தச் சம்பவம் உன் குடும்பத்துக்கு மட்டும் நேர்ந்த கதி என்று எண்ணாதே. தறியை நம்பிப் பிழைத்து வந்த ஜனங்கள் எல்லோருமே இன்று இந்தக் கதிக்குத்தான் ஆளாகிக் கொண்டிருக்கிறார்கள். நமது ஊரிலேயே ஜனங்களின் நிலைமை என்ன தெரியுமா? அவர்களும் உன் தந்தையைப் போல் தற்கொலை செய்து கொள்ளத் துணியவில்லையென்றால் அவர்களுக்கு வாழ்க்கையின் மீதுள்ள நம்பிக்கை, பற்றுதல் குன்றிவிடவில்லை என்றுதான் அர்த்தம். இங்குமட்டுமல்ல, இமயம் முதல் குமரி வரை இதே நிலைமை.

"இந்த நிலைமையை மாற்றும் பணியில் நீ இனிமேலாவது ஓரளவு பங்கு பெறக் கூடாதா?..."

மணியின் மனத்தில் சங்கரின் இந்த வேண்டுகோள் விடை காண முடியாமல் அலைக்கழித்தது; சங்கரின் ஆறுதல் அவனுக்கு நம்பிக்கையைத் தந்தது. ஆனால் அவன் விளக்கிய உலகநிலையோ மணியின் மனத்தில் தனது எதிர்காலத்தைப் பற்றிய இருள் மண்டலத்தைத்தான் கவியச் செய்தது.

இருளின் அமைதியைக் குலைத்து எங்கிருந்தோ இரவில் ரோந்து சுற்றும் ஒரு போலீஸ்காரனின் விசில் சப்தம் கீச்சிட்டது; தொடர்ந்து ஒரு நாய் பிலாக்கணம் வைத்து ஓலமிடும் அழுகுரல் அந்தகார அமைதியைச் சிலிர்த்து நடுங்க வைத்தது; கடிகாரம் நிர்விசாரமாக இடைவிடாது சப்தித்துக்கொண்டிருந்தது.

மணி தன் தாயைப்பற்றி நினைத்தான்.

இரண்டு தினங்களுக்கு முன் தங்கம்மாள் வந்திருந்தாள். அன்று அவள் மணியிடம் வீட்டு நிலைமைகளைப் பற்றியெல்லாம் பேசிவிட்டுச் சென்றாள்...

"அப்பா மணி, கோனாரும் அவரு பொஞ்சாதியும் தான் எனக்குத் துணை. சொல்லி அழணும்னாக்கூட அவ

ஒருத்திதான் பக்கத்திலே இருக்கா. ஆனா அவுங்க கஷ்டம் நமக்குத் தெரியாதா? என்னமோ விசுவாசத்துக்காக இவ்வளவும் செய்தாங்க. எல்லாம் நீ எந்திரிச்சி வந்த பிறகு தான் ஒழுங்கு படுத்தணும். அன்னிக்கி சங்கர் வந்திருந்தான். இந்தச் சமயத்திலே அவன் உதவியில்லாட்டி, நாம் நாறிப் போயிருப்போம். அவன் தங்கம்னா தங்கம்தான். அவனைக் கொண்டு ஒங்க அப்பா வச்சிட்டுப்போன கணக்கு வழக்கையெல்லாம் பார்க்கச் சொன்னேன். வீடு அந்த மைனர்கிட்டே அடமானத்திலே இருக்கு; நிலம் வாங்கின கடனுக்கே முங்கிப் போச்சி; இன்னும் வேறெ பாக்கி கிடக்கு மிச்சம் ஒண்ணையும் காணம். அந்த மைனர் பொல்லாத மனுசன். அவன் பாக்கியை எப்படியாவது அடைச்சி வீட்டைத் திருப்பணும்...

"கமலா கூட அன்னிக்கு வந்து உன்னைப் பாத்துட்டுப் போனதாக சங்கர் சொன்னான். பாவம், அது அறியாப் பொண்ணு. அவ இங்கே வந்தான்னவுடனே ஏன் வந்தான்னு தான் தோணிச்சி. ஊரிலே நாலும் பேசுவாங்க. ஊர் வாயை மூட முடியுமா? அவங்க அப்பாவுக்குத் தெரிஞ்சா, புள்ளேன்னு கூடப் பார்க்காம, குழியை வெட்டி இறக்கினாலும் இறக்கிப் போடுவாரு. அவரை உனக்குத் தெரியாதா? நீ அவளை மறந்திரு. கல்யாணம் கில்யாணம்னு நினைச்சிக்கிட்டு இருக்காதே. கூனனுக்கு மல்லாந்து படுக்க ஆசை கூடாது. சங்கரும் கமலாவும் நமக்கு என்ன பகையான்னு கேப்பே. அதுக ரெண்டும் சின்னஞ்சிறிசு. துணிஞ்சி எதுவும் சொல்லும். அதை நம்பி ஏமாறாதே. வீணா, அந்தப் பொண்ணு ஆசையை வளர்த்து அதையும் ஏமாறச் செய்றதை விட, இது மேல்...

"உங்க அப்பா தரமறிஞ்சி கடனைக் கிடனை வாங்கிப் போட்டு யாபாரம் பண்ணாததினாலேதான் நமக்கு இந்தக் கதி நீயாவது புத்தியோடு புழைக்கப் பாரு. உன்னைத் தான் நான் நம்பியிருக்கேன்-நம்ம கைதான் நமக்கு உதவும். நாலு வீட்டிலே தூத்திப் பெருக்கிப் புழைச்சாலும் புழைக்

கலாம்-ஒருத்தன் தயவிலே வாழப் படாது; அதை நம்பவும் கூடாது-"

தாயின் பேச்சையெல்லாம் மணி மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். எனினும் அவள் கூறிய விஷயங்கள் அவன் மனத்தில் பல்வேறு உணர்ச்சிகளைக் கிளறிவிட்டன.

நிராசை - பயம் - பொறுப்பு - வெறுப்பு - கடமை - எத்தனை உணர்ச்சிகள்!

அந்த உணர்ச்சிகளின் இழுபறிக்கு ஆளாகிச் சிக்கித் தவித்தான் மணி.

மணிஒன்று அடித்தது.

எங்கோ ஒரு ஆந்தை பலமுறை தொடர்ச்சியாக அலறி ஓய்ந்தது. திடீரென்று ஆஸ்பத்திரி அறைக்குள் திசை தவறிப் புகுந்துவிட்ட வௌவால் படபடவென்று சிறகடித்து வளையமிட்டுத் திரிந்தது; இரண்டாம் காட்சி சினிமா விட்டுத் திரும்பி வரும் எவனோ ஒருவன் வீதிவழியே தன்னிச்சையாகத் தெம்மாங்கு பாடிச் செல்லும் பாட்டுக்குரல், இருளின் நிச்சுவாச நிலைக்கு உயிர்ப்புத் தந்தது. மீண்டும் நிலவிய அமைதியினூடே பெண்டுல ஓசை தன் தாளத்தைச் சாதகம் பண்ணத் தொடங்கியது...

மணிக்கு தூக்கமே வரவில்லை. தன்னைப் பிணித்து இறுக்கும் எண்ணற்ற சிந்தனை வலைகளைச் சிக்கெடுத்துச் சீராக்கி, அவற்றின் பிடியிலிருந்து மீண்டுவரும் மார்க்கத்தை அவனால் கண்டு கொள்ள இயலவில்லை; மேலும் மேலும் சிக்கல்கள் பலப்படுவது போலத்தான் தோன்றியது.

"என் இந்த மன அவஸ்தை?"

வாழ்க்கைப் பிரச்னைகள் தன்னை நாலாபுறத்திலும் சூழ்ந்து கொண்டு பயமுறுத்துவதுபோல் அவனுக்குத் தோன்றியது. அடிவானத்தில் மின்னிய மின்னலைப் பார்க்கக் கூசும் கண்களைப் போல் அந்தப் பிரச்னைகளை

ஏறிட்டுப் பார்க்கவே அவன் மனம் கூசியது. ஏறிட்டுப் பார்க்கா விட்டாலோ, பாரம் தாங்கமுடியாத இருள் மண்டலம் தன் மீது விழுந்து தன்னை அமுக்குவதுபோல் அவனுக்குத்தோன்றியது.

அவன் சிந்தித்தான்; சிந்தித்துச் சிந்தித்துக் குழம்பினான்.

- கமலா காதல்மொழி பேசி மயக்குகிறாள்; சங்கர் லட்சியப் பாதையில் கைபிடித்து இழுக்க முயல்கிறான்; அம்மா நடைமுறைஉலகைக்காட்டிமிரட்டுகிறாள்.நானோ எல்லாவற்றையும்கண்டுநடுங்குகிறேன்.அப்படித்தானா?-

- என்னை மறக்காதே என்கிறாள் அம்மா; நம்மை மறக்காதீர்கள் என்கிறாள் கமலா; நாட்டை மறக்காதே என்கிறான் சங்கர். நானோ-? நான் என்னை மறக்கவே வழி தேடுகிறேன் அப்படித்தானா?-

- ஏன்? ஏன் இந்த பயம்? ஏன் இந்த அதைரியம்? அவ நம்பிக்கை?-

மணியின் சிந்தனை காரண காரியத் தொடர்போடு பிரச்னைகளின் சம்பந்தா சம்பந்தத்தை ஆராயவில்லை. அவன் பிரச்னைகளைக் கண்டு பயந்தான்; வெகுண்டான்; ஏதோஉலகமேதன்னைப்பார்த்துத்தன்கோரப்பற்களைக் காட்டிப் பயமுறுத்துவதாகக் கருதினான்; திடீரென்று தன்மீது பாறைகளைப்போல் சரிந்துவிழும் பொறுப் புணர்ச்சிகளைதாங்கிக்கொள்ளத்தயங்கினான்;தப்பித்துக் கொள்ள விரும்பினான்-

இருள்மண்டிக்கிடந்தமணியின்மனக்குகையில்திசை தேடித் திரிந்த சிந்தனை ஏதோ ஒரு புதிய ஒளியைக் கண்டு விட்டது போல் துள்ளிக் குதித்தது; அவன் இதயம் கடிகாரத்தின் பெண்டுல ஓசையோடு போட்டி போட்டுக் கொண்டு, அதன் சப்த சக்தியையும் மிஞ்சி வேகமாகத் துடித்துப் புடைப்பதுபோல் படபடத்தது; திடீரென்று அவன் தன்மீது கிடந்த போர்வையை எட்டி வீசிவிட்டு,

படுக்கையைவிட்டு எழுந்தான். அவனது முடிவை ஆட்சேபிப்பது போல், அந்த இரும்புக் கட்டில் கிரீச்சிட்டு முனகியது.

பொழுதுபுலரத்தொடங்கியது.அருணோதயத்துக்கு வழி பாடி வரவு கூறுவது போல் எங்கோ ஒரு சேவல் குரலெடுத்துக் கூவியது; பக்கத்து வார்டிலிருந்து தூக்கம் கலைந்து எழுந்தஒருகைக்குழந்தையின் அழுகுரல்கேட்டது விடிவு காலத்தை உணர்ந்து உலகம் துயில் நீங்கி எழத் தொடங்கியது; காலைக் கதிரவனின் பச்சைப் பசும் இளங்கதிர்கள் ஆஸ்பத்திரிக் கட்டிடத்தினுள் நுழைந்து துழாவின.

இருளப்பக் கோனார் தூக்கம் கலைந்தெழுந்து சோம்பல் முறித்துவிட்டு மணியின் கட்டிலின் பக்கம் திரும்பினார்.

மணியைக்காணவில்லை!

காணவில்லை என்றவுடனேயே அவருக்கு இல்லாத சந்தேகங்களெல்லாம் தோன்றின; நெஞ்சு படபடத்துத் துடித்தது.ஆஸ்பத்திரி எங்கும் தேடினார்; வாசலில் காவல் காத்து நின்ற காவலாளியைக் கேட்டார்; அவருடைய சந்தேகம் ஊர்ஜிதமாக அதிகநேரம் ஆகவில்லை.

மணிபோயேபோய்விட்டான்!

இருளப்பக் கோனாருக்கு 'இன்னது நடந்திருக்கும்' என்று ஊகிக்கவும் முடியாமல் சிந்திக்கவும் முடியாமல், மனம்எண்ணாததெல்லாம்எண்ணி அலமலந்தது.கைலாச முதலியார் தொங்கிய ஒருமுழக் கயிறு கண்முன் தோன்றி ஊசலாடியது?. ஆற்றுப் பாலத்துக்கடியில் சுழித்து நுரைத்துக்கொண்டு ஓடும் தாமிரபருணிப் பிரவாகம் திரை விரித்துச் சிரித்தது; பளபளக்கும் தண்டவாளங்களின் மீது ராஜ கம்பீரத்தோடு ஓடிமறையும் ரயில்வண்டி கடகடத்து மறைந்தது.

"மணி, மணி." என்று புலம்பியது அவர் வாய்; அவர் மனம்.

மறுகணமே அவர் ஆஸ்பத்திரியில் கால் தரிக்காமல் ஓட்டமும் நடையுமாக மணியின் வீட்டை நோக்கிஓடினார். வழியில் கண்டவர்களையெல்லாம் நிறுத்தி வைத்து, "மணி ஐயாவைப் பாத்திங்களா?" என்று கேட்டுக்கொண்டே ஓடினார்.

திடீரென்று அவரெதிரில் எதிர்ப்பட்ட வடிவேலு முதலியார் கோனாரைத் தடுத்து நிறுத்தி விசாரித்தார்.

"முதலியாரையா, மணி ஐயாவைக் காணோம். எங்கேயோ போயிட்டாங்க." என்று சொல்லத் தொடங்கினார்.

அதற்குள் வடிவேலுமுதலியார் குறுக்கிட்டு "என்னது மணி ஓடிப் போயிட்டானா? சேச்சே! என்ன காரியம் செஞ்சிட்டான்? பயந்தாங்கொள்ளி! கவலையும் கஷ்டமும் எல்லாத்துக்கும்தான் இருக்கு.அதுக்காக, இப்படிக்கோழை மாதிரி ஓடிப் போறதாவது? அப்படி ஓடுறதானா, இந்த ஊரிலே ஒருத்தன் பாக்கியிருக்க மாட்டானே!." என்று ஏதேதோ பேச முனைந்தார்.

ஆனால் இருளப்பக் கோனாரோ அவருடைய பேச்சைக் கேட்பதற்காக நிற்கவில்லை. அவர் தம்மால் முடிந்த அளவு வேகத்தோடு ஓடிக் கொண்டிருந்தார்.

## 19

"ஏன் ஓடிவந்தேன்?"

பொழுது பலபலவென்று விடிந்து கொண்டிருந்தது கீழ்வான மண்டலத்தில் உதயஜோதியின் ஒளிமூட்டம் பனிபோல் படர்ந்து வெளிறத் தொடங்கியது.கன்னங்கரிய

வான விதானத்தில் துளித் துளிப் பொட்டுகளாகத் தெறித்துச் சிதறிக் கிடந்த தாரா கணங்கள் ஒளியிழந்து மறையத் தொடங்கின. இருளைக் கண்டு அஞ்சி நடுங்கி எங்கோ ஒளிந்து முடங்கிக் கிடந்த ஊமைக்காற்று உயிர்ப்புப் பெற்றுச் சிலுசிலுத்து வீசியது. பனிக்காற்றில் ஸ்பரிசத்தால் தன்னுணர்வு பெற்ற மரத்து இலைகள் தூக்கம் கலைந்து தலை நிமிரத் தொடங்கின.

உலகம் ஒளியின் வரவை உணர்ந்து விழிப்புறத் தொடங்கியது; ஆனால், மணியின் மனத்திலோ இருட் பாரம்தான் திட்டுத் திட்டாகப் படிந்து கவிந்து கொண்டிருந்தது.

அம்பாசமுத்திரத்திலிருந்து தருவைப் பாதையாகப் பாளையங்கோட்டைக்குச் செல்லும் ஸெர்விஸ் பஸ்ஸில் மணி வந்து கொண்டிருந்தான். சூரிய வட்டம் முகம் காட்டுவதற்குள் சுப்பிரமணியபுரத்தைக் கடந்து மேலப் பாளையம் சென்றுவிட வேண்டும் என்ற எண்ணத்தில் டிரைவர் அந்த அத்துவான இருட்பாதையில் காரை அதிவேகமாக ஓட்டி வந்தான். மணி அந்தக் காரில் இருந்தவாறே வெளியே பரவிக் கிடந்த குமரியிருட்டையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான்.

அவன் மனத்தில் எண்ணிறந்த சிந்தனைகள் குழம்பிக் குழம்பி உருத்திரிந்து உழன்று கொண்டிருந்தன.

"ஏன் ஓடி வந்தேன்? என்னைப் பயமுறுத்திய பொறுப்பின் பாரங்களையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு ஓடிவந்துவிட்டேன்.ஆனால்-?"

அந்த 'ஆனால்' மட்டும் அவன் சிந்தனையை அடிக்கடி தடுத்து நிறுத்தியது; தடம் புரட்டியது; தாக்கியது.எனினும் அவனால் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை.

"-எங்கள் குடும்பமே சிந்திச் சிதறிவிட்டது. நானோ?-ஆசையோடு காதலித்த அருமைக் கமலா, ஆறுதல் கூறித் தேற்றிய நண்பன், பெற்றெடுத்து ஆளாக்கிய

தாய்-எல்லோரையும் விட்டுவிட்டு ஓடி வந்துவிட்டேன். ஓடுகிறேன். ஆனால் எந்தப் பொறுப்புக்களை, எந்த மனிதர்களை மறந்துவிட்டுஓடிவர நினைத்தேனோ, அந்தப் பொறுப்புக்களை, அந்த மனிதர்களை, என்னால் மறக்க முடியவில்லையே! ஏன்? ஏன்...?"

பளீரென ஒளிவீசிப் பாய்ந்து வந்த காரை செவல் அருகில் ஒரு கை வழிமறித்தது; கார் நின்றதும் கைநீட்டிய பிரயாணி ஏறி அமர்ந்தான்.

"அண்ணே பாளை ஒரு டிக்கட். நம்பர் எம்பத் தொன்பது!"

டிரைவர், 'இன்வாய்ஸை'ப் பதிந்து கொள்ள முனைந்தார். அதற்குள் தூரத்தில் காருக்குப் பின்னால் ஒரு பிளஷர் கார் தன் கொள்ளிக் கண்களை அகலத் திறந்து வைத்தவாறு அசுர வேகத்தில் ஓடி வந்தது.

மணிக்கு நெஞ்சு படபடத்தது. அவன் மனத்தில் திடீரென்று ஒரு பயபீதி உருவாயிற்று. 'யாரேனும் என்னைத் துரத்திப் பிடிக்கத்தான் வருகிறார்களோ? ஒருவேளை சங்கராக இருந்தால்...?' அவனுக்குத் தான் அமர்ந்திருக்கும் கார் சீக்கிரமே ஓடத் தொடங்காதா என்றிருந்தது. பிளஷர் நெருங்க நெருங்க அவன் இதயம் நிலை கொள்ளாது துடித்து அலறியது. நல்ல வேளையாக, அந்தப் பிளஷர் இருளோடு இருளாய், புழுதியை வாரியிறைத்துவிட்டு முன்னேறிச் சென்ற பிறகுதான், மணியின் இதயம் படபடப்பு நீங்கிச் சமனப்படத் தொடங்கியது.

எனினும் மறு கணமே அவன் சிந்தனை திசைமாறிக் கறங்கியது. கார் ஓடத் தொடங்கிவிட்ட போதிலும் அவன் மனத்தில் பீதியின் உறுத்தல் மறையவில்லை. தன்னை யாராரோ, ஏதேதோ உருவமுள்ள மனிதர்களும் உருவிலிகளான பொறுப்புக்களும் பயவுணர்ச்சிகளும் - இடைவிடாது கண் வைத்துத் துரத்திப் பிடிக்க முனைவதுபோல்

ஒரு பிரமை அவன் மனத்தில் ஏறியமர்ந்து, பேய்க்கனவு போல் அழுத்திக்கொண்டிருந்தது.

"நான்தான் ஓடி வந்து விட்டேனே, என்னை ஏன் இவர்கள் துரத்துகிறார்கள்? என் கூடவே ஏன் ஓடி வருகிறார்கள்?ஏன் அந்தப்பயங்கரப்பொறுப்புணர்ச்சிகள் என்னைத் துரத்தியடிக்கின்றன? ஏன்? ஏன்...?"

அவன் தன் சிந்தனையில் தோன்றும் பய விகாரங்களுக்கு உருப்பிடித்துத் தெளிவுபெற முயன்றான்:

"நான் பிறந்த ஊரை, வீட்டை, உற்றவரையெல்லாம் விட்டு ஓடி வருகிறேன். எனினும் என் நெஞ்சைவிட்டு இவையனைத்து ஓடி மறையவில்லையே! அதோ என் தாய் - அதோ கமலா - அதோ சங்கர் - அதோ அம்பாசமுத்திரம் - ஆற்றுப்பாலம் சுழித்தோடும் ஆறு - தூக்குக் கயிற்றில் அப்பா! - ஏன் இவையெல்லாம் என் மனத்தைவிட்டு மறையவில்லை? அழியவில்லை? அவர்கள் என் நெஞ்சில் விதைத்த எண்ணங்களையெல்லாம் நான் ஏன் இன்னும் மறக்க முடியவில்லை? நான் ஏன் சென்றதையெல்லாம், பழகியவர்களையெல்லாம் மறந்து தலை முழுகிவிட்டு, புது மனிதனாக இன்று பிறந்த பிள்ளைபோல் மாற முடியவில்லை...? ஏன்...?"

இந்தக் கேள்விக்கெல்லாம் அவனுக்குப் பதில் கிட்டவில்லை, எனினும் அவன் சிந்தித்தான்; சிந்தித்தான்...

"ஏன் மறக்க முடியவில்லை?

"அவர்களை நான் மறந்துவிடுவேன். ஆனால் அதற்கு முன் நான் என்னையல்லவா மறக்கவேண்டும் போலிருக்கிறது? என் மனத்தை, என் ஆத்மாவை மறந்துவிடவேண்டும்.என் மனம்தானே அந்த நினைவுகளையெல்லாம் இறக்கி வைக்க வழி தெரியாமல் என்னோடு இழுத்துக் கொண்டுவருகிறது!என் ஆத்மாவைமறந்தாலொழியவேறு கதியே இல்லை...

"அதை எப்படி மறப்பது? எதை மறக்கவேண்டும் என்று நினைக்கிறேனோ அதுதானே மேலும் மேலும் விரிந்து வளர்ந்து பயமுறுத்துகிறது....!

"நான் யார்? என் ஆத்மா யார்? நான் என்று தனிப்பட்ட தன்மை ஒன்று உண்டா? இருந்தால் அதை மட்டும் சுமந்து திரிய முடியாதா? அல்லது அதை மட்டும் என்னால் கழற்றி எறிய முடியாதா? ஆனால் 'நான்' என்று நான் கருதுவது, என் ஆத்மா என்று உரிமை கொண்டாடிக் கொள்வது முழுவதிலும், என் சென்றகால வாழ்வின் நினைவுச் சித்திரங்கள்தானே தெரிகின்றன. அப்படியானால் அந்த வாழ்வும் நினைவும் உருவாக்கிய உருவமற்ற மனப்பிராந்திதான் என் ஆத்மாவா? சங்கர் சொன்னானே, அந்த மாதிரி நான் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் சூழ்நிலையால் பாதிக்கப்பட்டு உருவான சாசனச் செப்பேடுதானா என் மனம்? எனக்கென்று தனி மனம் கிடையாதா? தனி ஆத்மா கிடையாதா? என் விருப்பப்படி என் மனச் சித்திரங்களைத் தீட்டவோ அழிக்கவோ முடியாதா? என் மனம் எனக்குக் கட்டுப்பட்டதில்லையா? அப்படியானால் என்னை ஆட்டிப் படைத்து அலைக்கழிக்கும் பூத பயங்கரம் தானா என் ஆத்மா...?"

ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஆராய்ச்சி செய்தும், வேதாந்திகள் கையில் சிக்காது என்றென்றும் விடியாத கேள்வியாகக் கொக்கியிட்டுக் குறுக்கே நிற்கும் அந்த ஆன்ம விசாரம் மணிக்கு மட்டும் அவ்வளவு லகுவில் புரிந்து விடுமோ கஞ்சாபோதையைப்போல் மனக்கிறக்கம் தந்த அந்த ஆன்ம விசாரணைக்குள் தீக்கோழிபோல் தலையைப் புதைத்துக் கொண்டான் மணி. எனினும் இத்தனை கேள்விகளுக் கிடையிலும் அவன் 'நான் ஏன் சிந்திக்கிறேன்? ஏன் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை?' என்ற கேள்வியை மட்டும் எண்ணவும் இல்லை; எழுப்பவும் இல்லை.

குணதிசைக் கோடியில் பாலசூரியனின் சிவந்த முகம் சூடேறி, நீலம் பாரித்த வெள்ளிய நெருப்புக் கோளமாக

உருமாறும் வேளையில், அந்த ஸெர்விஸ் பஸ் பாளையங் கோட்டை லெவல் கிராஸிங்கைத் தாண்டி, ஊருக்குள் பிரவேசித்தது.

ஸ்டாண்டுக்குள் வந்து பஸ் நின்ற போதுதான் மணியின் ஆன்ம விசாரம் அறுபட்டது; ஊர் வந்து விட்டதை மணி உணர்ந்தான். பஸ்ஸை விட்டு பிரயாணிகள் ஒவ்வொருவராக இறங்கத் தொடங்கி னார்கள். எல்லோரும் இறங்கியவுடன் தான் மணிக்குத் தானும் இறங்க வேண்டும் என்ற உணர்வே வந்தது. அவனுக்குத் தன்னைச் சுற்றிக் குழுமியிருந்த ஒரு சிறு பிரபஞ்சமே திடீரென்று சிந்திச் சிதறிப் போய் விட்டது போல் இருந்தது; அந்தக் கார் ஓரிடத்திலும் நிற்காமல் தன்னைச் சுமந்து கொண்டே, காலமெல்லாம் ஓடிக் கொண்டிருந்தாலென்ன என்று அசட்டுத்தனமாய் எண்ணிப் பார்த்தான் மணி. திடீரென்று பிரத்தியட்ச உலகுக்குள் குதித்துத் தன்னுணர்வு பெற்று இயங்குவதற்கு அவனுக்குச் சிரம சாத்தியமாயிருந்தது. வேண்டா வெறுப்பாகக் காரை விட்டு இறங்கினான்; திடீரென அவன் மனத்தில் ஒரு நிராதரவுணர்ச்சி தலை தூக்கியது.

"இனிஎன்ன செய்வது?எங்குசெல்வது?"

பஸ் ஸ்டாண்டிலேயே நின்று கொண்டிருப்பதில் அர்த்தமில்லை என்று உணர்ந்தவனாக, வெளியே புறப் பட்டான். வெளியே வந்ததும் எதிரேயுள்ள காப்பி ஹோட்டல் போர்டு அவன் கண்ணை இழுத்தது. ஹோட்டலைக்கண்டதும்மணிக்குப்பசியெடுப்பதுபோல் இருந்தது.ஹோட்டலுக்குச் செல்லுமுன் மணி தன் பையில் கை விட்டு அதிலிருந்த பணத்தை எடுத்துப் பார்த்தான். ஆஸ்பத்திரியை விட்டுக் கிளம்பும் போது அவன் தன் சட்டைப் பையில் நோட்டும் சில்லறையுமாகப் பணம் இருப்பதைக் கண்டும் அந்தப் பணம் எப்படி வந்தது என்று சிந்திக்கவில்லை. தனக்கு உதவ வந்த சமய சஞ்சீவி யாகத்தான் அந்தப் பணத்தைக் கருதினான். அவனுக்கிருந்த

படபடப்பில் அதை எண்ணிப் பார்க்கக்கூட முடிய வில்லை. இப்போதுதான் அதை எண்ணிப் பார்த்தான். நோட்டும் சில்லறையுமாக ரூபாய் முப்பத்தியேழு சொச்சம் இருந்தது.

"இந்தப் பணம் ஏது? கோனார் பணமா? கோனாரிடம் ஏது இவ்வளவு? எதற்காக வைத்திருந்தார்? என் செலவுக்கா, வீட்டுச் செலவுக்கா? யாரிடமேனும் கடன் வாங்கினாரா? அல்லது சங்கர் கொடுத்திருப்பானா...?"

மணி அதைப்பற்றி அதிக நேரம் சிந்திக்கவில்லை; அதனால் பிறருக்கு ஏற்படும் சிரமத்தைப் பற்றியும் அவன் சிந்திக்கவில்லை. அந்தக் கணத்தில் அவன் மனத்தில் சுயநலம்தான் மேலோங்கி நின்றது. எனவே அவன் வேறொன்றும் நினையாமல் நேரே ஹோட்டலுக்குள் சென்றான். ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே, அவன் அடுத்தாற்போல் எங்கு செல்வது என்றும் சிந்தித்தான். அவனுக்கு எதுவும் புலப்படவில்லை. கடைசியாக வண்ணார் பேட்டையிலுள்ள தன் கல்லூரி நண்பன் ஒருவன் அறையில் சென்று தங்குவது, பிறகு யோசிப்பது என்று தீர்மானித்தவனாகச் சாப்பிட்டு முடித்தான்.

சாப்பிட்டு முடித்துவிட்டு இலையைத் தொட்டியில் போடுவதற்காகச் சென்றான் மணி.

"சாமி, சாமி. தொட்டியிலே போடாதே சாமி, இப்படிப் போடு!" என்ற குரல்கேட்டு, மணி திடுக்கிட்டு நின்றான்; ஹோட்டலின் எச்சில் இலை போடும் தொட்டிக்கு அப்பால், இரண்டு கைகளையும் ஏந்திக் கொண்டு ஒரு பிச்சைக்காரன் ஆவலோடு நின்று கொண்டிருந்தான்; இலை அவன் கையில் விழாமல், தவறித் தன் முன்னால் விழாதா என்று ஏங்கிக் கொண்டிருப்பது போல் அவனுக்கு அருகில் ஒரு வங்கு பற்றிய சொறி நாய் நின்று கொண்டிருந்தது.

மணி அந்தப் பிச்சைக்காரனையும் நாயையும் எச்சில் இலை போடும் தொண்டின் வழியாகப் பார்த்தான். முன்பெல்லாம் இது போன்றதொரு நிகழ்ச்சி மணியின் மனத்தில் எந்தவிதச் சலனத்தையும் ஏற்படுத்தியதில்லை; இப்போதோ அவன் மனத்தில் தோன்றிய அருவருப் புணர்ச்சியையும் மிஞ்சி, ஒரு அனுதாப உணர்ச்சி மெல்லத் தலை தூக்கியது. மணி ஒன்றும் பேசாமல், அந்தப் பிச்சைக்காரனை நோக்கி இலையை விட்டெறிந்தான்.

இலை கீழே தவறி விழுந்தது; மறு கணமே அந்தப் பிச்சைக்காரனும் நாயும் அந்த இலைக்காகப் பாய்ந்து விழுந்து போராட முனைவதையும் மணி கண்டான்!

மறு கணமே மணி அங்கு நிற்க மனமில்லாமல் ஹோட்டலை விட்டு வெளியேறினான்.

"சே! எச்சில் இலைக்கா இந்தப் போட்டி; அந்த நாய்க்குத் தான் அறிவில்லை. அந்தப் பிச்சைக்காரனுமா அப்படி? இவ்வளவு கேவலமாகவா வயிறு வளர்க்க வேண்டும்? இதை விட எங்கேனும் விழுந்து சாகலாமே!..."

மணி அந்த நிகழ்ச்சியைப் பற்றிச் சிந்தித்தவனாக, டவுண் பஸ் ஸ்டாப்புக்கு நடந்தான்.

வண்ணார்பேட்டையில் மணி எதிர்பார்த்தபடியே அந்த நண்பன் தன் அறையில்தான் இருந்தான். மணியைக் கண்டதும், அவன் அவனை ஆவலோடு வரவேற்றான்.

"என்ன மணி, ஏது இங்கே? அபூர்வமா? காலங்-காத்தாலே!"

"ஒன்றுமில்லை. குடும்ப விஷயமா வந்தேன். நாளைப் போகணும்."

மணி அன்று அங்கு தங்கினான்.

அப்போது கல்லூரி விடுமுறைக் காலமாதலால், மணியின் நண்பனும் எங்கும் செல்லவில்லை. தான் மட்டும்

அறையிலேயே தங்கினால், தன் நண்பன் எங்கே சந்தேகப்பட்டுவிடுவானோ என்று சிறிது நேரத்தில் வெளிக் கிளம்பிச் சென்றான் மணி. நல்லவேளையாகத் தன் குடும்பத்தின் கதையெல்லாம் அந்த நண்பனின் காதுவரை எட்டாதிருக்கிறதே என்று மணி திருப்திப்பட்டுக் கொண்டான். அன்று பகல் முழுவதும் மணி இன்னது செய்வதெனத் தெரியாமல், யார் கண்ணிலும் பட்டு விடக்கூடாது என்ற பயத்தில், முனிஸிபல் பார்க்கில்போய் அமர்ந்து பொழுதைக் கழித்தான்.

நிர்மானுஷ்யமான முனிஸிபல் பார்க்கின் புல்வெளி யில் படுத்தவாறே மணி தன் நிலைமையைச் சிந்தித்துப் பார்த்தான்.

"இனிஎன்ன செய்வது?"

கீறல் விழுந்த இசைத் தட்டைப்போல் இதே கேள்வி மீண்டும் மீண்டும் ஒலியெழுப்பிக் கரகரத்தது. அவன் மனத்தில் திட்டவட்டமான சிந்தனைகள் எதுவும் உருவாக வில்லை. எதிர்காலம் திக்குத் திசாந்திரம் தெரியாத இருள் மண்டலமாய் அவனுக்குத் தோன்றியது.

"என்ன செய்வது?"

அதைப்பற்றி யோசித்து யோசித்து அலுத்துக் கொள்ளும் வேளையில், அவனுக்குப் பாளையங்கோட்டை ஹோட்டலில் கண்ட அந்த ஏழைப் பிச்சைக்காரனின் வற்றி மெலிந்த முகம் தான் காட்சியளித்தது...

அவன் ஏன் இந்த கதிக்கு ஆளானான்? பசியின் கொடுமை மனிதனை இவ்வளவு கேவலத்துக்கா ஆளாக்கி விடுகிறது? ஒருசாண் வயிற்றுக்காக, மானாபிமானம் இன்றி, கூச்சமின்றி, அருவருப்பின்றி, மனிதன் எச்சில் இலைக்கா நாயோடு போட்டி போட வேண்டும்? மனித உயிர் அவ்வளவு பெரிதா? அந்த உயிரை அப்படிப் பேணி வளர்க்காவிட்டால் என்ன?"

அப்போதுதான் அவனுக்குத் தன் தந்தையின் ஞாபகம் வந்தது.

"என் தந்தை கேவலத்துக்கும் மானாபிமானத்துக்கும் அஞ்சித்தானே உயிரை மாய்த்துக் கொண்டார்! ஆம். இப்படிப்பட்ட அவலமான, கேவலமான நிலைமைக்கு ஆளாவதைவிட அவரைப் போல் உயிரை விட்டு விடுவது நல்லது.

"ஆனால் எல்லோருமா உயிரை விட்டு விடுவார்கள்?

"அப்படியானால், மனிதர்கள் எதற்கு அஞ்சுகிறார்கள்?

"உயிருக்கா? மானாபிமானத்துக்கா?

"எது பெரிது? உயிரா? மானாபிமானமா?

"உயிரைப் பெரிதாக நினைக்கிறவன் மானாபிமானத்தைக் கைவிடுகிறான்; மானாபிமானத்தை மதிப்பவன் உயிரை விட்டு விடுகிறான்...

"எனக்கு எது பெரிது?"

"உயிரா? மானாபிமானமா."

யோசித்து யோசித்துப் பார்த்ததில் அவனுக்கு இரண்டுமேபெரிதாய்த்தோன்றின.

"அப்படியானால் மானாபிமானத்தோடு உயிர் வாழ்வதெப்படி?"

அதற்குத்தான் அவன் விடை தேடிக் கொண்டிருந்தான். அவனால் ஒரு வழியையும் காண இயலவில்லை. சிந்தித்துச்சிந்தித்து உடம்பையும், உள்ளத்தையும் அலுக்கச் செய்து கொண்டான். மாலை வரையிலும் அவன் ஒரு முடிவுக்கும் வரவில்லை. அமைதியும் காணவில்லை.

இரவு எட்டு மணி சுமாருக்கு அவன் மீண்டும் வண்ணார் பேட்டைக்குத் திரும்பி வந்தான்.

அவன் வந்து சேர்ந்த போது, அந்த நண்பனின் அறையில் வேறு சில கல்லூரி நண்பர்களும் அமர்ந்து சுவாரசியமாகப் பேச்சில் ஈடுபட்டிருந்தார்கள்.

மணியைக் கண்டதும் அந்த மாணவர்களில் ஒருவன், "அடேடே, மணியா? நீ இங்கேயா இருக்கே? சாயந்தரம் ஜங்ஷனிலே நம்ம சங்கரைக் கண்டேன். அவன் என்னிடம் 'மணியைப் பார்த்தியா?' என்று கேட்டான்-" என்று பேசத் தொடங்கினான்.

மணியின் உள்ளம் திடீரென்று சுருக்கிற்று.

"சங்கரைப் பாத்தியா? என்ன சொன்னான்?" என்று படபடத்தான் மணி.

"ஒண்ணும் சொல்லலெ. உன்னைப் பார்க்கலேன் னேன். உடனே அவசரமா எங்கேயோ போனான்...."

"வேறே ஒண்ணும் சொல்லலியா?-"

"இல்லை.ஏன்? என்ன விஷயம்?"

"ஒண்ணுமில்லெ,கேட்டேன்"

மணி மழுப்பினான்.மறு கணமே அவன் அங்கு நிற்கப் பிடிக்காமல் அறைக்கு வெளியேயுள்ள இருள் மண்டிய வராந்தாவுக்கு வந்து அங்கு கிடந்த கட்டிலில் படுத்தான். உள்ளே அந்த மாணவர்கள் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தன்னைப் பற்றித்தான் ஏதேனும் பேசுகிறார்களோ என்ற பதைப்பில் மணி கிட்டிவந்த தூக்கத்தையும்கெடுத்தவாறு அவர்கள்பேசுவதைக்கூர்ந்து கேட்டான்-

"இந்த நாடு உருப்பட வேண்டுமானால் இங்கு ஒரு பெரும் அறிவுப் புரட்சி ஏற்பட வேண்டும். மக்களின் மூட நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் போக வேண்டு

மென்றால் அவர்கள் நெஞ்சில் அறிவு சுடர்விட வேண்டும், எல்லோரும் சமம் என்ற உணர்வு எல்லோருக்கும் வந்து விட்டால்.

"அறிவுப் புரட்சி அறிவுப் புரட்சி என்று அடித்துக் கொள்ளுகிறாயே, அறிவில் மட்டும் புரட்சி ஏற்பட்டால் போதுமா? இப்போது? என்னை எடுத்துக் கொள். எனக்கு இந்த மூடநம்பிக்கைகளில் ஒன்றும் நம்பிக்கை இல்லை மனிதனை மனிதனாகத்தான் நேசிக்கிறேன். இதனால் என் வாழ்க்கை மேம்பட்டு விட்டதா? சொர்க்கத்தில் இருக்கி றோம் என்று நினைத்து கொள்வதால் மட்டும் ஒருவன் சொர்க்கத்துக்குப் போய்விட முடியுமா? அறிவு வேண்டும்; அந்த அறிவின் கொள்கை வெற்றிபெற நடைமுறைப் போராட்டம் வேண்டும். இல்லாவிட்டால் ஒன்றும் நடக்காது."

"பிரசாரத்தின்மூலம் அறிவைப் புகட்ட முடியாதா? மக்கள் வாழ்வை மேம்படச் செய்ய முடியாதா? எத்தனை அறிவியல் நூல்கள் உலகத்தின் கதியை மாற்றி யிருக்கின்றன!"

"வாஸ்தவம். பிரசாரம் உணர்வைத்தான் ஊட்ட முடியும்; வாழ்க்கைதான் அந்த உணர்வை ஸ்திரப்படுத்த முடியும்; ஆனால், நடைமுறை இயக்கம்தான் உணர்வின் வெற்றியை உருவாக்க முடியும். புஸ்தகத்தின் மூலம் மட்டும் புரட்சி உண்டாகிவிடுமா...?"

"நீ என்னதான் சொல்லுகிறாய்? மனம் உண்டா னால் மார்க்கமில்லையா?"

"உண்டப்பா உண்டு. ஆனால் நீ என்ன நினைக்கிறாய் மனம் மாறினால் உலகமே மாறிவிடும் என்கிறாய். மனம் உண்டானால் மார்க்கமும் உண்டு என்று மட்டும் நினைக்கிறாய். ஆனால் மனமும் மனத்துக்கிசைந்த மார்க்கமும் ஒன்று சேர்ந்தால்தான், கொள்கையும் நடைமுறையும் சிந்தையும் செயலும் ஒன்றுபட்டால்தான் விமோசனம் உண்டு..."

இதற்குள் இன்னொரு குரல் குறுக்கே விழுந்து வெட்டிப் பேசியது.

"என்னப்பா நீங்கள்? புரியாத விஷயத்திலே ஏன் இப்படிப் போட்டு மண்டையை உடைச்சிக்கிடுதீங்க? பாளையங்கோட்டையிலே 'பாலித் தீவின் கன்னிகள்'னு ஒரு படம் நடக்குதாம். எல்லாத்தையும் அப்படி அப்படியே காட்டுதானாம்... வாங்கப்பா, போயிட்டு வரலாம்!"

தொடர்ந்து எல்லோரும் கலீர் என்று சிரித்துக் குலுங்குவது கேட்டது.

மணி அவர்கள் பேச்சை மேலும் கேட்டுக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் தன்னைப் பற்றிப் பேசவில்லை என்றவுடனேயே அவர்கள் பேச்சைக் கேட்பதில் அவன் அக்கறை கொள்ளவில்லை. அத்துடன் அவனுக்குக் கடந்த நாள் தூக்கமில்லாமையால் தூக்கக் கிறக்கம் கண்ணில் கனமேற்றி உறுத்தியது; காய்ந்து சுருங்கும் கனியைப் போல் அவன் கண்கள் தவிர்க்க முடியாத தூக்கவுணர்ச்சியால் கிட்டித்து இறுகின. எனினும் அவன் மனம் மட்டும் சிந்தனை செய்வதை நிறுத்தவில்லை. நினைவு மயங்கும் அந்த நிலையிலும் அவன் மனம் என்னென்னவோ எண்ணிக் குமைந்து கொண்டிருந்தது...

-"அவன் சொன்ன மாதிரி, இவர்கள் ஏன் இந்தப் புரியாத விஷயங்களைப் பற்றி பேசி மூச்சைத் தொலைக்கிறார்கள்? இவர்களுக்கு வேறு வேலையில்லையா? உலகத்தைப் பற்றி இவர்களுக்கு என்ன கவலை? இவர்கள் தான் உலகத்தைமாற்றியமைக்கப்போகிறார்களா. இந்த அரசியலும் ஆராய்ச்சியும் எதற்கு?...

-"உலகத்தைப் பற்றிக் கவலை கொள்ள இவர்களுக்கு என்ன ஆத்திரம் வந்தது? உலகத்து மக்களின் வாழ்க்கையில் இவர்களுக்கு ஏன் இத்தனை சிரத்தை? அவர்கள் வாழ்ந்தால் தான் இவர்களும் வாழ முடியும் என்ற நினைப்பா? தங்கள் க்ஷேமலாபங்களும் உலகத்தின் க்ஷேம லாபங்களும்

ஒன்றுதான் என்றெண்ணமா? அல்லது உலக நலத்தில்தான் இவர்கள் தங்கள் நலத்தைக் காண்கிறார்களா...?"

-"ஏன் அப்படி? இவர்கள் தமது வாழ்க்கையை உலக வாழ்க்கையோடு ஒட்ட வைத்துப் பார்க்கிறார்களா? அப்படியானால், நான் என் வாழ்க்கையை உலக வாழ்க்கையோடு ஒட்ட விடாமல், எட்ட வைத்துப் பார்க்கிறேனா? எது சரி, எதனால் நன்மையுண்டு...?"

சொப்பன லய சுகம் போன்ற அந்த மங்கிய சிந்தனைக் கிறக்கத்தில் மணி என்னென்னவோ எண்ணிப் பார்த்தான்; எனினும் அந்தச் சமயத்தில் அவன் மனத்தின் எந்த மூலையிலும் அன்று சங்கர் சொன்ன வார்த்தைகள் சிறிதும் எதிரொலிக்கவில்லை. கவிந்து ஆட்கொள்ளும் நித்திரையையும் திமிறிக்கொண்டு அவன் உள்ளம் அவனது எதிர்காலத்தைப் பற்றிச் சிந்தனை செய்தது...

"இனி நான் என்ன செய்வது? எப்படி வாழ்நாளை ஓட்டுவது? கையிலுள்ள பணம் எத்தனை நாளைக்குக் கட்டிவரும்...? அதற்குப்பின்...? எங்காவது வேலை தேடித்தான் பிழைக்க வேண்டுமா...? வேலை கிடைக்காவிட்டால்...? ஒரு சின்ன கிளார்க் உத்தியோகத்துக்குமா பஞ்சம்...? அதுவும் கிடைக்காவிட்டால்...? அப்புறம்?"

அவன் மனக் கண் முன்னால், பாளையங்கோட்டையில் கண்ட அந்தப் பிச்சைக்காரனின் பரிதாபக் கோலம் தென்பட்டது...

"சேச்சே...!" அந்த மாதிரிக் கதிக்கு ஆளாவதைவிட என் அப்பாவை மாதிரி நானும் தற்கொலை செய்துகொண்டு விடலாம். அப்படிச் செய்து விட்டால், ஒரு கவலையில்லை. என் எதிர்காலம் என்னை என்றும் பயமுறுத்த முடியாது..."

அவன் மனம் திடீரென்று தற்கொலையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது...

"தற்கொலை செய்து கொள்வதா? எப்படிச் செய்வது-? ஆறு-குளம்-ரோட்டடிப் புளிய மரம்-ஒரு துளி விஷம்-ஓடுகின்ற ரயில்-எப்படிச் செய்வது-? ஆமாம் நாளைக்குத் துணிந்து தற்கொலை செய்துகொள்ள வேண்டியதுதான். ரயிலில் விழுந்து-அதுதான் சரி-துணிந்துவிட வேண்டியதுதான்-அவ்வளவுக்குத் தைரியமில்லையா-?"

பாளையாங்கோட்டை ஊசிக் கோபுரக் கடிகாரம் பன்னிரண்டு மணி அடித்து ஓய்ந்து அடங்குவது அவன் காதில் தெளிவாகக் கேட்டது; வயற்காட்டில் விடாது முணமுணத்துக் கொண்டிருக்கும் தவளைகளின் சத்தமும் அவனுக்குக் கேட்டது.

மணி யோசித்தான்; தற்கொலையைப் பற்றிக் கற்பனை பண்ணுவது அவனுக்கு இன்பம் தருவதாகவும், நிவர்த்தியுணர்ச்சி அளிப்பதாகவும் இருந்தது...

"நாளை இந்தக் கடிகார ஓசையை நான் கேட்க மாட்டேன்;இந்தத்தவளைகளின் முணமுணப்புஎன்காதில் விழாது. நாளை நான் இறந்து போய் விடுவேன். காலையில் மேற்கே இருந்து வரும் ரயிலுக்குக் குறுக்கே விழுந்து உயிரை விட்டுவிட வேண்டியதுதான். க்ஷண நேரத் துணிச்சல். அதுவுமா என்னிடமில்லை...?"

அவன் மனம் மறு நாளையக் காட்சியைக் கற்பனை பண்ணிப் பார்த்தது...

-ரயில் கடகடத்து ஓடிவருகிறது; மணி நெஞ்சை இழுத்துப் பிடித்துக்கொண்டு தண்டவாளத்தின்மீது படுத்திருக்கிறான்; ரயில் இதோ வந்துவிட்டது; இதோ, இதோ- மணி கண்களை இறுக்கி மூடுகிறான்-!சடசட என்று மண்டை நொறுங்கும் சப்தம்!- ஓடிச் சென்ற ரயில் கிரீச்சிட்டு பிரேக் போட்டு நிற்கிறது! கார்டும், ஜனங்களும் இறங்கி ஓடி வருகிறார்கள்!...ரத்தக் களரி!"

-எல்லோர் முகத்திலும் பரிதாப உணர்ச்சி. "யார் பெத்த பிள்ளையோ?" என்று அனுதாபப் படுகிறது ஒரு குரல்-மறுநாள் பத்திரிகையில்; இளைஞனின் கோர மரணம் என்ற தலைப்பில் செய்திப் பிரசுரம்-ஊரெல்லாம் இதே பேச்சு- அம்பாசமுத்திரத்துக்கும் செய்தி கிடைக்கிறது-கமலா துடிதுடிக்கிறாள்!- மணியின் பிணத்தின் மீது விழுந்து அலறுகிறாள்-! சங்கர் கண்ணீர் விடுகிறான்-மணியின் தாய் புலம்புகிறாள்...!

-என்ன அலங்கோலம்? என்ன பரிதாபம்?-

மணி அந்தக் காட்சியின் கற்பனாலங்காரத்தை எண்ணிப் பார்த்தான்; உலகத்தின், உற்றாரின் கவனமும் அனுதாபமும் ஒரே கணத்தில் தன் மீது, தன் பிணத்தின் மீது திரும்புவதைக் காணும் அவனது கற்பனையுள்ளம் இன்னதெனத் தெரியாத திருப்தியும் மகிழ்ச்சியும் கொண்டது...

திடீரென்று அவன் உடம்பின்மீது ஏதோ ஒரு ஈரவுணர்ச்சி கொண்ட பொருள் நழுக்கென விழுந்து துள்ளியது. மணி அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருந்தான்; அவனது பலவீனமான இருதயம் படபடவென்று துடித்துக் குதித்தது.

"என்ன அது? தேளா?பாம்பா-"

மணி மறுகணமே விளக்கின் சுவிட்சைப் போட்டான்; ஒரு வெள்ளைப் பல்லி அவன் படுத்திருந்த கட்டிலிலிருந்து துள்ளிக் குதித்து ஓடி மறைந்தது.

'பல்லிதானா?-"

மணி மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டான்; எனினும் அவனது இதயப் படபடப்பு மட்டும் சாந்தி பெறவில்லை. திடுக் திடுக்கென்று குதிக்கும் இதயத்தோடு அவன் மீண்டும் விளக்கை அணைத்துவிட்டுக் கட்டிலில் படுத்தான்; திடீரென்று ஏற்பட்ட அதிர்ச்சியால் அவனைக் கவிந்தணைத்த தூக்கம் பிடி நழுவித் தூர விலகியது; அதே

சமயம், தற்கொலையைப் பற்றிய கனவில் நிவர்த்தி கண்டு ஆனந்தித்த அவன் மனம் மீண்டும் பிரத்தியட்ச உலகை ஏறிட்டுப் பார்க்கத் தொடங்கியது.

"என்ன இது? நான் என்ன இப்படி அலறிப் புடைத்து விட்டேன்? இந்தப் பல்லிக்கா இத்தனை பயம்?-என் உயிருக்கு ஏதோ திடீரென்று ஆபத்து நேர்ந்து விட்டது போல் அல்லவா திடுக்கிட்டு விட்டேன்?- நானா கொஞ்ச நேரத்துக்கு முன்னால் தற்கொலை செய்து கொள்வது பற்றிச் சிந்தித்தேன்?...

அவன் தன்னைத்தானே நோக்கி மெல்ல நகைத்துக் கொண்டான்.

"தற்கொலை செய்து கொள்வது அவ்வளவு எளிதான காரியமில்லையா? ஆமாம், எவனுக்குத்தான் இந்த உலகத்தை விட்டு, உலக இன்பங்களை விட்டுப் பலவந்தமாகப் பிரிந்து செல்லத் துணிச்சல் வரும்? அந்தத் துணிச்சல் வர வேண்டுமானால், அவன் எவ்வளவு தூரம் உலகைவெறுக்கவேண்டும்?

"நான் உலகத்தை, உலக இன்பத்தை வெறுக்கிறேனா? கமலா என் அருகிலிருந்தால் எவ்வளவு ஹிதமாயிருக்கிறது?-அவளை நான் மறந்து விடுவதா? மறந்து விடுவேனா?

"இந்தப் பல்லிக்கே இந்தப் பயம் பயந்தேனே. எனக்கு என் உயிரின் மீது அத்தனை ஆசையா?-மனிதனுக்கே உயிரின் மீது அவ்வளவு ஆசையா?..."

அப்போது அவன் மனத்தில் மீண்டும் அந்தப் பிச்சைக்காரனின் தோற்றம் உருக் காட்டியது. அவன் ஏன் எச்சில் இலைக்காக நாயுடன் போட்டி போடுகிறான் என்ற உண்மை அவன் உள்ளத்தில் ஒளி கீறிற்று.

"ஆம். மனிதனுக்குஎந்த ஆசையையும்விட, உயிராசை தான் பெரிய ஆசை. இல்லையென்றால், அவன் ஏன்

எச்சிலைத் தின்று வாழவேண்டும்? உலகத்தின் இன்பங் களையெல்லாம் பறித்துத் தீர்த்து, வாழ்நாளெல்லாம் வேதனையைத்தந்துகொண்டிருக்கும்குஷ்டரோகத்தையும் தாங்கிக்கொண்டு மனிதன் ஏன் அலைந்து திரிகிறான்? கூனும், குருடும், நொண்டியும் ஏன் உயிர் வாழ்கிறார்கள்? பெண்கள் உடலை விற்று விபசாரம் செய்து ஏன் உயிர் பிழைக்கிறார்கள்?-

"மனிதன் வாழத்தான் விரும்புகிறான்; சாக விரும்பு வதில்லை; ஆனால் இப்படித்தான் வாழ வேண்டுமா? இதுவா வாழ்க்கை? நல்ல முறையில் வாழ்க்கையை வாழ்வ தற்கு வகையே கிடையாதா?

"இதைப் பற்றித்தான் என் நண்பர்கள் அப்போது கவலைப் பட்டார்களா? இதைத்தான் சங்கர் என்னிடம் சொன்னானா?-

தனக்குத்தானே தர்மாவேசம் கொண்ட மணியின் இதயம் தன்னை வைத்தே உலகத்தை அளந்து பார்த்தது. வேறுமாதிரியாக அளந்து நோக்க அவன் முனையவும் இல்லை; அதற்குரிய அளவுகோலும் அவனிடம் இல்லை; எனவேமானாவாரியாகஅவன்உள்ளத்தின்மீதுசொரிந்து குவியும் கேள்விகளின் பாரத்திலிருந்து விடுபட முடியாமல் தத்தளித்தான்-

அவனால் அதிக நேரம் சிந்தித்துக் கொண்டிருக்க இயலவில்லை; அவனை விட்டு விலகி நின்ற தூக்கம் மீண்டும்அவனை அணுகி,அவன்பிரக்ஞையைக்கொஞ்சம் கொஞ்சமாக ஆட் கொண்டது. அதன்பின் ஊசிக்கோபுர மணியோசை அவன் காதில் உறைக்கவில்லை-

மறுநாள் காலையில் மணியின் நண்பன் படுக்கையை விட்டு எழுந்திருந்து, "மணி, இன்னுமா தூக்கம்?" என்று கேட்டுக்கொண்டேவராந்தாவுக்குவந்தான்.

அங்குமணியைக்காணவில்லை.

# 20

செங்கோட்டைக்குச் செல்லும் பாஸஞ்சர் ரயில் அம்பாசமுத்திரம் ஸ்டேஷனில் தாகம் தீரத் தண்ணீர் குடித்துவிட்டுஅப்போதுதான் கிளம்பிச்சென்றது.

ரயில் கிளம்பிச் செல்லுமுன்னரே பொழுது சாய்ந்து விட்டது. மேல் வானக் கோடியில் மலைக்கும் வானத்துக்கும் எல்லை காணாதவாறு இருள் கவிழ்ந்து மூடி விட்டது. ஸ்டேஷனுக்கு அப்பால் தூரத்தில் தெரியும் அம்பா சமுத்திர நகருக்குள், அப்போதுதான் ஏற்றப்பட்ட மின்சார விளக்குகள் கோலத்துக்குப் புள்ளி வைத்தது போல் பொட்டுப் பொட்டாகத் தெரிந்தன. ஆளரவம் குறைந்து தூங்கிக் கொண்டிருந்த ரயில்வே பீடர்சாலை ரயிலின் வரவால் உயிர்ப்புப் பெற்று விளங்கியது. சளசளத்துப் பேசும் மனிதர்களும், கலகல வென்று மணியோசை யெழுப்பும்இரட்டைமாட்டுவண்டிகளும்செல்லும்அந்தச் சாலை அந்தி நேரத்தின் சவ அமைதியை இழந்து குதூ கலித்தது.

சங்கர் ரயிலை விட்டு இறங்கி ஊரை நோக்கிச் சாவதானமாக நடந்து வந்தான்.

முந்திய நாள் மாலையில் பாளையங்கோட்டையில் 'பெர்லின் வீழ்ச்சி' என்ற ருஷ்யப் படம் காட்டப்பட்டது. அதைப் பார்ப்பதற்காகத்தான் சங்கர் திருநெல்வேலி சென்றிருந்தான்.ரயில்வே பீடர் சாலையில் காலாற நடந்து வரும் போது அவன் மனத் திரையில் அந்தப் படத்தின் காட்சிகள் மீண்டும் ஓடிச் செல்வது போலிருந்தன. சங்கர் அந்தப் படத்தை எண்ணியெண்ணி வியந்தவாறே வந்து கொண்டிருந்தான்–

–ஐவனோவ் ஒரு இரும்பாலையிலுள்ள திறமைமிக்க தொழிலாளி. ஆனால் நாஜி வெறியன் ஹிட்லரின்

படையெடுப்பு அவனை ஒரு போர் வீரனாக்குகிறது. காதல் வாழ்வின் முதற்படியிலே காலை வைத்த அந்த இளைஞன் தன் காதலி நடாஷாவுடன் இன்பகரமாக வாழ இயலவில்லை. நடாஷா நாஜி கெஸ்டபோக்களின் கையில் சிக்குகிறாள். ஐவனோவ் போர்முனை செல்கிறான். மூர்க்கத்தனமான நாஜியரை எதிர்த்துத் தாக்கிப் பின்வாங்கச் செய்கின்றனர். சோவியத் வீரர்கள் முன்னேறி வரும் சோவியத் செஞ்சேனை ஐவனோவின் சொந்த ஊரை மீட்கிறது. அந்தப் படையிலிருந்த ஐவனோவ் தான் ஆடிப்பாடித் தவழ்ந்து திரிந்த தனது பிறந்த வீட்டை வெறும் குட்டிச்சுவராகத்தான் காண்கிறான். கிழிந்து தும்பு தும்பாய்ப்போன தன் தாயின் துணிமணிகளின் மிச்ச சொச்சங்களை அந்த இடிபாடுகளுக்கிடையே கண்டு மனம் வெதுப்பி விக்கி விக்கி அழுகிறான். அவனுக்குத் தெரிந்த உள்ளூர் நண்பர்கள் ஐவனோவைத் தங்கள் வீட்டுக்கு வருமாறு அழைக்கிறார்கள்; நடாஷாவுக்கு நேர்ந்த கதியையும் சொல்கிறார்கள். ஆனால் ஐவனோவோ அதைக் கேட்டு ஒப்பாரி வைக்கவில்லை; நாஜியரின் மீது அவனுக்குள்ள ஆத்திரம்தான் அதிகரிக்கிறது "நான் உங்களோடு தங்க மாட்டேன் நான் இன்னும் முன்னேறிச் செல்லவேண்டும்!" என்று உறுதியோடு தன் நண்பர்களிடம் சொல்லி விட்டு படையினரோடு சேர்ந்து கொள்கிறான்..."

சங்கரின் மனத்தில் ஐவனோவின் அந்த உறுதி கணீரென ஒலித்துக் கொண்டிருந்தது. காதலி சிறைப் படுத்தப்பட்டாள் என்று கேட்ட போதும் ஐவனோவ் சித்தம் கலங்கவில்லை; காதலையும்விட, பெரிதான கடமைதான் அவன் மனத்தில் மேலோங்கி நின்றது...

"ஆமாம். மனிதனுக்குக் காதல் ஒன்றுதானா வாழ்க்கை? காதல் வாழ்க்கையின் ஒரு அம்சம். அதற்குப் பங்கம்நேர்ந்தால்வாழ்க்கையேஅத்தோடுமுடிந்துவிட்டது என்று அர்த்தமா? மனிதனுக்கு வாழ்க்கை தான் லட்சியம்..."

காதலைப் பற்றிய இந்த எண்ணம் தோன்றிய வுடனேயே சங்கருக்குக் கமலாவின் ஞாபகம் வந்தது.

மணி காணாமல் போனதிலிருந்து கமலாவிடம் உற்சாகமும் உவகையும் குடியோடிப் போய்விட்டன. தனிமையிலும், சமயங்களில் தன் தாயின் முன்னிலையிலும், சங்கரின் முன்னிலையிலும் அவள் ஆற்றாமை தாங்க மாட்டாமல் கண்ணீர் பெருக்கி விடுவாள்; படிப்பிலும் அவள் மனம் ஈடுபடவில்லை. எந்நேரம் பார்த்தாலும் பித்துப் பிடித்தவள் மாதிரி அவள் தோற்றமளித்தாள். "மணியை எப்படியாவது தேடிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று சங்கர் அடிக்கடி கூறும் ஆதரவு மொழி. ஒன்றே, அவள் உயிரை தாங்கிப் பிடித்துக்கொண்டிருப்பது போலிருந்தது-

கமலாவைப்பற்றிநினைத்ததும், சங்கருக்கு அவள் மீது பரிதாபவுணர்ச்சி பிறந்தது. அவள் நாளுக்கு நாள் ஒளியிழந்து களையிழந்து மெலிந்து வருவதை எண்ணி அவன் பெருமூச்சுவிட்டான். அவளுக்காகவேனும் மணியை எப்படியாவது விரைவில் தேடிப் பிடிக்கவேண்டும் என்று அவன் உள்ளம் எண்ணியது. ஆனால், அதே சமயத்தில் அவன் மனத்தில் அந்த சோவியத் வீரன் ஐவனோவின் லட்சியமும் கமலாவின் நிலைமையும் மாறித் தோற்ற மளித்தன.

'கமலாவுக்கு மணியின் காதல் ஒன்றுதான் பிர தானமா? அவள் இவ்வளவு தூரம் உணர்ச்சி வசப் பட்டிருப்பாள் என்று நான் எண்ணவேயில்லையே. அவளை நான் ஒருலட்சிய வேட்கை கொண்ட பெண்ணாக ஆக்க வேண்டும் என்றல்லவா திட்டமிட்டேன்! என் ஆசையையெல்லாம் அவள் பாழாக்கி விடுவாளா? அவள் என்ன இவ்வளவு உறுதியற்றவளாக இருக்கிறாள்!...

'காதல்தானா பெரிது? அதுவா மனித லட்சியம்? அப்படியானால், காதல் கைகூடி விட்ட பிறகு, வாழ்க்கை லட்சிய சூன்யமாகவா போய் விடும்? வாழ்வின் கடைசி

மூச்சு விடைபெறும் வரை, நல்வாழ்வு வாழத் துடிப்பதும், அதற்காகப் போராடுவதும் தான் சிறந்த லட்சியம்; மனித லட்சியம்!–'

சங்கரின் மனத்தில் மீண்டும் அந்தப் படக்காட்சி திரை விரித்தது–

சோவியத் சேனை பெர்லின் நகருக்குள்ளே பிரவேசித்து விட்டது. ரீச்ஸ்டாக் மாளிகையிலே சோவியத் செங்கொடியைப் பறக்க விடுவதற்காக, மூன்று போர் வீரர்கள் முன்னேறிச் செல்கிறார்கள். இடிபாடுகளுக் கிடையே, செங்கொடியைப் புனித உணர்வோடும் புளகாங்கிதத்தோடும் சுமந்து கொண்டு முன்னேறு கிறார்கள். கண்மூடித்தனமாகப் பாய்ந்து வரும் துப்பாக்கிக் குண்டுகளையும், நாஜிகளின் அந்திமதசைத் தாக்குதலையும் சமாளித்து மாளிகைப் படிகளில் ஏறுகிறார்கள். திடீரென்று ஒரு துப்பாக்கிக் குண்டு, அந்த வீரர்களில் ஒருவனைக் கீழே சாய்த்து விட்டது; எனினும் செங்கொடி சாயவில்லை. மரணத் தறுவாயிலுள்ள அந்த செஞ்சேனை வீரன் ரத்தம் தோய்ந்து கசியும் தனது கைக்குட்டையை எடுத்து, தன் தோழனிடம் கொடுத்து, 'இதோ இந்தக் கொடியையும் ஏற்றுங்கள்' என்று கூறியவாறே உயிர் துறக்கிறான். ரீச்ஸ்டாக்கில் பட்டொளி வீசிப் பறக்கும் செங்கொடியின் நிழலிலே, அந்த வீரன் கொடுத்த ரத்தப் பதாகையும் பறக்கிறது!–

சங்கர் அந்த சோவியத் வீரனின் தியாகத்தை நினைத்து நினைத்து வியந்தான்.

'ஆம். அவன் கடைசி மூச்சு வரை தன் நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காகப் போராடினான். அதுதான் அவன் லட்சியம்! யுத்தம் ஒழிந்து, சமாதானம் நிலவி, மீண்டும் புதுவாழ்வு மலரப்போகும் சந்தர்ப்பம் கையெட்டும் தூரத்தில் வந்து விட்டது என்று தெரிந்த அந்த நிமிஷத்திலும், அவன் மகிழ்ச்சியோடு உயிர் விடுகிறான்! அது அல்லவா வீரம்?'

சங்கரின் மனத்தில் அந்த வீரனின் தணியாத தேச பக்தியும் வீரமும் அழியாத இடம் பெற்றன.

'அந்த வீரனைப்போல், நானும் வாழ்ந்தால்? அதைவிட மனிதனுக்கு வேறென்ன லட்சியம் வேண்டும்?' சங்கரின் மனம் அந்த வீரனைத் தன் லட்சிய புருஷனாக ஸ்வீகரித்தது. ஆனால் அதே நேரத்தில், அவன் மனம் காணாமற் போன மணியைப் பற்றியும் சிந்தித்தது:

'சே! மணி என்ன இப்படி ஓடிப்போய் விட்டான்! எதிர்பாராது நேர்ந்த துர்ச்சம்பவங்கள்தாம். எனினும் இப்படியா மனம் ஒடிந்து போவது? தந்தையும் தம்பியும் இறந்து விட்டால் என்ன? தாய் இருக்கிறாளே! தாயைத் தவிக்க விட்டு விட்டா ஓடுவான்? தூ! கோழை!'

சங்கரின் மனத்தில் அந்த எண்ணத்தால், மணியின் மீது திடீரென்று அருவையும் அருவருப்புணர்ச்சியும் மேலோங்கின.எனினும்மறுகணமே அவன் எல்லோருக்கும் தைரியம் லகுவில் வந்துவிடுமா?' என்று எண்ணியவனாக, மணியின் நிலைமைக்காகப் பரிதாப உணர்ச்சியும் கொண்டான்.

மணியையும் அவன் தாயையும் பற்றிச் சிந்தித்தவாறே வந்த சங்கரை, அவன் கால்கள் அவனையுமறியாமல் இருளப்பக் கோனாரின் குடிசைக்கு இழுத்துச் சென்றன. இருளப்பகோனாரின் குடிசை இருள் மண்டிக் கிடந்தது. மாடக் குழியிலிருந்த தகர விளக்கு மின்மினிப் பூச்சிபோல் ஒளி சிந்தித் தவித்துக் கொண்டிருந்தது; இருட்டில் குடிசை மூலையில் கிடக்கும் ஆட்டுரலில் மாரி பருத்திவிதை ஆட்டும் சத்தம் இருளின் அமைதியிலே கடலலைபோல் கும்மென்று ஒலித்தது.

குடிசையின் வெளியே நின்றவாறே சங்கர் குரல் கொடுத்தான்.

"கோனார்!கோனார்!"

ஆட்டுரல் ஆட்டும்சப்தம்நின்றது.

"யார் து?"

"நான் தான் சங்கர்."

"சங்கரையாவா?வாங்கய்யா,கட்டில்லெஉட்காருங்க' என் று கூறியவாறே மாரி எழுந்து வந்து சுவரோடு சாத்தி வைத்திருந்த கட்டிலை எடுத்துப் போட்டாள்.

சங்கர் கட்டிலில் உட்கார்ந்தவாறே, "கோனார் வீட்டிலே இல்லையா?" என் று கேட்டான்.

"அவஹ சந்தைக்குப் போனாக.நேரமும் ஆச்சி.இப்ப வந்திடுவாக" என் று சொன்னாள் மாரி.

இதற்குள் குடிசைக்குள்ளிருந்து ஒருவெள்ளிய உருவம் வெளிவந்தது.

"சங்கரா?வாப்பா வா.உன்னை என்ன ரெண்டு நாளா இந்தப்பக்கம்காணம்?"என் று கேட்டுக்கொண்டே அருகில் வந்தாள் தங்கம்.

"திருநெல்வேலிக்குப் போயிருந்தேன், அத்தை. அது தான் வரலே."

"ஏதாவது தகவல்கிடைச்சிதா?"

சங்கர் பேசாதிருந்தான்; தங்கம் அந்த மௌனத்தைப் புரிந்து கொண்டவளாக ஆழ்ந்த நெடுமூச்செறிந்தாள்.

தங்கம் சென் ற இரண்டு மாத காலத்துக்குள் மிகவும் உருமாறிப் போயிருந்தாள். தளதள வென்றிருந்த அவள் உடல் மினுமினுப்பு இழந்து, வாடிக் கறுத்து, வதங்கிப் போய்விட்டது; முகமும் உடம்பும் வற்றி மெலிந்து விகார மாயிருந்தன; அத்துடன் அவள் உடுத்தியிருந்த வெள்ளைச் சேலையும்,சிக்குப்பிடித்ததலைமயிரும்,தாலிச்சரடுஇழந்த அமங்கலக் கழுத்தும் அந்த விகாரத் தன்மையை மிகைப் படுத்திக் காட்டின. அவள் சொல்லில் உயிரும் உணர்வும் அற்று, குரல் கரகரத்து உடைந்து போயிருந்தது.

குடும்பத்தில்எதிர்பாராது நேர்ந்த சோக நிகழ்ச்சிகள் அவளைப்பெரிதும்பாதித்துவிட்டன.திடீரென்றுஒற்றைத் தனிமரமான அவள் வாழ்வில், மணி ஓடிப்போன சம்பவம், கணவனின் மரணத்தையும் ஆறுமுகத்தின் மரணத்தையும் விட, அதிகப்படியான வருத்தத்தையும் கவலையையும் தருவதாக அமைந்து விட்டது. 'அவன் ஒருத்தன்தான் ஆறுதல் என்றிருந்தேன். அவனும் இந்தக் காரியம் செஞ்சுப்புட்டானே!' என்று அவள் அங்கலாய்க்காத நாள் கிடையாது. மணி உயிரோடாவது இருக்கிறானா, இல்லையா என்று அறிய முடியாது, அவள் மனம் தினம் தினம் என்னென்னவோ எண்ணிக் குமைந்தது.

மணி காணாமற் போன ஒரு வார காலத்துக் குள்ளேயே, கைலாச முதலியார் தம் குடும்பத்திற்கு விட்டுச் சென்றிருந்த கடன்களையும் வில்லங்கங்களையும் கவனிக்க வேண்டிய பொறுப்பு தங்கத்தின்மீது சார்ந்து விட்டது. மிஞ்சியிருந்த ஜவுளிகளையும், நகை நட்டுகளையும் விற்று, கடன்காரர்களுக்கு ஒன்றும் அரையுமாகக் கொடுத்துத் தீர்த்தாள். வீட்டை மட்டுமேனும் கை நழுவ விடாது காப்பாற்ற வேண்டும் என்றுதான் அவள் கவலைப் பட்டாள். எனினும் மைனர் முதலியாரோ தமது வஞ்சத் தைக் கைலாச முதலியாரோடு நிறுத்திக் கொள்ளவில்லை. மேலும் ஓடிப்போன மணி திரும்ப வந்து விட்டால், வீடு பிதிரார்ஜித சொத்தானதால் நிலைமை எப்படியெப் படியோ என்று எண்ணியவராக, அவரும் தமது பாக்கிக்காகக் கிட்டி போட்டு நெருக்காத குறையாய், தங்கம்மாளை விரட்டி வந்தார். எனவே தங்கத்துக்கு வீட்டை அவரிடம் விட்டுவிட்டு வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை வீட்டை விட்டு வெளியேறிய அன்று, இருளப்ப கோனாரும் மாரியும் அவளருகில் இல்லாது போயிருந்தால், அவளும் தன் கதையை எங்காவது ஆற்றிலோ, குளத்திலோ முடித் திருப்பாள். இருளப்பக் கோனார்தான் தங்கத்தை அழாக்குறையாகவேண்டி, தமது குடிசையில்வந்து தங்கச்சொன்னார்.

"நடந்தது நடந்துபோச்சி, அதை யெண்ணி ஆவுறது என்ன? இப்போ நாங்களும் எங்க் புள்ளையை உசிரோட தூக்கி விட்டுட்டுத்தான் இருக்கோம். என்னமோ எல்லாம் அவுங்கவுங்க தலைவிதிபோலத்தானே நடக்கும்? கடவுளுக்கு இன்னிக்கி இல்லாட்டி என்னிக்காவது கண்ணு திறக்காமலா போகும்? இந்த உடம்பிலே உசிரு உள்ளவரை உங்களை என் தாய்போல வச்சிக் காப்பாத்துறது என் பொறுப்பு உங்க வீட்டு உப்பைத் தின்னதுக்கு, நான் இதுகூடச் செய்ய வேண்டாமா? என் குடிசை உங்க குடிசைதானே. வித்தியாசமா நினைக்கிறதுக்கு என்ன இருக்கு?" என்றெல்லாம் இருளப்பக் கோனார் பன்னிப் பன்னி எடுத்துரைத்ததைக் கேட்டுத் தங்கமும் அவரது குடிசையிலேயே வந்து தங்கி, பகலில் வெளியே தலை காட்டாத ஆந்தை மாதிரி கூனிக் குறுகி வாழ்ந்து வந்தாள்.

சங்கருக்கும் தங்கத்துக்கும் இடையே நிலவிய அமைதி வெகு நேரம் நீடிக்கவில்லை.

"யாரது? சின்ன ஐயாவா?" என்று கேட்டுக்கொண்டே இருளப்பக்கோனார் வந்து சேர்ந்தார்; இருளப்பக்கோனார் வந்ததும், தங்கம் தன் சேலை முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

கோனார் வாங்கி வந்த சாமானை மாரியிடம் கொடுத்து விட்டு, சங்கரின் அருகில் வந்து உட்கார்ந்தார்.

"என்ன தம்பி, தகவல் ஏதுவும் தெரியுமா?"

சங்கர் உள்ளடங்கிய குரலில் பதிலளித்தான்: "இல்லை!"

கோனார் பெருமூச்செறிந்தார். சங்கர் மீண்டும் பேசினான்.

"நானும் எழுதாத இடம் இல்லை; விசாரிக்காத ஆள் இல்லை பத்திரிகையில் கூட விளம்பரம் பண்ணியாச்சு. கமலாவோ நாளுக்கு நாள் குறுகிக் குன்னிக்கிட்டு வர்ரா..."

"என்ன தம்பி, ஒரு கடுதாசி கூடவா போடப் பிடாது? அதை நினைச்சாத்தான் தப்புத் தண்டாவா எதுவும் நடந்திட்டுதோன்னு பயமாயிருக்கு!" என்றார் கோனார். அவர் குரல் உள்வாங்கிக் கம்மி ஒலித்தது.

"அப்படியெல்லாம் ஒண்ணும் நினைக்காதிங்க.அவன் மனம் என்னமாப் புண்பட்டிருக்கோ? மனசு சரிப்பட்டா, தானே வந்து சேருவான்" என்று ஆறுதல் கூறினான் சங்கர்.

"எம் புள்ளெயைப் பறி கொடுத்திட்டு, இத்தனை வருசமா நான் பட்ட பாடு போதாதுன்னு, கடவுள் இப்போ மணி ஐயாவையும் பிடுங்கிட்டுப் போயிட்டாரு. தம்பி, எம் மனசே சரியில்லை; இந்த மாசக் கடைசிக்குள்ளே ஒரு தகவலும் கிடைக்கலேன்னா, நானே ஊர் ஊரா நாய் மாதிரி திரிஞ்சாவது, மணி ஐயாவைத் தேடிப் பிடிக்கிறதுன்னு இருக்கேன். இங்கே அவுக அம்மா படுகிற பாடு பார்க்க முடியலெ" என்று நொந்துபோன உள்ளத்தோடு குமைந்து பேசினார் கோனார்.

சங்கர் அவருக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியாமல் மௌனமாயிருந்தான்.

இதற்குள் குடிசைக்குள்ளிருந்து, "ஏ, எம் பிறவி ராசையா!.." என்று ஓலமிட்டு ஒப்பாரி வைத்து அழும் தங்கத்தின் அழுகுரல் இருளின் அமைதியைக் கிழித்துக் கொண்டு மேலோங்கியது.

தங்கத்தின் அழுகுரலைக் கேட்டதும், சங்கருக்கு அவனையும் மீறி, கண்ணில் நீர் முட்டிக் கொண்டு வந்தது. அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், முகத்தைத் துடைக்கும் பாவனையாய், கைக் குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டான். ஆனால் உலக அனுபவம் மிகுந்த இருளப்பக் கோனார் அந்த இருளிலும் சங்கரின் நிலைமையைப் புரிந்து கொண்டார். எனவே திடீரென்று பேச்சை மாற்றினார்.

"தம்பி, ஒண்ணு சொல்ல மறந்து போச்சே! வர்ர வழியிலே அம்மன் கோயில் மண்டபத்துப் பக்கம் வடிவேலு முதலியார்வாளைச் சந்திச்சேன். அவுக உங்களை எதிர் பார்த்துக் காத்துக்கிட்டு நிக்காக. நீங்க போங்க."

சங்கரும் அதை ஏற்றுக் கொண்டவனாக இடத்தை விட்டு எழுந்திருந்தான்.

"நான் வாரேன், பெரியவரே"

"சரி தம்பி."

இருளப்பக் கோனார் சொன்னபடியே வடிவேலு முதலியார் அம்மன் கோயில் மண்டபத்தில்தான் இருந்தார்; அவரைச் சுற்றிலும் வேறு பல நெசவாளிகளும் கூடி யிருந்தனர்.

கைலாச முதலியாரின் மரணத்துக்குப் பின்னர், அம்மன் கோயில் மண்டபம் அதற்கு முன் இல்லாத கலகலப்போடு விளங்கியது. மாலை நேரங்களில் அங்கு குறைந்த பட்சம் இருபது நெசவாளிகளாவது ஒன்று கூடி விடுவார்கள். அவர்கள் அனைவரும் வடிவேலு முதலியாரின் தலைமையில் உலக விவகாரங்களையும் கைத்தறித் தொழில் நெருக்கடியைப் பற்றியும் தத்தம் அபிப்பிராயங்களைப் பரிமாறி விவாதித்தார்கள். சங்கரி டமிருந்து அவ்வப்போது தாம் வாங்கி வரும் சில அரசியல் பத்திரிகைகளை, வடிவேலு முதலியார் அந்த நெசவாளி களுக்கு வாசித்துக் காட்டுவார். அந்தப் பத்திரிகைகளில் தொழிலாளிகள், விவசாயிகள், நெசவாளிகள் முதலிய மக்களின் போராட்டங்களையும், இயக்கங்களையும் பற்றிய செய்திகள் வெளிவந்தன. கூலி வெட்டு, ஆள் குறைப்பு, கதவடைப்பு முதலியவற்றை எதிர்த்துப் பற்பல தொழி லாளர்கள் நடத்தும் போராட்டங்கள், வரிவஜா கோரி, கஞ்சித் தொட்டி கேட்டு, பஞ்சப் பிரதேசத்திலுள்ள விவசாயக் குடிபடைகள் நடத்தும் இயக்கங்கள்,

ஊர்வலங்கள்-இப்படிஎத்தனையெத்தனையோசெய்திகள் பற்றியவிவரங்கள் அந்தப் பத்திரிகைகளில்காணப்பட்டன. வடிவேலு முதலியார் அந்தப் போராட்டங்களைப் பற்றிய செய்திகளைத் தொண்டையைக் கனைத்து உற்சாக மூட்டியவராக,சாங்கோபாங்கமாகவாசித்துக்காட்டுவார் அத்துடன் சங்கம் வைப்பதால் உண்டாகும் நன்மைகளை எடுத்துச்சொல்லிஅந்தநெசவாளிகளுக்குத்தன்னம்பிக்கை ஊட்டுவார்.

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்ற உண்மையை அந்த நெசவாளிகள் சில தினங்களுக்கு முன்னர் நிதர்சனமாகக் கண்டுணர்ந்திருந்தார்கள். சென்ற மாத இறுதியில் உள்ளூர் ஜவுளி வியாபாரிகள் நெசவாளி களுக்குக் கிடைத்து வந்த பாவுக் கூலியைக் குறைக்க முயன்றார்கள்; குறைந்த கூலிக்கு வேலை செய்யச் சம்மதிக்காவிட்டால், நூல் தரமாட்டோம் என்றும் சிலர் பயமுறுத்தினார்கள். ஏற்கெனவே அந்த நெசவாளிகளுக்கு பாவுக்குப் பதினைந்து ரூபாய்க்கூடக் கூலி கிடைக்கவில்லை. எனவே அந்தப் பஞ்சக் கூலிக்கும் வினை பிடித்து விட்டது. என்றறிந்தவுடன் நெசவாளிகள் பதைபதைத்தார்கள். வடிவேலு முதலியாரோ அவர்கள் அனைவருக்கும் தன்னம்பிக்கை ஊட்டி, கூலிக் குறைப்பை எப்படியாவது தடுத்து நிறுத்துவதென்று தீர்மானித்தார். அதன்பின் அவர் சங்கரிடம் கலந்தாலோசித்துக்கொண்டு, தமது தலைமையில் சுமார் முப்பது தொழிலாளரை ஒன்று திரட்டி ஊர்வலமாகச் சென்று, அம்பாசமுத்திரம் தாசில்தாரைச் சந்தித்தார்; நெசவாளிகள் தத்தம் கஷ்ட நஷ்டங்களைத் தாசில்தாரிடம் எடுத்துச் சொன்னார்கள். அதன்பின் தாசில்தாரின் தலையீட்டின் பேரில், அவர்களுக்குக் கிடைத்து வந்த பஞ்சக் கூலி தப்பிப் பிழைத்தது.இந்தச் சம்பவம் நெசவாளிகள் பலருக்கும் சங்க உணர்வையும் தன்னம்பிக்கையையும் ஊட்டியது; வடிவேலு முதலியாரும் முன்னை விட உற்சாகத்தோடு வேலை செய்தார்.

வடிவேலு முதலியாரின் உற்சாகத்துக்கு இது மட்டும் காரணம் அல்ல.

சென்ற மாதம் சங்கர் அவரை ராமநாதபுரம் ஜில்லாவில் நடந்த விவசாயிகள் மகாநாட்டுக்கு அழைத்துச் சென்றிருந்தான். அந்த மகாநாட்டில் வடிவேலு முதலியார் கண்ட காட்சிகள் அவர் மனத்தில் பசுமையோடும் புதுமையோடும் பதிந்து விட்டன. தம்மைப் போன்றவர்கள் தொட்டுப்பழகவே கூசும் இனத்தவரான அந்த விவசாயிகள், 'சின்னச் சாதிச்சன'ங்களான அந்த ஹரிஜனங்கள், தங்கள் சங்கத்தின் மீதும் தலைவர்கள் மீதும் எவ்வளவு நம்பிக்கையும் விசுவாசமும் கொண்டிருக்கிறார்கள் என்பதையும், எவ்வளவு ஒற்றுமையோடு, தியாக புத்தியோடு வீரத்தோடு விளங்குகிறார்கள் என்பதையும் அவர் நேரில் கண்டுணர்ந்தார்.

மேலும், அந்த ஹரிஜனங்களோடு, மேல்ஜாதி விவசாயிகளும் தோளோடு தோள் நின்று ஒத்துழைப்பதைக் கண்டு அவர் வியப்படைந்தார். அடக்குமுறைக் காலத்தில் தன்னை அலங்கோலமாக்கி அவமானப்படுத்திய போதும் தலைமறைவாக இருந்த தங்கள் தலைவனைக் காட்டிக் கொடுக்காத வீராங்கனையை அவர் அங்கு கண்டார் அதுபோல், துப்பாக்கிக் குண்டுக்குத் தனது ஒரே மகனை இரை கொடுத்தும், உறுதி குலையாது சபதமேற்று நிற்கும் ஒரு கிழத்தாயை, அணு அணுவாகச் சித்திரவதைக்கு ஆளாகி, காலே ஊனமாகி முடமானபோதும், கொள்கைப் பிடிப்பில் நொண்டியடிக்காத ஒரு வீரமகனை அவர் கண்டார். கதைகளில் கேள்விப்பட்ட வீரர்களையெல்லாம் கண்ணால் காண்பது போலிருந்தது அவருக்கு.

அந்த விவசாயிகளின் உறுதியும் ஊக்கமும் வடிவேலு முதலியாரின் மனத்துக்குத் தெம்பளித்தன. மேலும், அந்த விவசாயிகள் கைத்தறி நெசவாளர்களின் குறைகளை நீக்குவதற்காகப் பல்வேறு தீர்மானங்களை நிறைவேற்றியதைக்

கண்டு, அவர் உள்ளம் புளகித்தது; அவரையும் அறியாமல் அவர் உள்ளம் அந்த விவசாயிகளோடு சகோதரத்துவம் கொண்டாடியது. 'இப்படிப்பட்ட வீரர்களின் ஆணையை எந்தச் சர்க்கார்தான் புறக்கணிக்க முடியும்?' என்ற ஒரு தைரியமும் அவருக்கு ஏற்பட்டது.

மகாநாட்டிலிருந்து திரும்பிஊர் வந்ததிலிருந்து அவர் மேலும் உற்சாகமும் ஊக்கமும் பெற்றவராக விளங்கினார். அந்தவிவசாயிகள்மகாநாட்டைப்போல்ஒருநெசவாளிகள் மகாநாட்டைக்கூட்ட வேண்டுமென்றும் அல்லது குறைந்த பட்சம் ஒரு பெரிய அரசியல் தலைவரையேனும் வரவழைத்துப் பிரசங்கம் செய்ய வைக்க வேண்டுமென்றும் அவர்நேரம்கிடைத்தவேளையெல்லாம்சங்கரை நச்சரித்து வந்தார். நெசவாளிகளிடம் பேசும்போதெல்லாம், "நான் போயிருந்தேனே, அந்த மகாநாட்டிலே.." என்று நித்தம் ஒரு முறையேனும் சொல்ல அவர் மறக்கமாட்டார்...

அன்று மாலை அவர்கள் முந்திய நாள் இரவில் அம்பாசமுத்திரத்தில் பிரசங்கம் செய்த ஒரு 'தேசபக்த' ரின் பேச்சைப் பற்றித் தங்கள் அபிப்பிராயத்தைப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள்.

"அவரு பேச்சைக் கொண்டு உடைப்பிலே போடுங்க. என்னமோ நாட்டிலே பாலும் தேனும் வெள்ளமா ஓடுற மாதிரிதான் பேசுதாங்க. இவங்க இல்லேன்னா, இந்த நாடே குட்டிச்சுவராப் போயிடும் போலேதான்! இப்ப மட்டும் என்ன வாழுதாம்? நம்மையெல்லாம் பைத்தியக்காரப் பயல்கன்னு நினைச்சிக்கிட்டாங்களா?" என்று ஆத்திரப் பட்டுக் குமைந்தது ஒரு குரல்.

"பின்னே என்ன, மாப்பிளே! தெய்வ பக்தி குறைஞ்சதினாலேதான் ஊரிலே பஞ்சம் அப்படிங்கிறானே. நமக்கெல்லாம் தெய்வ பக்தி குறைஞ்சா போச்சி? இவங்க தான் தெய்வத்துக்குக்கூட அஞ்சாமல், பொய்யும் புளுகும் அள்ளி விடுதாங்க. தெய்வம் நின்னு கேக்கும்; கேக்காமப் போவாது!" என்று பேசினார் ஒரு முதியவர்.

"தெய்வம்கேக்குதோ, இல்லியோ? நாமதான் முதல்லெ கேக்கணும். நான் போயிருந்தேனே, அந்த விவசாயிகள் மகாநாட்டிலே." என்று குறுக்கிட்டு ஏதோ சொல்ல முனைந்தார் வடிவேலு முதலியார்.

அதற்குள் "என்ன அண்ணாச்சி, என்ன நடக்குது?" என்றுசௌஜன்யத்தோடுகேட்டுக்கொண்டேஅங்குவந்து சேர்ந்தான் சங்கர்.

சங்கர் வந்தவுடன் மண்டபத் திண்ணையிலிருந்த நெசவாளிகள் அவனுக்கு இடம்விட்டு ஒதுங்கி உட்கார்ந் தனர்; சங்கரும் அவர்களோடு சென்று அமர்ந்து கொண்டான்.

"வாப்பா சங்கரா. உன்னைத்தான் தேடிக்கிட்டிருந் தேன். நல்ல சமயத்திலே வந்தே. நேத்து நம்ம பஞ்சாயத்து யூனியன் மைதானத்திலே பொதுக் கூட்டம் நடந்ததே. நீ போனியா?" என்று ஆவலோடு கேட்டார் வடிவேலு முதலியார்.

"நேத்து நான் ஊரிலேயே இல்லையே!" என்றார் சங்கர்.

"கேளு தம்பி. பெரிய தலைவர்னாங்க. பேச்சு என்னமோ சின்னத்தனமாகத்தான் இருந்தது. நடு ரோட்டிலே சண்டை போடுகிறவன் கூட, கொஞ்சம் நாசூக்காகப் பேசுவான் இவரானா." என்று சொல்லில் பாவம் தொனிக்கத் தம் பேச்சுக்கு மேளம் கட்டினார் வடிவேலு முதலியார்.

"சரிஎன்னசொன்னார்?"என்றான் சங்கர்.

"என்ன எழவெல்லாமோ சொன்னார். நெசவாளிகள் கஷ்டத்தைப் போக்குறதுக்கு சர்க்கார் ஆனமட்டும் உதவி செஞ்சிக்கிட்டுத்தான் வருதாம். இன்னம் கொஞ்ச நாள் பெறுத்திருந்தா நிலைமை சீர்ப்பட்டுப் போகுமாம். நம்ம ஊரிலே நெசவாளிகள்ளாம் சின்னப் புள்ளைக பேச்சைக்

கேட்டுக்கிட்டு சங்கம் கிங்கம்னு வச்சிக் கெட்டுப் போகக் கூடாதாம். எல்லாம் நம்ம மைனர்வாள் தூண்டு தல்லெதான், இத்தனையும் பேசியிருக்கார். அப்புறம் கேளு சங்கரா. கஞ்சித் தொட்டி வைக்கணும்னு கேக்கிறதே தப்பாம். உழைத்துச் சாப்பிடும் மானஸ்தர்களைப் பிச்சைக்காரர்களாக்கும் சதி வேலையாம், அது! எப்படி இருக்கு?"

சங்கருக்குநெஞ்சுக்குள்கோபம்குமுறியெழுந்தது.

"பிச்சைக்காரர்களா? பிழைப்புக்கு வேலை கொடுக்கவும் இவர்களுக்கு விதியில்லை; பசித்த மக்களுக்குச் சோறு கொடுக்கவும் துப்பு இல்லை. யார் பிச்சைக்காரர்கள்?" என்று ஆத்திரத்தோடு பேசினான் சங்கர்.

"அதுதான் தம்பி, நாமும் பெரிய தலைவரையெல்லாம் வரவழைச்சி, இவங்களுக்குச் சுடச் சுடப் பதில் கொடுக்கணும், அப்பதான் இவங்க சரியா வருவாங்க!" என்று தமது ஆசையை வெளியிட்டுக் கொண்டார் வடிவேலு முதலியார்.

"பெரியதலைவர்வந்தால்மட்டும்போதுமா?முதலில் உங்கள் ஒற்றுமையைப் பலப்படுத்துங்கள். பிறகு உங்கள் உறுதியும் ஒற்றுமையுமே உங்களுக்குத் தலைமை தாங்கும்" என்றான் சங்கர். நெசவாளிகளோடு சிறிது நேரம் அளவளாவி விட்டு, வீட்டுக்குத் திரும்பினான் சங்கர்; வடிவேலு முதலியார் சங்கரை மங்கள பவனத்தின் கேட் வரையிலும் சென்று வழியனுப்பி விட்டுத் திரும்பினார்.

சங்கர் வீட்டுக்குள் நுழையும்போது மணி பத்தரை ஆகி விட்டது. முன்கட்டிலுள்ள தந்தையின் அறையில் வெளிச்சமில்லாததைக் கண்டு, தந்தை வீட்டிலில்லை என்பதை ஊகித்தறிந்து கொண்டான். உள்ளே சென்றதும், சங்கரின் தாய் அவனைவரவேற்றாள்.

"வாடாப்பா சங்கர்.காலையிலேயே வர்ரவனா நீ?"

"வரமுடியலேம்மா."

"நீ பாட்டுக்கு வெளியே தங்கிட்டேன்னா, உங்க அப்பாவுக்கு என்னாலே பதில் சொல்லிமாளலை.எல்லாம் நீ குடுக்கிற இளக்காரம்தான்னு என்னைக் கோவிச்சிக் கிடுதாங்க" என்று செல்லமாகக் கடிந்து கொண்டாள் தர்மாம்பாள்.

"சரி, அப்பா எங்கே?"

"அப்பாவா? அவுக நேத்தே எஸ்டேட்டுக்குப் போனாக.இன்னம் வரலெ."

சங்கர் தன் தாயின் வெகுளித் தன்மையை எண்ணி, மெல்லச் சிரித்துக் கொண்டான்.

"ஏம்மா? அப்பாதான் வீட்டிலேயே இல்லியே. அப்புறம் அப்பா கோவிச்சிக்கிட்டாகன்னு பொய்தானே சொன்னே?"

தர்மாம்பாளின் முகத்தில் அசடு வழிந்தது; அவள் இன்னது சொல்வதெனத் தெரியாமல் பல்லைக் காட்டினாள்.

"பின்ன என்னடாப்பா? நீ இப்படி ராப்பகலா கண்முழிச்சி, கண்ட இடத்திலே சாப்பிட்டா, உடம்பு என்னத்துக்கு ஆகும்?பெத்தவளுக்குக்கவலைஇருக்காதா?" என்று கூறிச் சமாளித்தாள்.

"சரியம்மா, வா சாப்பிடலாம்" என்று கூறிக் கொண்டே உள்ளே நடந்தான் சங்கர்.

சாப்பிட உட்காரும்போது சங்கர் தாயைப் பார்த்துக் கேட்டான்.

"ஏம்மா, கமலா தூங்கிட்டாளா?"

"இத்தனை நேரமும் உன்னைத்தான் எதிர் பார்த்துக்கிட்டு இருந்தா இப்போதான் ஒரு வாய்ச் சோத்தைத் தின்னுட்டுப் படுத்துத் தூங்கினா நீயும் இருந்தா, அவள் ரெண்டு உருண்டைச் சாதமாவது கூடச்சாப்பிடுவா. இப்போ எனக்கு அவ கவலையே

பெரிசாப் போச்சி. நீயாவது அவளிடம் சொல்லக் கூடாதா?" என்று கூறிக் கொண்டே சாதத்தைப் பரிமாறினாள் தர்மாம்பாள்.

சாப்பிட்டுமுடிந்ததும், சங்கர் மாடிக்குச் சென்று தன் அறையில் விளக்கேற்றிவிட்டு, மேஜைமீது கிடந்த பத்திரிகையை எடுத்துப் படிக்கத் தொடங்கினான்.

அந்தப் பத்திரிகையில் கோவை ஜில்லாவில் நிலவி வரும் பஞ்ச நிலைமை பற்றிய விவரங்கள் வெளியாகியிருந்தன. ஒட்டி உலர்ந்த வயிற்றோடு, பெற்ற குழந்தைகளுக்குப் பால் வாங்கிக் கொடுக்கக்கூட வகையற்றுத் தவிக்கும் ஒரு ஏழைப் பெண்ணின் பரிதாபகரமான சித்திரமும் அதில் வெளியாகியிருந்தது. மக்கள் புளியம் விதையையும், கற்றாழைக் கிழங்கையும் தின்று உயிர் பிழைத்தார்கள்; அதுவும்கூடக்கிடைக்காமல்பலர்பட்டினி கிடந்தார்கள்; கண்ட கண்ட கிழங்குகளையும் பூண்டுகளையும் தின்று அஜீரணம் கண்டு செத்தார்கள்; பெண்களின் கற்புக்கு விலை மலிந்து விட்டது; பிள்ளைகளின் விலை சரசமாயிற்று; பட்டினிச் சாவு அன்றாட நிகழ்ச்சியாகி விட்டது; ஒரு வேளை அன்னம் மட்டும் குதிரைக் கொம்பாய் விட்டது...

சங்கர் அந்தச் செய்திகளைக் கூர்ந்து படிக்க நினைத்தான் எனினும் அவன் மனம் வேறு பல சிந்தனைகளை வலிய இழுத்துக் குவித்தது. அந்தச் சிந்தனைகளிலிருந்து மீள முடியாமல், பத்திரிகையை மூடி வைத்துவிட்டு விளக்கை அணைத்தான்; அப்படியே நாற்காலியில் சாய்ந்து படுத்தவாறு, சிந்தனையைத் தன்னிச்சையாகத் திரிய விட்டான்-

-'மணி அவன் ஒரு கோழை! வாழ்க்கையில் துன்பங்கள் நேரும்போது அதன் காரண காரியத்தை அறிந்து அவற்றை எதிர்த்துப் போராடத்தான் வேண்டும். அதை விட்டுவிட்டு, பயந்தாங்கொள்ளி போல ஓடிவிட்டான்!

எங்கே ஓடினாலும் இந்த உலகத்தை விட்டு ஓடிவிட முடியுமா?

-'ஆனால், வடிவேலு முதலியார்! அவர் எவ்வளவு உற்சாகத்தோடும் உறுதியோடும் இருக்கிறார்! சங்கத்தைப் பலப்படுத்த வேண்டும் என்பதில் அவருக்கு எவ்வளவு ஆர்வம் இருக்கிறது!

-'மணி காணாமல் போனதோடு, தங்கம் அத்தைக்குச் சொத்துச் சுகங்களும் போய்விட்டன. இருளப்பக் கோனார் மட்டும் அருகிலிருந்து ஆறுதல் சொல்லாவிட்டால், அவளும் தன் கணவன் வழியையே பின்பற்றியிருப்பாள்!

-'அவளுக்கு மட்டும்தானா துன்பங்கள்! நாடெங்கிலும் மக்கள் வறுமையாலும் பஞ்சத்தாலும் செத்துக் கொண்டிருக்கிறார்கள்! இந்த மக்களுக்கெல்லாம் என்று தான் விமோசனம் ஏற்படப் போகிறதோ?

-'கமலா, அவளும் நாளுக்கு நாள் மெலிந்து தான் வருகிறாள், மணியின் பிரிவு அவள் உற்சாகத்தையும் உடலையுமே பாதித்து விட்டது.

-'ஆனால் கமலாவுக்கு என்ன கவலை? அவள் என்ன தங்கம் அத்தையைப்போல் சொத்துச் சுகத்தை இழந்து தவிக்கிறாளா? சோற்றுக்கில்லாமல் தவிக்கிறாளா? அவளுக்குள்ள கவலையெல்லாம் தன் காதல் கைகூட வில்லையே என்பது தான்.

-'ஒரு பக்கத்தில் மக்கள் பட்டினியால் செத்துக் கொண்டிருக்கிறார்கள்? வாழவழியின்றித் தற்கொலையைச் சரண் புகுகின்றார்கள்; வடிவேலு முதலியார் போன்ற நெசவாளிகள்கூட, உரிமைக்காகப் போராட முன் வந்து விட்டார்கள்; ஆனால், கமலாவோ இதைப்பற்றியெல்லாம் கவலை கொள்ளாமல் தன் காதலை எண்ணி உருகிக் கொண்டிருக்கிறாள். அதிலும் அவள் காதலைக்கூடப்

பொருட்படுத்தாமல் ஓடிப்போன ஒரு கோழையை எண்ணி உருகிக் கொண்டிருக்கிறாள்! நானும் இதை அனுமதித்துக் கொண்டிருக்கிறேன்.

-'சே! இந்த நிலைமை நீடிக்கக் கூடாது; நீடிக்கவே கூடாது!'

சங்கர் ஏதோ தீர்மானித்து முடிவு கண்டவன் போல் திடீரென்று நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்தான்; மேஜை விளக்கைப் போட்டான்; படுக்கையை விரித்துப் படுத்தான்; தூங்கினான்.

காலையில் கமலா காப்பித் தம்ளரும் கையுமாக வந்து அண்ணனை எழுப்பினாள். சங்கர் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான்; எதிரே கமலா நிற்பதைக் கண்டான்; காப்பித் தம்ளரைக் கையில் வாங்கியவாறே, "என்ன கமலா?" என்று கேட்டான்.

"என்னண்ணா, நீ ராத்திரியே வந்துட்டியாமே" என்றாள் கமலா;

பிறகு அவனுடைய பதிலுக்கே காத்திராமல், "அண்ணா, அத்தானைப் பற்றி ஏதாவது தெரியுமா?" என்று கேட்டாள்.

சங்கருக்கு அந்தக் கேள்வியே நாராசம்போல் ஒலித்தது; தான் முடிவு கட்டி வைத்திருந்ததை அவளிடம் சொல்லியே விடுவது என்று தீர்மானித்தான்.

"கமலா, அப்படி உட்கார். நானும் உன்னிடம் ஒரு விஷயம் சொல்லணும்னுதான் இருக்கேன்" என்று அர்த்த பாவத்தோடு கூறியவாறு காப்பியைக் குடித்து முடித்தான்.

கமலா அங்குகிடந்த நாற்காலியில் அமர்ந்தாள்.

"என்னண்ணா?"

சங்கர் குனிந்த தலை நிமிராமல் பேசினான்:

"கமலா, நான் சொல்றேன்னு நீ வருத்தப்பட்டுக்

கொள்ளக் கூடாது. மணி ஊரைவிட்டு ஓடிப்போய் மாதம் இரண்டாகிறது. என்ன ஆனான், எங்கே போனான் என்று ஒன்றும் தெரியவில்லை. இத்தனை நாள் ஆகியும் ஒரு கடிதம் போட அவனுக்குத் துப்பு இல்லை. இனி அவன் திரும்பி வந்தால்தான் நிச்சயம். அவனை எண்ணியெண்ணி உடம்பையும் மனசையும் கெடுத்துக் கொள்வதில் என்ன பிரயோஜனம்?"

சங்கர் சொல்ல வந்த விஷயத்தின் உட்பொருளை உணர்ந்த கமலாவின் மனம் ஒருகணம் திக்கென்று குதித்துத் துடித்தது.

"என்னண்ணா சொல்கிறாய்?"

"கமலா, மணியை மணந்து கொள்வது மட்டும்தானா உன் வாழ்க்கை லட்சியம்? உன்னைக்கூட எண்ணிப் பார்க்காமல் ஓடிப்போனவனை எண்ணி ஏங்குவதுதானா உன் வாழ்க்கை? நீ அவனை மறந்து விடுவதே நல்லது!"

கமலாவுக்கு மறு கணமே கண்களில் நீர் மோதிக் கரித்தது; எனினும் பல்லை அதுக்கிக் கடித்துக் கொண்டு, பேசினாள்:

"எனக்குத் தைரியம் சொல்லவேண்டிய நீயா-"

"கோழைகளுக்குத் தைரியம் கற்றுக் கொடுத்து வருவதில்லை. நீயும் ஒரு கோழை; அவனும் ஒரு கோழை. அவன் துன்பத்திற்குப் பயந்து ஓடிப் போனான்; நீ ஏமாற்றத்தைத் தாங்கச் சக்தியற்றுத் தைரியமற்று ஏங்குகிறாய்!"

சங்கரின் குரலில் உறுதியும் உள்ளடங்கிப்போன கசப்பும் பிரதிபலித்தன.

கமலாவுக்குத் தன் அண்ணனின் வார்த்தைகள் ஆயிரம் கருந்தேள்கள் கொட்டுவது போலிருந்தன. 'அவன் ஏன் என்மீது ஈவிரக்கமற்றுப் பேசுகிறான்? ஏன் அப்படி?' என்று அவள் மனம் ஒரு கணம் சிந்தித்தது; எனினும் அந்தச்

சிந்தனையை மூழ்கடித்து அவள் உள்ளத்திலே சோகம் பெருக்கெடுத்தது. கண்ணில் முட்டி மோதிய கண்ணீர் அவளையும் அறியாமல் உருண்டு சிதறியது. சங்கரும் அவள் நிலைமையைக் கண்டுணர்ந்தான்.

"கமலா!"

கமலா ஏறிட்டுப்பார்த்தாள்.

"இதோ பார். உன்மீது எனக்கு அனுதாபம் இல்லாமலில்லை. உன் நிலைமையை நித்த நித்தம் கண்டு மனம் புண்பட்டதாலேயே, நான் இப்படிப் பேச நேர்ந்தது. என்னை மன்னித்துக்கொள். ஆனால், அதே சமயம் நீயே யோசித்துப் பார். சிறந்ததொரு லட்சியப் பெண்ணாக வாழவேண்டிய நீ ஒரு கோழையின் காதலை எண்ணி உருக்குலைந்து கொண்டிருப்பதா? வாழ்க்கை என்பது காதலுடனும் கல்யாணத்துடனும் முடிந்து விடுகிறதா? நமக்கென்று வேறு பல கடமைகள் இல்லையா? அவற்றை நாம் நிறைவேற்ற வேண்டாமா?" என்று தன் குரலின் சுருதியையே மாற்றிக் கொண்டு பேசினான் சங்கர்.

கமலா அவனுக்குப் பதில் கூறவில்லை; இன்னது கூறுவது என்றே அவளுக்குத் தெரியவில்லை.

சங்கரே மீண்டும்பேசினான்:

"என் பேச்சு உன் மனத்தை மேலும் புண் படுத்தியிருக்கும். ஆனால், அதில்தான் உன் மன நோய்க் குரிய மருந்தும் இருக்கிறது. இதை நீயே சீக்கிரம் உணர்ந்து கொள்வாய்."

அத்தானைப்பற்றி ஏதாவது தகவல் விசாரிக்கலாம் அல்லது சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டாவது வரலாம்என்று நினைத்துவந்தகமலாவுக்கு, சங்கரின்பேச்சு எதிர்பாராத தாக்குதல்போல இருந்தது அவளுக்கு. இன்ன பதில் கூறுவதென்றே தெரியவில்லை; பொங்கி வந்த

அழுகையைச் சிரமப்பட்டு உள்ளடக்கியவாறே அங்கிருந்து எழுந்து சென்றாள்; அவள் எழுந்திருந்து செல்வதைச் சங்கர் தடுக்க விரும்பவில்லை.

அவள் சென்று மறையும் வரையிலும் அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்; அவள் நிலைக்காக அவன் உள்ளம் இரங்கியது.

"ஆம். எத்தனை நாளைக்குத்தான் கமலா இப்படியே உருக் குலைந்து கொண்டிருப்பது? புரையோடிப்போன புண்ணை மூடிமூடி வைப்பதைவிட, அதைக் கீறியாற்றுவது தான் நல்லது. கீறும்போது வேதனை இருக்கத்தான் செய்யும். அதைப் பொருட்படுத்தலாமா?..."

அந்த விஷயத்தைக் கமலாவிடம் சொல்லிவிட்டதை எண்ணி, அவன் மனம் ஏதோ பாரத்தை இறக்கி வைத்தது போன்ற நிம்மதியையும், நிவர்த்தியுணர்வையும் பெற்றது.

## 21

மதுரை மாநகரில்-

நகரவாழ்க்கையின் நாடித் துடிப்பு ஜன்னிவேகத்தில் படபடக்கும் மாலை வேளை; எங்கும் அவசரம்! பரபரப்பு! ஹோட்டல்களில், பஸ்ஸ்டாண்டில், சினிமாக்கொட்டகைகளில், நடை பாதைகளில், கடை கண்ணிகளில் - எங்கும் மக்கள் சுறுசுறுப்போடு இயங்கிக் கொண்டிருந்தார்கள்; கார்கள், வண்டிகள், சைக்கிள்கள், ரிக்ஷாக்கள் முதலிய வாகனங்கள் பெரும் இரைச்சலை உண்டாக்கிக் கொண்டு மேலும் கீழும் மின்னலைப்போல பாய்ந்து மறைந்து கொண்டிருந்தன.

அவன் எவ்வித அவசரமும் பரபரப்புமற்று டவுன் ஹால் ரோட்டில் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தான்.

புழுதியும் அழுக்கும் படிந்து கறுத்துப்போன முகம்; முகத்தின் செம்பாதியை மூடி மறைத்து, தளிர்த்து வளர்ந்திருக்கும் இளந்தாடி, மீசை; உலைத்தெறிந்த குருவிக் கூடு போல் சிலிர்த்து மதர்த்து நிற்கும் சிக்குப் பிடித்த தலைமயிர்; மஞ்சள் பூத்துப் பாசி பற்றிய பற்கள்; வாடியுலர்ந்து பாளம் கண்டு வெடித்துப் போன உதடுகள்; சவக்களை தட்டியது போல் பஞ்சடைந்து எய்த்துப்போன கண்கள்; கண்ணுக்குள் ஆழம் புலப்படாத ஒரு ஏக்க பாவம்; அறுந்து தொங்கும் அவயவம்போல் கிழிந்து ஊசலாடும் மேல்சட்டை; கரைப்புரத்தில் கால்பட்டு வாய் பிளந்து பிதிர்ந்த வேட்டி - இத்தியாதி கோலத்தோடு அவன் அங்கு நிர்விசாரமாக, போவோர் வருவோர் பற்றிய பிரக்ஞையே யற்று, அர்த்தமற்று வெறித்து நோக்கும் கண்களோடு நின்று கொண்டிருந்தான்.

குடலைப் பிசைந்து கருக்கும் கும்பிக் கொதிப்பின் ஜ்வாலை அவன் முகத்தில் அனல் வீசியது; அந்த ஜ்வாலையின் உஷ்ணவேகம் அவனது உணர்ச்சிகளை, சிந்தனைகளை, நம்பிக்கைகளை எல்லாம் சுட்டுப் பொசுக்கிச் சூரணமாக்கிக் கொண்டிருந்தது. இடை யிடையே உலர்ந்து வாடி மேலண்ணத்தோடு ஒட்டிக் கொள்ளும் நாக்கைச் சப்புக் கொட்டித் தொண்டையை நனைக்க முயன்றான்; எனினும் உமிழ்நீர் வற்றிச் சுவறிய அந்தத் தொண்டையில் பசி நாக்கின் கைப்புத்தான் வழுக்கி இறங்கியது. கண்ணும் காதும் அடைத்தது; இருண்டு வரும் பசி மயக்கம் அவனது புலனுணர்வையும் அறிவையும் கொஞ்சங் கொஞ்சமாக விழுங்குவது போலிருந்தது.

அவன் தன்னைத்தானே மறந்தவனாய் நின்று கொண்டிருந்தான்.

திடீரென்று ரோட்டில் செல்லும் வாகனாதிகளின் இரைச்சலையும், கடை கண்ணிகளின் ஓசைக் குழப்பத் தையும் மிஞ்சி, பொங்கிவரும் அலை முழக்கம் போன்ற

தொரு ஆரவாரம் அந்தச் சூழ்நிலையைச் சிலிர்த்து நடுக்கியது. அந்த ஆரவாரம் அவனது மயக்க நிலையை மோதித் தள்ளி, அவனை உசுப்பி உலுப்பித் தன்னுணர்வு கொள்ளச் செய்தது.

இருண்டு வரும் கண்களைத் திறந்து அவன் ஏறிட்டுப் பார்த்தான்.

எதிரே நுங்கும் நுரையுமாய்ப் பொங்கிப் புடை பெயர்ந்து வரும் காட்டாற்று வெள்ளம்போல், ஒரு பெரும் ஜனத்திரள் அலைமோதி விம்மி ஆரோகணித்து வந்து கொண்டிருந்தது. அந்த மனிதப் பிரவாகத்தின் முன்னணியில் ஒருவன் விண்ணளாவிப் பறந்து படபடக்கும் ஒரு செந்நிறப் பதாகையைக் கம்பீரமாக ஏந்திப் பிடித்து ராஜ நடை போட்டு வந்தான்; அவனுக்குப் பின் அலைமேல் அலைதிரண்டுவருவதுபோல்மக்கள் அணியணியாய்வந்து கொண்டிருந்தார்கள்.

"ஊர்வலமா?"

விழிப்புற்று எழுந்த அவன் மனம் எண்ணியது.

அந்த ஊர்வலத்திலிருந்து சப்த சாகரங்களும் ஏகோபித்துப் புடைத்தெழுந்து ஆரவாரிப்பதுபோல், பல கோஷங்கள் விண்முட்டி அளாவி முழங்கின; அந்த ஆரவாரம் வீதியின் இருமருங்கிலுள்ள கடைகண்ணிகளில், கட்டிடங்களில் மோதித் திரும்பி எதிரொலித்தது; அங்கு நின்ற மனிதர்களின் செவித் தொளையில் மோதி அவர்களைச் சிலிர்க்கச் செய்தது. அந்த மனிதர்களின் இதயக் குகைகளில் முட்டி மோதி எதிரொலித்தது.

"நூல் விலையைக் குறை!"

"அன்னியத் துணி இறக்குமதியை அனுமதிக்காதே!"

"ஜவுளிக்கொள்கையை மாற்று!"

"தேங்கியுள்ள சரக்கைக்கொள்முதல்செய்!"

"நெசவாளரைப்பட்டினிபோடாதே!"

"வேலைகொடு,அல்லதுசோறுகொடு!"

மீண்டும் மீண்டும் அந்தக் கோஷங்கள் கும்மென்று எதிரொலித்து விம்பிப் பரந்தன; அவன் அந்த ஊர்வலத்தை ஆர்வத்தோடு பார்த்தான்; அவனது முகத்தில் தோன்றிய பசியின் ஜ்வாலை உள்ளடங்கிக் கும்பிக்கூட்டுக்குள் அடைபட்டுப் போனது போலிருந்தது. புழுதியும் புகையும் மண்டிய முகத்தில் திடீரென்று ஒரு புத்தொளியின் ரேகை படருவது போல் இருந்தது.

"வேலைகொடுஅல்லதுசோறுகொடு!"

அந்தக் கோஷம் அவனது இதயத்திலே மோதி, வீணைத் தந்தியின் கமக நாதத்தைப்போல் ரீங்காரிக்கத் தொடங்கியது.

ஊர்வலம்நெருங்கிவந்துவிட்டது.

செந்நிறப் பதாகையைச் சுமந்து வந்த மனிதன் அவனைக்கடந்துஅப்பால்சென்றுவிட்டான்;அவனுக்குப் பின்னால் பற்பல வாக்கியங்களைப் பொறித்த போர்டு களையும்அட்டைகளையும்சுமந்துகொண்டுசாரிசாரியாக மனிதர்கள் வந்தார்கள்; மதுரை நகர் நெசவாளர் சங்கம்' என்று விலாசமிட்ட சிவப்புக்கொடி அந்த ஊர்வலத் தினரின் தலைக்குமீது பட்டொளி வீசிப் பறந்தது. குடிலிலிருந்துகலைக்கப்பட்டஎறும்புச்சாரைபோல்அந்த ஊர்வலம் முடிவே காணாமல் மேலும் மேலும் வந்து கொண்டிருந்தது. ஊர்வலத்தின் பிரவாக கதியை அணை கடந்து விடாதவாறு தடுத்து அணைப்பதுபோல், ஊர் வலத்தின்இருமருங்கிலும்பலஇளைஞர்கள்சைக்கிள்களில் அணி வகுத்து வந்தனர். அவர்கள் மீண்டும் மீண்டும் கோஷங்களிட்டார்கள்; அந்தக் கோஷ முழக்கம் ஊர் வலத்தின் அடி முதல் நுனி வரையில் உத்வேகமும் உணர்ச்சியும் நிறைந்த மின்சார வேகத்தோடு பரவிச் சிலிர்த்து ஏகோபித்து விம்மியது.

"வேலைகொடு அல்லது சோறு கொடு!"

மீண்டும் அந்த கோஷம் அவனைக் குலுக்கி உலுக்கியது; அவன் தன் பசி வேதனையையே மறந்து விட்டான். அந்தக் கோஷம் அவனது தொய்ந்து தொளதொளத்துக் கிடந்த நரம்புகளுக்குப் பசை தீட்டி முறுக்கேற்றுவது போலிருந்தது. தாது விழுந்து படுத்துக் கிடந்த நாடித் துடிப்பைத் தட்டியெழுப்பித் துடி துடிக்கச் செய்தது; இதய மண்டலத்தின் அஷ்ட கோணங்களையும் ஆக்கிரமித்துக் கவிந்து நின்ற இருட் செறிவைப் பிளந் தெறியும் மின்னல் சொடுக்கைப்போல் அந்தக் கோஷம் பளீரென ஒளி வீசியது; சூனிய வெளியாக, வெற்றம் பலமாகக்கிடந்த அவனது சித்த அரங்கிலே, திடீரென்று ஒரு இதய நிறைவு மானாவாரியாய் வர்ஷித்துப் பெருகியது.

"வேலைகொடு அல்லது சோறு கொடு!"

திடீரென்று முறுக்கேறி விறைத்த இதயத் தந்தியில் அந்தக் கோஷம் மோதி மோதி ஏதோ ஒரு இன்ப நாதத்தை இசை மீட்டி எழுப்புவதுபோல் அவன் உணர்ந்தான். அந்த நாதம் அவன் உதட்டை அசைத்தது; உடலை அசைத்தது; உள்ளத்தை அசைத்தது. உலர்ந்து பொருக்காடிப் போன அவன் உதடுகள் அந்தக் கோஷத்தை முணுமுணுத்தன; வற்றி வறண்ட தொண்டைக்குழி அந்தக் கோஷத்தை வெளியிட முயன்று கரகரத்தது.

ஊர்வலம் சென்றுகொண்டிருந்தது.

காந்த ஊசி அருகில் வந்ததும் துள்ளித் தாவிப்போய் ஒட்டிக் கொள்ளும் இரும்புத் தூளைப் போல், பல பேர் அந்த ஊர்வலத்தோடு சங்கமமானார்கள். அந்த மனிதப் பிரவாகத்தின் ஆகர்ஷண சக்தி அவனையும் கவர்ந்து இழுத்தது; அவன் கால்கள் அவனையுமறியாமல் இடம் பெயர்ந்தன.

"வேலைகொடு அல்லது சோறு கொடு!"

திடீரென்று அவன் தொண்டை கட்டுடைந்து கும்பிக் கொதிப்பின் அக்கினி ஜ்வாலையோடு கொதித்து எழுந்தது; அவனும் அந்தக் கோஷத்தை வாய்விட்டு முழங்கிக் கொண்டே ஊர்வலத்தோடு சங்கமமானான்.

"வேலைகொடு அல்லது சோறுகொடு"

கூடல்மா நகரை வளைத்து வேலி கட்டிய பண்டைய பௌராணிக ஆலவாய்க் கால சர்ப்பம்போல், அந்த ஊர்வலம் நகரின் பிரதான வீதிகளையெல்லாம் சுற்றி வந்து மதுரை நெசவுத் தொழிலாளர் சங்கக் காரியாலயத்தின் முன்னர் வந்து முடிவடைந்தது. ஊர்வலம் அந்த இடத்தில் வந்து முடிந்து அணி பெயர ஆரம்பித்தது. கோஷ முழக்கங்கள் முடிவுற்ற பிறகு, அவனிடம் குடிகொண்டிருந்த ஆவேச உணர்ச்சி திடீரென்று குடியோடிப் போனது போலிருந்தது; மறுகணமே அத்தனை நேரமும் பம்மிப் பதுங்கிக்கிடந்த களைப்பும் பசியும் அவனை ஆட்கொண்டு அலைக்கழித்தன. அவன் கண்கள் இருண்டு மங்கின; கால்கள் குழலாடித் தளர்ந்தன; பற்கள் நெரிந்தன. அறிவு மங்கிக் கழன்றோடுவது போலிருந்தது...

அவன் திடீரென்று சாய்ந்துவிட்டான்!

"ஐயையோ! யாரோ மயக்கம் போட்டு விழுந்துட்டாரு!" என்ற கூக்குரல் அவனுக்குப் பின்புறமிருந்து கிளம்பியது.

மறுகணமே அவனைச் சுற்றிலும் ஒரு பெருங் கூட்டம் கூடி விட்டது. இரண்டு ஊழியர்கள் கூட்டத்தைப் பிளந்து கொண்டு, அவனருகே வந்து அவனைத் தூக்கித் தம்மீது சாய்த்துக் கொண்டார்கள்.

"காத்துவர்ரதுக்கு இடம் கொடுங்கய்யா!"

"ஓடிப்போய் தண்ணி கொண்டாங்க!"

"உசுருக்கு ஆபத்தில்லையே!"

"பசிக்கொடுமைதானோ,என்னவோ"

பல்வேறு குரல்கள் எங்கிருந்தோ தங்கள் அனுதாபத்தைக் காட்டிக் கொண்டன. அதற்குள் அவனைத் தூக்கிப் பிடித்திருந்த ஊழியர் "காரியதரிசியைக் கூப்பிடுங்க" என்று சத்தமிட்டார். தண்ணீர் வந்து சேர்ந்தது. அந்த ஊழியர்கள் அவன் முகத்தில் தண்ணீரைத் தெளித்து விசிறினார்கள்.

காரியதரிசிராஜூவும் அங்குவந்துசேர்ந்தார்; சுற்றிக் குழுமி நின்ற கூட்டம் அவருக்குவழிவிட்டுஒதுங்கியது.

"யாரது? என்ன விஷயம்?" என்று கூறிக் கொண்டே, அவனது கை நாடியைப் பிடித்துப் பார்த்தார் ராஜூ. "ஒண்ணும் ஆபத்தில்லை.மயக்கம்தான்" என்று அவர் வாய் முனகியது. அவர் அந்த ஊழியர்களைப் பார்த்து, "எதற்கு இத்தனை கூட்டம்? இவரை உள்ளே எடுத்து வாருங்கள்" என்று கூறியவாறே எழுந்திருந்து காரியாலயத்துக்குள் சென்றார்; ஊழியர்கள் அவனைக் காரியாலய வெளி வரந்தாவில் கொண்டு வந்து சேர்த்தனர்.

"இவர்யார்தெரியுமா?"

"தெரியலியே!"

அதற்குள் அங்கு குழுமி நின்ற கூட்டத்திலிருந்து ஒருவர்குரல்கொடுத்தார்;"யாரோதெரியலை.டவுன்ஹால் பக்கம் இவர் நம்ம ஊர்வலத்திலே வந்து கலந்துக்கிட்டதை நான் பார்த்தேன்."

சிறிது நேரத்தில் அவனுக்குப் பிரக்ஞை மீளத் தொடங்கியது. கை கால்கள் அசைந்தன; நெடுமூச்சு வாங்கியது; உதடுகளும் கண்ணிமைகளும் லேசாகத் துடித்தன. அவன் கண்களைத் திறந்து சுற்று முற்றும் வெறிக்கவெறிக்கப்பார்த்தான்.

"தண்ணீர்!" அவன் குரல் உள்வாங்கிவிக்கிஒலித்தது.

ஊழியர்கள் அவன் வாயில் தண்ணீர் ஊட்டினார்கள்; தண்ணீர் தொண்டைக் குழியை நனைத்தவுடன் அவனுக்குச் சிறிது தெம்பு வந்தது. கையை ஊன்றி எழுந்து உட்கார்ந்தான்.எதிரேகூடிநின்றகூட்டத்தைத்திருகத்திருக விழித்துப் பார்த்தான். அவனுக்கு நடந்து போன நிகழ்ச்சிகள் கொஞ்சம் கொஞ்சமாக நினைவுக்கு மீண்டன; அந்த நினைவின் அதிர்ச்சி அவன் முகத்தில் பிரதிபலித்தது.

"இப்போ எப்படி இருக்கு?" என்று பரிவோடு கேட்டார் ராஜு.

அவன் அதற்குப் பதில் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து, 'பசிக்குது!' என்று அடைபட்ட குரல் அவன் தொண்டைக் குழியிலிருந்து திமிறிப் பிறந்தது.

உடனே ராஜு எதிர்த்தாற்போலுள்ள நாயர் ஹோட்டலிலிருந்து ஏதாவது டிபன் வாங்கி வரச் சொன்னார்; ஊழியர்கள் இட்டிலியும் டீயும் வாங்கி வந்தார்கள்.

"இதைச்சாப்பிடுங்கள்"என்றுவேண்டிக்கொண்டார் ராஜு. அவன் அவற்றை மெதுவாகச் சாப்பிட்டு முடித்து விட்டு, கையைக் கழுவி முடித்ததும் மீண்டும் வந்து உட்கார்ந்து கொண்டான்.

"இவ்வளவு பசி இருந்தும்கூட ஊர்வலத்தில் எப்படி வந்து சேர்ந்தீர்கள்?" என்று வியப்போடு கேட்டார் ராஜு.

அவன்அவர்முகத்தைஏறிட்டுப்பார்த்தான்.

"என்னையும் அறியாமல்தான் வந்து சேர்ந்து கொண்டேன்.ஊர்வலத்தைப் பார்த்ததும், என்னமோ ஒரு ஆவேசம் என்னை அதில் கொண்டு தள்ளியது. பசி கூடத் தெரியலை" என்று வெள்ளைக் குரலில் பதில் சொன்னான் அவன். பிறகு அவன் அன்பும் ஆதரவும் பொங்கிப் பிரதிபலிக்கும் ராஜுவின் கண்களை வெறித்து நோக்கியவாறே, "ஐயா, என்னைக் காப்பாற்றியதற்கு,

உங்களுக்கு நான் ரொம்பவும் கடமைப் பட்டவன்" என்று உணர்ச்சி ததும்பச் சொன்னான்.

"நூரங்கள்தான் உங்களுக்குக் கடமைப்பட்டவர்கள். இத்தனை பசிக் கொடுமையிலும் எங்கள் ஊர்வலத்தில் கலந்து உங்கள் அனுதாபத்தையும் ஆதரவையும் காட்டிக் கொண்டீர்களே. நான்தான் உங்களுக்கு நன்றி செலுத்தவேண்டும்" என்று தன்னடக்கத்தோடு கூறிக் கொண்டார்ராஜு.

சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு காரியதரிசி ராஜு அவனை நோக்கிக் கேட்டார்.

"உங்களுக்குஇந்தஊர்தானா?"

"இல்லை, அயலூர். பிழைக்கலாம் என்று வந்தேன். வந்த இடத்திலே..." அவன் பெருமூச்செறிந்தான்.

"உங்கள்பெயர்?"

"மணி".

மணிக்குப் பசிவேதனை தணிந்து விட்ட போதிலும் எய்ப்பும் களைப்பும் குறையவில்லை. அவனது ஆயாசம் முகத்தில் வியர்வைத் துளிகளாகத் துளித்தது. அவனது ஆயாசத்தைக் கண்டுணர்ந்த ராஜு அவனை நோக்கி, "உங்களுக்கு இப்போது ஓய்வு தேவை. பேசாது படுத்துத் தூங்குங்கள். பிறகு பார்க்கலாம்" என்று கூறியவாறு, ஒரு ஊழியரை, காரியாலயத்தின் ஒரு பகுதியில் மணிக்குப் படுக்கைவிரித்துப்போடச்சொன்னார்.

மணிஉள்ளேசென்றுபடுத்துக்கொண்டான்.

ராஜு தம்மைச் சூழ்ந்து நின்ற நெசவாளர் ஊழியர்களைநோக்கி,"எல்லோரும்போய்ச்சாப்பாட்டை முடித்துவிட்டு,பத்துமணிசுமாருக்குவந்துசேருங்கள்.அந்த ரிப்போர்ட்டைக் குறையும் முடித்து விடலாம் என்று கூறினார்.

அந்தக் காரியாலயத்தில் மணியைத் தவிர வேறு யாருமில்லை; காரியாலயத்துக்கு வெளியேயுள்ள வெட்ட வெளியில் மட்டும் இரண்டு ஊழியர்கள் மூங்கில் தட்டிகளில்போஸ்டர்கள் ஒட்டிக்கொண்டிருந்தார்கள்.

மணியின் உடம்பு பலவீனத்தாலும் களைப்பாலும் அலுத்துப் போயிருந்தும்கூட, அவன் மனம் அன்றைய நிகழ்ச்சிகளால் ஏற்பட்ட உள்ளச் சிலிர்ப்போடு அவனைத் தூங்க விடாமல் அலைக்கழித்தது. மணி புரண்டு படுத்தவாறேஅந்தஅறையின் சூழ்நிலையைக்கவனித்தான்.

அறையின் மூலையிலே கிடந்த சிறிய மேஜைமீது ஒரு ஹரிக்கேன் விளக்கு மங்கிய ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தது;அந்தமங்கியஒளிமூட்டத்தில் அந்தஅறை ஏதோ ஒரு சொப்பனத் தரிசனம் போல் மணிக்குக் காட்சியளித்தது. அந்த அறையின் சுவர்களைப் பல தலைவர்களின் சித்திரங்கள் அலங்கரித்தன;வாசல்புறத்தில் பல துண்டுப்பிரசுரங்கள் ஒட்டப்பட்ட நோட்டீஸ்போர்டு ஒன்று தொங்கியது. அதற்கு அருகில் ஒரு மெகபோன் குழல் தொங்கிக் கொண்டிருந்தது. அறையின் ஒரு மூலையில் ஒரு மண் பானையும், இன்னொரு மூலையில் கிழிந்த காகிதங்களும், கரிந்த தீய்ந்த சிகரெட் துண்டுகளும், தீக்குச்சிகளும் கிடந்தன. சுவரையொட்டியிருந்த அலமாரியில் பற்பல பைல்களும் புத்தகங்களும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன-

மணி தன் கண்களை மூடினான்; எனினும் மனம் மட்டும் மூடவில்லை. அவன் மனம் சென்றுபோன நாட்களை எண்ணியது. கடந்த காலத்தில்தான் எத்தனை துன்பங்கள்! அனுபவங்கள்! படிப்பினைகள்!-

திருநெல்வேலியை விட்டு இரவோடு இரவாய் ஓடிவந்த மணி ரயிலில் வரும்போதே தன் எதிர்காலத்தைத் திட்டமிட்டான். இருளின் அந்தகாரத்திலே தாள லயத்தோடு ஆடிக் கொண்டு சென்ற ரயிலைப் போலவே

அவன் கற்பனையும் ஆடிப் பாடித் தன்னிச்சையாகச் சென்றது.

'திருச்சிக்குச் சென்று அங்குள்ள நண்பன் ஒருவனைச் சந்தித்து ஒரு வேலை தேடிக்கொள்ள வேண்டும்; பின்னர் அம்மாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கடிதம் எழுதி அவளை வரவழைக்க வேண்டும்; கமலாவையும் முறைப்படி கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்; அம்பா சமுத்திரத்தில் நிகழ்ந்த பயங்கரங்களையெல்லாம் மறந்து விட்டுப் புது வாழ்க்கை தொடங்க வேண்டும்...'

அந்தப் புது வாழ்க்கையைப் பற்றிய கனவிலேயே அவன் திருச்சி போய்ச் சேர்ந்தான். ஆனால் அங்கு அவன் தேடிச் சென்ற நண்பன்தான் இல்லை. அவனைப் பற்றித் தகவல் தெரிவிப்பாரும் இல்லை!

மணி திருச்சியில் தெருவில் நின்றான்; பையிலுள்ள இருபது ரூபாயும் சொச்சமும் அவனுக்குச் சிறிது தெம்பளித்தது.

இந்த ரூபாயும் செலவழிவதற்குள் ஊர் சென்று விடலாமா? சே! ஊருக்குச் சென்று யார் முகத்தில் எப்படி விழிப்பது? சேச்சே! ஊர் திரும்பக் கூடாது. இவ்வளவு பெரிய ஊரில் எனக்கு ஒரு வேலையுமா கிடைக்காது?...

அவன் தன் திட்டம் இன்று அல்லது நாளை நிறைவேறி விடும் என்ற நம்பிக்கையோடு வேலை தேடி அலைந்தான். பஸ் கம்பெனி, ரயில்வே ஸ்டேஷன், காபி ஹோட்டல், சினிமாக் கொட்டகை, ஒர்க்ஷாப், கடை - எங்கெல்லாமோ சுற்றியலைந்தான். அவனது நம்பிக்கைகள் தவிடு பொடியாவதற்கு அதிக நாட்கள் பிடிக்கவில்லை.

அவன் வேலையற்று, பணமற்று, உணவற்று, தெருவில் திண்டாடி நின்றான்...

அந்த அனுபவங்களை எண்ணியபோது அவன் கண்ணில் நீர் கரித்தது.

எத்தனை துன்பங்கள்! - ஒரு சட்டைக்காரத் துரை அவனை நாயை விட்டு விரட்டியடித்தான்; ஆபீஸிலுள்ள லேடி டைபிஸ்டோடு சரச சல்லாபம் நடத்திக் கொண்டிருந்த ஒரு கம்பெனி மேனேஜர் அவன் மீது காரி உமிழ்ந்தான்; ஒரு கருணையற்ற ஹோட்டல் முதலாளி அவன் மீது வெந்நீரைக் கொட்டி விரட்டியடித்தான்!...

அவனது கண்ணீரையும் கதறலையும் பசியையும் பட்டினியையும் பொருட்படுத்த, கருணை காட்ட, அவனுக்குவேலைதர யாரும் முன் வரவில்லை; அவன் அந்த நகரத்தில் நாய் மாதிரித் திரிந்தான்; நாய்மாதிரித் தெரு ஓரங்களில் படுத்துத் தூங்கினான். பசித்து அழுதான்; கண்ணீர் விட்டான்.

கடைசியில் அவனும் அந்த நகரங்களிலுள்ள ஏழை பாழைகளைப்போல், கூலிவேலை தேடியலைந்தான். அந்த பிழைப்புக்கும் ஆயிரம் போட்டி; அடிபிடி எனினும் உயிராசை அவனையும் அந்தப் போராட்டத்தில் ஈடுபடச் செய்தது. அவனும் ரயில், பஸ், பிரயாணிகளின் மூட்டை முடிச்சுகளைத் தூக்கிப் பிழைத்தான். பெட்டியடி மட ஹோட்டல்களில் பத்துப் பாத்திரம் துலக்கி ஒரு வேளைப் பாட்டைக் கழித்தான்; கை வண்டி இழுக்கத் துணையாளாகச் சென்றான்; துட்டுக் கிடைத்த வேளையில் வயிற்றைக் கழுவினான்; கிடைக்காத வேளையில் பட்டினி கிடந்தான்.

அவனுக்கு வாழ்க்கையே மரத்துப் போய் விட்டது; மாறிப் போய் விட்டது. அவன் கமலாவை மறந்தான்; தாயை மறந்தான்; ஊரை மறந்தான்; உற்றாரை மறந்தான். எனினும் அவன் தன் சாண் வயிற்றை மட்டும் மறக்கவில்லை; மறக்க முடியவில்லை.

அந்த நாட்களில் அவன் உயிர் வாழும் போராட்டத்தின் சகல குரூரங்களையும் கண்டான்; அனுபவித்தான். ஒரு உருண்டைச் சோற்றுக்காகச் சண்டை பிடிக்கும்

மனிதர்களை, ஒரு அணாக் காசுக்காக வெட்டுப்பழி குத்துப்பழியில் விமோசனம் தேடும் மக்களை, ஒரு நேரக் கஞ்சிக்காக உடம்பை அடகு வைக்கும் ஏழைப் பெண் மக்களை, பசிதாங்க முடியாது அரையணாப் பண்டத்தைத் திருடிவிட்டு அடி வாங்கி நைகின்ற ஜனங்களை - அவன் கண்டான்; பழகினான். ஆனால், அந்தக் குரூர சக்தி கொண்ட உயிர் வாழும் போரில் ஈடுபட்டிருந்த அதே மக்களிடம் அவன் கருணையைக் கண்டான்; மானாபிமானத்தைக் கண்டான். தரும சிந்தையைக் கண்டான்; நட்புரிமையைக்கண்டான்.

அந்த ஜனங்களின் உடம்பு வியர்வை பற்றி நாறியது; உடைகள் அழுக்குப் பற்றி நாறின; வாயும் நாவும் அசிங்கமான வார்த்தைகளைக் கக்கி நாறின; எனினும் அவர்தம் உள்ளங்களிலிருந்து திடீரென்று அவ்வப்போது நற்குணங்கள் பரிமளகந்தம் போல் வீசிப் பரவுவதையும் அவன் அனுபவித்தறிந்தான்.

லட்ச லட்சமாகப் பணமிருந்தும், உழைப்பவனுக்குக் கிடைக்கும் ஓரணாக் காசையும் தட்டிப் பறிக்க எண்ணும் பிச்சைக்காரப் புத்தி அவர்களிடம் இல்லை; தங்கள் சொத்தைப் பெருக்கிக் கொள்வதற்காக, நாகரிகமாகப் பொய்கள் சொல்லி, நயவஞ்சகம் செய்யும் சின்னப்புத்தி அவர்களிடம் இல்லை. அவர்கள் பொய் சொன்னார்கள்; சண்டை பிடித்தார்கள்; திருடினார்கள்; சோரம் போனார்கள். எனினும் அத்தனையும் ஒரு சாண் வயிற்றைக் கழுவுவதற்காகத்தான் செய்தார்கள். தம் வயிறு நிறைந்து இருக்கும் சமயங்களில் அவர்கள் அந்தக் குரூர வாழ்க்கையை அதன் கோரங்களை வெறுத்தார்கள்; தம் செய்கைகளுக்காக வருந்தினார்கள்.

கடைத்தர வாழ்க்கையின் அத்தனை குரூரங்களையும் பயங்கரங்களையும், இழிதன்மைகளையும் அவன் கண்டான். அந்த வாழ்க்கைக்கும் தான் கனவு கண்ட வாழ்க்கைக்குமுள்ள வித்தியாசத்தையும் கண்டுணர்ந்தான்.

அவனுக்கு அந்த மக்களின் வாழ்க்கையை மாற்றுவதற்கு வழி கிடையாதா என்ற ஆவேசம் இருந்தது; அவர்களுக்கும் தங்கள் வாழ்வு மாறவேண்டும் என்ற தாகம் இருந்தது. எனினும் அந்த வாழ்வுக்குரிய பாதை அவனுக்கோ அவர்களுக்கோ தெரியவில்லை.

திருச்சியில் இருந்த சமயம், மணி ஒரு புதிய பிரபஞ்சத்திலேயே வாழ்ந்தது போன்ற அனுபவத்தைப் பெற்றான்; 'மதுரையிலேயே மில்லுக்கு ஆள் எடுக்கிறார்களாம்!' என்று எவனோ சொன்னதைக் கேட்டுத்தான் அவன் மதுரைக்கு வந்து சேர்ந்தான்; ஆனால் மதுரையிலும் அவனுக்குத் திருச்சி அனுபவம்தான் காத்திருந்தது.

மதுரை வந்து ஏமாந்து, மணி பட்ட சிரமங்கள் கொஞ்சமல்ல; திருச்சி அவனுக்குப் பழகிப்போன இடமாயிருந்தது. மதுரையிலோ?...

அவன் மனம் கடந்த காலச் சிந்தனைகளை எண்ணியெண்ணி உள்ளுக்குள் குமைந்துகொண்டிருந்தது; அவன் தன் வாழ்க்கையின் பயங்கரத்தைப் பற்றிச் சிந்தித்தவாறே கண்களை மூடினான்; சிறிது நேரத்தில் தூக்கம் அவனை ஆட்கொண்டது...

காலை நேரத்து இளவெயில் தன்மீது பட்டு உறைப்பதை உணர்ந்தவுடன் மணி கண் விழித்துத் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான்; அவனுக்கு எதிரே ராஜு சிகரெட்டைப் புகைத்தவாறே பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். மணி தூங்கி எழுந்ததைக் கண்டதும், அவர் அவன் பக்கம் திரும்பி, "நல்லாத் தூங்கினீர்கள் போலிருக்கே!" என்று சௌஜன்ய பாவத்தோடு கேட்டார்.

அதற்குள் எதிர்த்த நாயர் ஹோட்டல் பையன் இரண்டு கப் டீ கொண்டு வந்து கொடுத்தான்.

டீயை எடுத்து மணியிடம் கொடுத்தவாறே, "சாப்பிடுங்க தம்பி" என்றார் ராஜு.

மணி டீயைச் சாப்பிட்டு முடித்தான்.

ராஜு தமது பையிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்து நீட்டியவாறு, "சிகரெட் வேணுமா?" என்று அருமையோடு கேட்டார்.

"இல்லை சார், எனக்குப் பழக்கமில்லை."

"இப்போது உடம்புக்குத் தேவலையா?"

"ம்" என்று முனகினான் மணி.

"தம்பி, ஊரிலே உங்களுக்கு என்ன தொழில்?"

"ஊரில் நான் தொழில் செய்யலை; காலேஜில் படித்துக்கொண்டிருந்தேன்."

"காலேஜிலா? அப்போ, உங்கள் குடும்பம் கொஞ்சம் வசதியான குடும்பமென்று சொல்லுங்கள்."

"அப்படித்தான் இருந்தது."

"சரி படித்துக் கொண்டிருக்கும்போதே வேலை தேடி வரக்காரணம்?"

அவரிடம் தனது விருத்தாந்தத்தை எல்லாம் சொல்லிவிட வேண்டும் என்று மணிக்குத் தோன்றியது. வீட்டை விட்டு வெளியேறியதிலிருந்து தன்னிடம் இந்த மாதிரிப் பேசிப் பழகி, தன் மனப்பாரத்தைக் குறைக்கச் செய்ய, இதுவரை இதுபோல் எந்த ஜீவனும் முன்வரவில்லை என்ற எண்ணம், அவனுக்கு ராஜுவின் மீது திடீரென்று ஒரு பிரியத்தையும் மதிப்பையும் உண்டாக்கியது. மணி தன்னைப் பற்றிய விவரங்களை யெல்லாம் அவரிடம் சொல்லி முடித்தான். அவன் சொல்வதை யெல்லாம் மிகுந்த கவனத்தோடும் அக்கறை யோடும் கேட்டுக் கொண்டிருந்தார் ராஜு.

மணி சொன்னான்:

"வீட்டைவிட்டு ஓடிவந்தது முதல் நான் பட்டபாடு நாய் கூடப் பட்டிருக்காது. வேலை கிடைக்காது அலைந்து திரிந்து கடைசியில் இக் கோலத்துக்கு ஆளானேன். என் அப்பாவைப்போல் நானும் உயிரை விட்டிருந்தால் எனக்கு இந்தக் கதி நேர்ந்திருக்காது. அதற்குக்கூடத் துணிச்சல் இல்லை, எனக்கு!"

இத்தனை நேரமும் மணி பேசுவதையே கவனித்துக் கேட்டு வந்த ராஜு மீண்டும் பேசத் தொடங்கினார்:

"மிஸ்டர் மணி! உங்கள் வரலாற்றைக் கேட்டதில் என் மனம் மிகுந்த வேதனை அடைகிறது. ஆனால், நீங்கள் உங்கள் தந்தையைப்போல் தற்கொலை செய்து கொள்ள முனையாது, இத்தனை கஷ்டங்களுக்கிடையிலும் உயிர் வாழ விரும்பியது பற்றி மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். நீங்கள் நினைப்பது போல், தற்கொலை செய்து கொள்வது அப்படியொன்றும் துணிச்சலான காரியமல்ல. வாழ்க்கையில் விரக்தியடைந்த எந்தப் பைத்தியக்காரனும் லகுவில் செய்துகொள்ளக்கூடிய காரியம் அது. தற்கொலை என்பது கோழையின் கண்ணில் படும் முதல் புகலிடம். வாழ்க்கையின் சிரமங்களை எதிர்த்துப் போராடத் துணிச்சலற்றுத் தன்னைத் தானே ஒருவன் அழித்துக் கொள்வதா? ஆனால், நீங்கள் வீட்டைவிட்டு ஓடிவந்ததையும் நான் துணிச்சலான காரியம் என்று சொல்ல மாட்டேன். அதுவும் கோழைத் தனம்தான். எங்கு ஓடிவிட முடியும்? இமயம் முதல் குமரி வரையிலும் ஓடியலைந்தாலும், நாடெங்கிலும் இதே நிலைமைதானே. இதிலிருந்து நீங்கள் மட்டும் தப்பித்துவிட முடியுமா? நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், இந்த உலகப் போக்கிற்கு நீங்கள் கட்டுப்பட்டவர்கள். இதை உங்கள் இத்தனை நாள் அனுபவமே கற்றுக் கொடுத்திருக்குமே!"

இந்த வாக்கியத்தைக் கேட்டதும், மணிக்கு ஏதோ திடீரென்றுஞாபகம்வந்தது. ஆஸ்பத்திரியில்கிடந்தபோது சங்கரும் இப்படித்தானே சொன்னான்?...

"நீங்கள் சொல்வது சரிதான்" என்று ஆமோதித்தது அவன் வாய். தன் கஷ்டங்களுக்குரிய காரணத்தை அவன் இத்தனை ஸ்தூலமாக இதற்கு முன்னர் தொட்டுணர்ந்ததில்லை.

"இந்த உண்மையை மட்டும் நீங்கள் உணர்ந்து விட்டால், அப்புறம் தற்கொலையிலோ, ஊரை விட்டு ஓடுவதிலோ அர்த்தமேயில்லை என்பதையும் அறிந்து கொள்வீர்கள்.நானும் உங்களைப்போல்பல துன்பங்களை, கொடுமைகளை அனுபவித்திருக்கிறேன்; பசி, பட்டினி, வேலையில்லாத் திண்டாட்டம் அத்தனையிலும் அடிபட்டுக் காய்ந்திருக்கிறேன். ஆனால், உயிர் வாழும் வேட்கையும், தைரியமும் தான் என்னை வாழ வைத்தன. நமது கஷ்டங்களுக்குரிய காரணத்தைக் கண்டறிந்து அதை அழிக்க முயலவேண்டுமே ஒழிய நம்மை நாமே அழித்துக் கொள்ளக் கூடாது; அந்தக் காரணத்தை அறிந்து அழிக்க முயலும் முயற்சியில் நாம் அழிந்து போனாலும் பரவாயில்லை;நாம்அழிந்தாலும்நம்மைச்சார்ந்தவர்களும் சந்ததியார்களும்வாழ்வார்கள்என்றதிருப்தியாவது நமக்கு உண்டாகும்.அதுதான்மனிதவாழ்க்கை!"

மணி அவரது பேச்சின் அழுத்த பாவத்திலும், உறுதியிலும், கவர்ச்சியிலும் தன்னையுமறியாமல் ஈடுபட்டுக்கொண்டிருந்தான்.அவரது பேச்சு அவன் மனத்தில் புதியதொரு நம்பிக்கையையும் உற்சாகத்தையும் உருவேற்றுவதுபோலிருந்தது.

"மிஸ்டர் மணி, நீங்களும் பாதிக்கப்பட்ட ஒரு நெசவாளிக் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்பதாலேயே உங்களோடு இவ்வளவு உரிமையோடும் அக்கறையோடும் பேசுகிறேன். உங்கள் குடும்பமும் உங்கள் வாழ்வும் சீர்குலைந்ததற்குமுக்கிய காரணம்என்னதெரியுமா?இந்தச் சர்க்காரின் ஜவுளிக்கொள்கைதான்அடிப்படைக்காரணம். அதன் காரணமாகத்தான் இன்று பல்லாயிரக்கணக்கான குடும்பங்கள் சீரழிகின்றன. இந்த நிலைமையை மாற்று

வதற்காகத் தான் இங்குள்ள நெசவாளிகள் போராடு கிறார்கள். இதுபோல் நாடெங்கிலும் போராட்டம் பரந்து விரிந்து பலம்பெற்று விட்டால், ஒன்று இந்த சர்க்காரின் ஜவுளிக் கொள்கை மாறும், அல்லது இந்த ஆட்சி மறையும். உலகத்தை வாழ வைக்க முடியும் என்ற நம்பிக்கையில்தான் என்போன்ற ஊழியர்கள் எவ்வளவோ சிரமங்களைத் தாங்கிப் போராடி வருகிறோம்."

ராஜு கூறியதை மணியால் மறுக்க முடியவில்லை; அவன் அவர் கூற்றை ஆமோதித்தான். பின்னர் ராஜு அவனுக்குச் சர்க்காரின் ஜவுளிக் கொள்கை பற்றியும் அரசியல் கொள்கை பற்றியும் விளக்கிச் சொன்னார். அதைக் கேட்கக் கேட்க அவன் உள்ளம் தன் தந்தையின் மரணத்துக்குரிய பிரதான காரணத்தின் ஜீவநாடியைத் தொட்டறிந்தது; தான் வேலை கிடைக்காமல் திண்டாடியதற்கும், பசியால் வாடியதற்கும், மயங்கி விழுந்ததற்கும் உரிய காரணத்தின் மூலாதாரத்தைக் கண்டறிந்தது; கடந்த காலத்தில் தன்னோடு பழகி வந்த ஏழை மக்களின் வறுமைக்கும் இழி நிலைமைக்கும் குரூர வாழ்க்கைக்கும் காரணமான விஷ மூலம் எங்கிருக்கிறது என்ற உண்மையையும் கண்டுணர்ந்தது.

அந்த உணர்வு அவன் மனத்தில் ஊற ஊற, அவனது இதயத்தை இறுக்கிப் பிணித்திருந்த பல்வேறு விதமான சந்தேகங்கள், குழப்பங்கள், முடிவுகள் எல்லாம் இற்றுத் தேய்ந்து அறுபடுவதுபோல் அவனுக்குத் தோன்றியது. அந்த தளைகளின் பிடிப்புத் தளரத் தளர, அவன் உள்ளத்திலே புகைமூடிப் பூத்துக் கிடந்த தர்மாவேச உணர்ச்சி சத்திய வேட்கை கொண்டு விம்மிப் புடைத்து விகசித்துப் பரந்தது. அவன் கண்களில் புதியதொரு ஒளிசுடர் விட்டது.

திடீரென்று அவன் ராஜுவை நோக்கிக் கேட்டான்: "உங்கள் போராட்டத்தில் நானும் கலந்து கொள்ளக் கூடாதா?"

ராஜுவின் முகத்தில் மெல்லிய புன்னகை திரிந்து மறைந்தது. நேற்றே நீங்கள் அதில் பங்கு பெற்று விட்டீர்களே. அதனால்தான் உங்களைப்பற்றி இவ்வளவு தூரம் விசாரித்தேன். இவ்வளவு நேரம் பேசினேன். உங்கள் மனத்தின் நல்லுணர்ச்சிதானே உங்களை எங்கள்மீது அனுதாபம் கொள்ளச் செய்தது. இல்லையா?"

மணி மௌனமாக இருந்தான்; ராஜு சொன்னார்: "மிஸ்டர் மணி, நீங்கள் படித்த வாலிபர். நீங்கள் மட்டும் சிறிது சிரத்தையெடுத்துப் பணியாற்றினால், நமது விடுதலைப் போராட்டத்துக்கு நீங்களும் பேருதவி செய்ய முடியும். அதைத்தான் நானும் எதிர்பார்க்கிறேன்."

"நான் என்ன செய்ய வேண்டும்?" என்று அப்பாவி போலக் கேட்டான் மணி.

"இங்கேயே தங்கிவிடுங்கள். எங்கள் உணவையும் பசியையும்பகிர்ந்துகொள்ளுங்கள்.சம்மதம்தானே!"

மணிதலையை அசைத்தான்.

ராஜு அவனைத் தோளில் தட்டிக்கொடுத்து உற்சாகப்படுத்தினார்.

# 22

கம்பத்தின் கீழ் நிற்றல் காணீர்! - எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்!
நம்பற் குரியர் அவ்வீரர்! - தங்கள்
நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பர்!

என்றபாரதியார் பாடலின் இசைத்தட்டுச்சங்கீதம்எதிர்த்த நாயர் ஹோட்டலிலிருந்து இனிமை நிறைந்து ஒலித்துக் கொண்டிருந்தது.

மதுரை நகர் நெசவுத் தொழிலாளர் சங்கக் கட்டிடத்தின் முகப்பில் காணப்பட்ட உயரக் கம்பத்தின் உச்சியில் அந்த செங்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது. அந்தக் கொடியில் பொறித்துள்ள ம.நெச (மதுரைநகர் நெசவாளர் சங்கம்) என்ற எழுத்துக்கள் நிலையாகத் தெரியாவிட்டாலும், எதிர்க்காற்றில் அலை வீசிப் பறக்கும் அந்தக் கொடியின் துவட்சியில் அவை மின்வெட்டுப்போல் உருக்காட்டின. மேலேறி விட்ட நீலவானத்தில் விரைந்தோடும் மேகக் கூட்டங்களை ஏறிட்டுப் பார்க்கும்போது, அந்த மேகக் கூட்டங்கள் நிலையாக நிற்பது போலவும், காற்றில் படபடக்கும் அந்தக் கொடி மட்டும் எதிர்க்காற்றில் வெகு வேகமாக முன்னேறிச் செல்வது போலவும் ஒரு காட்சிப் பிரம்மை உண்டாயிற்று. நிலாவொளியோடு போட்டி போட்டுக்கொண்டு, ஹோட்டல் உச்சியிலுள்ள நியான் விளக்கு அந்தத் துவஜத்தின்மீது ஒளியை அள்ளிச் சொரிந்து கொண்டிருந்தது.

கொடி மரத்துக்கருகே. நாலைந்து நெசவாளி ஊழியர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். சிறிதுநேரத்துக்கு முன்னர் சாப்பிட்ட டீயின் ருசியை அவர்கள் நாக்கு சப்புக் கொட்டிக் கொண்டிருந்தது; டீ குடித்ததனால் ஏற்பட்ட வாயின் மழுமழுப்பைப் போக்குவதற்காக ஓரிருவர் பீடியைப் பற்றவைத்து, ரசித்துக் குடித்துக் கொண்டு நின்றார்கள்.

"அட வாங்கய்யா, உள்ளே போகலாம், சும்மா பீடியைக் குடிச்சிக்கிட்டு! அவர் காத்துக்கிட்டிருப்பாரு' என்று ஒருவர் கடிந்துகொண்டார்.

"பீடிதான் முடியட்டுமே. கொஞ்சம் பொறுமேன்!" என்றார் ஒருபீடி ஆசாமி.

அதற்குள் பீடி குடித்துக் கொண்டிருந்த இன்னொருவர் எங்கே தம்மையும் விரட்டத் தொடங்கிவிடுவார்களோ

என்று பயந்து பேச்சை மாற்ற முயன்றார்: "அது சரி, தம்பி மணி இங்கே வந்து எத்தினி நாளாச்சு?"

"எத்தினி நாளா? அஞ்சாறு மாசமிருக்கும்!" என்று பதிலளித்தார் முதல் நபர்.

உடனே அந்தப் பீடி ஆசாமி பதில் சொன்னார்: "அவர் வந்து இத்தனை நாளைக்குள்ளே, எப்படி நல்லா உழைக்கிறார், பார்த்தீங்களா?"

அவரது பாராட்டைக் கேட்டதும் அவர்கள் அனைவரது பேச்சும் மணியைப் பற்றித் திரும்பின.

"அது மட்டுமா? அவர் நம்ம பிரச்சினைகளை யெல்லாம் நல்லா விளக்கி வேறே சொல்றாரு."

"பின்னே! அவரும் நம்ம மாதிரி ஒரு நெசவாளிக்குப் பிறந்தவர் தானே. அத்தோட, அவரு பட்ட கஷ்டங்களே அவருக்குப் பாடம் சொல்லிக் குடுக்குமே. அவர் கதையை நாமளும் தான் கேட்டோமே."

"அதுமட்டுமில்லை. நம்ம ராஜு அவர் விசயத்திலே தனி அக்கறை செலுத்திக் கவனிக்கிறார். ராப் பகலா அவரோட விவாதம் பண்ணி, எல்லா விசயத்தையும் சொல்லிக் குடுக்காருல்லெ!"

சிறிது நேரம் வரையில் அவர்கள் மணியின் திறமையையும் முன்னேற்றத்தையும் பற்றித் தத்தம் அபிப்பிராயங்களைப் பரிமாறிக் கொண்டார்கள்; அதற்குள் பீடியும் தீர்ந்து விட்டதால், பீடி குடித்தவர், "சரி வாங்க தம்பி, உள்ளே போகலாம்" என்று கூறியவாறு பீடிக் கட்டையைத் தூர எறிந்துவிட்டு உள்ளே நடந்தார்.

உள்ளே அறையின் நடுவில் வைக்கப்பட்டிருந்த ஹரிக்கேன் விளக்கைச் சுற்றி, சில நெசவாளிகளும், மணியும் உட்கார்ந்திருந்தனர். மணியின் முன்பு ஒரு நோட்டுப் புஸ்தகம் விரிக்கப்பட்டுக் கிடந்தது. அந்த ஹரிக்கேன் விளக்கின் ஒளியில், அங்கிருந்தவர்களின் நிழல்கள்

பூதாகாரமாய்ச் சுவரில் விழுந்து கொண்டிருந்தன. காலடி ஓசை கேட்டதும், மணி தான் சொல்லிக் கொண்டிருந்ததை நிறுத்தி விட்டு ஏறிட்டுப் பார்த்தான்.

அந்த நாலைந்து நெசவாளிகளும் உள்ளே வந்து அங்கிருந்தவர்களோடு உட்கார்ந்து கொண்டார்கள்.

"இப்பத்தான் வர்ரதா? இவங்க எல்லோரும் எப்போதே வந்து விட்டார்கள், தெரியுமா?" என்று சிரித்துக்கொண்டே அந்த நெசவாளிகளைச் செல்லமாகக் கண்டித்தான் மணி.

"டீ சாப்பிட்டு வந்தோம். அதுதான்-"

"அதுமட்டுமில்லை. இவரு பீடியை வேறெ குடிச்சி-"

என்று ஒரு நெசவாளி கூறிக் கொண்டே பக்கத்திலிருந்த வரைக் கண்ணைக் காட்டினார்.

பீடி குடித்த அந்த ஆசாமியோ அந்த நெசவாளியின் தொடையில் வெளிக்குத் தெரியாமல் இடித்து, அவர் பேச்சை 'ஸென்ஸார்' பண்ணினார்.

மணி மெல்லச் சிரித்துக் கொண்டான்; பிறகு அவர்களைப் பார்த்து நட்புரிமையோடு பேசத் தொடங்கினான்:

"சரி. நான் கடைசியாக என்ன சொன்னேன்?"

"மந்திரி கைத்தறியை ஆதரிக்கனும்னு சொன்னது பற்றிச் சொன்னீங்க" என்று பதிலளித்தார் ஒரு நெசவாளி.

எண்ணெய் வற்றியதால் கரண்டு கொண்டு போகும் விளக்கொளியைத் தூண்டி வைத்துவிட்டு, மணி கண்களைத் தன் முன்னிருந்த குறிப்புக்களின் பக்கம் திருப்பினான்; குறிப்புக்களை ஒரு முறை பார்த்துவிட்டு, அவர்களை நோக்கிப் பேசத் தொடங்கினான்:

"இன்று ஆட்சியாளர்கள் கைத்தறித் துணியை வாங்கி ஆதரியுங்கள் என்கிறார்கள். ஆனால் ஜனங்கள் கையிலோ

குறைந்த விலைக்குக் கிடைக்கும் மில் துணியை வாங்கக் கூடப் பணம் இல்லை. அந்த ஜனங்களைப் பார்த்து, கைத்தறித் துணியைவாங்குஎன்றுசொல்வது அவர்களைக் கேலி செய்வதுபோலாகும். இல்லையா?

"ஆனால், நாம் மந்திரியின் பேச்சையும் ஒதுக்கி விடக்கூடாது. அவரது பேச்சைக் கொண்டே நாம் அவர்களை நிர்ப்பந்திக்க வேண்டும். எப்படி? முதலில் சர்க்காரின் துணித் தேவைகளுக்குக் கைத்தறித் துணியை வாங்கும்படி நாம் வற்புறுத்த வேண்டும். போலீஸ், ராணுவம், சிறைவார்டர்கள், சிறைக் கைதிகள் இன்னும் ரயில்வே ஊழியர்கள் தபால் சிப்பந்திகள், ஆஸ்பத்திரித் தேவைகள்-இவற்றுக்கெல்லாம்கைத்தறித் துணியைவாங்கி உபயோகிப்பதுஎன்றுசர்க்கார்முடிவுசெய்தால்,இன்றைய நெருக்கடியை ஓரளவு சமாளிக்க முடியும். ஆனால், அமெரிக்கப் பஞ்சை அதிக விலை கொடுத்து வாங்கி நமது தலையில் கட்டும் இந்த சர்க்கார், இந்த யோசனையை அவ்வளவு லகுவில் ஏற்றுக் கொள்ள முன் வராது. நமது ஒற்றுமையின் மூலம்தான் நாம் இதைச் சாதிக்க வேண்டும்..."

மணிமதுரைக்குவந்துகிட்டத்தட்ட ஆறுமாதங்கள் கடந்துவிட்டன. அம்பாசமுத்திரத்தில் இருந்தவரை அவன் தனக்குத் தானே உரியதொரு உலகத்தைக் கண்டு வந்தான்; திருச்சிநகரம் அவனுக்குவேறொருபிரபஞ்சத்தைக்காணும் வாய்ப்பை அளித்தது;மதுரையோ அவனுக்குப்புதியதொரு பிரபஞ்சத்தை, வாழ்வில் நம்பிக்கையும் உற்சாகமும் ஊறிப் பெருகும் ஒரு உலகத்தை அவனுக்குப் புலப்படுத்தியது.

மதுரை நகரம்-

தொன்று தொட்டுத் தமிழின் பெருமையையும் பரம்பரையையும் தாங்கிநின்ற ஊர் மட்டும் அல்ல, மதுரை. மதுரை மக்கள் தமிழ்க்குலத்தின் கலாசார பரம்பரையையும், வீரத்தையும், தேசபக்தியையும் போற்றிக் காத்து, பற்பல சமயங்களில் தங்கள் பணியைத் தயங்காது

ஆற்றியவர்கள். தேசிய இயக்கப் போராட்டக் காலத்தில் மதுரை மக்கள் பெரும் பணியாற்றிருந்தார்கள். மேலும், வர்க்கபோதம் பெற்ற ஆலைத் தொழிலாளி மக்கள் தங்கள் உரிமைகளுக்காகப் பல முறை போராட்டத்தில் ஈடுபட்ட பெருமையையும் வீரத்தையும் கண்டறிந்த நகரம் மதுரை. 'நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே!' என்று நிமிர்ந்து நின்று சொன்ன நக்கீரன் பரம்பரையை, போலீஸாரின் சித்திரவதைக்கொட்டடியில்செத்துமடிந்த போதும்,போற்றிக்காத்துப்போராடியவீரர்களைக்கண்ட நகரம் மதுரை. 'இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே!' என்று அறைகூவி, அரண்மனையின் கட்டும் காவலும் கடந்து,பாண்டிய மன்னனின் நீதிமண்டபத்திலே நிமிர்ந்து நின்று நியாயம் கேட்ட கண்ணகியின் வழி நின்று தமக்காகவும், தங்கள் கணவன், பிள்ளைமார்களுக்காகவும் போர்க்கொடி ஏந்திச் சீறியெழுந்த வீராங்கனைகளைப் பெற்றெடுத்த பெருமையைக் கண்ட மதுரை மாநகரம், தூக்குமேடையிலே ஏறும் போதும், துளிக்கூடக் கண்ணீர் சிந்தாமல் புன்னகையோடு உயிர் நீத்த தியாகிகளைப் பிறப்பித்துத் தந்த ஊர் மதுரை-

அரசியலுணர்வும் தேசபக்தியும் வர்க்க போதமும் நிறைந்து விளங்கும் மதுரை நகரம் மணியின் ஆத்ம சக்தியையும் அறிவையும் விரைவில் பலப்படுத்துவதற்குப் பெரிதும் உதவியது. அவன் மதுரையில் இருந்த காலத்தில் ஹார்வி மில் தொழிலாளர்கள் நடத்திய போராட்டங் களைக்காணும்வாய்ப்புக்கிடைத்தது.தொழிலாளர்களின் சேவிங்ஸ் நிதிப் பணத்தை அவர்களுக்குக் கொடுத்துதவ மறுத்து வந்த ஹார்வியை, அந்தத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு நின்று ஒருமுகமாகப் போராடி, அந்தப் பணத்தைக் கீழே வைக்கும் படி நிர்ப்பந்தித்து வெற்றி கண்டதையும் அவன் கண்டான்.கோடி கோடியாகப் பணம் குவிந்துக் கிடந்தாலும், குசேலப் பிறவிகளான மக்கள் ஒன்றுபட்டுக் கொதித்தெழுந்தால், எந்தக் குபேரன்

ஆனாலும் கீழே இறங்கித்தானாக வேண்டும் என்ற உண்மையை அந்தப் போராட்டம் அவனுக்குப் புலப் படுத்தியது.

அது போலவே, அவன் பழகிவந்த நெசவாளர் வட்டாரத்திடையே யிருந்தும், மக்கள் சக்தி என்னும் மகாசக்தி வாய்ந்த ஆயுதத்தின் பலத்தை அவன் இதய பூர்வமாக உணர்ந்தறிய முடிந்தது. மதுரை நகரத்திலுள்ள நெசவாளிகள் ஏற்கெனவே தங்கள் சங்கத்தில் ஒன்றுபட்டு நின்று, உரிமைக்காகப் போராடி வெற்றிகண்ட வீரர்கள் முந்திய காலங்களில் நூலுக்குப் பஞ்சம் ஏற்பட்ட போதும், கள்ள மார்க்கெட் மலிந்திருந்த போதும், அவர்கள் நூல் ரேஷனுக்காகவும், நூல் ரேஷன் கார்டுக்காகவும் போராட்டம் நடத்தி, வெற்றி கண்ட மக்கள். வர்க்க பலத்தின் ஒருமித்த சக்தியின் வலிமையை அனுபவ பூர்வமாகக் கண்டறிந்தவர்கள் அந்த நெசவாளிகள். சங்கத்தின் கொடியின் கீழ் ஒன்று திரண்டு நின்று, நெசவாளர்களின் பிரச்னைகளுக்காகப் பாடுபடுவதை அவன் நேரில் கண்டான்; ஊர்வலங்களிலும் கூட்டங் களிலும் அவர்கள் பங்கெடுத்துப் பணியாற்றும் உற்சாகம் மணிக்கு ஊக்கத்தைக் கொடுத்தது. அந்த நெசவாளர்கள் தாங்கள் பட்டினி கிடக்க நேர்ந்த போதும், சங்கத்திற்குத் தம்மாலியன்ற உதவி அளிக்க முன்வந்த தியாக புத்தியையும் சங்க உணர்வையும் அவன் அனுபவ பூர்வமாகக் கண்டறிந்தான்.

இவை மட்டும் அல்லாமல், ராஜூவின் கூட்டுறவும், அரசியல் ஞானமும் மணியைப் பெரிதும் வளர்த்து விட்டன; ராஜூவிடம் அவன் பற்பல நற்பண்புகளைக் கண்டான்; அவரது அன்பும் ஆதரவும் அவனைப் பெரிதும் ஆகர்ஷித்தன; அவரைத் தன் சகோதரர் போலவே மணி நேசித்தான். தன் இருண்ட கண்களைத் திறந்து உலகத்தின் உண்மையொளியைக்காட்டியகுருவாக அவரைமதித்தான். அவர் அவனோடு துன்ப துயரங்களைப் பங்கிட்டுக்

கொண்டார்; வேலைகளைப் பங்கிட்டுக் கொண்டார். அவன் சிறு குழந்தை போல் தெரியாத்தனமாகக் கேட்கும் சிறுசந்தேகங்களையும்கூட, அவர் தெளிவிக்க முன்வந்தார். ராஜூவும் மணியும் சங்க வேலைகளை முடித்துவிட்டு, சமயங்களில் இரவு பூராவும் உட்கார்ந்து விவாதிப்பார்கள்; மணி அவரிடம் எதையும் மறைக்க விரும்பவில்லை அவனுக்கே அவரிடம் தனது அந்தரங்கங்களை யெல்லாம் சொல்லிவிட வேண்டும் போலிருந்தது. அவன் அவரிடம் தன் கடந்த கால வாழ்வின் கோரங்களைப் பற்றி இழி தன்மைகளைப் பற்றிச் சொன்னான்;பள்ளி வாழ்வில் தான் கனவு கண்ட சொப்பன வாழ்க்கையைப் பற்றிச் சொன்னான்; தன் நண்பன் சங்கரைப் பற்றி, தாயைப்பற்றி, கமலாவைப்பற்றி யெல்லாம் சொன்னான்; தன் காதலையும்கூட, அவன் அவரிடம் தெரிவித்தான். கடந்த ஆறு மாத காலத்தில் அவர் தன்னை ஒரு சிறந்த லட்சியத்துக்காகப் பாடுபடும் பணியில் இழுத்து விட்டதை எண்ணியெண்ணி அவன் பூரித்தான்.

அன்றிரவு மணி தன்னந்தனியாக இருந்து ஒரு புத்தகத்தை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தான். எண்ணெய் வற்றி இரட்டைத் திரிபோட்டு விகாரமாக எரிந்து கொண்டிருந்த விளக்கொளியில் அவன் அந்தப் புத்தகத்தை ஆர்வத்தோடு படித்துக் கொண்டிருந்தான். ஆனால் அந்த இதயமற்ற விளக்கின் சுடர் திடீரென்று துள்ளித் துள்ளிக் குதித்து விட்டு, தன் உயிரை விடுத்து அணைந்தது. மணி புத்தகத்தை மூடி வைத்து விட்டு, வெளி வராந்தாவில் வந்து திண்ணையில் படுத்து, தன் சிந்தனையைத் திரிய விட்டான்.

'மணியும் பன்னிரண்டாகப் போகிறது. இன்னும் ராஜூவைக் காணோமே! ஏன் இவ்வளவு நேரம்? எப்படியும் படுக்க வந்துவிடுவார்-ராஜூ! அவருக்கு நான் எவ்வளவு கடமைப்பட்டவன்? என்னை மனிதனாக்கியவரல்லவா அவர்? அன்று ஆஸ்பத்திரியில் கிடந்த போது சங்கர்

என்னிடம் என்னென்னவோ சொன்னான். அந்த வார்த்தைகள் எனக்குப் புதிராக இருந்தன. சொப்பன வாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பவனுக்கு, பிரத்தியட்ச உண்மைகள் எப்படிப் புரியும்? புரியாதுதான். ஆனால்-நான் பிரத்தியட்ச வாழ்வின் குரூர வசீகரங்களை நேரில் அனுபவ பூர்வமாக அறிந்த போதோ? அந்த வாழ்க்கையும் எனக்குப் புதிராகவேதான் இருந்தது! வாழ்வின் சிரமங்களையும், சிக்கல்களையும் என் மனத்தின் சொப்பனக் கருத்துக்களைக் கொண்டுதானே அளவிட முயன்றேன்! வாழ்வின் ரகசியங்களை அளந்தறிய முடியாது தவித்துத் தெருவில் நின்ற என் கண்களைத் திறந்து விட்டவரல்லவா, ராஜு! பிரத்தியட்ச வாழ்வை, பிரத்தியட்ச உண்மைகளைக் கொண்டுதான் அளவிட வேண்டும் என்று எனக்கு உணர்த்திய ஞானாசிரியரல்லவா ராஜு!

அர்த்த சாம இருளின் அந்தகாரத்திலே வாழ்வின் ரகசியங்களைப் பற்றிய தத்துவ விசாரத்தில் ஈடுபட்டு, தன்னை மறந்திருந்தான் மணி.

"மணி, மணி!" என்று திடீர்க் குரல் கேட்டு விழித்தெழுந்தான் அவன்.

எதிரே ராஜு நின்றுகொண்டிருந்தார்.

"என்ன மணி, அதற்குள்ளே தூங்கியாச்சா?"

"இல்லை, ராஜு உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்."

"சரி. தூக்கம் வந்தால் தூங்குங்கள். நாளை முதல் நமக்கு இரண்டு மூன்று நாளைக்கு ஓயாத வேலை யிருக்கிறது."

"என்ன வேலை? புதிதாக ஏதாவது பிரச்னை கிளம்பி யிருக்கிறதா?"

"ஒன்றுமில்லை. சேலம், சின்னாளப்பட்டி முதலிய

ஊர்களிலிருந்து சென்னைக்கு நெசவாளர்கள் புறப்பட்டுச் செல்கிறார்களல்லவா? அதுபோல், நமது ஊர்ப் பக்கமிருந்தும் நெசவாளர்கள் புறப்பட்டு வருகிறார்கள். சீவில்லிபுத்தூர், அருப்புக்கோட்டை முதலிய ஊர் களிலிருந்து நெசவாளர் பட்டினிப் பட்டாளம் புறப்பட்டு வருகிறது. அவர்களை வரவேற்று உபசரித்து அவர்களுக்கு ஆதரவு திரட்டி வழியனுப்பிவைக்கவேண்டாமா? இன்னும் இரண்டு நாட்களில் அவர்கள் இங்கு வந்து விடுவார்கள். அதற்குள் நாம் சகல ஏற்பாடுகளும் செய்யவேண்டும். சரி, தூங்குங்கள்; விடிந்ததும் யோசிப்போம்" என்று கூறிவிட்டு, உள்ளே படுக்கச் சென்றார் ராஜு.

'பட்டினிப் பட்டாளம்.'

மணியின் மனத்தில் அந்த ஒரு விஷயம் மட்டும் அழுத்தமாகப் பதிந்துவிட்டது.

'மக்கள் தங்கள் பட்டினியை, ஊரறிய, உலகறியப் பறைசாற்றிக் கொண்டு பட்டாளமாகத் திரண்டு வருவதென்றால், அவர்கள் நிலைமை எவ்வளவு மோசமாகட போயிருக்க வேண்டும்? பட்டாளமாகத் திரண்டு தங்கள் பட்டினிக்கு விமோசனம் தேட முன்வரும் அந்த மக்களுக்குத்தான் என்ன நம்பிக்கை? என்ன உறுதி?'

மணி அந்தப் பட்டாளத்தினரை அப்போதே பார்த்து விட வேண்டும் என்று எண்ணினான். அந்தப் பட்டாளத்தினரை விரைவில் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வம் அவன் இதயத்தில் மிஞ்சி வளர்ந்தது.

'பட்டினிப் பட்டாளம், பட்டினிப் பட்டாளம்.'

மணி அதே நினைவாகத் தன் கண்களை மூடினான்; அன்றிரவு அவனுக்கு நிம்மதியான தூக்கமே கிட்ட வில்லை.

# 23

அன்று காலையில் மணி பொழுது விடிவதற்கு முன்பே எழுந்துவிட்டான்.

முந்திய நாள் இரவில் மட்டுமல்ல, இரண்டு நாட்களாகவே மணி இராப் பகலாய் வேலைசெய்தான். இரவில் கூட அவனுக்குத் தூங்க நேரம் கிடைக்கவில்லை; தூங்க நேரம் கிடைத்தாலும் அவனுக்குத் தூக்கத்தைப் பற்றிய நினைவுகூட வருவதில்லை. எப்போதாவது தன்னையும் மீறித் தூக்கவெறி அவனைக் கிறக்கினால், அவன் இருந்த இடத்திலேயே சில நிமிஷம் கோழித் தூக்கம் போட்டுச் சமாளித்துக் கொண்டான். இரண்டு நாட்களாக அவன் மனத்தில் நிரப்பி நின்ற ஒரே எண்ணம் 'பட்டினிப் பட்டாளத்தார் எப்போது வந்து சேர்வார்கள்?' என்பதுதான்.

அவர்கள்வரப்போகும்நாளும்வந்துவிட்டது.

மணியும் அவனோடு ஒத்துழைத்த வேறு சில நெசவாள ஊழியர்களும் பட்டினிப் பட்டாளத்தின் வரவைக் குறித்து நகரெங்கும் விளம்பரப் படுத்தி யிருந்தார்கள். நகரின் பிரதான நாற்சந்தி மூலை களிலெல்லாம் பட்டினிப் பட்டாளத்தின் வரவைத் தெரிவித்து, மக்கள் ஆதரவைக் கோரும் போர்டுகள் தொங்கவிடப் பட்டிருந்தன; நகரத்தின் சுவரெங்கிலும் பட்டினிப்பட்டாளத்தினரின் வரவையும் போராட்டத் தையும் ஆதரித்து, போஸ்டர்கள் ஒட்டப்பட்டிருந்தன. பிரதான வீதிகளிலெல்லாம் ரோட்டின் மீது 'வருக!' 'வருக!' படைதிரண்டு வரும் பட்டினிப் பட்டாளமே வருக!' என்றெல்லாம் வரவேற்புரைகள் தீட்டப் பெற்றிருந்தன. இந்த விளம்பரங்களை யெல்லாம் மணியே கூட நின்று ஒத்துழைத்து நிறைவேற்றினான். நிலவு வெளிச்சம் பால்

போல் பொழிந்து கொண்டிருந்த அந்தக் கார்த்திகை மாச இரவில் கொட்டும் பனியையும் ஊதைக் குளிரையும் பொருட்படுத்தாது, மணி அந்த விளம்பரப் போர்டுகளில் பலவற்றைத் தானே சுமந்து சென்று பல இடங்களில் தொங்கவிட்டான்; போஸ்டர்கள் ஒட்டினான்; அத்தனை குளிரிலும் அவன் உள்ளம் மட்டும் பட்டினிப் பட்டாளத் தினரை வரவேற்கும் உற்சாகத்தில் குதுகுதுத்துப் பொங்கி, அவன் உடம்பில் வெதுவெதுப்பையும் விறுவிறுப்பையும் ஊட்டிக்கொண்டிருந்தது.

விளம்பரத்தோடு மட்டுமல்லாமல், மணி பட்டினிப் பட்டாளத்தினரை வரவேற்கும் பணியில் ஈடுபடுமாறு மக்களிடையே பிரசாரம் செய்து வந்தான்; நெசவாளர் களையும், மற்றும் பல ஜனநாயகவாதிகளையும் சந்தித்து அவர்கள் ஆதரவைத் திரட்டினான்; சகோதரத் தொழிற் சங்கங்களையும், வாலிபர் சங்கங்களையும், வாசகசாலை களையும், அரசியல் கட்சிகளையும் அந்த வரவேற்பில் ஈடுபடச்செய்வதற்காக,அவற்றின் நிர்வாகிகளைச்சந்தித்து அவர்கள் ஆதரவைப்பெற்றான்;அத்துடன் படை திரண்டு வரும் நெசவாளிகளுக்கு, அவர்கள் மதுரையில் தங்கும் காலத்தில், உணவு கொடுத்து உபசரிப்பதற்காக, உண்டியல் எடுத்துக்கடை கடையாகத்தெருத்தெருவாகச்சென்று நிதி பிரித்தான்; அரிசி, காய்கறி, மற்றும் உணவுப் பொருள் களையும் நன்கொடையாகச் சேகரித்தான். பட்டினிப் பட்டாளத்தினரின்போராட்டத்துக்குஆதரவுதெரிவிக்கும் முறையில் அன்று மதுரை நெசவாளர் சங்கத்தின் ஆதரவில் ஒரு மாபெரும் ஊர்வலம் நடந்துவதற்கும், அவர்களது கோரிக்கைகளை மக்களிடம் எடுத்துக் கூறி, மக்களின் ஆதரவைப் பெறுவதற்காக அன்று மாலை ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் நடத்துவதற்கும் ஏற்பாடுசெய்திருந்தான். அந்த இரண்டு நாட்களிலும் அவன் பம்பரமாகத்தான் சுழன்றுவேலைசெய்தான். நெசவாளர்களின்போராட்டத் துக்காக, மக்களின் ஆதரவைத் திரட்டும் ஒவ்வொரு நிமிஷத் தையும் அவன் பொன் போல் பயன்படுத்தினான்.

'ஆம். நாம் ஒவ்வொரு நிமிஷத்தையும் பொருட் படுத்தித்தான் வேலை செய்ய வேண்டும். நெசவாளர் போராட்டத்தின் வெற்றி எத்தனை நிமிஷங்கள் தாமத மாகின்றதோ, அத்தனை நிமிஷங்களுக்குள் எவ்வளவு கோரங்கள், நஷ்டங்கள் ஏற்பட்டுவிடக் கூடும்? நித்த நித்தம் நாடெங்கிலும் ஆங்காங்கே ஊருக்கு ஊர் பட்டினிச் சாவுகளும், தற்கொலைகளும் நேர்ந்து வரும் இந்த நெருக்கடியான கட்டத்தில் நாம் எவ்வளவுக்கெவ்வளவு துரிதமாய்ப் பணியாற்றி வெற்றி காண்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு இந்த நாட்டில் பல்வேறு மனித ஜீவன்களை சாவுப் பாதையினின்றும் தடுத்து நிறுத்த முடியுமே!' என்றெல்லாம் அவன் தனக்குள் அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொண்டு இருந்தான். ஒவ்வொரு நிமிஷமும் ஒரு மனித உயிர்போல் அவனுக்குத் தோன்றியது; அந்த எண்ணம்தான் அவனைச் சிறிது நேரம்கூட ஓய்ந்திருக்கவிடாமல் ஓடியாடி உழைக்கத் தூண்டியது-

மதுரையிலிருந்து திருப்பரங்குன்றம் செல்லும் மங்கம்மாள் சாலையை நோக்கி மணியும், ராஜுவும், நூற்றுக்கணக்கான நெசவாளர்களும் பொழுதுவிடிவதற்கு முன்பே புறப்பட்டுச் சென்றார்கள். மதுரை நகரின் ஊர் எல்லையிலேயே பட்டினிப் பட்டாளத்தினரை வரவேற்று அழைத்து வருவதற்காக அவர்கள் சென்றார்கள்; அவர்களைப்போல் நகரின் பல பாகங்களிலிருந்தும் தொழிலாளர்களும், பொது மக்களும் அதிகாலையிலேயே மங்கம்மாள் சாலையை நோக்கிப் புறப்பட்டுவிட்டார்கள்; பல்வேறு உபநதிகள் சங்கமமாகும் மகா சமுத்திரம்போல் மங்கம்மாள் சாலை, அன்று காலையில் மதுரை நகரத்தின் சந்து பொந்துகளிலிருந்தும் தொழிலாளர் குடியிருப்பு களிலிருந்தும் மக்களை ஆகர்ஷித்துக்கவர்ந்திழுத்தது.

பொழுதுபலபலவென்றுவிடிந்தது.

மேகப்படலமற்று நிர்மலமாகத் துலங்கிய கீழ்த்திசை வானத்தில் சூரிய வட்டம் வெதுவெதுப்பு நிறைந்த

கதிர்களை நீளப் பரப்பி, மங்கம்மாள் சாலையில் கூடி நின்ற மக்களின் உள்ளத்தையும் உடலையும் இதப்படுத்தியது; பட்டினிப்பட்டாளத்தினரைவரவேற்பதற்காகக்கூடிநின்ற அந்த மக்களின் முகத்தில் பிரதிபலித்த உற்சாகத்தையும் ஒளியையும் தானும் பெற்றுப் பிரகாசிப்பதுபோல் சூ ரிய ஒளி நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துக் கொண்டிருந்தது.

வாழையிலையில் கட்டி வைக்கப் பெற்ற பூமாலை யோடு, மணியும் அவனுடைய தோழர்களும் பட்டினிப் பட்டாளத்தினரின் வரவை நிமிஷத்துக்கு நிமிஷம் எதிர்பார்த்து, மரச்செறிவு நிறைந்து கூடாரம்போல் நீண்டு தெரியும் மங்கம்மாள் சாலையில் கண்ணெட்டுத்தொலைவு வரைக்கும் ஏறிட்டுப் பார்த்தவாறு நின்று கொண்டிருந் தார்கள். நேரம் ஆக ஆக, மணியின் மனத்தில் பட்டினிப் பட்டாளத்தினரை வரவேற்கத் துடிக்கும் ஆர்வ உணர்ச்சி மேலோங்கிப் படபடத்தது. இரண்டு நிமிஷங்களுக்கு ஒரு முறை அவன் மனம் 'அவர்கள் ஏன் இன்னும் வரவில்லை?' என்று எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தது. காதலனின் வரவை எண்ணி ஏங்கி, வழி மேல் விழி வைத்து நிற்கும் காதலியின் உள்ளத்தைப் போல், அவன் உள்ளமும் உடலும் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தது. சிறிது நேரத்தில் தூது கொண்டு வரும் பாங்கியை யைப்போல், திருப்பரங்குன்றத்திலிருந்து மதுரைக்கு வந்து கொண்டிருந்த பஸ்ஸின் டிரைவர் காரை நிறுத்தி, "பட்டினிப்பட்டாளத்தார் இன்னும் சிறிது நேரத்தில் வந்து விடுவார்கள்; பசுமலையை நெருங்கி விட்டார்கள்!" என்று தகவல் சொல்லிவிட்டுச் சென்றார். அந்தச் செய்தியைக் கேட்டதும் மணியின் மனத்தில் எப்படியும் அவர்கள் வந்து விடுவார்கள் என்ற ஆறுதலுணர்ச்சியும், சீக்கிரம் வரமாட்டேன் என்கிறார்களே என்ற ஆதங்கமும் மாறி மாறிச் சுழன்று அவனது தவிப்பை அதிகப்படுத்திக் கொண்டிருந்தன.

அந்தப் பட்டினிப் பட்டாளத்தினரை எதிர்கொண்டு அழைக்கப் போவதுபோல், வானத்தில் விரைவாக

மேலேறிச் சென்று கொண்டிருந்தது சூரியக் கதிர்; நீண்டு கிடந்த மரங்களின் நிழல்களெல்லாம் தாமும் அந்த வரவேற்பில் பங்கு கொள்ள விரும்புவதுபோல் வயற்புறங் களிலிருந்து நீளம் சுருங்கி, சாலையை நோக்கிக் குறுகிவந்து கொண்டிருந்தன; சாலைப்புறத்தில் கூடி நின்ற மக்களின் தொகையும் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துவந்தது.

எட்டரை மணி சுமாருக்கு, மங்கம்மாள் சாலையின் தென் கோடியில் கிணற்றுக்குள்ளிருந்து எழுப்பும் குரலைப் போல் ஆரவார ஒலி கேட்டது; அந்த மங்கிய ஆரவாரம் அங்கு நின்றுகொண்டிருந்த மணியின் மனதில் ஏதோ ஒரு தெய்வீக நாதம்போல் ஒலித்து விம்மியது. அவன் கண்களை அகல விரித்துக்கொண்டு வைத்த கண் வாங்காமல், இமைதட்டாமல், மங்கம்மாள் சாலைத் தொலைவில் கண் பதித்து நின்றான். சிறிது நேரத்தில், தூரத்தில் செம்மண் புழுதிப் படலம் மரச் செறிவையும் கடந்து, செக்கர் ஒளிபோல் வான மண்டலத்தில் பரவுவதை அவன் கண்டான்; செக்கச் சிவந்த செம்மண் மண்டலத்திலிருந்து, யாக குண்டப் புகையிலிருந்து கிளம்பி வரும் பூத உருவங்களைப்போல், மனித உருவங்கள் தோன்றி முன்னேறி வருவதையும் அவன் கண்டான்.

"அதோ வந்து விட்டார்கள்!" என்று அவனையும் அறியாமல், அவன் வாய்விட்டுக் கூறி மகிழ்ந்தான். அவனுடையகாலும்கையும்கட்டிப்போடப்பட்டபந்தயக் குதிரையைப்போல் துறுதுறுத்தன; அவன் இதயம், அவர்களைஎதிர்கொண்டுஅழைக்கப்போகும்உற்சாகத்தில் நிதானகதி இழந்து படபடத்துத் துடித்தது; அவன் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டு நின்றான்...

பட்டினிப் பட்டாளம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. போர் முகத்தை நோக்கிச் செல் லும்முன்னணி வீரர்களைப் போல் அந்தப் பட்டா ளத்தினர் முன்னேறி வந்துகொண்டிருந்தார்கள்; அவர்கள்

அருகில்வந்துசேர்வதற்குமுன்பேஅவர்கள்கர்ஜித்துவரும் கோஷங்களின் இடிமுழக்கம் அவர்கள் வரவைத் தூது சொல்லி எதிரொலித்தது.

"வாழப்பிறந்தோம்.சாகமாட்டோம்!"

"வேலைகொடு.அல்லதுசோறுகொடு!"

"போராடுவோம்.வெற்றிபெறுவோம்!"

"போராடுவோம்.வெற்றிபெறுவோம்!"

புயலின் வரவை முன்னறிவித்து ஹுுங்காரித்து முன்னேறி வரும் சூறைக் காற்றின் ஓலத்தைப்போல், அந்த கோஷங்களின் முழக்கவொலி நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துக்கொண்டிருந்தது;சாலைப்புறத்தில்கூடிநின்ற மக்களெல்லாம் அந்த முழக்கவொலி கேட்டுச் சுறு சுறுப்படைந்தார்கள்.

அவர்கள் வந்து விட்டார்கள்-

அந்தப் படை வரிசைக்கு முன்னணியில் "வாழப் பிறந்தோம்;சாகமாட்டோம்!"என்றஎழுத்துக்கள்பொறித்த பதாகை கட்டியம் கூறி முன்னேறி வந்தது. அந்த வீரப்பதாகையின் நிழலில் பட்டாளத்தின் தலைவர் வந்து கொண்டிருந்தார். தலைவரைப் பின்தொடர்ந்து, தமது போர்க் கோஷங்களை முழக்கிக் கொண்டு கட்டுத் தறிகளையும் விலங்குகளையும் உடைத்தெறிந்துவிட்டு வருகின்ற மத்த கஜப் படைகளைப்போல், நெசவாள வீரர்கள் வந்து கொண்டிருந்தார்கள். பட்டாளத்தினர் அருகே நெருங்கி வந்ததும், கூட்டத்தினர் அலைமோதிச் சாடிக்கொண்டு அவர்களை எதிர்கொண்டு அழைக்க முன்னேறினர். போர் முனையில் இருவேறு திசை களிலிருந்து வந்து ஒன்று கலக்கும் சகோதரப் பட்டாளங் களைப் போல, மதுரை நகர மக்களும் பட்டினிப் பட்டாளத்தினரும் சந்தித்தனர்.

"வாழப் பிறந்தோம்!" என்று பட்டினிப் பட்டாளத்தார் கோஷம் எழுப்பினார்கள்.

"சாகமாட்டோம்!" என்று கடலலை பொங்கியது போல் எதிரொலி கிளப்பினர் மதுரை மக்கள்.

மணி ஓடோடியும் முன்சென்று, பட்டினிப் பட்டாளத்தின் தலைவருக்கு மாலையிட்டான். மக்களின் ஆரவாரம் சாலை மரங்களிலெல்லாம் மோதி எதிரொலித்தது. மணியைத் தொடர்ந்து பற்பல சங்க நிர்வாகிகளும், தொழிலாளிகளும் பட்டினிப் பட்டாளத்தின் தலைவருக்கும், படையினருக்கும் மாலைகள் சூட்டி வரவேற்றனர்.

மணியின் உள்ளம் அந்தப் பட்டாளத்தினரைச் சந்தித்தது முதற்கொண்டு இன்னதென அறிய முடியாத இன்ப உணர்ச்சிக்கும், பரபரப்புக்கும் ஆளாகிப் புளகித்தது. இன்னது பேசுவதெனத் தெரியாமல், அவர்களிடம் தொடர்பற்றுப் பல கேள்விகளைக் கேட்டு விசாரித்துக் கொண்டான்.

சிறிது நேரத்தில், பட்டாளத்தினரும், கூடியிருந்த மதுரை மக்களும் அங்கிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு, கோஷங்களை முழக்கிக்கொண்டு நகரை நோக்கிக் கிளம்பினர்.

"வாழப்பிறந்தோம்.சாகமாட்டோம்!"

"வேலைகொடு.அல்லதுசோறுகொடு!"

மதுரை நகரின் பிரதான வீதிகளில் இந்த முழக்கங்கள் விம்மியெழுந்தன. சூறைக் காற்றைப்போல் கோஷித்துக் கொண்டு அலைபுரண்டுவரும் கட்டாற்றுவெள்ளம்போல் முன்னேறிக் கொண்டு பட்டினிப் பட்டாளத்தார் மதுரை நகரை வலம் வந்தார்கள்; அந்த போர்ப் படையினரின் கோஷம், நீண்டு வளர்ந்த மதுரை நகரத்தின் கட்டிடங்களுக்குள்ளும், கட்டிடங்களுக்குளே சுகவாசம் செய்யும் மனிதர்களின் உள்ளத்துக்குள்ளும் புகுந்து மோதியது.

ஆயிரமாயிரம் மக்கள் நகர வீதிகளின் இருமருங்கிலும் கூடி நின்று,பட்டினிப்பட்டாளத்தைவரவேற்றார்கள்;பட்டினி பட்டாளத்தாரின்கோஷங்களைத்தாமும்கோஷித்தார்கள்; பலர் அந்தப் பட்டாள அணிகளோடு கலந்து கொண் டார்கள்.

அந்தப் பட்டாளத்தின் முன்னணியில் நின்று மணியும், ராஜூவும் கோஷங்களிட்டுச் சென்றார்கள்; அந்தக் கோஷங்களைத் தான் சொல்லி முடிந்தபின், அந்தக் கோஷங்களுக்கு எதிரொலியாக அணி வகுப்பிலிருந்து எழுந்து அலை மோதித் திரண்டு வரும் எதிரொலியைக் கேட்டு, மணியின் உள்ளம் சிலிர்த்தது; உடம்பில் என்றுமில்லாத புதுப் பலமும், உணர்ச்சியும் ஊறிப் பெருகித்ததும்புவது போல் அவனுக்குத்தோன்றியது.

ஆவணி வீதியின் ஈசான மூலை கடந்ததும், பட்டாளத்தின் முன் வரிசையிலிருந்த ஒரு ஊழியர் மெகாபோன் மூலம் மக்களுக்கு அறிவித்தார்.

"மதுரை மக்களே!இந்தஅரசாங்கம்நெசவாளர்களின் வயிற்றில் அடித்துவிட்டது.அவர்கள் தம் வாழ்க்கைக்காகப் போராடி முன்னேறி வருகிறார்கள்; அருப்புக்கோட்டை, சாத்தூர், சீவில்லிப்புத்தூர் முதலிய ஊர்களிலிருந்து இந்த நெசவாளிகள் பட்டினிப் பட்டாளமாகக் கிளம்பி, சென்னை நோக்கிக் கால்நடையில் செல்கிறார்கள். சிங்கத்தின் குகையிலேயே சிங்கத்தோடு போராடுவது போல், இவர்கள் தம்மை வஞ்சித்த அரசியலாரோடு உரிமைக்காகப் போராடுவதற்காக, இந்தப் புனித யாத்திரையில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களை வரவேற்று உபசரித்து ஆதரவளித்து வழியனுப்பி வைப்பது நம் கடமை. எனவே எல்லோரும் இவர்களுக்கு உணவு வழங்குவதற்காகவும், வழிச் செலவுக்குக் கொடுத்து உதவுவதற்காகவும் பொருளுதவி செய்ய வேண்டுகிறோம்..."

ஊழியரின் அறைகூவல் வீண் போகவில்லை. கோஷமிட்டு முன்னேறிச் செல்லும் பட்டாளத்தினருக்குத்

தெருவில் நின்ற மக்கள் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்ய முன் வந்தார்கள்.படையின் முன்னணியில் துண்டை விரித்தவாறு சென்று கொண்டிருந்த ஊழியரின் முந்தியில் செப்புக் காசுகளும் வெள்ளி நாணயங்களும் வந்து விழத் தொடங்கின.

"வேலைகொடு அல்லது வெளியேறு!"

"மக்கள் சர்க்கார் வேண்டும்!"

நிமிர்ந்த நன்னடையோடு நேர் கொண்ட பார்வையோடு பட்டினிப் படை வீதிகளை வலம் வந்தது. பல வீடுகளில் பெண்கள் வாசலில் கோலமிட்டு, ஊர்வலத்தை வரவேற்றார்கள்; பற்பல சங்கங்கள் அவர்களுக்கு மாலை மரியாதை செய்து வரவேற்றன; ஒரு வாசகசாலை அன்பர்கள் அந்தப் பட்டாளத்தினரைத் தமது இடத்தில், நிறுத்தி,சிரமபரிகாரமாய்ப்பானகமும்,மோரும்கொடுத்து உபசரித்தார்கள்; சிலர் ஊர்வலத்தினருக்குக் கடைகளிலிருந்து பலகாரங்களும் திண்பண்டங்களும் வாங்கி வழங்கினார்கள்.

ஊர்வலம் மதுரை மக்களின் அனுதாபத்தையும் ஆதரவையும் திரட்டிப் பலம் பெற்றவாறு, மதுரை நெசவாளர் சங்கத்துக்கு வந்து சேர்ந்தது; சங்க முகப்பில் சூரிய ஒளியில் கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நின்ற சங்கக் கொடி அந்த ஊர்வலத்தினரைக் கண்டதும், அதிக உற்சாகத்துடன்படபடத்துஅவர்களைவரவேற்பதுபோல் காற்றில் ஆடியது.

பட்டினிப் பட்டாளத்தினர் அன்று நெசவாளர் சங்கத்திலே தங்கினார்கள். நெசவாளர் சங்க ஊழியர்கள் அவர்களுக்கு அன்று மதியம் வடை பாயசத்தோடு விருந்தளித்து உபசரித்தார்கள்; மணி அந்த நெசவாளர் படையினரை உபசரிப்பதிலும், அவர்களோடு பேசி அவர்கள் சிரமங்களைக் கேட்டறிவதிலும் மிகுந்த பிரயாசையும், கவனமும் எடுத்துக் கொண்டான்.

பட்டாளத்திலிருந்த நெசவாளர்கள் பலரும் மானத்தோடு பிழைத்து வந்தவர்கள். தங்கள் குடும்பத்தின் கஷ்ட நிலைமைகளையும் பசிக் கொடுமையையும் அவர்கள் வெளியே தெரியாமல் மறைத்து வைத்து, மானத்தோடும், கெளரவத்தோடும் வாழ முயன்றார்கள். ஆனால் பசித்து அழும்குழந்தைகுட்டிகளின் முகங்களும்,குழந்தைகளுக்குப் பதில் சொல்ல வகையற்று வாயடைத்துக் கண்ணீர் விட்டு நிற்கும் மனைவிமார்களின் முகங்களும்தான் அவர்களைத் தன்னுணர்வு கொள்ளச் செய்தன. உள்ளுக்குள்ளேயே சூடேறிக் கொண்டு வரும் தண்ணீர் எப்படித் தன் கொதிநிலை வந்ததும் திடீரென்று கொப்புளங்களை வாரியிறைத்துத் துள்ளிக் குதித்துக் கொதிக்க ஆரம்பிக்கிறதோ, அதேபோல, அவர்கள் மனத்துக்குள்ளாகவும் நித்த நித்தம் சூடேறிக் கொதித்து வந்த அவர்களது கஷ்ட நிலைமை அவர்களை ஒரு நாள் கொதித்தெழச் செய்துவிட்டது; கொதிக்கின்ற தண்ணீரைப் போல் அவர்கள் குமுறியெழுந்து தங்கள் விமோசனத்துக்காகப் போராட முன்வந்தார்கள். தங்கள் கோரிக்கைகளை அரசாங்கத்துக்குத் தெரிவித்தார்கள்; ஆனால், அதற்கு எந்தவிதப் பிரதி பலனையும் பெறாத காரணத்தால், தலைநகருக்கே சென்று போராடுவது என்று துணிந்து புறப்பட்டு விட்டார்கள்.

அந்தப் பட்டாளத்தில் வாலிபர்கள் இருந்தார்கள்; வயோதிகத் தன்மையை எட்டிப் பிடித்தவர்களும் இருந்தார்கள்; அரசியல் உணர்ச்சி கொண்டவர்கள் இருந்தார்கள்; அரசியலின் போக்கை அறியாதவர்களும் இருந்தார்கள்; தெய்வ நம்பிக்கை கொண்டவர்கள் இருந்தார்கள்;தெய்வ நம்பிக்கை அற்றவர்கள் இருந்தார்கள்; காங்கிரஸ் தலைவர்கள் மீது விசுவாசம் இழந்தவர்களும் இருந்தார்கள்; இழக்காதவர்களும் இருந்தார்கள். ஆனால் அவர்கள் அனைவரும் தங்கள் கஷ்டங்களைப் போக்க இந்த சர்க்கார் வேண்டிய முயற்சிகளைச் செய்யவில்லை என்ற

உண்மையை மட்டும் பரிபூரணமாக உணர்ந்திருந்தார்கள்; பசிப் பிரச்னை இவர்கள் அனைவரையும் ஒன்றுபட்டு ஓரணியில் நிற்கச் செய்தது...

அந்தப் படையில் உள்ள ஒரு வயோதிகம் தட்டிய மனிதரைக் கண்டு, "என்னய்யா, நீங்ககூட இந்த வயசிலே இப்படிப் புறப்பட்டு வந்திட்டிங்களே!" என்று அனுதாபத்தோடும் ஆச்சரியத்தோடும் கேட்டான் மணி.

அந்தக் கிழவர் தந்த பதில் அவனைத் திடுக்கிட வைத்தது.

"ஆறிலும் சாவு, நூறிலும் சாவுதான், தம்பி. ஆனா, எந்தச் சாவானாலும், ஊரிலே கிடந்து கஷ்டப்பட்டு அவச்சாவு சாகக்கூடாது. சாகிறதே சாகிறோம். நல்ல காரியத்துக்காகஉயிரைவிட்டோம்னாவதுஇருக்கட்டுமே!"

அந்த வயோதிகரின் உறுதியும், நம்பிக்கையும் மணியின் மனத்தில் சில்லிட்டுப் பரந்தது. அவன் அவரைப் பார்த்துச்சொன்னான்.

"பெரியவரே! நீங்கள் இனிச் சாகவேண்டியதில்லை. வாழ்வதற்குரிய மார்க்கத்தில்வந்துவிட்டீர்கள்.உங்களைச் சாகடிக்கும்படி நாங்கள் விட்டுக் கொண்டிருக்க மாட்டோம்!"

மணியின் குரலில் உறுதியும், நம்பிக்கையும் பிரதிபலித்தன.

பட்டினிப் பட்டாளத்தினருக்கு ஆதரவாக அன்று மதுரையிலே பல தொழிலாளர்கள் ஊர்வலம் நடத்தினார்கள்; பலதொழிற்சங்கங்கள் அவர்களுக்குஆதரவாகத் தீர்மானங்கள் நிறைவேற்றின; மாலையில் அவர்களுக்கு ஆதரவாக, ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. பொதுக் கூட்டத்தில் ராஜுவும், பட்டினிப் பட்டாளத்தின் தலைவரும் பேசினார்கள். பத்தாயிரம் மக்களுக்குக் குறைவில்லாமல் கூடியிருந்த அந்தக் கூட்டம் பட்டினி

நெசவாளருக்குத் தன் ஆதரவையும் அனுதாபத்தையும் தெரிவித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியது.

மறுநாட் காலையில் பட்டினிப் பட்டாளத்தினர் மதுரையிலிருந்து கிளம்ப ஆயத்தமானார்கள்; மீண்டும் அவர்கள் தமது கோஷங்களைக் கோஷித்துக்கொண்டு நகர விதிகளைக் கடந்து வடக்கு நோக்கிக் கிளம்பினார்கள்; மதுரை நெசவாளர் சங்க ஊழியர்கள் பலரும் ராஜுவும் மணியும் மதுரை நகர் எல்லைப் புறம் வரையிலும் அவர்களோடு துணை சென்று வழியனுப்பினார்கள்.

பட்டாளத் தலைவர் விடைபெறும் போது "மதுரை மக்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவியுங்கள். அவர்கள் அளித்த ஆதரவுக்கும் உபசரணைக்கும் எங்கள் வந்தனத்தைத் தெரிவியுங்கள். நாங்கள் சென்று வருகிறோம்" என்றார்.

ராஜு அவர் கையைப் பிடித்து விடை பெற்றவாறே, அங்கு கூடியிருந்த மக்களை நோக்கிப் பேசினார்; "நீங்கள் வாழவேண்டும் என்ற புனிதப் போரில் ஈடுபட்டிருக்கிறீர்கள். சென்னைக்குச் செல்கின்ற நீங்கள் தொகையில் ஒரு சிலராக இருக்கலாம். ஆனால் உங்களோடு உங்கள் காலடிபட்ட மண்ணிலுள்ள மக்களின் இதயங்களெல்லாம் துணையாக வருகின்றன என்பதை மட்டும் நீங்கள் மறந்துவிடாதீர்கள். தீரமாகப் போராடுங்கள். வெற்றி வீரர்களாகத் திரும்பிவாருங்கள்."

பட்டினிப் பட்டாளப் படையினரின் கோஷங்கள் தூர தொலையில் ஒலித்தன. அந்தப் படையினர் கண் மறையும் வரையிலும் மணியும் மற்றவர்களும் அங்கேயே நின்று கொண்டிருந்தனர். அவர்களின் கோஷங்களும் உருவங்களும் மறைந்து, அவர்கள் சென்ற திக்கில் எழும்பி நின்ற புழுதி மண்டலம் படிந்து தெளிவுற்ற பிறகும், மணி அந்தத்திசையிலிருந்துகண்களைத்திருப்பாமல் அப்படியே நின்றான். அவன் உள்ளம் ஏதோ ஒரு பார உணர்ச்சிக்கு

ஆளானது போல் பெருமூச்செறிந்து விம்மியது. அவன் கண்களில் காரண காரியமறியாமல் கண்ணீர் துளிர்த்து மறைத்தது. அவன் ஏதோ தனக்கு நெருங்கிய நண்பர்களை இழந்து விட்டது போல் உணர்ந்தான். அந்த உணர்ச்சி அவன் மனத்தில் திடீரென்று ஏதோ ஒரு சூனிய வெளியை உண்டாக்குவதுபோல்தோன்றியது.'நானும்அவர்களுடன் சேர்ந்து போயிருந்தால்?' என்ற அந்தரங்க ஆசை அவன் மனத்தின் அடித்தளத்தில் குறுகுறுத்து இதய வேதனையை அதிகப்படுத்தியது. அவன் மீண்டும் பெருமூச்செறிந்தான்.

"என்ன மணி, திரும்ப வேண்டாமா?" என்ற ராஜுவின் குரல் கேட்டதும்தான் அவனுக்குத் தன்னுணர்வு மீண்டது.

திரும்பி நடந்தான். வழியில் அவன் யாருடனும் எதுவும் பேசவில்லை பேச முடியவும் இல்லை.

பத்திரிகைகளில் தினம் தினம் பட்டினிப் பட்டாளத்தினரின் யாத்திரையைப் பற்றிச் செய்திகள் வந்தன. அவற்றை மணி ஆர்வத்தோடு படித்தான். அந்தப் பட்டாளத்தாருக்கு நகர மக்களும் கிராம மக்களும் பல ஊர்களில் வரவேற்பு அளித்துக் கௌரவித்த செய்திகளைக் கண்டு அவன் மனம் மகிழ்ந்தான். அப்போதெல்லாம் அவன் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்:

'அவர்களை விட்டுப் பிரிய நேர்ந்ததற்காக நான் ஏன் வருத்தப்பட்டேன்? என்னைப் போல் எத்தனை ஊர்களில் எத்தனை பேர்கள் வருந்தியிருப்பார்கள்? அவர்களைப் பிரிவதில் வருந்துவதற்கு என்ன இருக்கிறது? அவர்கள் போராட்டத்துக்கு நாடெங்கிலுமுள்ள மக்கள் குலத்தின் அனுதாபத்தையும் ஆதரவையும் திரட்டிக்கொடுப்பதே நம் வேலை. நமது போராட்டத்தின் முன்னணிப்படை அவர்கள். நாம் பின்னணிப்படை. அவர்கள் எங்கிருந்தாலென்ன? அவர்கள் எங்கிருந்தாலும் அவர்களுக்காகப் போராட விரும்பும் என் இதயமும் அவர்களோடு இருக்கும்!

என் போன்ற எத்தனையோ தோழர்களின் இதயங்களும் அவர்களுக்குத் துணை நிற்கும். அது ஒன்றுதான் நமக்கும் ஆறுதல்; அவர்களுக்கும் தைரியம்...

பட்டினிப் பட்டாளத்தார் வந்து சென்ற பிறகு மணி மீண்டும் சங்க வேலைகளில் ஆர்வத்தோடு ஈடுபட்டான். அந்தப் பட்டாளத்து மக்களின் உறுதியும் வைராக்கியமும் போராட்ட மனப்பான்மையும் அவனுக்குத் தீபஸ்தம்பம் போல் ஆதர்சம் காட்டின...

நெசவாளர் பட்டாளத்தின் வரவு மணிக்கு எத்தனை பரபரப்பையும் பொறுமையின்மையையும் ஊட்டியதோ, அதைவிடப்பன்மடங்குபரபரப்பும்பொறுமையின்மையும் தரக்கூடிய ஒரு நிகழ்ச்சி மணிக்காகக் காத்திருந்தது.

அப்போது ராஜு ஊரிலில்லை. அவர் சென்னையில் நடைபெறவிருந்த ஒரு தொழிலாளர் மகாநாட்டுக்காகச் சென்றிருந்தார். அந்த வேளையில் மணிதான் காரியா லயத்தின் முழுப் பொறுப்பையம் கவனித்து வந்தான். ஒரு நாள் அவன் முக்கியமான கடிதம் ஒன்றைக் காணாமல், அறைமுழுவதும்தேடினான். அலமாரியிலும்பீரோவிலும் தேடி விட்டான். புத்தகங்கள் அத்தனையும் பிரித்துப் பார்த்துச் சலித்து விட்டான். குப்பைக் கூடையைக் கூட அவன் விட்டு வைக்கவில்லை.

'ஒரு வேளை ராஜுதான் அதை எங்கேனும் எடுத்து வைத்திருக்கிறாரோ?' என்ற சந்தேகம் தட்டியதும், அவன் ராஜுவின் துணிமணிகள் இருந்தபெட்டிகளையும் திறந்து தேடத் தொடங்கினான். துணிமணிகளை யெல்லாம் வெளியே இழுத்துப் போட்டுப் பார்த்தும், அந்தக் கடிதத்தைக் காணவில்லை; அதற்குப் பதில் ராஜுவின் பெட்டியின் அடியில் கிடந்த புகைப்படம் தான் அவன் கையில் அகப்பட்டது.

மணி அந்தப் புகைப்படத்தை எடுத்துப் பார்த்தான். அதைப் பார்த்தவுடனேயே அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் கைகள் உணர்ச்சி வசப்பட்டு நடுங்கின.

மறு கணமே அவன் அந்தக் கடிதத்தை மறந்துவிட்டான். அந்தப் படத்தில் பதித்த கண்ணை வாங்க முடியாமல் அப்படியே பிரமித்து விட்டான்,

அந்தப் புகைப்படத்தில் இருளப்பக் கோனாரும், அவர் மனைவி மாரியும் இருந்தார்கள்!

தனக்கு ஏற்பட்ட திக்பிரமையிலிருந்து விடுபட்ட மணியின் மனத்தில் எண்ணற்ற கேள்விகளும் சந்தேகங்களும் சரக்கூடம் வகுத்து அவனைப் பிணித்தன. அவன் அந்தப் படத்தைக் கையிலெடுத்துக் கொண்டு வெளியே வந்தான். படத்தைப் பார்க்கப் பார்க்க, அவனுக்கு இருளப்பக் கோனாரின் நினைவும், அவரது விசுவாச புத்தியும் நினைவுக்கு வந்தன. ஆனால், இருளப்பக் கோனாரைப் பற்றிய நினைவுகளையெல்லாம் மிஞ்சி, மணியின் மனத்தில் படத்தைப் பற்றிய சந்தேகங்களே வலுத்தன.

'இந்தப் படம் இங்கே எப்படி வந்தது? ராஜுவுக்கும் இருளப்பக் கோனாருக்கும் என்ன சம்பந்தம்? இருளப்பக் கோனாரை இவருக்குத் தெரியுமா? இவர் அவருக்கு உறவினரா_'

மணியின் மனத்தில் திடீரென்று இருளப்பக் கோனாரின் காணாமற்போன மகன் வீரையாவைப் பற்றிய நினைவு வந்தது.

'ஒரு வேளை இருளப்பக் கோனாரின் மகன் வீரைய்யாவை ராஜுவுக்குத் தெரிந்திருக்குமோ? வீரையாவை ராஜுக்குத் தெரிந்திருந்தது என்றே வைத்துக் கொண்டாலும், இந்தப் படம் ராஜுவின் பெட்டியில் இருப்பானேன்? ஒருவேளை வீரையாதான் இந்தப் படத்தை இவரிடம் கொடுத்து வைத்திருந்தானோ? ஏன் கொடுத்து வைக்க வேண்டும்? அல்லது வீரையா இறந்து போய் விட்டானோ? ராஜு அவன் ஞாபகார்த்தமாக இந்தப் படத்தைவைத்திருக்கிறாரோ? ஞாபகார்த்தமாக இருளப்பக் கோனாரின் படத்தை ஏன் வைத்திருக்க வேண்டும்...?

'ஒன்றுமட்டும்தெரிகிறது.வீரையாவைராஜுவுக்குத் தெரியும்.வீரையா எங்கிருக்கிறான்? அவனைப் பற்றி ராஜு ஒரு முறைகூடப் பிரஸ்தாபித்ததில்லையே. ஒரு வேளை அவனும் இவரை மாதிரி எங்கேனும் தேசசேவை செய்கிறானா? அல்லது சிறையில் இருக்கிறானோ..?'

மணியின் மனம் அந்தப் படத்தை வைத்துக்கொண்டு என்னென்னவோ சந்தேகங்களை வாரியிறைத்து மேலே போட்டுக்கொண்டு, அவற்றின் பாரத்திலிருந்து வெளிவர முடியாமல் திணறிக்கொண்டிருந்தது. இந்தச் சமயத்தில் ராஜுவும் இங்கில்லையே என்று அவன் மனம் மீண்டும் மீண்டும் எண்ணி யெண்ணி வருந்தியது. அவன் அந்தப் படத்தைப்பற்றியமர்மத்தைஅறிந்துகொள்ளத் துடியாய்த் துடித்தான்.அந்தப்படத்தைக்கையோடுஎடுத்துக்கொண்டு ராஜுவை நன்கறிந்த நெசவாளர் ஊழியர்களைத் தேடிச் சென்றான். அவர்கள் ஒவ்வொருவரிடமும் அந்தப் படத்தைக் காட்டி, 'இந்தப் படத்திலுள்ளவர்களைத் தெரியுமா?' என்று கேட்டான். 'ராஜுவுக்கும் இருளப்பக் கோனாருக்கும் என்ன சம்பந்தம்' என்று விசாரித்தான்.

அவனுக்கு உண்மை புலப்பட வெகுநேரம் ஆகவில்லை.

"இந்தப் படத்திலுள்ளவர்களை எனக்குத் தெரியாது. ஆனால் நீங்கள் சொல்லுகின்ற வீரையாவை எனக்குத் தெரியும்!" என்று அழுத்தலாகப் பதில் அளித்தார் ஒரு ஊழியர்.

"வீரையாவை உங்களுக்குத் தெரியுமா?" என்று வியந்து கேட்டான் மணி.

"நம்ம யூனியன் காரியதரிசி ராஜுதான் வீரையா!" என்று நிர்விசாரமாய்ப் பதில் அளித்தார் அவர்.

"என்னது?" என்று பிளந்த வாய் மூடாமல் பிரமித்து நின்று விட்டான் மணி.

"என்ன? உங்களுக்கு இத்தனை நாள் தெரியாதா?"

அவன் மனத்தில் ஒரு புறத்தில் மகிழ்ச்சியும், மறு புறத்தில் ஆச்சரியமும் மாறி மாறித் தோன்றின; அவனால் தன் மகிழ்ச்சியையோ, ஆச்சரியத்தையோ வார்த்தை வடிவில் வெளியிட முடியவில்லை; திடீரென்று தன்னை ஆட்கொண்ட உணர்ச்சிப் பரவசத்திலிருந்து மீண்டு, தன்னிலைக்கு வர அவனுக்குச் சிறிது நேரம் பிடித்தது.

உடனே மணி அந்த ஊழியரைக் கையோடு சங்கத்துக்குக் கூட்டிவந்து அவரிடம் ராஜுவின் வரலாற்றையெல்லாம் ஆர்வத்தோடு விசாரித்துக் கேட்டான். அந்த ஊழியரும் ராஜுவைப் பற்றித் தாம் அறிந்திருந்த செய்திகளை யெல்லாம் விளக்கிச் சொன்னார்.

-ராஜுவின் சொந்தப் பெயர் வீரையாதான். கடந்த வருஷங்களில் காங்கிரஸ் சர்க்கார் தொழிற் சங்கத் தலைவர்கள் மீது அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டபோது, ராஜு தலைமறைவாக வாழ்ந்து வந்தார். அந்தக் காலத்தில் தான் அவர் தம் பெயரை 'ராஜன்' என்று மாற்றி வைத்துக் கொண்டார். நெசவாளர்களுக்கு ராஜு என்ற பெயரே பழகிப் போனதாலும், பிடித்திருந்ததாலும், வீரையா அந்தப் பெயரையே ஸ்திரமாக்கிக் கொண்டார். நெசவுத்தொழிலாளர் சங்கத்தில் பணியாற்றுவதற்கு முன்பு அவர் மதுரையிலுள்ள பஞ்சாலையில் வேலை பார்த்தார். பஞ்சாலைத் தொழிலாளர்கள் தங்கள் உரிமைகளுக்காகப் போராடிய காலத்தில் ராஜு முன்னணியில் நின்று போரடினார். பின்னால், அவரைப் பழி வாங்கும் நோக்கத்தோடு பஞ்சாலை நிர்வாகஸ்தர்கள் அவர் ஒரு பயங்கர அரசியல்வாதி என்ற குற்றத்தைச் சாட்டி வேலையிலிருந்து நீக்கி விட்டார்கள். அது முதற்கொண்டு அவர் தொழிலாளர் நலனுக்காகப் பாடுபடுகிறார். நெசவாளர் சங்கத்தின் காரியதரிசியாக இருந்து பணியாற்றி வருகிறார். பஞ்சாலையில் வேலை பார்ப்பதற்கு முன்னால்,

அவர் எங்கோ தேயிலைத் தோட்டத்தில் வேலைபார்த்ததாகக் கேள்வி.

மணி அந்த ஊழியரை மாறிமாறிக் கேள்விகள் கேட்டு இத்தனை விவரங்களையும் கிரகித்துக் கொண்டான்.

அன்று முதல் அவனுக்கு ராஜூ எப்போது வந்து சேருவார் என்ற கவலையே பெரிதாய்ப் போய்விட்டது. அன்று அவர் வரமாட்டார் என்று தெரிந்தும்கூட ஒரு வேளை தப்பித் தவறி வந்துவிட மாட்டாரா என்ற அசட்டு நம்பிக்கையோடு ரயில்வே ஸ்டேஷன் வரையிலும் அர்த்த மற்றுச் சென்று திரும்பி அங்கலாய்த்தான்.

'ராஜூ என்று வருவார்?'

அவரை எதிர்பார்த்து தவித்துக் கொண்டிருந்தான் மணி.

கடைசியில் ஒருநாள் அவர் வந்து சேர்ந்தார்.

ராஜூவைக் கண்டதும் மணிக்கு இன்னது பேசுவதென்று தெரியவில்லை. உணர்ச்சி மேலீட்டால் அவன் வாய் அடைத்துப் போய்விட்டது.

"என்ன மணி? சௌக்கியந்தானே!" என்று கேட்டுக் கொண்டே ராஜூ தமது பையை உள்ளே கொண்டு வந்து வைத்தார்; சட்டையைக் கழற்றி ஸ்டாண்டில் மாட்டினார். "மகாநாடு எல்லாம் சிறப்பாக இருந்ததா?" என்று கேட்டான் மணி.

"மிகச் சிறப்பாக நடந்தது!" என்றார் ராஜூ.

மணி தன் தொண்டையை லேசாக இருமிச் சரிப்படுத்திக் கொண்டு, "ராஜூ, நான் இப்போது உங்களைப் பிரமிக்க வைக்கப் போகிறேன்" என்று கூறிக்கொண்டே தன் பையில் வைத்திருந்த புகைப்படத்தை எடுத்து அவர் முன் நீட்டினான்.

"இதுஎங்கேகிடந்தது?கொஞ்சநாளைக்குமுன்னால், நான் இதைத் தேடித் தேடிப் பார்த்துவிட்டு, தொலைந்து போயிற்று என்றல்லவா முடிவு கட்டிவிட்டேன்!" என்று சாவதானமாகச் சொன்னார் ராஜு.

"சரி உங்கள் பேர் வீரையாதானே? இவர்கள்தானே உங்கள்பெற்றோர்?"

"ஆமாம்."

மணிக்குக் குதூகலம் தாங்க முடியவில்லை. அவன் ராஜுவை உட்கார வைத்து, தான் அறிந்துகொண்ட சகல விவரங்களையும் இருளப்பக் கோனாரைப் பற்றிய செய்திகளையும் கூறினான். அதைக் கேட்ட ராஜு பிரமிப்பு அடைந்தார்.

"அப்படியானால், என் பெற்றோர்கள் உயிரோடிருக் கிறார்களா?"

"ஆமாம். உங்களைப்பற்றி அவர்கள் நினைத்து வருந்தாத நாள் இல்லை. அது சரி நீங்கள் ஏன் அவர்களுக்கு ஒரு கடுதாசி கூடப் போடலை?"

"போட்டேன். மதுரைக்கு வந்து வேலைக்கு அமர்ந்த பிறகு ஒரு கடிதம் போட்டேன். விலாசதார் இல்லை என்று திரும்பி வந்து விட்டது. அதிலிருந்து அவர்கள் என்ன ஆனார்கள் என்றே தெரியாது. இந்தப் படம் ஒன்றுதான் அவர்கள் ஞாபகார்த்தமாக என்னிடம் இருக்குது. இது அவர்கள் எப்போதோ சங்கரன் கோயில் தவசித் திருநாளுக்குப் போயிருந்த போது எடுத்த படம்."

"சரி. நீங்கள் இத்தனை நாளும் என்னிடம் உங்கள் வரலாறு பற்றி ஏன் சொல்லவில்லை? கடைசியில் நானாகத்தானே உங்களைக் கண்டுபிடித்தேன்!" என்று பெருமிதத்தோடு சொல்லிக் கொண்டான் மணி.

"சொல்வதற்குச் சந்தர்ப்பம் கிட்டவில்லை அவ்வளவு தான். ஆனால், நீங்கள் உங்கள் கதையைச் சொன்னபோது கூட என் தந்தையின் பெயரைப் பிரஸ்தாபித்தாக ஞாபகம் இல்லையே!" என்று ஏதோ யோசித்தவாறு கூறினார் ராஜூ.

"அப்படியா?" என்று மணியும் வியப்படைந்து கூறினான். பிறகு அவன் ராஜூவிடம் திரும்பி, "ராஜூ, என் தந்தைசாகும்வரையிலும்உங்களைக்கண்டுபிடித்துஉங்கள் பெற்றோரிடம்சேர்த்துவிடவேண்டும்என்றுஎவ்வளவோ தேடினார். கடைசியில் நான்தான் உங்களைக் கண்டு பிடித்தேன்!"என்றுகுதூகலத்தோடுகூறினான்.

ராஜூமெல்லச்சிரித்துக்கொண்டார்.

"நானும் உங்களைப் பிரமிக்கவைக்கப்போகிறேன். நாம் இன்னும் சில தினங்களில் அம்பாசமுத்திரம் போகிறோம்."

"அம்பாசமுத்திரத்துக்கா?பெற்றோரைப்பார்க்கவா?"

"பார்க்க வேண்டியதுதான். ஆனால், இது ஏற்கெனவே முடிவு செய்த திட்டம். சென்னை மகா நாட்டுக்கு, அம்பாசமுத்திரத்திலிருந்து ஒருவர் வந்தார். அம்பாசமுத்திரத்தில் ஒரு நெசவாளர் சங்கம் ஆரம்பித்து நன்கு வேலை செய்கிறதாம். அங்கு யாராவது பேச வரவேண்டும் என்று அங்குள்ள நெசவாளர்கள் கேட்டுக் கொண்டார்களாம். அவர் என்னை வரும்படி அழைத்தார். சரி என்று ஒப்புக்கொண்டு தேதியும் குறிப்பிட்டுவிட்டேன். தெரிந்ததா?"

மணி அவரது பேச்சைச் சரியாகக்கூடக் காதில் வாங்கவில்லை. அதற்குள் அவன் மனம் அம்பா சமுத்திரத்துக்கு ஓடிச் சென்றுவிட்டது.

# 24

மாலைமயங்கும்நேரம்.

அம்பாசமுத்திரம் ரயில்வே ஸ்டேஷனில் திருநெல்வேலியிலிருந்து வரும் செங்கோட்டை பாஸஞ்சரை எதிர்நோக்கி, பிரயாணிகள் பொறுமையை இழந்து தவித்துக்கொண்டிருந்தார்கள்;காத்திருந்தபிரயாணிகளின் பொறுமையை விட ரயிலை எதிர்நோக்கிக் காத்து நின்ற வடிவேலுமுதலியாரும்,சங்கரும்வேறுசிலநெசவாளிகளும் பொறுமையைஇழந்துபுழுங்கிக்கொண்டிருந்தார்கள்.

குறிப்பிட்ட நேரம் கடந்து சுமார் பதினைந்து நிமிஷங்கள் ஆகியும், ரயில் கல்லிடைக் குறிச்சியை விட்டு 'அவுட்' ஆகவில்லை.

"இந்த எழவு ரயில் என்னிக்குத்தான் நேரங் காலத்திலே வந்து தொலைஞ்சிது?" என்று சலித்துக் கொண்டார்ஒருநெசவாளி.

அந்த ரயிலில் அவர்கள் மதுரை நெசவாளர் சங்கக் காரியதரிசிராஜுவைஎதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள் மத்தியான வண்டிக்கே அவர் வந்து சேர்ந்து விடுவார் என்றுதான் தகவல். மத்தியான வண்டிக்கு அவர்கள் எல்லோரும் தலைவரை வரவேற்க மாலையும் கையுமாக வந்து நின்று ஏமாந்து திரும்பினார்கள். அவர் மதியம் வண்டிக்குவரவில்லை.எப்படியும்மாலைவண்டிக்குவந்து விடுவார் என்று நம்பினார்கள். ஆனால் அந்த ரயிலின் தாமதமோ அந்தநம்பிக்கையைக்கூடச்சிதறஅடித்துவிடும் போலிருந்தது.

"என்ன சங்கர், ஏழரை மணிக்குக் கூட்டத்தை ஆரம்பிச்சாகணுமே!" என்று தவித்தார் வடிவேலு முதலியார்.

"நான் அப்பவே சொன்னேன். நேரா திருநெல்வேலிக்கு ஒரு ஆளை அனுப்பி, கையோட கூட்டிக்கிட்டு வரணும்னேன். கேட்டாத்தானே?" என்று ஒரு நெசவாளி தமது எரிச்சலை வெளியிட்டார்.

சங்கர் அவர்களது பொறுமையின்மையைக்கண்டு அவர்களுக்குத் தைரியம் கூறினான்."ரயில்தான் வரட்டுமே! எப்படியும் இந்த ரயிலில் வந்துவிடுவார். திருநெல்வேலியிலிருந்து என் நண்பர் அவரைத் தாமே கூட்டிக்கொண்டு வருவதாக எழுதியிருக்கிறார். எப்படியும் இந்த வண்டியில் வந்து விடுவார்கள்!"

அதற்குள் இன்னொரு நெசவாளி பெருமூச்செறிந்து கொண்டே சொன்னார்:"வந்தாலாச்சு, தம்பி.இல்லேன்னா, நாமும் இன்னிக்கிக் கூட்டம் நடத்தினாப்பிலேதான்; நாளைக்கு நம்ம போராட்டத்தையும் ஆரம்பிச்சாப் போலேதான்!"

அவர்கள் அனைவரும் கிழக்குத் திக்கிலே ரயிலின் கரும்புகை தெரிகிறதா என்று கண்ணை விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; அவர்கள் மனத்தில் இருந்த கவலையெல்லாம் அன்றைய பொதுக் கூட்டம் சிறப்பாக நடந்தேறவேண்டும் என்பதும், மறுநாள் தொடங்கவிருக்கும் போராட்டத்துக்கு எந்தவித விக்கினமும் ஏற்பட்டு விடக் கூடாது என்பதும்தான்.

சென்ற ஒரு சில மாதங்களுக்குள்ளாக அம்பாசமுத்திரத்திலுள்ள நெசவாளர்களின் நிலைமை பெரிதும் மாறிவிட்டது.

ஏதோ அரைப் பட்டினி குறைப் பட்டினியாகவாவது வாழ்க்கை நடத்துவதற்கு, அவர்களுக்கு ஒரு சில மாதங்களுக்கு முன்னே நூல் கிடைத்து வந்தது. இப்போது அந்த நிலைமையும் தட்டுக் கெட்டுப்போய் விட்டது. நைஸ் ரக நூலை வாங்கி நெய்து பிழைத்து வந்த நெசவாளி

களுக்கோ வள்ளிசாக நூலே கிடைக்கவில்லை. மலிந்த ரக நூல்களை வாங்கி நெய்து பிழைத்து வந்த நெசவாளி களுக்கோ, பத்து நாட்களுக்குப் போதுமான வருமானம் கூடக் கிடைக்கவில்லை. நிலைமை சீர் திருந்துகிற வரையிலும் எப்படியாவது, வாயை வயிற்றைக் கட்டியா வது, காலம் தள்ளி விடலாம் என்று எண்ணியிருந்தவர்கள் எண்ணத்திலும் மண் விழுந்து விட்டது. தறித்தொழில் முடக்கப்பட்டவுடன், பலர் வேறுபல சில்லறைத் தொழில் களைத் தேடியலைந்தார்கள்; மணிமுத்தாறு அணைக்கட்டு வேலையில் கூலி வேலை தேடிப் பல பேர் சென்றார்கள்; சென்றவர்களில் முக்காலே மூன்று வீசம் பேர் வேலை கிடைக்காது திரும்பி வந்தார்கள். ஒரு சிலர் இருக்கின்ற சொத்து பத்துக்களை யெல்லாம் விற்றுக் காசாக்கிக் கொண்டு, பட்டணக் கரைகளுக்குப் பிழைப்புத் தேடிச் சென்றார்கள்; சிலர் மரியாதையோடும் மானத்தோடும் பிறந்து வளர்ந்து ஜீவித்த மண்ணில், பட்டினி கிடந்து செத்து அபக்கியாதியடைவதை விட, எங்கேனும் அயலூ ருக்குச்சென்றாவதுசாகலாம்என்றுபயணப்பட்டார்கள்.

ஆனால், அதே சமயத்தில் வேறு பல நெசவாளிகள் என்ன கஷ்டங்கள் நேர்ந்தபோதிலும்பிறந்தமண்ணையும், செய்த தொழிலையும் விட்டுப் பிரிவதில்லை என்ற வைராக்கிய சித்தத்தோடு, நெசவாளர் சங்கத்தில் ஒன்றுபட்டு நின்று தங்கள் உரிமைகளுக்காகப் போராட முன் வந்தார்கள்; சங்கத்தின் மூலம் தங்கள் கஷ்டங்களுக்கு நிவாரணம் தேட முடியும் என்ற நம்பிக்கைக்கு ஆளானார்கள்; தங்கள் கஷ்டங்களின் காரணகாரியத் தொடர்பைப் புரிந்து கொண்டு, தங்கள் தலை விதியைத் தாமே நிர்ணயிக்க முன் வந்தார்கள்.

சுருங்கச் சொன்னால் அவர்கள் அனைவரையும் பல்வேறு கஷ்ட நஷ்டங்கள் நெருப்பைப் போல் சுட்டுத் தகித்துக் கொண்டிருந்தன. ஆனால் ஒரு புறத்திலோ அந்த நெருப்பின் தகிப்பைத் தாங்கி நிற்க முடியாமல் சிலர் நீறாகி,

பஸ்மீகரம் ஆனார்கள்; மறு புறத்திலோ அந்த நெருப்பின் தகிப்பையும் ஜ்வாலையையும் உறுதியோடு தாங்கிக் கொண்டு சிலர் நெருப்பிலிட்ட இரும்பைப் போல் பதப்பட்டு உருக்காக மாறினார்கள்!

வடிவேலு முதலியாரும் சங்கரும் கடந்த மாதங்களில் சங்கத்தைப் பலப்படுத்துவதில் முழுமூச்சுடன் வேலை செய்து, சுமார் நூறு நெசவாளிகளைச் சங்கத்தில் அங்கத்தினராக்கினார்கள். சங்கத்தில் அங்கத்தினராகச் சேர்ந்த நெசவாளிகள் தங்கள் உரிமைகளை உணர்ந்து, தங்கள் கோரிக்கைகளுக்காகப் பல வழிகளிலும் போராடினார்கள். தங்கள் கஷ்டங்களையும் கோரிக்கைகளையும் அரசியல்வாதிகளுக்கும், சர்க்காருக்கும், மக்களுக்கும் தெரியப்படுத்தினார்கள்.பாவுக்கூலியைக் குறைப்பதற்காக உள்ளூர் முதலாளிகள் செய்த சதியை அம்பா சமுத்திரம் தாசில்தாரைப் பேட்டி கண்டு, அவர் தலையீட்டின் மூலம் முறியடித்தார்கள். அதன்பின் மாதாமாதம் தங்கள் வாழ்க்கைச் செலவுக்குப் போதிய அளவு நூல் கிடைக்க வேண்டும் எனவும், தறி ஒன்றுக்குக் குறைந்த பட்சம், நூறு ரூபாயாவது மான்யம் தர வேண்டுமெனவும் அவர்கள் அரசியலாரைக் கோரினார்கள். தமது கோரிக்கைகளைப் போர்டுகள், துண்டுப் பிரசுரங்கள், சிறு கூட்டங்கள் முதலியனவற்றின் மூலம் பொதுமக்களுக்கு எடுத்துரைத்து ஆதரவு திரட்டினார்கள். அம்பாசமுத்திரத்தில் முகாம் போட்டிருந்த சேர்மாதேவி உதவிக் கலெக்டரிடம் தமது கோரிக்கைகளைக் கோஷங்களாக முழக்கியவாறு ஊர்வலமாகச் சென்று மனுச் செய்து மகஜர் சமர்ப்பித்தார்கள்; மணிமுத்தாறு நதித் திட்டத்தைப் பார்வையிடுவதற்காக வந்த ராஜ்ய சர்க்கார் மந்திரியிடம் ஒரு தூது கோஷ்டியை அனுப்பி, தங்கள் குறைகளை யெல்லாம் எழுத்து பூர்வமாக எடுத்துரைத்து நிவாரணம் கோரினார்கள்.

ஆனால்-

அரசாங்கமோ அவர்களது கோரிக்கைகளுக்கும் மனுக்களுக்கும் எந்தவிதமான மதிப்பும் கொடுக்கவில்லை; அவர்களுக்கு எவ்வித நிவாரணமோ, நிவாரணத்துக்கான உத்தரவாதமோ அளிக்க முன்வரவில்லை. எனவே, கிட்டியிட்டு நெருக்கும் வாழ்க்கைக் கஷ்டங்களைத் தாங்க முடியாமல்,கடைசியாக,தங்கள்உரிமைக்காகப்போராடத் தீர்மானித்து விட்டார்கள்.

வேலைஅல்லது நிவாரணம்!

நூல்கொடுஅல்லதுசோறுகொடு!

அவர்கள் தங்கள் கோரிக்கைகளுக்காக அரசாங்கத்தோடு அறப்போர் நடத்துவதென்றுமுடிவுகட்டினார்கள்; தங்கள் கோரிக்கைகளுக்குச் சர்க்கார் இணங்கிவரும் வரையிலும்,அந்தநெசவாளிகள் அம்பாசமுத்திரத்திலுள்ள தாலுகா ஆபீஸ் முன்னிலையில் சத்தியாக்கிரகம் செய்வதென்று தீர்மானித்தார்கள்; வடிவேலு முதலியார் அந்தச் சத்தியாக்கிரகிகளை ஆதரித்து, தாலுகா ஆபீஸ் முன்னிலையில் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக அறிவித்தார்.

அம்பாசமுத்திரம் நகரெங்கிலும் போர்டுகள் தொங்கவிடப்பட்டன;எங்குபார்த்தாலும் 'வேலைஅல்லது நிவாரணம்' 'நூல் கொடு அல்லது சோறு கொடு' என்று வாக்கியங்கள் காணப்படும்போஸ்டர்கள் ஒட்டப்பட்டன. 'நெசவாளர் சத்தியாக்கிரகம்'. 'வடிவேலு முதலியார் உண்ணாவிரதமிருப்பார்' என்ற செய்திகள் சில நாட்களில் மக்கள் மத்தியிலே பரவிவிட்டன. மக்கள் அனைவரும் நெசவாளர் சத்தியாக்கிரகத்தைப் பற்றிப் பேசினார்கள்; ஆதரித்தார்கள்.

தங்கள் சத்தியாக்கிரகப் போருக்கு நகர மக்களின் பரிபூரண ஆதரவையும் பெறுவதற்காகத்தான் அவர்கள் ராஜூவை வரவழைத்துச் சொற்பொழிவாற்ற ஏற்பாடு செய்திருந்தார்கள்; மறுநாள் காலையில் ராஜூவே

சத்தியாக்கிரகிகளுக்கு வாழ்த்துக்கூறி, அவர்களை வழியனுப்பி வைக்க வேண்டும் என்றும் தீர்மானித் திருந்தார்கள்.

கையெழுத்து மறையும் நேரமுமாகி விட்டது; ரயில் இன்னும் வந்த பாடில்லை. ஏழு மணி சுமாருக்குத் திடீரென்று கீழ்த்திசையில் ரயிலின் கீச்சுக்குரல் கேட்டது; தொடர்ந்து ரயிலின் வெளிச்சமும், சப்தமும் அந்த ரயிலில் வரும் தலைவர்களுக்குக்கட்டியம்கூறுவதுபோல்முன்னேறி வந்தன.

வடிவேலு முதலியாரும் மற்றவர்களும் கைகாட்டி மரத்தைத்தாண்டிரயில்வருவதற்குள்ளாகவேபரபரப்புற்று நிலை கொள்ளாமல் தவித்தார்கள்; நேரம் கழித்து வந்ததற்காகவருந்துவதுபோல்புஸ்புஸ்ஸென்றுஇரைந்து பெருமூச்சு விட்டுக்கொண்டே ஸ்டேஷனில் வந்து நின்றது ரயில்.

ரயில் வந்து நின்றதும் வடிவேலு முதலியாரும் சங்கரும்ராஜுவைத்தேடமுயன்றார்கள்.அதற்குள்ரயிலை விட்டு இறங்கிய மணி சங்கரைக் கண்டுகொண்டு, "சங்கர்!" என்று உரக்கக் கூப்பிட்டான்.

குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினான் சங்கர்; அவனெதிரே மணி நின்று கொண்டிருந்தான்.

"மணியா?" சங்கரின் வியப்பு வார்த்தை வடிவில் வெடித்தது.

"மணியேதான்!" என்று தன்னைத்தானே சிரித்துக் கொண்டு அறிமுகப்படுத்தினான் மணி.

சங்கர் அந்தக் கணத்தில் எல்லாவற்றையுமே மறந்து விட்டான்; ராஜுவைக் கூட மறந்து நின்றான்.

"என்ன சங்கர் விழிக்கிறே?" என்று கேட்டவாறே, ரயிலிலிருந்து இறங்கிய ராஜுவைச் சங்கருக்கு

அறிமுகப்படுத்திவைக்கமுனைந்தான் மணி; "ராஜு, இவன் தான் என் நண்பன் சங்கர்."

"மிஸ்டர் சங்கர்! உங்களைப்பற்றி மணி என்னிடம் நிறையச் சொல்லியிருக்கிறார். உங்களைச் சந்திக்க நேர்ந்ததில் எனக்கு மிக்க மகிழ்ச்சி!" என்று கூறி வணக்கம் தெரிவித்தார் ராஜு.

சங்கரின் திக்பிரமை மேலும் அதிகமாயிற்று: "மணி எப்படி வந்தான்?, ராஜுவை அவனுக்கு எப்படித் தெரியும்-"

சங்கர் தனக்கேற்பட்ட திக்பிரமையால், இன்னது சொல்வதெனத் தெரியாமல், வடிவேலு முதலியாரிடமிருந்து மாலையை வாங்கி, ராஜுவின் கழுத்தில் போடப்போனான். அதற்குள் ராஜு அவனைத் தடுத்து நிறுத்தி, "எனக்கு எதற்கு மாலை? மணிக்குப் போடுங்கள். உங்கள் ஊரை விட்டுக் கோழையாக ஓடிபோய், வீரனாகத் திரும்பி வந்தவர் அவர். அவருக்குப் போடுங்கள்!" என்றார்.

ராஜுவின் பேச்சைக் கேட்டதும்தான் சங்கருக்கு ஓரளவு சித்தத் தெளிவுண்டாயிற்று; ராஜு கூறியபடியே அவன் மணிக்குதன் கையிலிருந்தமாலையைச் சூட்டினான்; அந்தக் கணத்தில் இருவர் மனத்திலும் பொங்கிப் பிரவகித்த ஆனந்தப் பரவசத்தால், சங்கரும் மணியும் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக் கொண்டனர்!

வடிவேலு முதலியாரும் பிற நெசவாளிகளும் சங்கரைப் போலவே மணியின் வரவைக் கண்டு பிரமித்து நின்றார்கள்; சிறிது நேரத்தில் சங்கர் மிகுந்த மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும், வடிவேலு முதலியாரையும் பிற நெசவாளிகளையும் ராஜுவுக்கு அறிமுகப் படுத்தி வைத்தான்; ராஜு அவர்கள் அனைவருக்கும் தமது வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டார்.

"கூட்டத்துக்குநேரமாய்விட்டதா?"

"ஆமாம்,ஏழரைமணிக்கு!"

"அப்போ, புறப்படுங்கள், போகலாம்."

அவர்கள் ஸ்டேஷனை விட்டு வெளியேறும்போது, வடிவேலு முதலியார் மணியின் முதுகில் தட்டிக்கொடுத்து, "என்னப்பா மணி? இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப் போயிட்டே?" என்று உரிமையோடு விசாரித்துக் கொண்டார்.

"என்ன மணி, ஏன் மத்தியான வண்டியிலேயே வரலை?" என்று கேட்டான் சங்கர். அவனுக்கிருந்த குதூகலத்தில் மணியிடம் என்ன கேட்பதென்றே தெரியவில்லை.

"மத்தியான வண்டிக்கு வர முடியலை. திருநெல்வேலியிலே ராஜுவுக்கு கொஞ்சம் வேலை இருந்தது" என்று கூறிவிட்டு, மணி சங்கரிடம் மெல்லக் கேட்டான்:

"என்ன சங்கர்? கமலா செளக்கியமா?"

சங்கர் அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை; வெறுமனே புன்னகை செய்தான். எனினும் அவன் மனம் 'கமலாவுக்கு இனிமேல் செளக்கியத்துக்கு என்ன குறை?' என்று எண்ணிப் பூரித்தது,

"என்ன மணி? உன்னைப் பார்த்தவுடன் நான் அப்படியே பிரமித்து விட்டேன்" என்றான் சங்கர்.

"அதைவிட, பிரமிப்புத் தரும் விஷயம் ஒன்று இருக்கிறது. வா, கூட்டத்துக்கு"

ஸ்டேஷனுக்கு வெளியே நின்றுகொண்டிருந்த காரில் அவர்கள் நால்வரும் நெருக்கியடித்துக் கொண்டு ஏறியமர்ந்தார்கள்.

கார் ஊருக்குக் கிழக்கே கூட்டம் நடக்கவிருந்த மைதானத்தை நோக்கிப் பறந்தது.

காருக்குள்ளே இருக்கும் ஒவ்வொருவருக்கும்

ஒவ்வொரு ஆசை மனத்தில் கிடந்து துடித்தது. சங்கர் மணியின் வரவைக் கமலாவுக்கு உடனே தெரிவிக்க வேண்டும். என்று ஆசைப்பட்டான். மணி கமலாவையும், தாயையும்காணவேண்டுமென்றுஆசைப்பட்டான் ராஜு தன் பெற்றோர்களைக் காண வேண்டுமென்று ஆசைப் பட்டார்.எனினும் அவர்கள் ஏழரை மணிக்குக்கூட்டத்தை ஆரம்பிக்க வேண்டிய கடமையுணர்ச்சி, அனைவரையும் தமது ஆசையை வெளியிட முடியாதவாறு தடுத்து நிறுத்தியது.

## 25

'கமலா!கமலா?'

மங்கள பவனத்தின் கேட்டைத் தாண்டிச் சென்று வீட்டை நெருங்குவதற்குள்ளாகவே சங்கருக்கு ஆத்திரம் பொறுக்கவில்லை. பொதுக் கூட்டம் முடிந்ததுமே அங்கு ஒரு கணம்கூடத் தாமதிக்காமல், கமலாவிடம் மணியின் வரவைத் தெரிவிக்க வேண்டும் என்ற பரபரப்போடும் ஆனந்தத்தோடும் அவன் உடனே புறப்பட்டு வந்து விட்டான்.

அவன் மனம் அன்றைய மாலை நிகழ்ச்சிகளின் அதிசயத்தையும் அற்புதத்தையும் எண்ணியெண்ணி ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தது. எல்லாம் நம்ப முடியாத விந்தைகளைப் போல், அவனைப் பிரமிக்க வைத்தன. எண்ணி எண்ணிப் பரவசமடைவதற்கு அவன் மனத்தில் எத்தனையோ விஷயங்கள் இருந்தன. ஒன்றா, இரண்டா?

மணி திரும்பி வந்துவிட்டான்; திரும்பி வந்ததோடு மட்டுமல்ல. தேசத்துக்காகப் பாடுபடும் ஞானத்தைப்

பெற்றுத் திரும்பி விட்டான். கமலாவுக்கோ காணாமற் போன காதலன் கிடைத்துவிட்டான் அது மட்டுமா? அந்த காதலன் அவளுக்கு ஏற்ற கணவனாகவும் திரும்பி வந்து விட்டான். இருளப்பக்கோனாரும் அவர் மனைவியும் பத்து வருஷங்களுக்குப் பிறகு தங்கள் மகனைக் கண்டு விட்டார்கள். தங்கம்மா அத்தையின் கண்ணீரைத் துடைக்க அவள் மகனும் வந்து விட்டான். சிந்திச் சிதறிக் கிடந்த நெசவாளி மக்களும் ஒன்று திரண்டு விட்டார்கள்; திரண்டதோடு மட்டுமல்லாமல், நாளைக் காலையில் தங்கள் அறப்போரையும் தொடங்கப் போகிறார்கள்.....

சங்கரின் மனம் வெற்றிக் களிப்பால் துள்ளித் திரிந்தது.'

"கமலா, கமலா!"

வீட்டு நடையேறி உள்ளே சென்றதும் மீண்டும் அவளைக் குரல் கொடுத்துக் கூப்பிட்டான்; அவன் முகத்திலும், நடையிலும், குரலிலும் அவனது மனத்தின் குதூகலம் குடி கொண்டு பிரதிபலித்தது.

அறையை விட்டு வெளியே வந்த கமலா தன் அண்ணனின் துறுதுறுப்பையும் உற்சாகத்தையும் கண்டாள். அவன் பொதுக் கூட்டத்துக்குப் போயிருந்த செய்தி நினைவு வந்ததும், "என்னண்ணா? கூட்டம் முடிந்ததா?" என்று ஆவலோடு கேட்டாள்.

"பிரமாத வெற்றி கமலா!" என்றான் சங்கர்.

"அதுதான் உனக்கு இத்தனை கொண்டாட்டமா?"

"கொண்டாட்டம் எனக்கில்லை. உனக்குத்தான்!"

என்று அர்த்தபாவம் நிறைந்த குறும்போடு பேசினான் சங்கர்.

"என்னண்ணா? புதிர் போடுகிறாய்?"

கமலா விழித்தாள்.

"திடுக்கிட்டு விடமாட்டாயே!" என்று எச்சரித்து விட்டு, "கமலா, மணி வந்துவிட்டான்!" என்று குதூகலத்தோடு சொன்னான் சங்கர்.

"அத்தானா?"

கமலா திடுக்கிடத்தான் செய்தாள்.

அதற்குள் அங்கே வந்து சேர்ந்த தர்மாம்பாள் சங்கர் சொன்ன கடைசி வாக்கியத்தைக் கேட்டுவிட்டு, "என்னடா சங்கர்? இப்போ என்ன சொல்லிக்கிட்டிருந்தே!" என்று ஆவலோடும் சந்தேகாஸ்பதமாகவும் கேட்டாள்.

"அம்மா, அத்தான் வந்திட்டுதாம்!" என்று சொல்லிப் பூரித்தாள் கமலா.

"அப்படியா?" என்று வியந்தாள் தர்மாம்பாள். அவள் மனத்தில் மணியின் நினைவால் கமலா வாடி மெலிந்ததும், கமலாவின் அப்பா அவள் கல்யாணத்துக்குச் சம்மதம் தராததும், கமலா மணியைத்தான் மணப்பேன் என்று வீம்பு பிடித்ததும், அந்தப் பையன் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போனதும், ஒரே வீச்சில் ஞாபகம் வந்தன. தர்மாம்பாள் அதையெல்லாம் எண்ணி ஆழ்ந்த பெருமூச் செறிந்தவாறே. "என்ன சங்கர்? நிசமாத்தானா சொல்றே?" என்று கேட்டாள்.

"ஆமாம்மா; மணி மட்டும் வரலை; இருளப்பக் கோனாருடைய காணாமற் போன மகனும்கூட வந்தாச்சு!" என்று கூறினான் சங்கர்.

"இதென்னடா இது? சொல்லி வச்சமாதிரி ரெண்டு பேரும் என்னமா வந்து சேர்ந்தாங்க?" என்று அதிசயித்தாள் தர்மாம்பாள்.

"ரெண்டு பேரும் ஒண்ணாத்தாம்மா வந்தாங்க" என்றான் சங்கர்.

அதற்குள் கமலா பொறுமையை இழந்தவளாக "அண்ணா, அத்தானை எங்கே?" என்று கேட்டாள்.

"மணி இருளப்பக் கோனார் வீட்டுக்குத்தான் போயிருக்கான். வர்ரயா? போய்ப் பார்த்துட்டு வரலாம்" என்று வாஞ்சையோடு அழைத்தான் சங்கர்.

அதைக் கேட்டதும் தர்மாம்பாள் குறுக்கிட்டாள். "என்னடா சங்கர்? இந்த ராத்திரியிலே போகாட்டா என்ன? விடிஞ்சி போகக்கூடாதா? அப்பாவுக்கு வேற பயமா யிருக்கு?" என்று அங்கலாய்த்தாள்.

கமலாவுக்கு, மணி வந்துவிட்டான் என்ற சொல் காதில்விழுந்ததிலிருந்து புதியதொரு உற்சாகமும் ஊக்கமும் தெம்பும் பிறந்து விட்டது போல் தோன்றியது. வெட்ட வெளியாகக் கிடந்த அவளது மன அரங்கில் திடீரென்று கோடானு கோடி மலர்கள் பூத்துச் சொரிந்து நறுமணம் பரப்புவதுபோல், இருளடைந்திருந்தவாழ்வில் திடீரென்று ஒரு தேஜோமய ஜோதி தோன்றிவிட்டது போல், அவள் உணர்ந்தாள். மணியின் பெயர் அவளது பலவீனத்தை யெல்லாம் போக்கி விட்டதுபோல் தோன்றியது. அந்தக் கணம் முதற்கொண்டு நிலை கொள்ளாமல் துறுதுறுத்து நின்றாள் கமலா.

தன் தாய் குறுக்கிட்டுத் தடுத்தவுடன், கமலா தாயைப் பார்த்து பரிதாபகரமாகக் கேட்டாள்: "அம்மா, நான் இப்பவே போயிட்டு வந்திடுறனே!"

"ஆமாம்மா. காரிலேயே போயிட்டு, உடனே திரும்பி விடுகிறோம். மணியைக் கண்ணாலே பார்த்தாலொழிய இவள் என்னை நம்ப மாட்டாள்!" என்று தங்கைக்கு வக்காலத்து வாங்கினான் சங்கர்.

"சரிடாப்பா. ஜாக்கிரதையாப் போயிட்டு, சீக்கிரமே திரும்பி வந்திருங்க" என்று கூறி அவர்களை வழியனுப்பி வைத்தாள் தாய்.

சங்கரும் கமலாவும் மறுகணமே அங்கு நிற்காமல் ஓடோடிச் சென்று காரில் ஏறி அமர்ந்தார்கள்; கார்

கேட்டைக் கடந்து செல்லும்வரை அங்கேயே நின்று கொண்டிருந்து விட்டு, "என்னமோ அவனும் திரும்பி வந்துவிட்டான். ஆனால், தெய்வம் இந்தப் பொண்ணைச் சோதிக்காமல் இருக்கணுமே!" என்று தனக்குத்தானே சொல்லிப் பெருமூச்சொறிந்தாள் தர்மாம்பாள். அதன்பின் அவள் வீட்டுக்குள் சென்று, தன் பிள்ளைகள் எப்போது வந்து சேருமோ என்ற கவலையோடு படுக்கையில் படுத்து விழித்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்தில் திடீரென்று வாசற்புறத்தில் தாதுலிங்க முதலியாரின் பியூக் கார் பயங்கரமாக உறுமிவிட்டு நிற்கும் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள், தர்மாம்பாள். அவள் எதிர்பார்த்துப் பயந்தது போலவே, காரின் கதவைக் கோபத்துடன் படாரென்று அறைந்து சாத்திவிட்டு உள்ளே வந்தார் தாதுலிங்க முதலியார்.

அவர் வந்ததும் வராததுமாய்ப் படபடப்புடனும் கோபாவேசத்துடனும் தமது அங்கவஸ்திரத்தை எடுத்து ஒரு நாற்காலி மீது விட்டெறிந்தார். ஓரிடத்திலும் நிலை கொள்ளாமல் மேலும் கீழும் பரபரவென்று நடந்தார்.

உள்ளேயிருந்தவாறே கணவனின் படபடப்பை உணர்ந்தறிந்து கொண்டாள் தர்மாம்மாள். 'ஒரு வேளை மணி வந்த விஷயம் தன் கணவருக்குத் தெரிந்திருக்குமோ? தெரிந்தாலும் தான் ஏன் இந்தப் படபடப்பு?- சங்கரும் கமலாவும் அங்கு போனது தெரிந்திருக்குமோ?- இருக்காது-தெரிந்திருந்தால்? என்னமோ தெரியலியே!" அவள் மனம் என்னென்னவோ எண்ணி அலைக்கழிந்தது. கடைசியில் அவள் தன் கணவனின் கோபத்துக்கு முன் நிற்கப் பயந்தவளாகவும், அதன் காரணத்தை அறிந்து கொள்ளத் துடித்தவளாகவும், மெதுவாக வெளியே வந்து எட்டிப் பார்த்தாள்.

கண்களில் ஆக்ரோஷமும் கோபமும் பொத்துக் கொப்புளிக்க, கைகளை இறுகப் பிசைந்தவாறு மேலும்

கீழும் நிலையற்று நடந்து கொண்டிருந்தார் தாதுலிங்க முதலியார்.

தர்மாம்மாள் அவரருகே மெதுவாகச் சென்று நின்றவாறே, "என்ன விஷயம்? என்ன நடந்தது?" என்று மெல்லக் கேட்டாள்.

தாதுலிங்க முதலியாரின் முகம் குபீரென்று சிவந்து கனன்றது; உதடுகள் கோபாவேசத்தால் படபடத்துத் துடித்தன.

"என்ன நடந்ததா? அந்தப் பயல் மணி வந்து சேர்ந்துட்டானாம். அவன் வீட்டிலே வேலை பார்த்தானே, அந்தக் கோனார் மகன், அந்தப் போக்கறுவானும் வந்துட்டானாம். இந்த ரெண்டு பயலுகளுமாச் சேர்ந்து கிட்டு, கூட்டத்திலே, 'பப்ளிக்' மேடையிலே, என்னைத் தாறுமாறா, கிழி கிழின்னு கிழிச்சிருக்கானுக. இந்தக் கூட்டத்துக்கு நம்ம வீட்டுக் கொள்ளி தலைமை வகிச்சிதாம்! இப்பத்தான் அந்தச் சுப்பையா வந்து எங்கிட்ட சொல்லிட்டுப் போனான்!" என்று அனல் கக்கும் குரலில் சீறிப் பொருமினார் தாதுலிங்க முதலியார்.

"இதுக்குத்தானா? என்னமோ சின்னப் புள்ளைக.." என்று கூறித் தன் கணவனைச் சமாதானப்படுத்த முனைந்தாள் தர்மாம்பாள்.

"என்ன சொன்னே? சின்னப் புள்ளைகளா? நினைச்சா நெஞ்சு கொதிக்குது! இந்தத் தறுதலைப் பயலுக்குக் கொண்டு போய் உன் மகளைக் கட்டிக் குடுக்கணும்னு தாயும் பிள்ளையும் ஒண்ணு சேர்ந்து பேசினீங்க! எனக்குன்னு வந்து பிறந்தானே, அந்தத் துடைகாலி சங்கர்! அவனை என்ன பண்ணினாத் தேவலை?" தாதுலிங்க முதலியார் தம் மகனை எண்ணித் தமக்குத் தாமே பொருமிவிட்டு, மனைவியிடம் திரும்பிக் கேட்டார்.

"சங்கரை எங்கே? அவன் இன்னம் வரலியா?"

தர்மாம்பாள் இன்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திகைத்தாள்.

அதற்குள் தாதுலிங்க முதலியாரிடமிருந்து அடுத்த பயங்கரமான கேள்வியும் வந்துவிட்டது: "கமலாவை எங்கே?"

தர்மாம்பாள் கையும் மெய்யுமாகப் பிடிபட்ட திருடனைப்போல் தவித்தாள். ஏதாவது கூறிச் சமாளிக் கலாம் என்றாலும், தன் கணவனின் கோபாவேத்தின் முன்னிலையில் அவளது சிந்தனை சிறிதுகூட அசைந்து கொடுக்கவில்லை.

"கமலா-கமலா-" என்று தன்னையும் அறியாமல் மீண்டும் மீண்டும் முனகினாள் தர்மாம்பாள்.

தாதுலிங்க முதலியாரின் கோபாவேசமான கண்களில் திடீரென்று சந்தேக ரேகை படர்ந்தது; அந்த ரேகை படர்ந்ததுமே அவர் குரல் இடி முழக்கம்போல் எழும்பியது.

"என்ன முழுங்கிறே? எங்கே கமலா?-சொல்லு சீக்கிரம்?"

அவரது உதடுகளும் முகமும் வக்கிர கதி பெற்றுத் துடிப்பது போலிருந்தன.

தர்மாம்பாள் தன் கணவனின் கோபத்தைத் தாங்கி நிற்க முடியவில்லை. அவள் உண்மையைச் சொல்லி விட்டாள்!

அதைக் கேட்டதும், தாதுலிங்க முதலியாரின் கை தம்மையறியாமல் பளீரென்று தர்மாம்பாளின் கன்னத்தில் அறைந்தது; அவரது கண்கள் வெளியே துள்ளிக் குதிக்கப் போவது போல் சிவந்து கனன்று கோபத்தைக் கக்கின.

"அவ்வளவு தூரத்துக்கு வந்துட்டுதா? நீயும் இருந்துதானா, இந்தத் தேவடியாத் தனம் பண்ணினே?" என்று சீறிவிழுந்தார் தாதுலிங்கமுதலியார்.

ஆனால், தர்மாம்பாளோ அடிப்பட்ட கன்னத்தைத் தடவிக் கொடுத்தவாறே, மௌனமாகக் கண்ணீர் சிந்தி நின்றாள்; அவள் தொண்டையிலிருந்து ஒரு விக்கல்கூட எழவில்லை.

மறுகணமே தாதுலிங்க முதலியார் வீட்டுக்குள் வந்த அதே வேகத்தில் வெளியே பாய்ந்து சென்றார்; சிறிது நேரத்தில் வாசலில் நின்று கொண்டிருந்த கார் சிம்ம கர்ஜனை செய்வதுபோல் உறுமிவிட்டு, கேட்டைக் கடந்து பறந்து சென்றது.

கார் சென்று மறைந்த மறுகணமே தர்மாம்பாளின் உள்ளத்தில் முட்டிமோதி வெளிவரத் தவித்துக் கொண்டிருந்த அழுகையும் கண்ணீரும் குபீரென்று மதகுடைத்துப் பாய்ந்தது.

## 26

அன்றிரவு இருளப்பக்கோனாரின் குடிசை கல்யாண வீடுபோல் என்றுமில்லாத குதூகலத்தோடும் கலகலப் போடும் விளங்கியது.

பொதுக் கூட்டத்துக்குச் சென்றிருந்த இருளப்பக் கோனார் அங்கு தம் மகனையும், மணியையும் காண்போம் என்று எதிர்பார்க்கவேயில்லை. எதிர்பாராத அந்த அதிசயம் அவர்முன் எதிர்ப்பட்ட போது அவர் இன்னது பேசுவதென்றே தெரியாமல் கண்ணீர் சிந்தி விட்டார். மணியை அவர் கண்டதும், "மணி!", என்று கத்திக்கொண்டு அவனைப் போய்க் கட்டிக் கொண்டார். இருவரும் உணர்ச்சிப் பரவசத்தால் வாயடைத்து நின்ற சமயத்தில்,

அருகில் நின்ற ராஜு "அப்பா!" என்று கம்மியடைத்த குரலில் அழைத்தான். 'அப்பா!'-பத்து வருஷங்களாகக் கேட்காத குரல், கேட்பதற்காகத் தவித்துக் கொண்டிருந்த குரல்காதில் விழுந்ததும் இருளப்பக்கோனாரின் உடம்பில் ஒவ்வொரு மயிர்க்காலிலும் ஆட்சிக்குக் கட்டுப்படாத ஜீவரசம் ததும்பி ஓடுவது மாதிரித் தோன்றியது.

"வீரையாவா-?" அவர் குரல் இத்தனை நாளும் பூத்துக் கிடந்த பாசத்தையும் ஆர்வத்தையும் விசிறிக் கொண்டு பிறந்தது.

மணி அவருக்குச் சகல விஷயங்களையும் சுருக்கமாகச் சொன்னான்.

கூட்டம் முடியும் வரையிலும் இருளப்பக் கோனார் நிலை கொள்ளாமல் தத்தளித்துக் கொண்டிருந்தார். யுகாந்திர காலமாக, ஊழூழி காலமாகக் கூட்டம் முடிவற்று நடந்து கொண்டிருப்பது போல் அவருக்குத் தோன்றியது. ஒவ்வொரு விநாடியும் மார்க்கண்டேயன் போல் மரணமோ மாற்றமோ இன்றி ஸ்தம்பித்து நிலைபெற்று நிற்பதுபோல் அவருக்குத் தோன்றியது.

அவர் பூமியிலே கால் தரிக்காமல் புழுங்கிக் கொண்டிருந்தார்; அவர் மனத்தில் தோன்றிய எல்லையற்ற குதூகலம் அவரது நரம்புக் கால்களிலெல்லாம் இன்ப ஜுர வேகத்தை ஏற்றுவது போலிருந்தது. அந்தக் குதுகுதுப்பில் அவர். மகிழ்ந்தார். வேதனையடைந்தார்; சிரித்தார்; கண்ணீர் சிந்தினார்; பேசினார்; ஊமையானார்...

கூட்டம் முடிந்தவுடனேயே கோனார் தம் மகன் வீரையாவையும் மணியையும் விடாப்பிடியாய்க் குடிசைக்குக் கூட்டிக் கொண்டு வந்துவிட்டார். வடிவேலு முதலியாரும்பிற நெசவாளிகளும் தங்கள் தலைவர்களுக்குச் சாப்பாடு பண்ணி வைத்துவிட்டு, தாமே அழைத்து வருவதாகச் சொல்லியும், கோனார் ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்க விரும்பவில்லை. கடைசியில் மணியும் ராஜுவும்

நெசவாளர்கள் புடை சூழ, கோனாரின் குடிசையை நோக்கிப் புறப்பட்டு வந்தனர். வடிவேலு முதலியார் அவர்களுக்கு முன்னால் ஒரு பேபி பெட்ரோமாக்ஸ் விளக்கைத் தூக்கிக் கொண்டு வழி காட்டிக் கொண்டு பெருமிதத்தோடு நடந்துசென்றார்...

தங்கள் குடிசையை நோக்கி, கையில் விளக்குடன் பல பேர் திரண்டு வருவதைக் கண்டவுடன், குடிசையின் வெளிப்புறத்தில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்த தங்கமும் மாரியும் திடுக்கிட்டு பயந்து எழுந்து நின்றார்கள்.

தாய்மார்களைக் கண்டதும் ராஜூவும் மணியும் தங்களையும் மீறியெழுந்த உணர்ச்சிப் பெருக்கோடு "அம்மா!" என்று கத்திக் கொண்டு தத்தம் தாயை நோக்கி ஓடினார்கள்.

மகனை இழந்து தவித்துக் கொண்டிருந்த அந்த இரண்டு தாய்மார்களும் தங்கள் பிள்ளைகளைத் திடீரென்றுகாணநேர்ந்தபிரமிப்பாலும்,ஆனந்தத்தாலும், அதிர்ச்சியாலும் எண்ணற்ற உணர்ச்சிப் பரவசங்களுக்கு ஆளாகி,தங்கள் அன்பையும் தாகத்தையும்புலப்படுத்தவழி தெரியாமல் தவித்தார்கள். அவர்களுக்கு அழுகையும், சிரிப்பும் கண்ணீரும் மாறிமாறிப் பொங்கி யெழுந்தன. அந்தத் தாய்மார்கள் ஆனந்தம் சொல்லில் அடங்காத சூட்சுமம்.

அந்த ஆனந்த வெறியிலிருந்து அவர்கள் தன்னிலை தெளிந்த பிறகு, வடிவேலு முதலியார்தான் அவர்கள் இருவரும் வந்து சேர்ந்த விவரத்தை அவர்களுக்குத் தெரிவித்தார்.

"என்னடா மணி? என்னை இப்படித் தவிக்க விட்டுட்டு ஓடிப் போயிட்டியே. ஒரு கடுதாசி கூடவா போடப்பிடாது?" என்று தன் அங்கலாய்ப்பை வெளி யிட்டாள் தங்கம்.

"என்னை மன்னிச்சிடு, அம்மா. ஆனால், நான் அப்படி ஓடிப் போயிருக்காவிட்டால், வீரையாவைச் சந்தித்திருக்க முடியுமா?" என்று கூறித் தன் தாயைச் சமாதானப்படுத்தினான் மணி.

மகனின் சமத்காரமான பதிலைக் கேட்டு, தங்கம் ஏதோ புதுமையைக் கண்டதுபோல் புளகித்து விம்மினாள்.

மணியும் ராஜுவும் குடிசைக்கு வெளியே கிடந்த கயிற்றுக் கட்டிலில் அமர்ந்து அங்கு குழுமியிருந்த நெசவாளர்களோடு பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களது க்ஷேமலாபங்களையும், சங்க வேலைகளையும் விசாரித்தார் ராஜு. சத்தியாக்கிரகத்தில் யார் யார் பங்கெடுக்கிறார்கள் என்பதை விசாரித்தார். சத்தியாக்கிரகப் போரில் அவர்கள் எவ்வாறு பணியாற்ற வேண்டும் என்பது பற்றியெல்லாம் அறிவுரைகள் கூறினார்.

புஸ்ஸென்று இரைந்து கொண்டிருந்த பெட்ரோமாக்ஸ் விளக்கின் முன்னிலையில் அமர்ந்து சாவதானமாக வெற்றிலையைத் தட்டிப் போட்டுக் கொண்டிருந்தார் இருளப்பக் கோனார். தன் பிள்ளை அந்த நெசவாளிகளுக்கு அறிவுரை கூறுவதையும் அந்த நெசவாளர்கள் அவற்றைக் கவனத்தோடும் மரியாதையோடும் கேட்பதையும் கண்டு அவரது உள்ளம் கர்வத்தால் நிமிர்ந்தோங்கியது...

சிறிது நேரத்தில் இருளப்பக் கோனாரின் குடிசை முன்னால் சங்கரின் மோரீஸ் மைனர் வந்து நின்றது.

"சங்கரும் வந்துவிட்டான்!" என்றார் வடிவேலு முதலியார்.

காரைவிட்டு சங்கரும் கமலாவும் பரபரப்போடு இறங்கி வந்தார்கள். கமலா அங்கு கூடியிருந்த மக்களையும் பொருட்படுத்தாமல், "அத்தான்!" என்று கூறிக்கொண்டே ஓட்டமும் நடையுமாக வந்து சேர்ந்தாள்; கமலா வருவதைக்

கண்டதும், தங்கம்மாள் எழுந்து சென்று அவளை மார்போடு அணைத்து எதிர்கொண்டழைத்து வந்தாள்.

கமலாவைக் கண்டதும் மணி அத்தனை நாள் தன் உள்ளத்தின் அடித்தளத்திலே புதையுண்டு, தலை தூக்க முடியாது தவித்துக் கொண்டிருந்த ஆசையும் பாசமும் திடீரென்று கட்டவிழ்ந்து திமிறுவதுபோல் உணர்ந்தான்.

"வா, கமலா" என்று அவன் அவளை வரவேற்ற குரலில், அந்தப் பாசமெல்லாம் கலந்து பிரவகித்ததுபோல் இருந்தது.

கமலா மணியை கண்ட பரவசத்தில் இன்னது பேசுவதெனத் தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தாள். அவளது மனநிலையை உணர்ந்த தங்கம்மாள் அவளைப் பரிவுடன் அணைத்தவாளே, "என்ன கமலா, பேசாம நிக்கிறே?" என்று கூறிக் கமலாவைத் தன்னிலைக்குக் கொண்டுவந்தாள்.

"அத்தை. இத்தனை நாள் ஆகியும் நீங்கள்தான் எங்க வீட்டுக்கு வரவில்லை. கடைசியில் நான்தான் உங்களைத் தேடி உங்கள் வீட்டுக்கு வந்தேன்" என்று புன்னகை குமிழ்ந்த பூரிப்போடு சொன்னாள் கமலா.

"என்னைத் தேடியா? இல்லை, அவனைத் தேடியா?" என்று தங்கம் செல்லமாகக் கேட்டாள்.

கமலா தன் அத்தையின் குறும்புத் தனத்தைக் கண்டு வெட்கித் தலைகுனிந்து நின்றாள்; சங்கர் மணியுடன் போய் கட்டிலில் உட்கார்ந்து கொண்டான்.

இருளப்பக் கோனார் தட்டி வைத்திருந்த வெற்றிலையை வாயில் போட்டு ஒதுக்கிக் கொண்டே, "என்னமோ தெய்வம் இவ்வளவு சோதிச்சதுக்கப்புறம்தான் நம்மையெல்லாம் ஒண்ணா சேர்க்கணும்னு இருந்திருக்கு!" என்று மன நிறைவோடு சொல்ல முனைந்தார்.

ஆனால், அவரது மன நிறைவைத் திடீரென்று பறிக்க முயலும் பைசாசக் கரங்கள் போல், பிரகாசமான இரு பெருங்கொள்ளிக் கண்கள் அவர் முகத்தில் விழுந்து திரும்பின.

இருளப்பக்கோனார் ஏறிட்டுப்பார்த்தார்.

எதிரே தாதுலிங்க முதலியாருடைய காரின் ஹெட்லைட் வெளிச்சம் அவரது கண்ணொளியை மழுக்கி குருடாக்கி விடுவதுபோல் பிரகாசித்தது. மறுகணமே பயங்கரமாகப் பெருமூச்சு விட்டு அடங்கிய அந்தக் காரிலிருந்து தாதுலிங்க முதலியார் இறங்கி வந்தார்.

தாதுலிங்க முதலியாரைக் கண்டதும், அங்கு நிலவிய கலகலப்பும் குதூகலமும் வாயடைந்து மௌனமாகி விட்டன.அவரது திடீர்ப் பிரவேசத்தால் எல்லோரும் தமது இடத்தை விட்டு எழுந்து நின்றனர்; குழுமி நின்ற நெசவாளர்கள் தம்மையறியாமலே அவருக்கு வழிவிட்டு ஒதுங்கி நின்றனர்.

பிரளய கால ருத்ர மூர்த்தியைப்போல் தாதுலிங்க முதலியார் கோபாவேசமாக "கமலா!" என்று கத்திக் கொண்டு வந்து நின்றார்.

அந்தக்குரலைக்கேட்டதும்,வேடனைக்கண்டுபயந்த மானைப்போல்இதயம் படபடக்க, தங்கம்மாளைக்கட்டிப் பிடித்துக் கொண்டாள் கமலா.

தாதுலிங்க முதலியார் கோபத்தால் பொருமி இரைந்து கொண்டு கமலாவை நோக்கிக் கத்தினார்:

"இந்த ஊதாரிப்பயல் மகனை அர்த்த ராத்திரியிலே தேடி வர்ரத்துக்கு உனக்கென்னடி தைரியம்?"

அவர் உறுமிக் குமுறும் சப்தம் எல்லோருடைய காதிலும் விழுந்தது.

தாதுலிங்க முதலியாரின் பேச்சைக் கேட்டதும் மணி சீறியெழுந்தான்.

"முதலியார்வாள்! மரியாதையாய்ப் பேசுங்கள். அப்புறம் மரியாதை கெட்டுப்போகும்!" என்று உள்ளடங்கிய கோபத்தோடு எதிரொலி கிளப்பினான்.

"உங்கிட்டே என்னடா பேச்சு?" என்று சீறியவாறே, தாதுலிங்க முதலியார் கமலாவிடம் திரும்பினார். "கமலா வா வீட்டுக்கு, ம்!" என்று அதிகார தோரணையில் உறுமினார்.

கமலா இன்னது செய்வதெனத் தெரியாமல், தந்தையின் முன்னால் ஓடிச் சென்று நின்றவாறே, "அப்பா, உங்க கோபம் இன்னம் மாறலையா? அத்தானை ஏன் திட்டுறீங்க?" என்று பரிதாபகரமாகக் கேட்டாள்.

"இந்தப் பரதேசிப் பயலை அத்தான் என்று சொல்ல உனக்கென்னடி அத்தனை ஆணவம்?" என்று கடுகடுத்தார் முதலியார்.

கசையடிபட்ட சிங்கத்தைப்போல், மணி அந்தச் சொல்லைக் கேட்டுப் பொறுமையிழந்து தாதுலிங்க முதலியாரைத் தாக்க விரும்பிச் சாடினான்; அதற்குள் அருகிலிருந்த ராஜு அவனை இழுத்துப் பிடித்துத் தடுத்தார்.

கமலா தன் தந்தையின் கோபாவேசத்தைத் தாங்கிநிற்க முடியாமல், மன்றாடினாள்: "அப்பா, உங்கள் பெண் நல்லபடியாய் வாழ்வது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? நான் மணந்தால் அத்தானைத்தான் மணப்பேன். இல்லாவிட்டால் என் பிணத்தைத்தான் காண்பீர்கள்!" என்று உறுதியோடு பேசினாள் கமலா. அவளையும் மீறி அவள் கண்களில் நீர் பெருக்கெடுத்தோடியது.

"என்னடி நாடகமாடுறே?" என்று கிண்டலும் கோபமும் கலந்த குரலில் சினந்து குமுறியவாறு, தாதுலிங்க

முதலியார் கமலாவின் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டு செல்ல முனைந்தார்.

"அப்பா! அப்பா!" என்று கமலா கதறிய குரல் அந்த கார இருளின் அமைதியைக் குலைத்துப் பயங்கரமாக ஒலித்தது.

இத்தனை நேரமும் தன் தந்தையின் ஆக்ரோஷத்தையெல்லாம்பொறுமையோடுசகித்துக்கொண்டுநின்றசங்கர் பொறுமையை இழந்து விட்டான். உடனே அவன் ஓடோடிச் சென்று, தன் தங்கையைத் தன் தந்தையின் பிடியிலிருந்து பலவந்தமாக விடுவித்து, அவளைப் பின்னால் போகச் சொல்லி விட்டு, பதியிட்டுத் தாக்க முனையும் புலி போல் தந்தையை முறைத்துப் பார்த்தான்:

"அப்பன் என்ற மரியாதைக்காக இத்தனை நாளும் பொறுத்துக்கொண்டிருந்தேன்.இனிமேல்என் தங்கையின் இஷ்டத்தில் நீங்கள் குறுக்கிட நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன்!" என்று வைரம் பாய்ந்த குரல் அவன் கண்டத்திலிருந்து வெடித்துப் பிறந்தது.

"குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக் காம்பே! எனக்கே விரோதியாகி விட்டாயா?" என்று சீறினார் தாதுலிங்க முதலியார்.

"உங்களுக்கென்ன? உங்கள் வர்க்கத்துக்கே நான் விரோதிதான்!"

"டேய் சங்கர்! நீ யாரிடம் பேசுகிறாய் என்பது ஞாபகமிருக்கட்டும்!"

"யாரிடமா? கேவலம், பணத்தாசையின் காரணமாக ஒரு குடும்பத்தையே பலி வாங்கிய ரத்தப் பிசாசிடம் பேசுகிறேன்.உங்கள் பேராசை கைலாச முதலியாரைப் பலி வாங்கியது போல், உங்கள் மமதைக்குஎன் தங்கையைப் பலி கொடுக்க நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன்!"

"என்ன திமிரடா உனக்கு?"

"எனக்கா, உங்களுக்கா?" என்று பளீரெனக் கேட்டு நிறுத்தினான் சங்கர்.

"மரியாதையாகக் கமலாவை என்னுடன் அனுப்பி விடு. இல்லையேல், நீங்கள் இரண்டு பேருமே என் வீட்டு நடையை மிதிக்க முடியாது!" என்று பயமுறுத்தினார் முதலியார்.

"கமலா ஒருத்திக்காகத்தான் நானும் இத்தனை நாள் உங்கள் வீட்டில் இருந்தேன். இனி நீங்கள் என்னைப் புறக்கணித்தாலும் கவலையில்லை!"

தாதுலிங்க முதலியார் அத்துடன் அடங்கி விடவில்லை. தம் மகன் தம்மை அத்தனை பேருக்கு முன்னாலும் வைத்து எதிர்த்துப் பேசுவதை, இழிவு படுத்துவதை, அவரால் சகித்துக் கொண்டிருக்க முடிய வில்லை; அவரது கோபம் விஷம் போல் தலைக்கேறிக் கனன்றது.

"டேய் சங்கர்! நீ லட்சாதிபதி தாதுலிங்க முதலியாரிடம் மோதிக் கொள்கிறாய் என்பது ஞாபகம் இருக்கட்டும். என் பண பலத்தால் உங்கள் எல்லோரையும் பூண்டற்றுப் புழுதி மூடிப் போகச் செய்ய என்னால் முடியும்!" என்று அவர் பயமுறுத்தினார்.

"அந்தத் திமிரில்தானா இத்தனை பேச்சும்? உங்களுக்கு லட்சோப லட்சமாகப் பணம் இருக்கலாம். ஆனால், எங்களுக்குப் பின்னால் லட்சோப லட்சம் மக்கள் துணை நிற்கிறார்கள் என்பது ஞாபகம் இருக்கட்டும். ஜனங்களுக்கு விரோதமாகச் சென்றவர்களின் கதி தெரியுமா, உங்களுக்கு?" என்று ஆணித்தரமாகக் கேட்டான் சங்கர்.

"உன்னிடம் பாடம் படிக்க வரவில்லையடா, முட்டாள்."

"சரித்திரம் உங்களுக்குத் தானே பாடம் கற்றுக் கொடுக்கும். உங்களுக்கு மட்டுமல்ல, உங்களை அடிதாங்கி நின்று ஆதரித்துப் போற்றுகிறதே சர்க்கார், அதற்கும் கூடப்பாடம் கற்பிக்கும்!"

"துரோகி!"

"நானா துரோகி? சமூகத் துரோகியான நீங்கள் தியாகிகள் நிற்கும் இந்த நிலத்தில் நிற்கக்கூட யோக்கி யதையற்றவர்கள். மரியாதையாகப் போய் விடுங்கள்!"

"போகாவிட்டால்_" என்று சவால் விடுத்தார் தாதுலிங்க முதலியார்.

"பெற்றெடுத்த தந்தை என்ற பாவத்துக்காக, வாயால் சொல்கிறேன். போய்விடுங்கள்! போகிறீர்களா, இல்லையா?"

சங்கர் பொறுமையை இழந்து தன் தந்தையைத் தாக்கி விடுவானோ என்று சூழ நின்ற நெசவாளிகள் பயந்தார்கள். தாதுலிங்க முதலியார் அங்கு நிலவிய சூழ்நிலையில் இனிமேல் தாம் எதுவும் செய்ய முடியாது என்று உணர்ந்தவராக, அடிபட்ட பாம்பைப் போல் சீறிக் குமைந்து கொண்டு திரும்பிச் சென்றார்.

"டேய்! உன்னைப் பார்த்துக் கொள்கிறேன்!" என்ற கடூரமான குரல் காரினருகே கிடுகிடுத்து ஒலித்தது; அந்த ஒலிக்கு எதிரோலி கிளம்புவதுபோல், அந்த பியூக் காரும் திடீரென்று உறுமிக் குமைந்துவிட்டு, அங்கிருந்து புறப்பட்டுச் சென்றது.

தாதுலிங்க முதலியார் சென்று மறைந்ததும், அங்கு நிலவிய பயங்கர அமைதி குலையவில்லை. நெசவாளிகள் அனைவரும் சங்கருக்கும் அவருக்கும் நடந்த வாக்கு

வாதத்தைக் கண்டு, பயமும், தைரியமும், வியப்பும் கொண்டவர்களாக அசைவற்றுச் சமைந்து நின்றனர்.

ராஜூ சங்கரின் உறுதியையும் லட்சிய வேட்கையையும் கண்டு பிரமித்தார்; மணி தனக்காகப் போராட முன்வந்த சங்கரின் பெருமிதத்தையும், நட்புரிமையையும் எண்ணித் தனக்குள் பூரித்துக்கொண்டான்.

கோபத்தால் களைத்துச் சோர்ந்து, அங்கு நின்றவர்களின் பக்கமாகத் திரும்பி வந்தான் சங்கர். தந்தையுடன் போராடியதால் ஏற்பட்ட வெற்றிக் களிப்பும், அவரது குரூரத் தன்மையைக் கண்டெழுந்த ஆக்ரோஷ உணர்வும் அவன் முகத்தில் கலந்து பிரதிபலித்தன.

இருளப்பக் கோனார்தான் அங்கு நிலவிய அமைதியைக்குலைக்கமுன்வந்தார். அவர் சங்கரைநோக்கி, "தம்பி, என்ன இருந்தாலும், நீங்க இவ்வளவு கடுமையாய்ப் பேசியிருக்கக் கூடாது?" என்று அடக்கத்தோடும் பெரிய மனுஷத் தன்மையோடும் கூறினார்.

"இல்லை, பெரியவரே! இப்படிப்பட்ட சந்தர்ப்பத்துக்காக நான் எவ்வளவு காலம் தவம் கிடந்தேன், தெரியுமா?"

அண்ணனைக் கண்டதும், இன்னது செய்வதெனத் தெரியாமல், "அண்ணா!" என்று கேவிக் கொண்டு தேம்பித் தேம்பி அழத் தொடங்கினாள், கமலா.

சங்கர் அவளருகே சென்று அவள் தலையைப் பரிவோடு தடவிக் கொடுத்தவாறே அவளுக்கு ஆறுதல் கூறினான்.

"அழாதே, கமலா. தைரியமாயிரு! என் தோள் பலம் உன்னை என்றும் காப்பாற்றும்!"

# 27

"வேலை அல்லது நிவாரணம்!"

"நூல்கொடு அல்லது சோறுகொடு!"

"மக்கள் வயிற்றில் அடிக்காதே!"

மறுநாள் காலையில் அம்பை நெசவாளர் சங்க நெசவாளர்களில் சுமார் ஐம்பது பேர் தமது கோஷங்களைக் கோஷித்துக் கொண்டு, அம்பாசமுத்திரத்தின் முக்கிய வீதிகளையெல்லாம் சுற்றிவந்து, தாலுகாக் கச்சேரியை நோக்கி ஊர்வலமாகச் சென்றார்கள். அந்த ஊர்வலத்தின் முன்னணியில் வடிவேலு முதலியார் தங்கள் உரிமைப் போருக்காக உயர்த்திய கொடியை விண்ணளாவப் பறக்க விட்டுக் கொண்டு, மகிழ்ச்சியும் உறுதியும் துலங்கும் முகத்தோடு சென்று கொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் ராஜு, மணி, சங்கர், கமலா முதலியவர்களும் அணிவகுத்துச் சென்றார்கள்.

அந்த ஊர்வலத்துக்கு ஆதரவாக, பல தெருக்களிலிருந்து மக்கள் வந்து குழுமி, ஊர்வலத்தோடு செல்லத் தொடங்கினார்கள்.

பல்வேறு சிற்றாறுகளைத் தன்பால் இழுத்துச் சேர்த்து, மகாப் பிரவாகமாய்ப் பரிணமித்துச் செல்லும் ஜீவநதியைப் போல், அந்த ஊர்வலம் கணத்துக்குக் கணம் பலம்பெற்று விரிவடைந்து கொண்டேயிருந்தது.

முற்றும்

*அனுபந்தம்:*

# பிறந்த கதை

பிறவிரகசியத்தைச்சொல்லலாமா?

பாதகமில்லை.

"துடிக்குதென் உதடும் நாவும்; சொல்லு சொல்லெனவே நாவில் இடிக்குது குறளி அம்மே!" என்று குற்றாலக் குறவஞ்சியில் குறத்தி சொல்கிறாள் அல்லவா? சிருஷ்டி ரகசியமும் அது போலத்தான். ஆனால் என்னைப் பொறுத்த வரையில் இவ்வாறு இடிக்கின்ற அனுபவம் என்னுள்ளேயிருந்து மட்டும் புறப்படுவதில்லை. சமயங்களில் வெளியிலிருந்தும் ஏதாவதொன்று இடிக்கத் தான் நேர்ந்திருக்கிறது. "இலக்கியத்தைத் தொழிலாகக் கொண்டவன் 'இன்ஸ்பிரேஷ'னுக்காகக் காத்திருக்கக் கூடாது" என்று சிறந்த நாவலாசிரியரான சாமர்செட்மாம் உபதேசம் செய்கிறார். எனது 'இன்ஸ்பிரேஷனோ' சந்தர்ப்பத்துக்காகக்காத்துக்கொண்டிருக்கும்;ஏதாவதுஒ( நெருக்கடியில்தான் பொங்கிப் புரண்டுகொண்டு வரும். அதற்காகவே காத்துக் கொண்டிருந்தமாதிரி, அதுவரை யிலும் அதோ இதோ என்று ஏமாற்றிக் கொண்டிருந்த என் பேனாவும் மூளையும் அசுர வேகத்தில் செயல்படத் தொடங்கும்.அவ்வளவுதான்.பக்கம்பக்கமாக நாவல்பிறக்க ஆரம்பித்து விடும்!

இவ்வாறு நான் எழுத உட்காரும் காரியம் எனக்கு ஒரு மகா யக்ஞம் மாதிரி, கையிலே காப்புக் கட்டி, பல நாட்கள் விரதம் காத்து, அக்கினிப்பிரவேசம் செய்து நேர்ந்த கடனை முடிக்கும் பக்தனைப்போலத்தான் நான் அப்போது நடந்து கொள்வேன். அந்த நாட்களில் எனக்கு இரவும் பகலும் ஒன்றுதான். எழுதுவேன்; எழுதித் தள்ளுவேன். அப்போது வேறு எதுவுமே என் கவனத்தைத் திசை திருப்புவதில்லை. அப்போதெல்லாம் நான் பெரும்பாலும் தன்னுள்ளே தானாகத் தனிமையிலேதான் வாழ்வேன். ஆனால், உண்மையில் நான் 'தனிமை'யில் வாழ்வதில்லை. ஏனெனில் எனது நாவலில் வரும் பாத்திரங்கள் எல்லாம் (அவை ஓரிடத்திலே தலை காட்டி விட்டு மறைவதாயினும் சரி, அல்லது கதையின் அடிமுடி வரையிலும் நடமாடுபவையாயினும் சரி அவையெல்லாம்) பரிவாரம்போல் என்னுடனேயே இருக்கும். நான் எங்கு சென்றாலும் என்கூடவே அவையும் வரும். அவர்களில் யாரையேனும் அழைத்து, என்னோடு அமர்ந்து வெற்றிலை போடச் சொல்லாத குறையாக, அத்தனை பேரும் சதையும் ரத்தமும் கொண்ட பிறவிகளாய் என் மனவரங்கில் உலவித் திரிவார்கள். அத்தனை பேருடைய முக பாவனைகள், சாடை மாடைகள், அந்தரங்கங்கள் எல்லாம் எனக்குத் துலாம்பரமாகத் தெரியும். அவர்களையே துணையாகக் கொண்டு நான் நாவலைச் சில தினங்களில் எழுதி முடித்து விடுவேன். அநேகமாக அதே அவசரத்தில் அது அச்சிலும் விழுந்துவிடும். என்றாலும் 'முற்றும்' போட்டு முடித்துவிட்ட எழுத்துப் பிரதியின் கடைசிப் பக்கத்தைக் காணும்போது எழுகின்ற பெருமிதமும், திருப்தியும், ஆசுவாசமும் அச்சுப் பிரதியைப் பார்க்கும் காலத்தில் என்னில் எழுவதில்லை 'ஈன்று புறந்தரும்' போது காணும் இன்பத்துக்கு எதுவுமே ஈடாவதில்லை.

இந்த ரகசியத்தை ஏன் சொல்ல வந்தேன் என்றால்-

'பஞ்சும் பசியும்' என்ற நாவலையும் நான் இதே அசுர வேகத்தில்தான் எழுத நேர்ந்தது. பதிப்பகத்தாருக்குச் சொன்ன தவணைக்குச் சுமார் இருபது தினங்களுக்கு முன்னர்தான் பேனாவை எடுத்தேன். தினசரி குறைந்த பட்சம் ஓர் அத்தியாயம் எழுதுவது என்பது என் திட்டம். அவ்வாறு பதின்மூன்று அத்தியாயங்கள் எழுதி முடித்த பின்னர் மறுநாள் என்னால் பேனாவைத் தொட முடியவில்லை. காரணம் என்ன தெரியுமா? அந்த நாவலின் முற்பகுதியில் கைலாச முதலியார் என்ற கடவுள் பக்தி மிகுந்த நெசவாளி ஒருவர் முதலிடம் பெறுகிறார். பதின்மூன்றாவது அத்தியாயத்தோடு அவருடைய வாழ்வும் முடிகிறது. அவர் தற்கொலை செய்து கொண்டு மாண்டு விடுகிறார். அவரைச் சாகடித்து விட்டு, மறுதினமே என்னால் கதையை நடத்திச் செல்ல முடியவில்லை. அவருக்காக மூன்று தினங்கள் என்னுள்ளே நான் 'துக்கம்' கொண்டாடிய பின்னர்தான் என்னால் மீண்டும் பேனாவைத் தொட முடிந்தது. நான் நினைத்திருந் தாலும்கூட அவரைச் சாவினின்றும் காப்பாற்றியிருக்க முடியாது. எத்தனையோ கைலாச முதலியார்கள் தற்கொலையைச் சரண்புகுந்தகாலச்சூழ்நிலை அது! அதை நான் ஒருவனாக எப்படித் தடுத்து நிறுத்த முடியும்? அன்று அவர் சாக நேர்ந்ததுதான் யதார்த்தவிதி, என்றாலும் அந்தச் சாவு என் உள்ளத்தைத் தொட்டது; சுட்டது.

இராம கதையில் இந்திரஜித் மகோந்நதமான பாத்திரம்தான். என்றாலும் அவனுடைய மரணம் தருமத்தின் தவிர்க்க முடியாத விதி. இருந்தாலும், கதையின் இறுதியில் அத்தகைய பெரும் பாத்திரத்தைக் கம்பன் படைத்து, அவனை இலக்குவனின் கணைக்குக் காவு கொடுத்து விடுகிறான் அல்லவா? பின்னர் இறந்துபட்ட இந்திரஜித்தின் தலையைக் காட்டி 'செய்த கொலையினை நோக்கும்!' என்றுகூறும்போது கம்பனது அந்தரங்கக்குரலே அதில் ஒலிப்பதைக் கேட்கிறோம் அல்லவா? அதேபோன்று

நானும் கைலாச முதலியாரின் கொலைக்குக் காரணமான சூழ்நிலையை எண்ணிக் குமைந்தேன். துக்கித்தேன். ஆனால் அந்த நாவல் வெளிவந்த பின்னர் அரசியல்வாதியும் இலக்கிய ரசிகருமான என் நண்பர் ஒருவர், "என் வாழ்க்கையில் நான் ஒரே ஒரு முறைதான் கண்ணீர் விட்டிருக்கிறேன், அதுவும் என் தந்தை இறந்தபோது. கைலாச முதலியாரின் மரணத்தைப் படித்தபோது என் கண்கள் கலங்கிவிட்டன. என் வாழ்வில் இரண்டாம் முறையாகக் கண்ணீர் விட்டேன்" என்று எனக்கு எழுதினார். அதைப் படித்தபோதுதான் நான் துக்கம் கொண்டாடியதிலும் அர்த்தம் உண்டு என்பது ஊர்ஜிதமாயிற்று.

இதனால் எனது படைப்புக்கள் எல்லாம் அந்தக் கணத்திலேயே கருவுற்று, அந்தக் கணத்திலேயே ரிஷ்பிண்டமாக அவதாரம் செய்து விடும் என்று அர்த்தமல்ல. சொல்லப்போனால் நாவல்கள் மட்டுமல்ல, சிறுகதைகளும் கூட என் மனக் குகையில் பல்லாண்டுக் காலம், பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கும் மேலாகப் பிறவிப் பேற்றைக் காணாமல் மோனச் சிறையில் தவம் கிடந்ததுண்டு. கன்னிக் கோழியின் வயிற்றுக்குள்ளேயுள்ள கருக்குலையைப்போல் என் உள்ளத்திலே கதா பாத்திரங்களும், சம்பவங்களும் என்றோ எப்போதோ கருப் பிடித்து உறங்கும்; வளர்ந்து கொண்டிருக்கும். ஆனால் எந்த நேரத்தில் எந்தக் கரு பூரண வளர்ச்சி பெற்று வெளி யுலகத்தைப் பார்க்கும் என்பது எனக்கே தெரியாது. சமயங்களில் சின்னக் கருவே பெரிய கருக்களை முந்திக் கொண்டு வளர்ந்து விடும். இலக்கிய சிருஷ்டியின் பரிணாம விசித்திரம் அப்படி!

'பஞ்சும் பசியும்' சரித்திர நாவல், பத்தாண்டுகளுக்கு முன்னால் நமது நாட்டில் கைத்தறி நெசவாளர்கள் பட்ட அவலத்தையும் அதைப் போக்க அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளையும் சித்திரிக்கும் நாவல். அன்று எல்லோரையும் போலவே நானும் மவுண்ட் ரோட் ரவுண்டாணாவாயினும் மங்கம்மாள் சாலையாயினும் எங்கும் எந்தத்

திக்கிலும் பஞ்சையராகித் திரிந்த நெசவாளர்களைக் கண்டேன். நாட்டு மக்களின் மானத்தைக் காப்பதற்காக உழைத்த மக்கள் தங்கள் மானத்தைக் காப்பதற்கு வகையற்றுத்திரியும்அலங்கோலத்தைக்கண்டேன்.ஆணும் பெண்ணும் குழந்தை குட்டிகளும் அல்லோல கல்லோலப் பட்டுச் சீரழிவதைப் பார்த்தேன். அவற்றைக் கண்டபோது எனது உள்ளமும் உதடும் துடித்தன. அவற்றைச் 'சொல்லு, சொல்லு!' என்று என் மனக்குறளி இடித்தது. ஆம், அவற்றைச்சொல்லத்தான்வேண்டும்!எப்படிச்சொல்வது? அந்த மக்களோடு சேர்ந்து நானும் கண்ணீர் வடிப்பதா? நான் அழுகுணிச் சித்தன் அல்ல. கண்ணீர் விடுபவனோடு கண்ணீர் விடுவது, அவனுடன் சேர்ந்து ஒப்பாரிவைப்பது எழுத்தாளனுக்கு அழகல்ல. கண்ணீரைத் துடைக்க வழிகாணும் பாதையிலே செல்பவன்தான் சிறந்த எழுத்தாளன். மனிதத் தன்மையை இழந்து நிற்கும் அந்தப் பிறவிகளை மனிதர்களாக்கிக் காட்ட வேண்டும் என்று நினைத்தேன்; வெறும் ஜீவகாருண்ய உணர்ச்சியான மரக்கறிவாதம் அதற்குப் பயன்படாது என்பதும் எனக்குத் தெரியும்.எனவே நான் அன்றைய சரித்திரச் சூழ்நிலையைப் புரிந்துகொள்ள முனைந்தேன் அதன் காரணகாரியங்களை ஆராய்ந்தேன்; அதற்காக எவ்வளவோ படித்தேன். அந்தத் துறையிலே அனுபவம் மிகுந்தவர்களிடம் பேசினேன். நெசவாளர்களின் துன்ப துயரங்களையும் பிரச்னைகளை யும் அந்தச் சமூகத்தாரிடமிருந்தே கண்டும் கேட்டும் அறிந்தேன். காதில் விழுந்த செய்திகள், கண்ணில் பட்ட நிகழ்ச்சிகள் முதலியவற்றைக் கவனம் செய்து என் மன ஏட்டில் பதிவு செய்து கொண்டேன். இவ்வளவும் செய்த பின்னர் எனக்குக் கிடைத்தது என்ன? கதையின் ஆதார சுருதியாக விளங்க வேண்டிய சரித்திர தத்துவ தரிசனம் தான். ஆனால் சரித்திரமோ, தத்துவமோ மட்டும் இலக்கிய மாகி விடுவதில்லையே! உயிரும் உணர்ச்சியும் கொண்ட கதாபாத்திரங்கள் அல்லவா கதையை, நாவலை உருவாக்க முடியும்! காலம், களம் என்ற கட்டுக்கோப்பமைதியில்

அல்லவா அந்தப் பாத்திரங்கள் நடமாட வேண்டும்! காலத்தைப் பற்றிய தரிசனத்தைச் சரித்திரம் தந்துவிட்டது. அடுத்தாற் போல் களத்தை நிர்ணயிக்க வேண்டும்.

எனது நாவலில் கதை நிகழும் பிரதான இடங்களாக அம்பாசமுத்திரமும், மதுரை நகரும் இடம் பெற்றன. அம்பாசமுத்திரம் சிறு வயதிலிருந்தே என்னைக் கவர்ந்த ஊர்; மதுரைக்கு என் இதயத்திலே தனி மதிப்பும் இடமும் உண்டு. மேலும் நான் கையாள நினைத்த கதைப் பொரு ளுக்கு அவை ஏற்ற இடங்களாகத் தெரிந்தன. அம்பா சமுத்திரத்தை நான் திறம்படவே சித்திரித்தேன். எனது நாவலை செக் மொழியில் மொழி பெயர்த்த கமில ஸ்வலெபில் என்ற செக் நாட்டு அறிஞர் தமிழகத்துக்கு வந்தபோது, என்னிடம் "நான் அம்பாசமுத்திரத்தைப் பார்க்க வேண்டுமே. உங்கள் கதையிலிருந்து என் மனத்தில் அதைப் பற்றி ஓர் உருவம் படிந்திருக்கிறது. இருந்தாலும் கற்பனையும் யதார்த்தமும் எப்படி இருக்கின்றன என்று பார்க்க வேண்டாமா?" என்று கூறினார். அவர் மதுரைக்கு வந்தார்; எனினும் அம்பாசமுத்திரத்தைப் பார்க்க அவருக்குக் கொடுத்து வைக்கவில்லை. அதற்குள் அவர் தமது தாயகத்துக்குத் திரும்பி விட்டார். எனது கதைக்களத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலை ஓர் அன்னிய நாட்டாரின் மனத்தில் எனது நாவல் உருவாக்கி விட்டதல்லவா? அது எனக்கு ஒரு வெற்றிதான்.

இனி, பாத்திரங்கள்: என் கதையில் வரும் பாத்தி ரங்கள் எல்லாம் குறிப்பிட்ட சரித்திர காலத்தைச் சேர்ந்தவர்கள். ஆனாலும், அவர்கள் எல்லாம் எந்தக் காலத்திலோ என் மனத்தில் கருப்பிடித்து வளர்ந்தவர்கள். சிறுவயதிலேயே எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் நெசவைத் தொழிலாகக் கொண்ட ஒருவர் தறி வைத்திருந்தார். அந்தத் தறியில் தாளலயம் தவறாது எழும் சத்தத்தையும் ஊடும் பாவும் பின்னிப் பிணையும் அதிசயத்தையும் நான் மணிக்கணக்கில் கண்டு கேட்டு அனுபவித்திருக்கிறேன்

மேலும் நெல்லையில் நான் வசிக்கும் பகுதிக்கு அருகிலேயே நெசவாளர் சமூகத்தினர் அதிகம். அவர்கள் மத்தியிலே எனக்கு நண்பர்களும் உண்டு. எனவே இளம் வயது முதலே என் உள்ளத்திலே சதையும் தசையும் கொண்ட உருவங்களாக எத்தனையோ பேர் பதிந்துபோய் விட்டார்கள். மேலும் எந்தச் சமூகத்தினர் ஆனாலும் மனிதர்கள் மனிதர்கள்தானே. எனவே எனது நாவலின் கதாபாத்திரங்கள் பெரும்பாலும் நெசவாளர் சமூகத்தினர் தான் என்றாலும், அந்தப் பாத்திரங்களை வலித்து உருவாக்குவதில் நான் வாழ்க்கையில் கண்ட எல்லாச் சமூகத்தையும் சேர்ந்த மனிதர்கள் பலரும் பயன் பட்டார்கள்.

எனது நாவலில் வரும் கைலாச முதலியார், மைனர் முதலியார், வடிவேலு முதலியார், இருளப்பக் கோனார், தர்மாம்பாள், வீரையா, சங்கர், கமலா, மணி முதலிய பாத்திரங்களைப் படைத்தபோது அவர்கள் ஒவ்வொரு வருடைய குணாம்சங்களையும் பெற்ற எத்தனையோ பேர்கள் என் மனத்தில் எழுந்தார்கள். உதாரணமாக, கைலாச முதலியாரின் குணாம்சங்களைப் பெற்ற பல்வேறு கைலாச முதலியார்கள் சேர்ந்துதான் ஒரு கைலாச முதுலியாராக உருவானார்கள். என்றாலும், அவர்கள் அத்தனை பேரிலும் யாராவது ஒருவர்தான் என்முன் பிண்டப் பிரமாணமாகக் காட்சி அளித்தார். இப்படி ஒவ்வொருபாத்திரமுமே பல்வேறு பாத்திரங்களின் திரட்சி என்ற போதிலும், அவர்களில் ஒருவர்தான் ஒவ்வொரு பாத்திரத்தின் கண்கண்ட உருவமாக என் முன்னே நின்றார். அந்த 'ஒருவர்'கள் எனக்கு மிகவும் வேண்டிய நண்பர்களாகவும் இருக்கலாம்; எனக்குப் பிடிக்காதவர் களாகவும் இருக்கலாம். எங்கோ எப்போதோ கண்டபின் மறக்க முடியாது என் உள்ளத்தில் தமது உருவைப் பதித்தவராகவும் இருக்கலாம். இவர்களிலே வியாபாரிகள், அரசியல்வாதிகள், மாணவர்கள், மாணவிகள், மைனர்கள்,

தொழிலாளிகள் பலரும் உண்டு. அவர்கள் இன்னின்னார்தான் என்ற ரகசியத்தை வெளிப்படையாக நான் எடுத்துக் கூறிவிடலாமா? அப்புறம் ஆபத்தாயிற்றே!

சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட நாகசர்ப்பம்போல், இந்தப் பாத்திரங்கள் எல்லாம் நான் எடுத்துக் கொண்ட சரித்திரகதிக்குக்கட்டுப்பட்டு, கதையை அவர்களே நடத்திச் சென்றார்கள். நானும் அந்தச் சரித்திர கதிக்குக் கட்டுப் பட்டவன். எனவே நான் எனது இஷ்டத்துக்கு எதையும் உருவாக்கிவிட முடியாது. சொல்லப் போனால், ஒவ்வொரு பாத்திரமும் 'சாமிகுடி புகுந்த மாதிரி' அந்தந்தச் சமயத்தில் என்னுள்ளே கூடுவிட்டுக் கூடுபாய்ந்து நின்று அவர்களே கதையை உருவாக்கினார்கள். நான் அந்தக் கதாபாத்திரங்களின் கருவியாகத்தான் பயன்பட்டேன். அவர்கள் பேசியபோது நானும் பேசினேன். அவர்கள் சிரித்தபோது நானும்சிரித்தேன். அழுதபோது நானும் அழுதேன்; குமுறிய போது குமுறினேன். தர்க்கித்தபோது தர்க்கித்தேன். அவர்கள் வாழ்வுக்காகப் போராடியபோது நானும் போராடினேன்; அவர்கள் இறந்தபோது நானும் அந்தக் கணத்துக்கு இறந்து மீண்டேன். இறுதியில் நாவலின் முடிவில் "பல்வேறு சிற்றாறுகளைத் தன்பால் இழுத்துச் சேர்த்து மகாப்பிரவாகமாகப் பரிணமித்துச் செல்லும் ஜீவ நதியைப் போல் " நாவலின் கதாநாயகர்களான நெசவாளிகள் ஊர்வலமாகச் செல்லும் போது நானும் அந்த ஜீவ நதியில், ஊர்வலத்தில் ஒரு துளியாகக் கலந்து நடந்தேன். ஆமாம்! அவர்களோடு நான் "நடந்தேன். நடக்கின்றேன். நடந்து நடந்தேறுகின்றேன்!"

ஊர்வலம்என்றுசொன்னவுடன்எனக்குஒருவிஷயம் நினைவுக்கு வருகிறது. 'பஞ்சும் பசியும்' நாவலில் மதுரை நகரில் நடைபெறும் இரண்டு பிரம்மாண்ட ஊர்வலக் காட்சிகள் வருகின்றன. நாவலின் சிகர கும்பங்களாக இடம்

பெறும் நிகழ்ச்சிகள் அவை. அந்தக் காட்சிகளைப் பிரத்தியட்ச சொரூபமாகச் சொல்லில் வடித்தெடுக்க நான் எவ்வளவு வெறி வேகத்தில் இருந்தேன் என்பது வேறு விஷயம். எனினும் எனது நாவலை விமர்சிக்க நேர்ந்த எழுத்தாளர் ஒருவர் அந்தக் காட்சிகளுக்கான 'இன்ஸ்பிரேஷனை' நான் மாக்ஸிம் கார்க்கியிடமிருந்து பெற்று, அதனைப் பயன் படுத்திக் கொண்டிருப்பதாக வலிந்து குற்றம் சாட்டினார். ஆனால் பாவம், உண்மை அதுவல்ல.

என்னைப் பொறுத்த வரையில் நான் மாணவப் பருவத்திலேயே தேசீயப் போராட்டக் காலத்தில் பல ஊர்வலங்களையெல்லாம் உருவாக்கியவன்; அந்த ஊர் வலங்களுக்குத் தலைமை தாங்கியவன்; பங்கெடுத்தவன். அந்தக் காலத்தில் தடியடிப் பிரயோகத்துக்கு இரையான ஊர்வலங்களிலும் கூட ஒன்றி நின்றவன். மேலும் மதுரை நகரிலேயே இரண்டு லட்சம் பேர்கள் கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலத்தைக் கண்டவன்; களித்தவன். அதன் காந்த சக்திக்கு ஆட்பட்டவன். 'பாரடா! என்னோடு பிறந்த பட்டாளம்' என்ற உணர்வைப் பெற்றவன். எனவே அத்தகைய ஊர்வலக் காட்சியைச் சொல்லாட்சித் திற னோடு உருவாக்கும் சந்தர்ப்பத்தைத்தான் எதிர்நோக்கி யிருந்தேன்.

'பஞ்சும் பசியும்' எனக்கு அந்தச் சந்தர்ப்பத்தைத் தந்தது. ஏனெனில் எழுத்தாளன் என்பவன் வாழ்க்கையில் பார்வையாளனாகஇருக்கக்கூடாது,பங்குதாரனாகஇருக்க வேண்டும் என்று கருதுபவன் நான். வாழ்க்கைதான் இலக்கிய கர்த்தாவுக்கு வற்றாத கருவூலம். அதுதான் அவனுக்கு சர்வத்தையும் வழங்குகிறது.

அந்த வாழ்க்கையிலே கலந்து நிற்கத் தெரியாமல் நத்தைமாதிரி தன்னுள்ளே தானாய் உடம்பையும் உள்ளத்தையும் சுருக்கிக் கொள்பவன்தான் 'இன்ஸ்பிரேஷ

னுக்காக அடுத்தவனிடம் முந்திப் பிச்சை கேட்க வேண்டியிருக்கும்!

எனது நாவல் வாழ்க்கையிலிருந்தே பிறந்தது; வாழ்க்கையிலேயே வேரூன்றி நிற்பதன் காரணமாகத்தான் அதன் வலுவையும் வெற்றியையும் யாரும் அலட்சியப்படுத்த முடியவில்லை. எனது அரசியல் போக்கையும் இலக்கிய நோக்கையும் ஒப்புக் கொள்ளாதவர்களும் ஒதுங்கி நிற்பவர்களும்கூட அந்த நாவலின் கதாபாத்திரங்களின் வலுவையும் வனப்பையும் புறக்கணிக்க முடியவில்லை. அரை மனசு குறை மனசாகவேணும் அதை ஒப்புக் கொண்டாக வேண்டி நேர்ந்தது.

தமிழ் இலக்கியத்திலே புதியதொரு பாதையை அந்த நாவல் வகுக்க முயன்று, அதில் முன்னோடியாகத் திகழ்ந்த காரணத்தினாலேயே, அந்த நாவல் அன்னிய நாட்டிலும் மொழி பெயர்க்கப்பட்டு, தமிழுக்கும் எனக்கும் பெருமையைத் தேடித் தந்தது.

இன்றும் அந்த நாவலை எண்ணிப் பார்க்கும்போது-

அதோ மைனர் முதலியார்வாளின் 'கான்பூர் நைட்குயீன்' ஸெண்டின் மணம் என் மூக்கைத் துளைக்கிறது; கைலாச முதலியார் பூசும் திருச்செந்தூர் பன்னீர் விபூதியின் மணம் கமகமக்கிறது; தர்மாம்பாளின் புதுப் பட்டுப் புடவை சரசரக்கும் ஓசை கேட்கிறது; தாதுலிங்க முதலியாரின் பியூக்காரின் பயங்கர உறுமல் காதைச் செவிடுபடச் செய்கிறது; "பொருமிப் பொருமி வீசும் மேல் காற்று தன் ஜீவனைப் பறித்துக் கொண்டு விடாதவாறு உயிரைப் காப்பாற்றிக் கொண்டிருக்கும்" மெலிந்த தீச்சுடரைப் போல் இருளப்பக்கோனார் நடமாடுவது என் கண்ணுக்குத் தெரிகிறது. வடிவேலு முதலியாரின் வைரம் பாய்ந்த உரிமைக் குரல் என் காதில் இனிய நாதமாக விழுகிறது–

ஆமாம். அவர்களை நான் மறக்க முடியாது. அவர்கள் வெறும் கற்பனை வடிவங்கள் அல்ல; நம்மோடு வாழ்ந்தவர்கள்; வாழ்பவர்கள். அவர்களை எப்படி மறப்பது?

எட்டு ஆண்டுகளுக்கும் பின்னால், மீண்டும் 'பஞ்சும் பசியும்' நாவலைப் புரட்டிப் பார்க்கும்போது, அதிலுள்ள சிற்சில குறைபாடுகள் எனக்குத் தெரியத்தான் செய்கின்றன. தெரிந்தாலென்ன? எனது குறையினை நானே கண்டு கொள்ள முடிகிறது என்றால், நான் வளர்ந்திருக்கிறேன் என்று தானே அர்த்தம்!

-ரகுநாதன்

("நாவல் பிறக்கிறது" என்ற தொடரில்
13-8-61 அன்று "கல்கி" யில் வெளிவந்தது.)

## எமது தமிழ்த்துறை வெளியீடுகள்

சென்னை, மனோன்மணீயம் சுந்தரனார், பாரதியார், பாரதிதாசன், மதுரைக்காமராசர், அண்ணாமலை, வெங்கடேஸ்வரா ஆகிய பல்கலைக் கழகங்கட்கு பரிந்துரைக்கப்பட்டவை

**ப. முருகன்**
வள்ளுவம் பன்னோக்குப் பார்வை

**மயிலை. சீனி.வெங்கடசாமி**
பழங்காலத்தமிழர் வாணிகம்

**செ.அரங்கநாயகம்**
சோவியத் நட்புறவுப்பயணம்

**சு.சமுத்திரம்**
ஏவாதகணைகள்

**இ.சுந்தரமூர்த்தி**
வான்மறை வள்ளுவம்
இலக்கியமும் பண்பாடும்

**சு.பாலச்சந்திரன்**
இலக்கியத்திறனாய்வு

**அ.அ.மணவாளன்**
அரிஸ்டாடிலின் கவிதையியல்

**கே.ஏ.குணசேகரன்**
நாட்டுப்புற நடனங்களும் பாடல்களும்

**பொன்னீலன்**
கரிசல்
கொள்ளைக்காரர்கள்

நியூ செஞ்சரி புக்ஹவுஸ் (பி) லிட்.,
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
சென்னை - 600 098